# ஸ்ரீராமாயணம்,
# யுத்தகாண்டம்.



P. Venkateshwar & Co
Madras.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாயணம்.

## யுத்தகாண்டம்.

### தமிழ் வசனம்.



இஃது

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்திற்கிணங்க

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

இயற்றப்பெற்று



சென்னை :

ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது.



1935

ஸ்ரீ:

# யுத்தகாண்டம் முதல் பாகம்.

## விஷயங்கள்.

---

ஸர்க்கம். பேஜ்.

ஸர்க்கம். பேஜ்.

---

## படங்களின் விவரம்.





ஸ்ரீ:

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண ஹனுமத் ஸமேத

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீராமாயணம்.

## யுத்தகாண்டம்.




ராமன் [1] நடந்தபடியே ஹனுமான் மொழிந்த வ்ருத்தாந்தத்தை யெல்லாங் கேட்டு, மிகுதியும் ஸந்தோஷமுற்று, அப்படிப்பட்ட ப்ரிய ஸமாசாரத்தைக் கேட்டவுடன் சொல்லவேண்டிய சில நல்வார்த்தைகளை ஹனுமானைக் குறித்து ஸுக்ரீவாதிகளுடன் சொல்லத்தொடங்கி,'ஹனு

1. ஸுந்தரகாண்டத்தில்'புருஷகார பூதையான பிராட்டியின் கார்யஞ் சொல்லப்பட்டது. இனி உபாயபூதனான ஈச்வரனுடைய கார்யத்தைச் சொல்லுவதற்காக யுத்தகாண்டம் ஆரம்பிக்கப்படுகிறது. இதில் கார்யத்தை ஸாதித்துக்கொண்டு வந்த வேலைக்காரனிடத்தில் ப்ரபுவாயிருப்பவன் இங்ஙனம் நடக்கவேண்டுமென்பதை அறிவிக்கும்பொருட்டு ஸுக்ரீவாதிகளுக்கு உத்ஸாஹத்தை வளரச்செய்துகொண்டு ஸீதா வ்ருத்தாந்தத்தைக் கொண்டு வந்த ஹனுமானை ராமன் முதல் ஸர்க்கத்தில் ஸத்கரிக்கின்றனன்.

மான் செய்த கார்யம்[1] மிகவும் பெரியது. இது இப் பூமியில் எவர்க்கும்செய்யமுடியாதது.செய்வதற்குமாத்ரமேயன்றி நினைப்பதற்குங்கூட இப் பூமண்டலத்தில் மற்ற எவர்க்கும் முடியாதது.(கருடனும் வாயுதேவனும் ஒன்றாகக் கலந்து மஹாஸமுத்ரத்தைத் தாண்டுவார்கள். ஹனுமானொருவனே தாண்டுவானாகையால்) கருடனும் வாயுதேவனும் இருவரும் ஹனுமானொருவனும் தவிர மஹாஸமுத்ரந் தாண்டவல்லவன் மற்றெவனும் எனக்குப் புலப்படவில்லை. லங்கை, தேவதைகளுக்கும்

---

இதில் 'ஹநுமதோ வாக்யம்' என்கிற முதல் ஶ்லோகத்தில் 'ஹநுமதః' என்னும் சப்தத்திலுள்ள (ம)காரத்தினால் காயத்ரியின் பதினோராவது அக்ஷரம் எடுக்கப்பட்டது. ஆகையால் பதினாயிரம் க்ரந்தங்கள் முடிந்து மேல் பதினோராவதாயிரம் தொடங்கப்படுகிறதென்று தெரிகின்றது.

1. ஸமுத்ரத்தைத் தாண்டுவது பெரியது. லங்கையில் புகுவது மிகுதியும் பெரியது. லங்கையைப் பரிபவித்தது பூமியில் மற்றெவர்க்கும் செய்யமுடியாதது. லங்கையினின்று மீளவும் திரும்பி வருவது மனத்தில் நினைக்கவுங்கூட மற்றெவனுக்கும் முடியாதது. முதலில் ஸமுத்ரத்தைத் தாண்டுவதே ஸாத்யமன்று. தாண்டிப் போயினும் லங்கையுள் புகுவது ஸாத்யமன்று. லங்கையுள் புகினும் அதைப் பரிபவிப்பது ஸாத்யமன்று. பரிபவிப்பினும் அதினின்று வெளிவருவது ஸாத்யமன்றென்று கருத்து. மற்றும்— 'ப்ரத்யக்ஷே குரவஸ் ஸ்துத்யாঃ பரோக்ஷே மித்ரபாந்தவாঃ। கர்மாந்தே தாஸப்ருத்யாஶ்ச நைவ புத்ராঃ' (ஆசார்யர்களை ப்ரத்யக்ஷத்திலும், மித்ரர்களையும் பந்துக்களையும் மறைவிலும், தாஸர்களையும் ப்ருத்யர்களையும் கார்யந்தீர்ந்த பின்பும் கொண்டாட வேண்டும். புத்ரர்களை எப்பொழுதும் கொண்டாடலாகாது. தாஸர்கள்—ஒருவனுக்குப் பரம்பரையாக வேலைசெய்பவர். ப்ருத்யர்கள்— அப்பொழுதைக்கப்பொழுது கூலி வேலை செய்பவர் என்று இங்குப்பேதங் கண்டுகொள்க.) என்கிற ப்ரமாணத்தின்படி ராமன் தாஸனாகிய ஹனுமானைக் கார்யம் நிறைவேற்றின பின்பு கொண்டாடுகின்றனன்.

தானவர்களுக்கும் யக்ஷர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் உரகர்களுக்கும் அன்றியே மற்ற ராக்ஷஸர்களுக்கும் எதிரிடமுடியாதது; ராவணனால் பத்ரமாகப் பாதுகாக்கப்பட்டிருப்பது. அப்படிப்பட்ட லங்கையுள், (வீர்யமும் பலமும் நிறைந்தவன் சத்ருக்களால் தகையப்படாமல்) பலம் மீறப்பெற்றுப் புகுவானாயினும் ப்ராணன்களோடு திரும்பிவருபவன் எவன்? புகுந்து மீண்டு வருவது அப்படி இருக்கட்டும்; பல பராக்ரமங்கள் நிறைந்தவனாயினும் ஹனுமானுக்கு நிகரில்லாதவன் எவன்தான், எப்படிப்பட்டவர்க்கும் எதிரிட முடியாததாகி அளவில்லாத ராக்ஷஸர்களால் ஸுரக்ஷிதமான லங்கையில் புகவல்லவன்? ஹனுமான் இங்ஙனம் தன்னுடைய அமானுஷ சக்திக்குத் தகுந்தபடி அசோகவனபங்கம் முதலிய பௌருஷ கார்யங்களைத் தன் ஸ்வாமியான ஸுக்ரீவனது கட்டளையில்லாமலே செய்தானுகையால் அவனுக்கு வேலைக்காரனுகி அவனது நியோகத்தின்படி தான் செய்யவேண்டிய ஸீதாதர்சனம் முதலிய கார்யத்தைக் காட்டிலும் அதிகமாகவே செய்தவனுயினன். எந்த ப்ருத்யன், ப்ரபுவினுல் தான் செய்யமுடியாத கார்யத்தில் ஏவப்பட்டவனுகி அதைச் செய்து, ப்ரபுவிடத்திலுள்ள பக்தியின் மிகுதியால், அவன் கட்டளையிடாதிருப்பினும் அந்தக் கார்யத்திற்கு வேண்டிய இதர கார்யங்களையும் நிறைவேற்றுவானே, அவனைச் சிறந்த ப்ருத்யனென்பர்கள். எந்த ப்ருத்யன் உத்ஸாஹமுடையவனும் ஸமர்த்தனுமாகித் தன் ப்ரபு நியோகித்த கார்யத்தைமாத்ரம் செய்து அதற்கு அனுகூலமா யிருப்பதும் ப்ரபுவுக்கு ப்ரியமா யிருப்பதுமான இதர கார்யத்தை அவன் சொல்லவில்லையேயென்று அதிகமாகச் செய்யாதிருப்பேனே, அவன் மத்யம

ப்ருத்யனென்பர்கள். எந்த ப்ருத்யன் வேறு கார்யத்தில் புகாமலும் ஸமர்த்தனுமாயிருந்தும் ராஜனால் நியோகிக்கப்பட்டவனாயினும் அவன் சொன்ன கார்யத்தையுங்கூட நன்கு நிறைவேற்றமாட்டானோ, அவனை அதமப்ருத்யனென்பர்கள். ஹனுமான் உத்தம ப்ருத்ய லக்ஷணங்களெல்லாம் அமைந்தவனாகையால் தனக்குக் கட்டளையிட்ட ஸீதாதர்சன கார்யத்தையும் அதற்கு அனுகூலமாக உத்தம ப்ருத்யனாயிருப்பவன் சொல்லாமலே செய்யத்தகுந்த, அசோகவனிகையை முறிப்பது லங்கையைக் கொளுத்துவது முதலிய அதிக கார்யங்களையும் செய்தனன். அதிலும் ராக்ஷஸர் கையில் அகப்பட்டுத் தோல்வி அடையாமையால் தனக்கும் லாகவத்தை விளைவித்துக்கொள்ளவில்லை. சொன்ன கார்யத்திற்கு மேலான கார்யங்களையும் செய்தமையால் ஸுக்ரீவனுக்கும் மிகுந்த ஸந்தோஷத்தை விளைவித்தனன். இப்பொழுது இந்த ஹனுமான் ஸீதையைக் கண்டுவந்தமையால், நானும் மஹாபலனான லக்ஷ்மணனும் ரகுவம்சத்தில் பிறந்தவர் அனைவரும் ஆத்மஹத்யையாகிற அதர்மத்தினின்று தப்பித்துக்கொண்டோமாகையால் தர்மத்தில் நிலைநின்றவராயினம். இப்பொழுது இப்படிப்பட்ட ப்ரிய ஸமாசாரத்தை மொழிந்த இந்த ஹனுமானுக்குத் தகுந்த ப்ரியத்தைச் செய்யாதிருக்கின்றேனே!' என்பது மாத்ரமே தீனனாயிருக்கிற என் மனத்தை மிகுதியும் வ்யாகுலப்படுத்துகின்றது. [1] என் ப்ராணன்களையெல்லாம் நிலை நிறுத்தின மஹானுபாவனாகிய அந்த ஹனுமானுக்கு ப்ரத்யுபகாரஞ் செய்ய வேண்டிய காலம் இதோ வந்தது. எதைக் கொடுக்க

1. இங்கு'ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத:। மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ்தஸ்ய மஹாத்மந:' என்று மூலம். இதற்கு விசேஷார்த்தம். (ஏஷ:) இது. ஸ்வானுபவஸித்தமான

லாம்? ஸர்வஸ்வத்தையும் கொடுத்தால்தான் என் மனஸ் தாபம் தீரும். இதோ நான் கொடுக்கிற ஆலிங்கனமே அந்த ஸர்வஸ்வம் கொடுப்பதாமாகையால் இதையே

---

இது; 'இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:' (தன்னிஷ்டப்படி அங்கீகரிக்கப்பட்டதும் தனக்கு ஸம்மதமாயிருப்பதுமான பெருமை பொருந்தின சரீரமுடையவன்) என்கிற ப்ரமாணத்தின்படி தன் தேஹம் மிகுதியும் அபிமதமாயிருப்பதன்றோ? அது அங்ஙனமிருப்பதுஸ்வானுபவ ஸித்தமேயல்லவா? உலகத்தில் தமக்கு ப்ரியமாயிருப்பதையன்றோ தமது இஷ்டர்களுக்குக் கொடுப்பார்கள். அங்ஙனே தனக்கு மிகுதியும் போக்யமான தன் திருமேனியையே, அதாவது தன் திருமேனியால் ஆலிங்கனஞ் செய்வதையே, தனக்கிஷ்டனாகிய ஹனுமானுக்குக் கொடுக்கின்றனன். (ஸர்வஸ்வபூதஃ) அத்திருமேனியால் அணைப்பதே தனக்கு ஸமஸ்த ஸொத்தாயிருக்கும். அதைத்தவிர மற்றை எதைச்கொடுப்பினும் 'இதைக் கொடுத்தோமன்றி, அதைக் கொடுக்கவில்லையே' என்று குறையே தோற்றும். இந்தத் திருமேனியையே கொடுத்தோமாயின், இது ஸமஸ்த சராசரங்களுக்கும் இருப்பிடமாகையால் எல்லாவற்றையுங் கொடுத்ததே ஆகும். (பரிஷ்வங்கோ ஹநூமதஃ) அம்ருதபானஞ் செய்பவனுக்குப் புல்லைக் கொடுக்கலாகாதல்லவா? 'ஸ்நேஹோ மே பரமோ ராஜந்' என்கிறபடியே இந்தத் திருமேனியில் ப்ரேமமுடையவனுக்கு இதையே கொடுக்கவேண்டுமல்லவா? (மயா காலமிமம் ப்ராப்ய தத்தஃ) 'இவன் என்னிடத்தில் எதையும் அபேக்ஷிக்காமலே இருக்கின்றனன். எப்பொழுது நாம் இவனுக்கு எதையாயினும் கொடுக்க நேரும்' என்று பெருவிருப்பத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனன். இப்பொழுது நான் கொடுப்பதை, வேண்டாமென்று தகையக்கூடாத ஸமயம் லபித்ததாகையால் கொடுக்கலாயினன். (தஸ்ய மஹாத்மநஃ) அம்மஹாத்மாவுக்கு; அதாவது மஹாஸ்வபாவனுக்கு அல்லது-மஹோதாரனுக்கு. தலைப்பின்னலை உரியாகப் போகட்டு ப்ராணன்களைவிட முயன்ற ஸமயத்தில் ஸீதையை ரக்ஷித்தனன். 'அவகாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே' ஸமுத்ரத்தில் புகுந்து நித்ரை போகிறேன். அதாவது-ஸமுத்ரத்தில் குதித்து ப்ராணனை விடுகிறேன். 'இங்கு-நித்ரையாவது தீர்க்க நித்ரை-மரணம்' என்று ப்ரா

கொடுத்தேன்' என்றனன். இங்ஙனஞ்சொல்லி ப்ரீதியால் அவயவங்களெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகப் பெற்று, ஸீதையைப் பார்த்து வருவதாகிற மஹாகார்யத்தை ஸாதித்துக் கொண்டுவந்த மஹானுபாவனாகிய அந்த ஹனுமானை ஆலிங்கனஞ் செய்தனன். ராமன் சிறிது நேரம் ஆலோசித்து, மீளவும் வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் கேட்டுக் கொண்டிருக்கும்பொழுதே, 'ஸீதையைத் தேடின விஷயம் மாத்ரம், ஸமுத்ரம் தாண்டுவது அந்தப்புரத்தில் புகுவது முதலிய எல்லா விதத்திலும் நன்றாகவே இயற்றப்பட்டு ஸித்திபெற்றது. ஆனால் ஸமுத்ரம் தாண்ட முடியாதென்பதை நினைத்துக்கொண்டவுடனே, ஸீதா வ்ருத்தாந்தத்தினால் ஸந்தோஷமுற்றிருப்பினும் என் மனம் மீளவும் எப்பொழுதுமுள்ள துக்கத்தையே ஏற்றுக்கொள்கின்றது. ஸமுத்ரத்தின் அக்கரை புகக்கூடாதது. அது ஆழ்ந்த ஜலமுடையது. வானரர்களெல்லோரும் ஒன்று சேர்ந்து அப்படிப்பட்ட மஹாஸமுத்ரத்தைத் தாண்டி அதன் தென்கரையை எங்ஙனம் அடையப்போகின்றனர்? ஸீதைக்கு ஸமுத்ரத்தைத் தாண்டிவருவதாகிற இந்த வ்ருத்தாந்தம் முன்னமே சொல்லப்பட்டிருக்கின்றது. ஆயினும் வானரர்கள் ஸமுத்ரத்தைத் தாண்டி அக்கரை சேருவதற்கு இனிமேற் செய்யவேண்டிய உபாயம் யாதிருக்கின்றது? யாதும் இல்லையே' என்றனன். பகைவரை உருமாய்க்கவல்ல மஹாபாஹுவாகிய ராமன் ஹனுமானைப்பார்த்து இங்ஙனம் மொழிந்து, உடனே சோகத்தினால் தடுமாற்றமுற்றுச் சிந்திக்கத் தொடங்கினன். முதல் ஸர்க்கம் முற்றிற்று.

---

ணங்களை விட முயற்சிசெய்யும் ஸமயத்தில் ஸீதையின் ஸமாசாரத்தைச்சொல்லி என்னைக்காப்பாற்றினன். இங்ஙனம் எம்மிருவர்க்கும் தேஹங்களைக்கொடுத்த இவனுக்கு என்னுடைய ஒரு தேஹத்தைக் கொடுப்பது உசிதமோ என்று கருத்து.

ஸுக்ரீவன் ராமனுடைய துக்கத்தைக் கண்டு அதைப் போக்கும் வசனங்களைக் கூறுதல்.

[1] அனந்தரம் தசரத மஹாராஜனது புதல்வனுகையால் சோகலேசத்திற்கும் தகாத ராமன் ஸந்தோஷமுற்றிருக்கும் ஸமயத்திலேயே சோகத்தினல் பரிதபித்துக்கொண்டிருப்பதைக் கண்டு, நண்பர்களுக்குரிய குணங்களெல்லாம் நிறைந்த ஸுக்ரீவன் அவனுடைய துக்கங்களைப் போக்கும் வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கி 'வீரர்களில் தலைவனே! அற்பன்போல் நீயும் பரிதபிக்கிருயென்ன? இப்படி இருக்கலாகாது. [2]க்ருதக்னன் ஸ்னேஹத்தை உதறுவதுபோல் நீ துக்கத்தை உதறுவாயாக. ஸீதா வ்ருத்தாந்தமும் சத்ரு இருக்குமிடமும் தெரிந்த பின்பும், ராகவா! உனக்கு மனவருத்தம் உண்டாவதற்குக் காரணம் யாதோ எனக்குத் தெரியவில்லை. நீ மேல்வரப்போகிற வ்ருத்தாந்தத்தையுங் கண்டறியும்படியான ஸூக்ஷ்ம புத்தியுடையவன்;

1. இங்ஙனம் சோகத்தினல் பரிதபிக்கின்ற ராமனைப் பார்த்து ஸுக்ரீவன், தானும் அவனைப்போலவே மிகுதியும் சோகத்திலாழ்ந்து அவனுடைய சோகத்தைப் பொறுக்கமுடியாமல் 'ஆபத்யுந்மார்கமநே கார்யகாலாத்யயேஷு ச। அப்ருஷ்டோபி ஹிதாந்வேஷீ ப்ரூயாத் கல்யாணபாஷிதம்'(ஆபத்திலும், தப்புவழியில்புகும் ஸமயத்திலும், கார்யம் விஞ்சிப்போகும்பொழுதும் ஹிதத்தை விரும்புவோன், தன்னைக் கேளாதிருப்பினும் நல்வார்த்தை சொல்ல வேண்டும்) என்று ப்ரமாணம் இருக்கையால் துக்கத்தைப் போக்கும் வசனங்களால், 'ஶுசிதா த்யாகிதா ஶௌர்யம் ஸமாநஸுகதுஃகதா। அநுராகஶ்ச தாக்ஷிண்யம் ஸத்யதா ச ஸுஹ்ருத்குணாஃ' என்று கூறப்படும் மித்ரலக்ஷணங்களெல்லாம் உடையவனுகையால் ராமனுக்கு ஸமாதானஞ் சொல்லுகின்றனன்.

2. க்ருதக்னன்-செய்த நன்றியைப் பொருள் செய்யாதவன்.

நீதிசாஸ்த்ரங்களை உணர்ந்தவன்; ஊஹாபோஹங்களில் மிகவும் தேர்ந்தவன்; இது இப்படி ஆகும்' என்று நிர்ணயிக்கும் படியான அறிவும் அமையப் பெற்றவன். (இப்படிப்பட்ட உன் குணங்களைப் பார்க்கினும் உனக்குச் சோகம் உண்டாக வழியில்லை.) யோகியாயிருப்பவன் மோக்ஷ புருஷார்த்தத்திற்குத் தடைசெய்வதான புத்தியைத் துறப்பதுபோல், நீ உத்ஸாஹத்தை அழிப்பதனால் பாபிஷ்டமான இந்த துர்ப்புத்தியைத் துறப்பாயாக. ('ஸமுத்ரம் தாண்டமுடியாததாயிருக்கின்றதே' என்றும் வருத்தப்படவேண்டிய அவஶ்யமில்லை.) நாங்கள், பெருமுதலைகள் நிறைந்திருக்கிற ஸமுத்ரத்தைத் தாண்டி லங்காபுரியின் கோட்டை மேல் ஏறி உன் பகைவனாகிய ராவணனைக் கொன்றுவிடுகிறோம். ஆகையால் 'ஸமுத்ரத்தை எப்படி தாண்டுவோம்? லங்கையில் எங்ஙனம் புகுவோம்? சத்ருவை எவ்வண்ணம் வெல்லுவோம்?' என்று மனவருத்தப்படவேண்டாம். சோகத்தினால் மனம் வ்யாகுலமாகி, அதனால் உத்ஸாஹம் குறையப்பெற்று தைன்யமுற்றிருப்பவனுக்கு ஸமஸ்த ப்ரயோஜனங்களும் பாழாய்விடும். அதனால் அவனுக்குச் சோகம் மாத்ரமேயன்றி ஆபத்தும் ஸம்பவிக்கும். (இங்ஙனம் சோகத்திற்குக் காரணமே இல்லை. காரணமிருப்பினும் அதைத் துறக்கவேண்டும்.) 'ஸஹாயம் இல்லையே' என்றும் சோகிக்க வேண்டியதில்லை. சூரர்களும் ஸமர்த்தர்களுமாகிய இந்த எம் வானரயூத நாதர்களனைவரும் உனக்கு ப்ரியஞ்செய்யும் பொருட்டு அக்னியில் குதிப்பதற்கும் உத்ஸாஹமுற்றிருக்கிறார்கள். இனி மற்றைக்கார்யங்களுக்குச் சொல்லவேண்டுமோ? அவர்க்கு அப்படிப்பட்ட உத்ஸாஹம் உளதென்று எப்படி தெரிந்துகொண்டாயென்

கிறாயோ? இவர்களின் ஸந்தோஷத்தைப் பார்க்கையில், அப்படிப்பட்ட உத்ஸாஹமுடையவரென்று எனக்குத் தெரிகின்றது. எனக்கு இவ்விஷயத்தில் உறுதியான ஊஹையும் உளது. நான் பாராக்ரமத்தைக்கைப்பற்றி, ஸீதையை அபஹரித்த பாபகார்யத்தில் புகுந்த உன் பகைவனாகிய ராவணனைக் கொன்று ஸீதையைக் கொண்டுவருமாறு நீ உத்ஸாஹமுற்றிருக்கவேண்டும். அவ்வுத்ஸாஹம் மற்றென்றுமன்று. ராமா! ஸமுத்ரத்தில் அணை கட்டும்படிக்கும், நாம் ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணனை லங்காபட்டணத்தில் காணும்படிக்கும் நீ உத்ஸாஹஞ் செய்யவேண்டும். த்ரிகூட பர்வதசிகரத்தில் நிலையுற்றிருக்கிற லங்காபட்டணத்தைக் கண்டால் போதும். அங்ஙனங் கண்டமாத்ரத்திலேயே ராவணன் யுத்தத்தில் அடிபட்டுத் தொலைந்தானென்றே நிச்சயிப்பாயாக. பயங்கரமாயிருப்பதும் வருணனுக்கு வாஸஸ்தானமுமாகிய ஸமுத்ரத்தில் அணைகட்டாமல், தேவேந்த்ரனோடு கூடின தேவாஸுரர்களாயினும் லங்காபுரியை வெல்ல வல்லரல்லர். லங்கையின் ஸமீபம் வரையில்ஸமுத்ரத்தில் அணைகட்டினவுடனே இவ்வானர ஸைன்யமெல்லாம் ஸமுத்ரத்தைத் தாண்டி வெற்றி பெற்றதென்று நினைத்துக்கொள்வாயாக. இவ்வானரர்கள் யுத்தத்தில் சூரர்களும் காமரூபிகளுமா யிருப்பவர் (லங்காபட்டணத்தை ராக்ஷஸர்களோடு பிடுங்கிக் கொண்டுவரவும் ஸமர்த்தர்களா யிருப்பவர்.) ராஜனே! ஆகையால் சோகத்திற்குட்பட்டு ஸமஸ்த கார்யங்களையும் பாழ்செய்யவல்ல இப்புத்தியைத் துறப்பாயாக. இவ்வுலகத்தில் எங்கும் புருஷன் துக்கமுறுவானாயின், அவனது பௌளர்யமும் பாழாய்விடும். எல்லாமறிந்தவனே! பௌளர்யத்தை முக்யமாக அவலம்பித்திருக்

கும் புருஷன் இப்படிப்பட்ட காலத்தில் எதை முக்ய மாக ஏற்றுக் கொள்ளவேண்டுமோ, அப்படிப்பட்ட தைர்யத்தையும் பராக்ரமத்தையும் கைப்பற்றுவாயாக. சூரர்களும் மஹானுபாவர்களுமான உன்னைப்போன்ற புருஷர்கள் கண்ணுக்குப் புலப்படாதுபோன வஸ்து வைப்பற்றியாவது முதலே உருமாய்ந்த வஸ்துவைப் பற்றியாவது எள்ளளவும் வருத்தமுறலாகாது. அங் ஙனம் வருத்தமுறுவார்களாயின் ஸமஸ்த கார்யங் களும் பாழாய்விடும். நீ புத்தியிற்சிறந்தவர்; எல்லோ ரிலும் மேன்மையுற்றிருப்பவன்; ஸமஸ்த சாஸ்த்ரார்த் தங்களும் தெரிந்தவன். மற்றும் என்னைப்போன்ற ஸஹாயர்களோடு கூடினவன். இப்படிப்பட்ட நீ இப் பொழுது சத்ருவை வதிக்குங் கார்யத்தைப் பார்ப்பா யாக. ராமா! யுத்தத்தில் நீ வில்லைத் தரித்திருக்கையில் உன்னெதிரில் நிற்கவல்லவன் மூன்று லோகங்களிலும் எவனும் எனக்குத் தோற்றவில்லை. வானரர்மேல் ஏற் றப்பட்டிருக்கிற இக்கார்யம் எள்ளளவும் கெடுதி அடையாது. இனி அபாரமாகிய ஸமுத்ரத்தைத் தாண்டி, சீக்ரத்திலேயே ஸீதாதேவியைக் காண்பாய். ராஜனே! ஆகையால் இதுவரையில் துக்கித்திருந்தது போதும். இனி கோபத்தைக் கைப்பற்றுவாயாக. க்ஷத்ரியர்கள் முயற்சியற்றிருப்பார்களாயின், மந்தபாக் யராவர்கள். மிகுதியும் கோபமுடையவனுக்கு எல் லோரும் பயப்படுவார்கள். எங்களுடன்கூடி இனி நீ பயங்கரமாயிருப்பதும் நதிகளுக்கு நாதனுமாகிய ஸமுத்ரத்தைத் தாண்டும்படியான உபாயத்தை இங் கேயே ஸூக்ஷ்மபுத்தியுடன் ஆலோசிப்பாயாக. என் ஸைன்யமெல்லாம் ஸமுத்ரத்தைத் தாண்டுமாயின் ஸித்தமாக ஜயம் பெற்றதேயென்று நிச்சயிப்பாயாக.

ஆகையால் ஸேதுவைக் கட்டும் உபாயத்தையே முன்னம் சிந்திக்கவேண்டும். யுத்தத்தில் சூரர்களும் காமரூபிகளுமாகிய இவ்வானரர்கள் கற்களையும் மரங்களையும் மழையாகப் பெய்து அந்தச்சத்ருக்களனைவரையும் அழித்துவிடுவார்கள். ராமா! நீ யுத்தத்தில் மிகுந்த உத்ஸாஹமுடையவனல்லவா? அணை கட்டியே ஆகாமற் போயினும் மற்றை எந்த விதத்தினாலாவது ஸமுத்ரத்தைத் தாண்டுவோம். தாண்டவேண்டியதே தடை. அனந்தரம் அந்த ராவணன் யுத்தத்தில் முடிந்தானென்றே நினைக்கின்றனன். பலவார்த்தைகள் சொல்லி ப்ரயோஜனம் என்ன? எல்லாவிதத்திலும் உனக்குத் தப்பாமல் ஜயம் ஸித்தமே. இங்ஙனம் எனக்குச் சுப சகுனங்கள் தோற்றுகின்றன. என் மனமும் மிகுந்த ஸந்தோஷமுற்றிருக்கின்றது' என்றனன். இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஹநுமானைப் பார்த்து லங்காபுரத்தின் துர்க்கம் முதலிய ஸ்வரூபத்தை வினவுதலும், ஹநுமான் அவற்றை விசதமாகக் கூறுதலும்.

ககுத்ஸ்தகுலதிலகனாகிய ராமன் ஸாராம்சங்களைக் கண்டறிபவனாகையால் ஸுக்ரீவன் யுக்தியுக்தமாகச் சொன்ன வார்த்தையைக்கேட்டு ஒப்புக்கொண்டு, அனந்தரம் ஹநுமானைப் பார்த்துத் 'தவப்பெருக்கினாலாவது அணை கட்டியாவது ஸமுத்ரத்தை உலர்த்தியாவது எவ்விதத்தினாலாவது இந்த ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்கு நான் மிகுதியும் வல்லனாயிருக்கின்றனன். இனி இவ்விஷயத்தில் எனக்குச் சிந்தையில்லை. ஹநுமானே! ப்ரவேசிக்கமுடியாத அவ்விலங்காபுரிக்கு துர்க்கங்கள் எத்தனை இருக்கின்றன? அவற்றை எனக்கு

மொழிவாயாக. மற்றும் ஸைன்யங்களின் பரிமாணத்தையும் த்வாரங்களில் பூட்டு முதலியவற்ருல் எவர்க்கும் புகக்கூடாதிருக்கும்படி ஏற்படுத்தின பாதுகாப்புக்களையும், லங்காபுரத்தின் ரக்ஷணத்திற்காகச் செய்யப்பட்ட மதிள் அகழி முதலிய ஏற்பாடுகளையும், ராக்ஷஸ க்ருஹங்களையும் முன்பு நீ சொல்லக்கேட்டேனுயினும் மீளவும் அவையெல்லாவற்றையும் கண்ணாரக் கண்டாற்போல் விசதமாகத் தெரிந்துகொள்ள விரும்புகின்றனன். நீ லங்கை முழுவதிலும் அனுயாஸமாக உள்ளதை உள்ளபடியே பார்த்திருக்கின்றனை. அதையெல்லாம் உள்ளபடியே எனக்கு விசதமாக மொழிவாயாக. நீ காண்பதற்கும் கண்டபடி மொழிவதற்கும் ஸமர்த்தனல்லவா!' என்று வினவினன். ராமன் வினவினதைக் கேட்டு, வாயுகுமாரனுகிய அந்த ஹனுமான் பேசுவோர்களில் மேன்மையுற்றவனுகையால் மீளவும் அந்த ராமனைப் பார்த்து, 'லங்காபுரம் துர்க்கச் செயல்களான மதிள் அகழி முதலியவற்றின் நிர்மாணத்தினுல் பாதுகாக்கப்பட்டிருக்கும் விதத்தையும், ஸைன்யங்கள் அதைக் காக்கும் விதத்தையும், ராக்ஷஸர்களுக்குத் தம் ப்ரபுவிடத்திலுள்ள பக்தி ப்ரகாரத்தையும், லங்கைக்கு ராவணனுடைய தேஜஸ்ஸினுல் ஸம்பாதிக்கப்பட்ட ஸம்ருத்தியையும், ஸமுத்ரம் பயங்கரமாயிருத்தலையும், லங்கையில் சதுரங்க பல ஸமூஹங்கள் அந்தந்த இடங்களில் பிரிவினையுடன் ஏற்படுத்தப்பட்ட நிலைமையையும் சொல்லுகிறேன்; கேட்பாயாக' என்றுரைத்து, அனந்தரம் அக் கபிகுல திலகன் அவற்றையெல்லாம் உள்ளபடி மொழியத்தொடங்கி 'லங்கையிலுள்ள ப்ரஜைகளெல்லோரும் மிகுதியும் ஸந்தோஷமுற்றிருப்பார்கள். அதில் மதித்த யானைகள் நிறைந்

திருக்கும்; ராக்ஷஸர்கள் கூட்டங் கூட்டமாய் இருப்பார்கள், ஆகையால் பிறர்க்கு அந்நகரம் புக முடியாததாயிருக்கும். அதில் விசாலமான த்வாரங்கள் நான்கிருக்கின்றன. அவற்றின் கதவுகள் இருப்புப்பூட்டு முதலியவற்றால் திடமாக நிர்மிக்கப்பட்டிருக்கும். அன்றியும் அவை பெருப்பெரிய உழல்தடிகளுடையவை. மற்றும், அவை மிகுதியும் உயர்ந்திருக்கும். அந்த வாசற்படிகளில் பாணங்களையும் கற்களையும் இறைக்கும்படியான யந்த்ரங்கள் மிகத்திடமாகவும் மிகவிசாலமாகவும் துலங்கும். சத்ருஸைன்யங்கள் எதிர்த்து வரும்பொழுது அந்த யந்த்ரங்கள் பாணங்களும் கற்களும் நிறைந்து அந்தச் சத்ருஸைன்யத்தைப் புகவொட்டாமல் அடித்துத் தடுக்கும். அந்த வாசற்படிகளில் சூரர்களான ராக்ஷஸர்கள், ஒரே தடவையில் நூறு பேர்களைக் கொல்பவைகளும் பயங்கரமாயிருப்பவைகளும் கூறிய நுனியுடையவைகளுமாகிய இரும்புத்தடிகளை நூறுநூறாக வைத்திருக்கின்றனர். அந்த லங்கையைச் சுற்றிலும் ஸ்வர்ணமயமான பெரிய ப்ராகாரம் ஒன்றிருக்கின்றது. அதன்மேல் ஏறுவது மிகுதியும் கஷ்டம். அதில் ஆங்காங்கு பத்மராகங்களும் பவழங்களும் வைடூர்யங்களும் முத்துக்களும் இழைக்கப்பெற்ற இடங்கள் பல இருக்கின்றன. அந்த ப்ராகாரத்தைச் சுற்றிலும் மிகுதியும் பயங்கரமாயிருப்பவைகளும் நன்கு நிர்மிக்கப்பட்டு அழகாயிருப்பவைகளுமான அகழிகள் இருக்கின்றன. அவை இழியமுடியாதபடி குளிர்ந்த ஜலமுடையவையாகி மிகுதியும் ஆழ்ந்து முதலைகளும் மத்ஸ்யங்களும் நிறைந்திருக்கும். வாசற்படிகளின்அருகில் அவ்வகழிகளின்மேல் போகவும் வரவும் ஸுகமாயிருக்கும்படி மரப்பலகைகளால் செய்யப்பட்ட நான்கு

சாரங்கள் இருக்கின்றன. அவை மிகுதியும் அகன்றிருக்கும். வேண்டும்பொழுது அந்தப்பலகைகளை எடுக்கும் பொருட்டு அச்சாரங்களில் பெரிய யந்த்ரங்கள் பல இருக்கின்றன. மற்றும், அங்குக் காவலிருக்கும் புருஷர்கள் இருக்கும்பொருட்டு க்ருஹங்கள் வரிசையாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அங்குச்சத்ரு ஸைன்யங்கள் வரும்பொழுது அச்சாரங்கள் பட்டணத்தைப் பாது காக்கின்றன. எப்படியெனில் ஸாதாரண காலங்களில் போகவும் வரவும் ஸுகமாயிருக்கும்படி அகழியின் மேல் அந்தச் சாரங்களின் பலகைகள் பரப்பப்பட்டிருக்கும். சத்ருக்கள் வரும்பொழுது அவற்றிலுள்ள யந்த்ரங்களால் அச்சாரங்களின் பலகைகளை மேல்தூக்கி விடுவார்கள். அகழிகள் அகன்றவைகளும் ஆழ்ந்தவைகளுமாயிருக்கையால் சத்ருக்கள் அவற்றைத் தாண்டிப் பட்டணத்தில் புகவல்லராக மாட்டார்கள். அங்கு வடக்கு வாசற்படியிலுள்ள ஓர் சாரம் மாத்ரம் மிகுதியும் பருத்து மிகவும் திடமாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. ஆகையால் அதை அசைக்கமுடியாது. அந்தச் சாரங்களுக்கு ஆதாரமாகப் பொன்தூண்கள் பலவும் அகழியினிடையில் நாட்டப்பட்டிருக்கின்றன. அதைக் காப்பவர்க்கு ஆதாரமாகத் திண்ணைகளும் இயற்றப்பட்டுத் திகழ்கின்றன. ராமா! ராவணன் சூது சதுரங்கம் முதலிய வ்யஸனங்களில் கால் தாழப்பெறாமல் மனக்கலக்கமின்றி இயற்கையில் இருந்து மனவூக்கமுற்று, தினந்தோறும் ஸைன்யங்களைக் கண்டு ஆராய்ச்சி செய்வதில் ஜாகரூகனாகித் தான் எப்பொழுதும் யுத்தத்திற்கு முயன்றிருக்கின்றனன். மற்றும், லங்கை த்ரிகூடபர்வதத்தின் மேலிருக்கையால் அதிலேறி மேல் போவதற்குப் பிடிப்பு ஒன்றுமே இல்லை.

அங்குப் போவதற்கு தேவதைகளுக்கும் ஸாத்யமன்று அதைப் பார்க்கவும் பயமாயிருக்கின்றது. ஜலதுர்க்கமும் கிரிதுர்க்கமும் வனதுர்க்கமும் மதிள் அகழி முதலிய செயலால் தீர்ந்த துர்க்கமும் ஆகிய நான்குவகைப்பட்ட துர்க்கங்களும் இருக்கின்றன. ராமா! லங்கை மிகுதியும் விசாலமாகிய ஸமுத்ரத்தின் அக்கரையில் இருக்கின்றது. இந்த ஸமுத்ரத்தைத் தாண்டக் கப்பல் வழியும் கிடையாது. மற்றும் இங்கிருப்பவர்க்கு அவ்விடத்து ஸமாசாரந்தெரியக்கூடிய உபாயமும் கிடையாது. ஆகையால் இவ்விலங்கைக்கு ஜலதுர்க்கம் உளதென்பது வெளிச்சமே. தேவநகரம்போல் அவ்விலங்கை பர்வதத்தின் நுனியில் நிர்மிக்கப்பட்டுக் குதிரைகளும் யானைகளும் நிறைந்து எவர்க்கும் புகமுடியாதிருக்கின்றது. ஆகையால் அந்நகரம் எவ்வகையிலும் வெல்ல முடியாதது. இங்ஙனம் வனங்கள் நிறைந்து ஏறமுடியாத பர்வதத்தின் நுனியிலிருக்கையால் கிரிதுர்க்கமும் வனதுர்க்கமும் உண்டு. அகழிகளும் [1]சதக்னிகளும் கற்களை இறைக்கும் பலவகை யந்த்ரங்களும் துர்ப்புத்தியனான ராவணனுடைய லங்காபுரத்தை மிகுதியும் விளங்கச் செய்கின்றன. இவ்விலங்கையில் கீழ்வாசற்படியில் பதினாயிரம் ராக்ஷஸர்கள் இருக்கின்றனர். அவர்களெல்லோரும் சூலாயுதத்தைக் கையில் ஏந்தியிருப்பவர்; எவர்க்கும் எதிரிடமுடியாதவர்; யுத்தங்களில் முன்னே நின்று கத்திகளைக் கொண்டு சண்டைசெய்யுந் திறமையுடையவர். அங்குத் தெற்கு வாசற்படியில் சதுரங்க ஸைன்யத்துடன் லக்ஷம் ராக்ஷஸர்கள் இருக்கின்றனர். அந்தச் சதுரங்க ஸைன்யத்

---

1. சதக்னிகள்—ஒரேதடவையில் நூறுபேர்களை அடிக்கவல்ல யந்த்ரங்கள்.

திலுள்ள பதாதிகள் மிகுதியும் சூரர்களாயிருப்பார் கள். அங்கு மேற்கு வாசற்படியில் பத்துலக்ஷம் ராக்ஷ ஸர் இருக்கின்றனர். அவர்களெல்லோரும், [1]சர்மம் கவ சம் [2]கட்கம் ஆகிய இவற்றைத்தரித்து ஸமஸ்த அஸ்த்ராங்களையும் அறிந்து விளக்கமுற்றிருப்பர். அந் நகரத்தின் வடக்கு வாசற்படியில் நூறுகோடி ராக்ஷ ஸர்கள் இருக்கின்றனர். அவர்களில் சிலர் தேர்வீரர் களும் சிலர் குதிரையின் மேலிருந்து சண்டை செய்ப வருமாயிருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் நற்குலத் தில் பிறந்து ராவணனுக்கு விஸ்வாஸபாத்ரமாகி அவ னால் மிகுதியும் கௌரவிக்கப்பட்டிருப்பவர். மற்றும் எவர்க்கும் எதிரிடமுடியாத ராக்ஷஸர் பலவாயிரம் பேர் அந்த நகரத்தின் மத்யஸ்தானத்தில் இருக்கின் றனர். லங்கையில் எல்லோரும் சேர்ந்து காவலிருப் பவர் நிரம்பவும் ஒருகோடிக் கணக்குடையரா யிருப்பர். நான் அந்தச் சாரங்களை யெல்லாம் முறித்துவிட்டனன். அந்த அகழிகளையும் தூர்த்துவிட்டனன். அவ்விலங்கை முழுவதையும் கொளுத்தினன். அந்த ப்ராகாரங்களை இடித்துத் தள்ளினன். ஆகையால் இப்பொழுது அவ் வளவு கஷ்டமில்லை. மற்றும், நான் ராவணஸைன்யங் களில் பாதிக்குட்பட்ட மஹா பராக்ரமர்களான ராக்ஷ ஸர்களை உருமாய்த்துவிட்டனன். எந்த உபாயத்தினு லாவது ஸமுத்ரத்தைத் தாண்டுவோம். பிறகு வானரர் கள் லங்கையைப் பாழ்செய்தார்களென்றே நிச் சயிப்பாயாக. ராமா! அங்கதன் த்விவிதன் மைந்தன் ஜாம்பவான் பனஸன் நலன் ஸேனாதிபதியாகிய நீலன் ஆகிய இவர்கள் ஆகாயத்தில் கிளம்பியே ஸமுத்ரத்

1. சர்மம்—கேடயம் 2. கட்கம்—கத்தி.

தைத் தாண்டிப்போய் லங்கையை அதன் பர்வதங்களோடும் அரண்யங்களோடும் அகழிகளோடும் வெளிவாசற்படிகளோடும் ப்ராகாரங்களோடும் க்ருஹங்களோடும் பிடுங்கி இங்குக் கொண்டுவரவல்லவர். ஆகையால் மற்ற ஸைன்யங்களால் உனக்கு ஆகவேண்டிய கார்யமென்ன? ஸைன்யங்களெல்லாவற்றிலும் ஸாரபூதர்களான அங்கதாதிகளுக்கு இங்ஙனம் கட்டளை இடுவாயாக. யாத்ரைக்குத் தகுந்த முஹூர்த்தத்தில் ப்ரயாணமாய்ப் போகும்படி அனுமதி செய்வாயாக' என்றனன். மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமாதிகளும் ஸைன்யங்களும் ஸமுத்ரக் கரை சேருதல்.

மஹா தேஜஸ்வியும் ஸத்ய பராக்ரமனுமாகிய ராமன், ஹனுமான் மொழிந்ததையெல்லாம் ஆதியோடந்தமாகக் கேட்டு, ஹனுமானைப் பார்த்து, நீ இப்பொழுது பயங்கரனுன ராவணனது பட்டணமாகிய லங்கையைச் சொல்லுகின்றனேயே; அதைச் சீக்ரத்திலேயே பாழாக்கிவிடுவேன். நான் சொல்லும் இது ஸத்யமே. இது மாருது' என்று மொழிந்து, ஸுக்ரீவனைப் பார்த்து, 'ஸுக்ரீவா! இம்முஹூர்த்தத்திலேயே ப்ரயாணஞ்செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன். இப்பொழுது ஸூர்யன் நடுப்பகலில் இருக்கிறுனைகயால் இந்த அபிஜித்தென்னும் முஹூர்த்தம் ப்ரயாணஞ் செய்ய நமக்குத் தகுந்திருக்கின்றது. இம்முஹூர்த்தம் ஜயத்தைக் கொடுக்க வல்லது. ஸூர்யன் ஆகாயத்தின் இடையில் இருக்கும்பொழுது விஜயத்தை விளைக்கவல்ல இவ்வபிஜித்தென்னும் முஹூர்த்

தத்தில் நான் ப்ரயாணமாய்ப் புறப்படுவேனாயின், இந்த ராவணன் ஒருகால் ஸீதையை எடுத்துக்கொண்டு எங்கேனும் போயினும், எங்குப் போய்த் தப்பித்துக் கொள்ளப் போகின்றனன்? அவன் எங்குப்போயினும் விடாமல் பின்றொடர்ந்து முடிப்பேனன்றி விடமாட்டேன். விஷத்தைப்பருகி வருத்தமுற்றிருப்பானொருவன் ப்ராணன்களை இழக்கும்படியான ஸமயத்தில் அம்ருதத்தைப் பரிசித்து ஜீவிப்பதுபோல், ஸீதை நான் ப்ரயாணமாய்ப் புறப்பட்டு வருவதைக் கேட்டு ஜீவித்திருப்பதில் கொஞ்சம் ஆசையுற்றிருப்பாள். ஸுக்ரீவா! [1] இன்று உத்தாபல்குனி நக்ஷத்ரம். புனர்வஸுவில் பிறந்த எனக்கு இது ஸதானதாரையா யிருக்கின்றது. நாளைக்கு ஹஸ்த நக்ஷத்ரத்தோடு சந்த்ரன் கூடுகின்றனன். அது நைதனதாரையாகும். ஆகையால் ஸமஸ்த ஸைன்யங்களோடுங்கூடி இன்றைத்தினமே ப்ரயாண

---

1. (இன்று உத்தரபல்குனீ நக்ஷத்ரம்) என்கையால் அன்றைத் தினம் பௌர்ணமாஸி யென்று தெரிகிறது. ஆகையால் பங்குனி மாதத்துப் பௌர்ணமாஸியினன்று ப்ரயாணமென்று ஏற்படுகிறது. புனர்வஸுவில் . . . . ஸாதனதாரையாயிருக்கின்றது) இது தாரா பலன். அதாவது-ஜன்மநக்ஷத்ரம் முதல், தினநக்ஷத்ரம் வரையில் எண்ணி ஒன்பதால் வகுத்து வந்த மிச்சம் (1) ஆனால் ஜன்மம், அதன் பலன் ரோகம். (2) ஆனால் ஸம்பத்து. (3) ஆனால் விபத்து, கஷ்டம். (4) ஆனால் க்ஷேமம். (5) ஆனால் ப்ரத்யக்-இதை ப்ரயாணம் தவிர மற்றை விஷயங்களில் சுபமன்றென்பர். (6) ஆனால் ஸாதனம், கார்யஸித்தி (7) ஆனால் நைதனம்-கெடுதி. (8) ஆனால் மைத்ரம். இதனால் ஸுகமும் லாபமும் கிடைக்கும். (9) ஆனால் பரமமைத்ரம், இதுவும் நல்லது. இங்குப் புனர்வஸுவினின்று எண்ணினால் உத்தரபல்குனி (6) ஆவது நக்ஷத்ரமாகையால் ஸாதனதாரையாகிறது. இதனால் கார்யஸித்தியென்பதைக் கொண்டு இன்றைத் தினமே ப்ரயாணஞ் செய்யவேண்டுமென்கின்றனன்.

மாய்ப் புறப்படுகின்றனன். மற்றும், சுபத்தை அறிவிக்கின்ற சகுனங்களும் தோற்றுகின்றன. ஆகையால் அவஶ்யம் ராவணனைக் கொன்று ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைக் கொண்டு வருவேனென்பதில் ஸந்தேஹமே இல்லை.[1] இதோ எனது இடக்கண் மேல் பக்கத்தில் துடிக்கின்றது. ஆகையால் நான் மனோரதித்துக்கொண்டிருக்கிற ஜயம் எனக்கு அவஶ்யம் ஸித்திக்குமென்று சொல்வது போலிருக்கிறது' என்றனன். அனந்தரம் தர்மஸ்வபாவனாகிய ராமன் கார்யங்களில் வல்லனாகையால், வானரராஜனாகிய ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் தான் மொழிந்த வார்த்தையைக் கேட்டுப் புகழ்கையில், மீளவும் ஸுக்ரீவனைப் பார்த்து, 'நீலன்

1. இங்கு 'உபரிஷ்டாத்தியி நயநம் ஸ்ஃபுரமாணமிதம் மம। விஜயம் ஸமநுப்ராப்தம் ஶம்ஸதீவ மநோரதம்' என்பது மூலம். இதில் (நயநம்) என்று ஸாமான்யமாகக் கண்ணைச் சொல்லினும், இடக்கண்ணையே கொள்ளவேண்டும். (உபரிஷ்டாத் ஸ்ஃபுரமாணம்) என்று மேல்பாகத்தில் துடிப்பதாகச் சொல்லுகையால் வலக்கண்ணைச் சொல்லலாகாது. வலக்கண் மேல்பாகத்தில் துடிக்குமாயின் கெடுதியே யென்று ஜ்யோதிஶ்ஶாஸ்த்ரத்தில் சொல்லுகிறது. எப்படியெனில்- 'நேத்ரஸ்யாத: ஸ்ஃபுரணமஸக்ருத் ஸங்கரே ஹங்குஹேதுர் நேத்ரோபாந்தே ஹரதி நயநம் நேத்ரமூலேச ம்ருத்யு:। நேத்ரஸ்யோர்த்வம் ஹரதி ஸகலம் மாநஸம் து:கஜாதம் வாமேசைவம் ஃபலமவிகலம் தக்ஷிணே வைபரீத்யம்' (கண் கீழ்பாகத்தில் அடிக்கடி துடிக்குமாயின், யுத்தத்தில் தோல்விக்குக் காரணமாம். கண் நுனியில் துடிக்குமாயின் கண்ணைக் கெடுக்கும். கண் அடிபாகத்தில் துடிக்குமாயின் மரணத்தைக் காட்டும். கண் மேல்பாகத்தில் துடிக்குமாயின் மனோதுக்கங்களெல்லாம் தீரும். இதெல்லாம் இடக்கண்ணில் தப்பாது பலிக்கும். வலக்கண்ணில் சொன்னதற்கு விபரீதமாகக்காண்க.) ஆகையால் வலக்கண்ணென்று கூறுவது சிந்திக்கத்தக்கதே. இங்ஙனம் கோவிந்தராஜர்.

பலிஷ்டர்களான லக்ஷம் வானரர்களால் பின்ருெடராப் பட்டு வழியைப் பார்க்கும்பொருட்டு இந்த ஸைன்யத் திற்கு முன்னே நடப்பானுக' என்று இங்ஙனம் மொழிந்தவுடனே, நீலன் அருகில் வர, அவனே நோக்கி, 'நீலா! ஸேனுபதி! காய் கிழங்குகள் ஏராளமாயிருக் கப்பெற்றுக் கறுத்துச் செழித்த அரண்யங்களும் குளிர்ந்தழகிய ஜலங்களும் அமைந்து தேன் ஸம்ருத்த மாகக் கிடைக்கக்கூடிய மார்க்கத்தில் சீக்ரமாக ஸேனையை அழைத்துக்கொண்டு போவாயாக. துர்ப் புத்திகளான ராக்ஷஸர்கள் வழியில் காய் கிழங்கு களையும் ஜலத்தையும் விஷங்கலந்து கெடுத்து வைப் பார்கள். நீ சோம்பலின்றி அவர்கள் அங்ஙனம் செய் யாதபடி தினந்தோறும் ஊக்கத்துடன் பாதுகாத் திருப்பாயாக. ஒருகால் பகைவர்கள் பள்ளமான இடங் களிலும், ஜலதுர்க்கங்களிலும், அரண்யங்களிலும் மறைந்து ஸமயம் பார்த்து நம்மை அடிப்பதற்காக ஸைன்யத்தை வைத்திருப்பார்கள். வானரர்கள் நாற் புறங்களிலும் ஆகாயத்தில் கிளம்பி அந்தந்த இடங் களில் சத்ருக்கள் ஸைன்யத்தை வைத்திருக்கிருர்களா, இல்லையா என்று நன்ருக உற்றுப் பார்க்கவேண்டும். ஏதேனும் அற்பஸாரமான ஸைன்யம் இருக்குமாயின், அதை இங்கேயே உபயோகத்திற்காக நிறுத்தி விடு வாயாக. நாம் இப்பொழுது முயன்ற கார்யம் பயங் கரமாயிருப்பது. ஆகையால் எல்லோரும் தப்பாமல் பராக்ரமத்தை நிறைவேற்ற வேண்டும். மஹாபலர் களான வானரஸிம்ஹர்கள் நூறுநூருகவும் ஆயிர மாயிரமாகவும் கூடி, மஹாஸமுத்ரத்தின் ப்ரவாஹம் போல் புலப்படுவதான நம் ஸேனையை நடத்திக் கொண்டு போவார்களாக. பர்வதம்போன்ற உருவ

முடைய கஜனும் மஹாபலனுகிய கவயனும் அத்தகைய கவாக்ஷனும் செருக்குற்ற காளையெருதுகள் கோக்களின் முன்பு நடப்பதுபோல், ஸேனையின் முன்பு நடந்து போவார்களாக. கிளம்பிப் பாய்பவரனைவரிலும் மேன்மையுற்று வானரர்களெல்லோரிலும் தலைமையுடைய ருஷபன் வானரஸைன்யத்தின் வலப்பக்கத்தை (அதாவது-மேற்குதிசையை)ப் பாதுகாத்துக்கொண்டு போவானுக. மத்தகஜம்போல் அவமதிக்க முடியாத பலமுடைய கந்தமாதனன் வானரஸைன்யத்தின் இடப்பாகத்தைப் பாதுகாத்துப் போவானுக. நான் ஐராவதத்தின்மேல் தேவேந்த்ரன் [1] ஆரோஹிப்பதுபோல் ஹனுமான்மேல் ஆரோஹித்து ஸேனுஸமூஹங்களுக்கு உத்ஸாஹத்தை வளரச்செய்துகொண்டு ஸைன்யத்தினிடையில் போகின்றனன். யக்ஷாதிபதியான குபேரன் ஸார்வபௌமமென்னும் திக்கஜத்தின்மேல் ஏறுவது போல், [2] அந்தகனை நிகர்த்த இந்த லக்ஷ்மணனும் அங்கதன்மேல் ஏறிக்கொண்டு போவானுக. ஜாம்பவான் ஸுஷேணன் வேகதர்சி ஆகிய இம்மூவரும், [3] பல்லூகராஜனும் மஹாபலனுமாகிய தூம்ரனும் ஸேனையின் பின்பாகத்தைப் பாதுகாத்து வருவார்களாக' என்றனன். வானரஶ்ரேஷ்டனுகிய ஸுக்ரீவன், ராமன் மொழிந்ததைக் கேட்டு மஹாவீர்யமுடைய வானரர்களுக்கு ப்ரயாணமாய்ப் போகும்படி ஆக்ஞாபித்தனன். அப்பொழுது வானரர்கள் எல்லோரும் யுத்தத்தில் உத்ஸாஹமுடையவராகிக் குஹைகளினின்றும் பர்வத சிகரங்களினின்றும் கிளம்பிப் பாய்ந்தனர். அனந்தரம் நீதிதர்மங்களை நன்குணர்ந்தவனுகிய

1. ஆரோஹித்தல்—ஏறுதல். 2. யமனை. 3. பல்லூகம்-கரடி.

ராமன், வானரர் தலைவனான ஸுக்ரீவனாலும் லக்ஷ்மணனாலும் பூஜிக்கப்பட்டு வானரஸைன்யத்துடன்கூடித் தென்திசையைக் குறித்துப் போயினன். அவன் வானர ஸைனிகர்கள் நூறுநூறாகவும் லக்ஷம்லக்ஷமாகவும் கோடிகோடியாகவும் பதினாயிரம் பதினாயிரமாகவும் மத்த கஜங்கள்போல் புலப்படுவோராகித் தன்னைச்சுற்றிலும் சூழ்ந்து வரப்பெற்று ப்ரயாணமாய்ப்போயினன். அப்பொழுது ராமன் போய்க்கொண்டிருக்கையில், அளவற்றதான மற்ற வானரஸைன்யம் அவனைப் பின்றொடர்ந்து போயிற்று. அவ்வானரர்கள் செருக்குற்று அடக்கமுடியாத ஸந்தோஷமுடையவரும் ஸுக்ரீவனால் நன்கு பாதுகாக்கப்பட்டவருமாகையால் எல்லோரும் குண்டாகச் சுழலமிடுவதும் கிளம்பிப் பாய்வதும் மேகம்போல் கர்ஜிப்பதும் ஸிம்ஹநாதஞ் செய்வதும் அவ்யக்தமாகச் சப்திப்பதும் ஓடுவதும் நல்ல வாஸனையுடைய பழங்களைத் தின்பதும் தேன்களைப் பருகுவதும் வேடிக்கைக்காகப் பூங்கொத்துக்கள் குவியல் குவியலாக நிறைந்த பெரிய வ்ருக்ஷங்களைப் பிடுங்கிக் கையில் கொள்வதும் ஆகிய பல செயல்களைச் செய்துகொண்டு தென்திசையைக் குறித்துப் போயினர். அப்பொழுது வானரர்களில் சிலர் கர்வத்தினால் கொழுப்புற்று வலிமையினால் வேறு சிலரை மேல்தூக்கினர். சிலர் வேறு சிலரை விழத்தள்ளினர். சிலர் தள்ளுண்டு அவர்க்குப் பதில் செய்ய வல்லமையில்லாமையால் அங்ஙனம் தள்ளினவர்களை வைதனர். வல்லமையுடையவர் சிலர் தம்மைத் தள்ளினவர்களைத் தாமும் பிடித்து விழத்தள்ளினர். வானரர்கள் ராமனது ஸமீபத்தில் 'நாம் ராவணனையும் ராக்ஷஸர்களெல்லோரையும் கொன்று விடவேண்டும்' என்று கர்ஜித்துக் கொண்டிருந்தனர். வீர

ளுகிய ருஷபனும் நீலனும் குமுதனும் பலவானரர் களோடு கூடி ஸைன்யத்திற்கு முன்னே நடந்து வழி யைச் சோதித்துக் கொண்டிருந்தனர். பகைவரைப் பறந்தோடச்செய்ய வல்ல வானர ராஜளுகிய ஸுக்ரீ வனும் ராமனும் லக்ஷ்மணனும் பலசாலிகளும் பயங் கரர்களுமான பல வானரர்களால் சூழப்பட்டு ஸேனை யின் நடுவில் போயினர். வீரனுகிய சதவலியென்னும் வானரன் பத்துக்கோடி வானரர்களால் சூழப்பட்டு, ஒருவனே வானரஸைன்யத்தை யெல்லாம் பாதுகாத் துக் கொண்டிருந்தனன். கேஸரியும் பனஸனும் கஜ னும் மஹாபலனுன அர்க்கனும் நூறுகோடி வானரர் களோடுகூடி வானரஸைன்யத்தின் ஒரு பக்கத்தை ரக்ஷித்துக் கொண்டிருந்தனர். ஸுஷேணனும் ஜாம்ப வானும் பல கரடிகளால் சூழப்பட்டு ஸுக்ரீவனை முன் னிட்டுக்கொண்டு வானர ஸேனைகளின் பின் பாகத்தை ரக்ஷித்துக் கொண்டிருந்தனர். வானரஸேனைக்கு நாய கனும் வீரனும் வானரதிலகனும் கிளம்பிப்போகுபவர் களில் மேன்மை யுற்றவனுமாகிய நீலன் நாற்புறங் களிலும் திரிந்துகொண்டு வானர ஸைன்யத்தைப் பாதுகாத்து வந்தனன். மற்றும், வீரனுகிய தரீமுகனும் ப்ரஜங்கனும் ரம்பனும் ரபஸனும் நாற்புறத்திலும் திரிந்துகொண்டு வானரர்களெல்லோரையும் த்வரைப் படுத்திக்கொண்டு போயினர். அவ்வானர ஸிம்ஹர்கள் அங்ஙனம் பலத்தினுல் செருக்கடித்துக்கொண்டு போகையில், தூரத்தில் செடிகளும் கொடிகளும் நிறைந்த பர்வதராஜனுகிய ஸஹ்யபர்வதத்தையும், மற் றும் தாமரை முதலியவை நன்கு மலர்ந்திருக்கப்பெற்ற தாமரை யோடைகளையும் தாமரைத் தடாகங்களையும் அரண்யங்களையும் கண்டனர். ஸமுத்ர ப்ரவாஹம்போல்

கரையில்லாததும் பயங்கரமுமாகிய அப்பெரிய வானர ஸைன்யம், பயங்கரமான கோபத்தையுடைய ராமனது கட்டளையை அறிந்து பயந்து நகரங்கள் மீதும் க்ராமங்கள் மீதும் போகாமல் பெருங்கோஷம் உண்டாகும்படி பயங்கரமான கோஷமுடைய ஸமுத்ரம்போல் பரந்து நடந்தது. ராமனுக்கு முக உல்லாஸம் உண்டாகும்படி அவன் பக்கத்தில் சூரர்களான வானரோத்தமர்கள் தூண்டப்பட்ட உத்தம அஶ்வங்கள்போல் சீக்ரமாகப் போயினர். புருஷஶ்ரேஷ்டர்களான அந்த ராம லக்ஷ்மணர்கள் ஹனுமான்மேலும் அங்கதன்மேலும் ஏறிக்கொண்டிருக்கையால் பெரிய க்ரஹங்களாகிய சுக்ர ப்ருஹஸ்பதிகளோடு கூடின சந்த்ர ஸூர்யர்களைப்போல் ப்ரகாசித்தனர். அங்ஙனம் தர்மஸ்வபாவனாகிய ராமன் வானராதிபதியான ஸுக்ரீவனாலும் லக்ஷ்மணனாலும் பூஜிக்கப்பெற்று வானரஸேனையோடு கூடித் தென் திசையைக் குறித்துப் போயினன். அனந்தரம் அங்கதன்மேல் உட்கார்ந்திருந்த லக்ஷ்மணன் சகுன ஶாஸ்த்ரார்த்தங்களை மறவாதுணர்ந்தவனும் மேன்மேலும் தோற்றங்கொள்ளும் புத்தியுடையவனுமாகையால் ஹனுமான் மேலிருக்கும் ராமனைப்பார்த்து மங்களகரமான வாக்யத்துடன் 'நீ ராவணனைச் சீக்ரமாகக் கொன்று அவன் எடுத்துக்கொண்டு போன ஸீதையை மீளவும் பெற்றுக் கருத்தும் ஈடேறப்பெற்று ஸகல பதார்த்தங்களும் ஸம்ருத்தமா யிருக்கப்பெற்ற அயோத்யா நகரத்திற்குப் போவாய். ராமா! ஆகாயத்திலும் பூமியிலும் பெரிய சுபசகுனங்கள் எவையெவை உளவோ அவையெல்லாம் இப்பொழுது உனக்குத் தோற்றி உன் கார்ய ஸித்தியைத் தெரியப்படுத்துகின்றன. காற்று, மெதுவும் ஹிதமும் ஸுகத்தைக் கொடுப்

பதும் மங்களத்தை அறிவிப்பதுமாகி மெல்ல மெல்ல ஸேனையின் பின்னே வீசுகின்றது. ம்ருகங்களும் பக்ஷிகளும் இதோ மதுரமான பூர்ண சப்தங்களைச் செய்கின்றன. திசைகளெல்லாம் ஒளியுற்றிருக்கின்றன. ஸூர்யனும் நிர்மலனாகி விளங்குகின்றனன். ஸமஸ்த வேதங்களையும் உணர்ந்த பார்க்கவனெனப்படும் சுக்ரனும் பாபக்ரஹ ஸம்பந்தமின்றித் தெளிந்த ஒளியுடன் உனக்குப் பின்புறத்தில் ப்ரகாசிக்கின்றனன். மற்றும், பரிசுத்தர்களான ஸப்தரிஷிகளும் சிறந்த ஒளியுடன் தென்திசைக்குப் போய்த் திரும்பி வருபவராகி த்ருவனை வலஞ்செய்துகொண்டு மிகுதியும் ப்ரகாசிக்கின்றனர். மஹானுபாவர்களான நமது இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு ப்ரதான கூடஸ்தனும் ராஜர்ஷியுமாகிய த்ரிசங்குவும் விஸ்வாமித்ர முனிவரால் படைக்கப்பட்ட ஸப்த ரிஷிகளிலடங்கின வஸிஷ்டருடன்கூடி நிர்மலனாகி ப்ரகாசிக்கின்றனன். மஹானுபாவர்களான நமது இக்ஷ்வாகுவம்சத்தரசரது சிறந்த நக்ஷத்ரமாகிய விசாகையென்னும் இரண்டு நக்ஷத்ரங்கள் க்ரூர க்ருஹங்களால் அணுகப்படாமல் தெளிவுற்றுப்ரகாசிக்கின்றன. இதுவன்றி, நிருதியென்னும் தேவதையுடையதும் ராக்ஷஸர்களின் நக்ஷத்ரமுமாகிய மூல நக்ஷத்ரமும் அருகேயிருக்கும் தூமகேதுவால் தீண்டப்பட்டுப் பரிதாபமுற்று மிகுதியும் பீடிக்கப்பட்டிருக்கின்றது. இதெல்லாம் ராக்ஷஸவிநாசத்தின் பொருட்டே ஏற்பட்டிருக்கின்றன. ஏனெனில், ம்ருத்யுவால் அணுகப்பட்டவர்களின் நக்ஷத்ரம் அப்படிப்பட்ட அந்திமகாலத்தில் துஷ்டக்ரஹத்தினால் பீடிக்கப்படும். மற்றும், ஜலங்கள் நிர்மலங்களாகி நல்லருசியுடையவைகளாயிருக்கின்றன. அரண்யங்களும் பழங்களால் நிறைந்திருக்கின்றன.

வ்ருக்ஷங்களெல்லாம் ருதுமர்யாதையைக் கடக்காமல் நன்கு புஷ்பித்து மிகுதியும் மணங்கமழ்கின்றன. ப்ரபூ! வ்யூஹங்களாக ஏற்படுத்தப்பட்ட இவ்வானர ஸைன்யங்களும், முன்பு தாரகாஸுர யுத்தத்தில் (அல்லது-சந்த்ரன் ப்ருஹஸ்பதி பார்யையாகிய தாரையைக் கொண்டு போகும்பொழுது அதைப்பற்றி நடந்த யுத்தத்தில்) தேவஸைன்யங்கள்போல் மிகுதியும் ப்ரகாசிக்கின்றன. பெரியோனே! இங்ஙனம் சுபநிமித்தங்களையெல்லாம் பார்த்து ஸந்தோஷமுற்றிருப்பாயாக' என்றனன். இங்ஙனம் லக்ஷ்மணன் ஸந்தோஷமுற்றுத் தனது அண்ணனாகிய ராமனை ஸமாதானப்படுத்தி மொழிந்தனன். அங்ஙனம் நகங்களையும், தந்தங்களையும் ஆயுதமாக உடைய அந்த [1] ருக்ஷவானர ஸ்ரேஷ்டர்களின் மஹாஸைன்யமானது பூமி முழுவதும் பரந்துசென்றது. வானரர்களின் கைகளாலும் கால்களாலும் கிளம்பின தூள் ஸூர்யனுடைய ஒளியை மறைத்து எல்லோர்க்கும் பயம் உண்டாகும்படி லோகமெல்லாம் மறைத்துநின்றது. பயங்கரமான அவ்வானரஸைன்யம் மேகஸமூஹம் ஆகாயத்தை மறைப்பதுபோல், பர்வதங்களோடும் வனங்களோடும் ஆகாயத்தோடும் கூடின தென்திசையைச் சேர்ந்த பூமியை யெல்லாம் மறைத்துக்கொண்டு சென்றது. அப்பொழுது அவ்வானர ஸைன்யம் நதிகளை இடைவிடாமல் தாண்டிக்கொண்டிருக்கையில், அவற்றின் ஜலப்ரவாஹங்கள் அணைகட்டித் தடுக்கப்பட்டவைபோல், போகமுடியாமல் நின்றிருக்கையால் எதிர்முகமாகத் திரும்பிச் சுற்றிலும் பல யோஜனைதூரம் வரையில் பாய்ந்தன. அவ்வானரர்

1. ருக்ஷம்—கரடி.

கள் தெளிந்த ஜலமுடைய தாமரை யோடைகள் குளிர்ந்திருக்கையால் அவற்றின் நடுவில் இழிந்து தாண்டிப்போயினர். வ்ருக்ஷங்கள் நிறைந்த பர்வதங் கள் வரும்பொழுது குறுக்கே சென்று தாண்டினர். மேடு பள்ளமில்லாத பூமிபாகங்கள் வரும்பொழுது அவற்றில் முழுவதும் பரந்து நடந்தனர். பழங்களை யுடைய அரண்யங்கள் வரும்பொழுது பழங்களைப் பறித்துத் தின்னவேண்டுமென்று அம்மரங்களின் கீழ் வழியாக நடந்துசென்றனர். மிகுதியும் பெரியதாகிய அவ்வானரஸேனை அங்ஙனம் பூமிமுழுவதையும் மறைத் துப் போய்க்கொண்டிருந்தது. வாயுவை நிகர்த்த வேகத்தையுடைய அவ்வானரர்களெல்லோரும் ராம கார்யத்தின் நிமித்தமாகப் பராக்ரமம் மிகுதியுங் மேலெழப்பெற்று மனக்களிப்புற்று வழியில் ஒருவர்க் கொருவர் தமது ஸந்தோஷப் பெருக்கையும் வீர்யத் தின் மிகுதியையும் பலத்தின் பெருமையையும் காட்டிக் கொண்டு யௌவனப் பருவத்தின் திறமையாலுண் டாகும் பலவகைக் கொழுப்புச்செயல்களைச் செய்து கொண்டு நடந்தனர். அவர்களில் வனங்களில் திரியுந் தன்மையுடைய சில வானரர்கள் வேகமாகச் சென்ற னர். மற்றுஞ் சிலர் மேல் கிளம்பினர். மற்றுஞ் சிலர் கிலகிலா சப்தங்களைச் செய்தனர். சிலவானரர்கள் தமது [1] லாங்கூலங்களைப் பூமியில் அடித்தனர். சிலர் கால் களைத் தரையில் அதிரும்படி உதைத்தனர். சிலர் கைகளை நீட்டி வ்ருக்ஷங்களை முறித்துப் பர்வதங்களைப் பிளந்தனர். பர்வதங்களில் திரியுந்தன்மையுள்ள சில வானரர்கள் பர்வத சிகரங்களின்மேல் ஏறிப் பெருங்

1. லாங்கூலங்கள்—வால்கள்.

கோஷமிட்டனர். சிலர் ஸிம்ஹநாதஞ்செய்தனர். சிலர் தமது நடைவேகங்களால் கொடிகளடர்ந்திருக்கும் பெருப்பெரிய புதர்களை இருந்த இடமே தோன்றாத படி முறித்துக்கொண்டு சென்றனர். சிலர் உடம்பை வளைத்துப் பராக்ரமத்தினால் கற்களையும் மரங்களையும் பிடுங்கிக்கொண்டு விளையாடினர். பயங்கரர்களான வானரஸைனிகர்கள் நாறுநாறாகவும் ஆயிரமாயிர மாகவும் லக்ஷம் லக்ஷமாகவும் கோடி கோடியாகவும் அழகாகப் பூமியெங்கும் வ்யாபித்திருந்தனர். மிகவும் பெரிதான அவ்வானரஸைன்யம் ப்ரபுவாகிய ராமனோடு கூடி மிகுதியும் ஸந்தோஷமுற்று ஸுக்ரீவனால் பாது காக்கப்பட்டு இரவும் பகலும் ப்ரயாணமாய்ப் போய்க் கொண்டிருந்தது. வானரர்களெல்லோரும் யுத்தத் திலுள்ள உத்ஸாஹத்தினால் மிகுதியும் வேகமாகச் சென்றார்களேயன்றி, ஸீதாதேவியைச் சிறையினின்று எப்பொழுது விடுவிப்போமென்னும் ஆதுரதத்தினால் இடையில் எங்கும் சிறிதுநேரமாயினும் நின்றிலர். அனந்தரம் அவ்வானரர்கள், வ்ருக்ஷங்கள் நிறைந் ததும் நானாவித ம்ருகங்களோடு கூடியதுமாகிய ஸஹ்ய பர்வதத்தையும் மலயபர்வதத்தையுஞ் சேர்ந்தனர். ராமன் ஸஹ்யபர்வதத்திலும் மலயபர்வதத்திலும் நானாவகை வனங்களையும் ஆறுகளையும் அருவிகளையும் பார்த்துக்கொண்டே கடந்து சென்றனன். வானரர்கள் வழியில் மகிழமரங்களையும் மஞ்சாடி மரங்களையும் மாமரங்களையும் அலரிச் செடிகளையும் நினிசமரங்களை யும் ஆங்காங்கு முறித்துக்கொண்டு போயினர். அன்றி யும் அவர்கள் அழிஞ்சில் செடிகளையும் புங்கமரங்களை யும் இரளி மரங்களையும் ஆலமரங்களையும் திந்துக வ்ரு க்ஷங்களையும் நாவல்மரங்களையும் நெல்லிமரங்களையும்

கடம்பு மரங்களையும் முறித்துக்கொண்டு சென்றனர். அழகான கற்களில் முளைத்திருக்கும் பலவகைப்பட்ட காட்டுமரங்கள் வானர ஸைன்யத்தின் வேகத்தினாலுண்டாகுங் காற்றினால் அசைக்கப்பட்டு அவ்வானரர்களின் மேல் புஷ்பங்களைப் பொழிந்தன. அப்பொழுது தேன் மணங் கமழப்பெற்ற வனங்களில் மந்தமாருதம், வண்டுகள் ஜங்காரத்துடன் பின்றொடரப்பெற்று ஸுகஸ்பர்சமுடையதும் சந்தனம்போல் குளிர்ந்ததுமாகி வீசிக்கொண்டிருந்தது. பர்வதச்ரேஷ்டமாகிய ஸஹ்யபர்வதம் மிகுதியும் [1]கைரிகதாதுக்களால் நன்கு அலங்காரமுற்றிருப்பதாகையால் அவ்வானரர்கள் அந்தப் பர்வதத்தின்மேல் மிதித்து நடக்கையால் கைரிக தாதுக்கள் முறிந்து பொடியாக, அவற்றினின்றும் கிளம்பின தூளானது காற்றுவேகத்தினால் மேல்கிளம்பி மிகுதியும் பெரிதான அவ்வானர ஸைன்யத்தை யெல்லாம் நாற்புறத்திலும் சூழ்ந்து கொண்டது. அங்கு ரமணீயங்களான மலைச்சாரல்களெல்லாவற்றிலும் நன்கு புஷ்பித்திருக்கிற தாழைகளும் நொச்சிலிகளும் மனத்திற்கினியவையாகி வஸந்தருதுவில் புஷ்பிக்குந் தன்மையுடைய குறுக்கத்திச்செடிகளும் புஷ்பித்து மணங்கமழ்கின்ற குருந்தமரப் புதர்களும் புங்கமரங்களும் இலுப்பைமரங்களும் மகிழமரங்களும் வஞ்சிச்செடிகளும் ஞாழல்களும் திந்துக மரங்களும் மஞ்சாடி மரங்களும் புஷ்பித்த நாககேஸர மரங்களும் மாமரங்களும் பாதிரி மரங்களும் மலையத்தி மரங்களும் பேரீச்சைமரங்களும் மருதமரங்களும் சிம்சுபாவ்ருக்ஷங்களும் வெட்பாலைமரங்களும் தவ வ்ருக்ஷங்களும் இலவ

1. கைரிகதாது—காவிக்கல்.

மரங்களும் செம்மருதாணிகளும் சீதாளமரங்களும் தினிசமரங்களும் அருநெல்லிமரங்களும் கடம்பமரங்களும் கறுத்த புஷ்பங்களையுடைய அசோகமரங்களும் மாவலிங்கைமரங்களும் அழிஞ்சில்களும் நன்மணங் கமழும் புஷ்பங்களையுடைய பத்மகமென்னும் வ்ருக்ஷங்களும் (நிலத்தாமரைகளும்) ஆகிய நிரம்பவும் புஷ்பித்திருக்கிற இந்த வ்ருக்ஷங்களெல்லாம், உயரக்கிளம்பிக் குதித்துப் பாய்ந்து செல்கின்ற அவ்வானரர்களால் பாழ்செய்யப்பட்டன. அந்த ஸஹ்யபர்வதத்தில் நடைவாவிகள் குளிர்ந்த ஜலமுடையவையாகிச் சக்ரவாகங்களாலும் நீர்க்கோழிகளாலும் நீர்க்காகங்களாலும் க்ரௌஞ்சப் பறவைகளாலும் பன்றி முதலிய ஜலவாஸி ம்ருகங்களாலும் விளக்கமுற்றுக் காடிகளும் சிறுத்தைகளும் ஸிம்ஹங்களும் பெரும்புலிகளும் துஷ்டகஜங்களும் முதலிய பல பயங்கர ம்ருகங்கள் கரையிலுள்ள வனங்களில் நாற்புறத்திலும் நிறைந்திருக்கப் பெற்றவைகளும் மலர்ந்த தாமரைகளும் செங்கழுநீர்களும் ஆம்பல்களும் நெய்தல்களும் முதலிய நீரில் விளையும்பல வகைப் புஷ்பங்களால் நிறைந்தவைகளுமாயிருந்தன. அப்படிப்பட்ட நடைவாவிகளும் மற்றுமுள்ள குட்டைகளும் அவ்வானரர்களால் கலக்கிப் பாழ்செய்யப்பட்டன. அந்தப்பர்வதத்தின் தாழ்வரைகளில் பலவகைப் பக்ஷிஸமூஹங்கள் அந்த ஸேனையைக் கண்டு கூச்சலிட்டன. வானரர்கள் அப்பர்வதத்திலுள்ள தாமரை யோடைகளில் ஸ்நாநஞ்செய்து ஜலங்களைப்பருகி ஒருவர்மேல் ஒருவர் ஜலத்தை இறைத்துக்கொண்டு விளையாடினர். அனந்தரம் வானரர்கள் அந்தப் பர்வதத்தின்மேல் ஏறி மிகுதியும் மதித்தவராகி அப்பர்வதத்திலுள்ள வ்ருக்ஷங்களின் அம்ருதம்போன்ற ருசியுடைய பழங்களை

யும் புஜித்தனர். தேன்போன்ற வர்ணமுடைய அவ் வானரர்கள் ஆங்காங்குக் குறுணித்தேன் நிரம்பித் தொங்குகின்ற தேன்கூண்டுகளை யதேஷ்டமாகப் பருகிக்கொண்டே மிகுந்த ஸந்தோஷத்துடன் போயினர். வானரோத்தமர்கள் வ்ருக்ஷங்களை முறிப்பதும் கொடிகளைப் பிடித்து இழுப்பதும் பெரிய மலைகளைப் பிளப்பதும் ஆகிய பலசெயல்களைச் செய்துகொண்டே சென்றனர். சில வானரர்கள் தேன்களைப் பருகி மதித்து இறைச்சலிட்டுக்கொண்டு வ்ருக்ஷங்களில்லாத இடங்களில் நடந்து சென்றனர். சிலர் வ்ருக்ஷங்கள்மேல் ஏறினர். சிலர் வ்ருக்ஷங்களினின்று தரையின்மேல் குதித்தனர். வானரயூதபதிகளால் நிறைந்தபூமி, கதிர் பழுத்த சம்பாப்பயிர்களால் நிறைந்த பூமிபோல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அனந்தரம் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ராமன் மஹேந்த்ரபர்வதஞ் சேர்ந்து, பலவகை வ்ருக்ஷங்களால் ப்ரகாசிக்கின்ற அதன் சிகரத்தில் ஆரோஹித்தனன். அப்பால் தசரத குமாரனாகிய ராமன் மஹேந்த்ர பர்வதத்தின் சிகரத்தில் ஆரோஹித்து ஆமைகளும் மத்ஸ்யங்களும்நிறைந்த ஸமுத்ரத்தைக் கண்டனன். அவ்வானரர்கள் அங்ஙனம் ஸஹ்ய பர்வதத்தையும் பர்வதஸ்ரேஷ்டமாகிய மலயபர்வதத்தையும் கடந்து க்ரமத்தில் பயங்கரமாய்க் கோஷிக்கின்ற மஹாஸமுத்ரத்தைக் கிட்டினர். பிறரை மனக்களிப்புறச் செய்பவர்களில் மேன்மையுற்றவனாகிய ராமன் ஸுக்ரீவனோடும் லக்ஷ்மணனோடும் கூடிப் பர்வதத்தினின்றும் இறங்கி ஸமுத்ரத்தைப் பார்க்கவேண்டுமென்னுங் குதூஹலத்தினால் நிகரின்றி அழகாயிருக்கின்ற அதன் கரையோரத்திலுள்ள வனத்தைக்குறித்து வேகமாகச் சென்றனன். பெரிய அலைகள் திடீரென்று மேற்கிளம்பி

அந்தக் கரை யோரத்திலுள்ள கற்களில் மோதிக் கொண்டிருந்தன. அனந்தரம் விசாலமாகி இங்ஙனம் விளங்குகின்ற அந்த ஸமுத்ரக்கரையைச் சேர்ந்து ராமன் ஸுக்ரீவனைப்பார்த்து,'ஸுக்ரீவா! இதோ! நாம் ஸமுத்ரத்தினருகில் வந்து சேர்ந்தனம். முன்பு எது நமக்குத்தோற்றியிருந்ததோ, அந்த ஆலோசனையை இப்பொழுது செய்யவேண்டும். இதற்குமேல் கரையைக் காணநோது. நதிகளுக்குப்பதியான ஸமுத்ரம் இதோ புலப்பட்டது, மற்றும் இந்த ஸமுத்ரத்தை உபாயமின் றித்தாண்டமுடியாது. ஆகையால் இங்கேயே இறங்கு வோம். வானரஸைன்யம் ஸமுத்ரத்தின் அக்கரை சேரும்படி ஆலோசிக்கவேண்டும்' என்றன். ஸீதையைப் பறிகொடுத்தமையால் மிகுதியும் இளைத்திருக்கின்ற மஹாபாஹுவாகிய ராமன் ஸமுத்ரஞ் சேர்ந்தபின்பு அங்கு இறங்குவதைப்பற்றி அப்பொழுது ஸுக்ரீவ னுடன் 'வானரஶ்ரேஷ்டனே! ஸைன்யத்தையெல்லாம் ஸமுத்ரக்கரையில் இறங்கும்படி கட்டளை அளிப்பா யாக. ஸமுத்ரத்தைத் தாண்டும் உபாயத்தைக் குறித்து ஆலோசிக்கவேண்டிய அவஸரம் நமக்கு நேர்ந்தது. எவனாயினும் தன்ஸேனையை விட்டு எவ்விடத்திற்கும் போகலாகாது. சூரர்களான வானரர்கள்மாத்ரம் முழு வதும் திரிந்துகொண்டிருக்கவேண்டும். ஏனெனில், எங்காயினும் மறைவான இடத்தில் சத்ருக்கள் மறைந் திருந்து நமக்குக் கெடுதிசெய்ய ஸமயம் பார்த்துக் கொண்டிருப்பார்களாகையால், மறைவிலிருப்பதாகிய அப்படிப்பட்ட பஸ்தானங்களைக் கண்டறியவேண்டும்' என்றனன். ஸுக்ரீவன் ராமனுடைய வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மணனும் தானுமாக நானாவித வ்ருக்ஷங்க ளோடு கூடின ஸமுத்ரக்கரையில் வானரஸைன்யத்தை

இறக்கினன். ஸமுத்ரத்தின் அருகாமையில் இறங்கித் தேன்வர்ண முடையதாகி விளங்குகின்ற அவ்வானர ஸைன்யம், தேன்போன்ற வர்ணமுடைய ஜலப்ரவாஹம் அமைந்ததும் மிகுந்த அழகுடையதுமாகிய இரண்டாவது ஸமுத்ரம்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அவ்வானரஶ்ரேஷ்டர்கள் ஸமுத்ரக்கரையிலுள்ள வனத்திற்சென்று அனந்தரம் ஸமுத்ரத்தின் அக்கரைசேர விரும்பி ஆங்காங்கு இறங்கியிருக்கையில், அங்கு அந்த ஸங்காஹத்தினுலுண்டாகும் மஹாத்வனி ஸமுத்ரத்தின் பெருங்கோஷத்தையும் அதிக்ரமித்துச்செவிப்பட்டது. ஸுக்ரீவனுல் பாதுகாக்கப்பட்ட அவ்வானரஸைன்யம் [1] மூன்று மண்டலமாக இறங்கி ராமனது கார்யத்திற்கு முயன்று உத்ஸாஹமுற்றிருந்தது. அவ்வானரஸைன்யம் மஹாஸமுத்ரத்தைச் சேர்ந்து அங்குக் காற்றின் வேகத்தினுல் அலைகள்பலவும் மேற்கிளம்புவதைக்கண்டு ஸந்தோஷமுற்றது. அந்தஸமுத்ரத்தின் அக்கரை இது என்று சொல்ல முடியாமல் வெகுதூரமாயிருப்பது. அந்த ஸமுத்ரத்தைக் கலக்கி அதற்கு எவ்வித கெடுதி செய்யவும் எவர்க்கும் ஸாத்யமன்று. ராக்ஷஸர்கள் கூட்டங்கூட்டமாய் அதில் வாஸஞ் செய்துகொண்டிருப்பார்கள். அது வருணனுக்கு வாஸஸ்தானம். அது பயங்கரமான முதலைகள் நிறைந்ததும் காலைமாலைகளில் மிகுதியும் வளர்ந்து வருவதுபற்றிப் பயங்கரமாயிருப்பதும் வெளுத்த நுரைகளால் சிரிப்பதுபோலும் அலைகளின் ஆடம்பரங்களால் கூத்தாடுவதுபோலும்

---

1. ஸைன்யம் முழுவதும் மூன்று மண்டலமாகப் பிரித்திருந்ததென்று கருத்து. அல்லது வானரர்கள் ஒரு பக்கத்திலும், கொண்டை முயல்கள் ஒரு பக்கத்திலும், கரடிகள் ஒரு பக்கத்திலுமாக இங்ஙனம் மூன்று விதமாக வென்று க்ருத்து.

புலப்படுவதாகிச் சந்த்ரோதய ஸமயத்தில் மிகுதியும் வ்ருத்தி அடைவதும் அலைகளில் ப்ரதிபலிக்கின்ற பல சந்த்ரபிம்பங்களால் நிரம்பியதுமா யிருக்கும்.[1] அதில் பயங்கரமான பெருங்காற்றுப்போல் மஹாவேகமுடைய பெரு முதலைகளும் நூறுயோஜனை நீளமுள்ள திமி யென்னும் மஹாமத்ஸ்யங்களும், அவற்றையும் விழுங்க வல்ல திமிங்கிலமென்னும் விசேஷமீன்களும் ஸிரோ ரத்ன காந்திகளால் எரிவனபோன்ற படங்களையுடைய ஸர்ப்பங்களும் நிறைந்திருக்கும். மற்றும், அது நீர் யானை [2]சிம்சுமாரம் முதலிய மஹாஜந்துக்களும், நானுவகைப் பர்வதங்களும் ஆங்காங்கு அடர்ந்திருக் கப்பெற்றுப் புகக்கூடாததும் ஓடம் போகும் மார்க்க மற்றதும் மிகுந்த ஆழமுடையதும் அஸுரர்களுக் கிருப்பிடமுமாயிருக்கும். இப்படிப்பட்ட ஸமுத்ரத்தைப் பார்த்து அவ்வானரவீரர்கள், 'இதை எப்படி தாண்டப் போகிறோம்' என்று பெருந்துயரமுற்றனர். மற்றும் அதில் பெருப்பெரிய அலைகள் மகரமீன்களோடும் ஸர்ப்பங்களின் உடல்களோடும் கூடி வாயு வேகத்தினால் கிளம்பி அசைந்து மிகுதியும் உயர்வதும் விழுவதுமா யிருந்தன. அந்த ஸமுத்ரமும ஆகாயமும் ஒன்றை

---

1. இங்கு 'பிஷ்ட்வ தாம்ராஸீரை: ஸமுத்ர: பேநசந்தநம் ததாதாய கரைரிந்து: லிம்பதீவ திகங்கநா:' என்று ஒரு ஸ்லோகம் கோசங்களில் குண்டலிதமாகக் காண்கிறது. வ்யாக்யானங்களிலும் இதை எடுக்கவில்லை. இது சில அலங்கார க்ரந்தங்களில் காணப்படுகிறது. இதன் பொருள் (ஸமுத்ரம் அலைகளின் நுனிகளாகிற கைகளால் நுரையாகிற சந்தனத்தை அரைப்பது போலிருக்கின்றது. சந்த்ரன் அந்த நுரையாகிற சந்தனத்தை எடுத்துத் திசைகளாகிற அங்கனைகளின்மேல் பூசுகிறுப்போல் புலப்படுகின்றனன்) என்பதுவே.

2. சிம்சுமாரம்-முதலையில் ஒரு விசேஷம்.

பொன்று மிகுதியும் நிகர்த்திருந்தன. எப்படியெனில், ராத்ரிகாலத்தில் ஸமுத்ரம் சந்த்ரகிரணங்களின் ஸம்பந்தத்தினால் தளதளவென்று விளங்கும்; நீர்த்திவலைகளால் நெருப்புப் பொறிகள் நிறைந்ததுபோல் புலப்பட்டுக் கொண்டிருக்கும். ஆகாயமும் அங்ஙனமே பளபளவென்று விளங்குகிற சுத்தமான பனித்திவலைகளடர்ந்து நிறைந்த நக்ஷத்ரங்களால் நெருப்புப்பொறிகள் சூழ்ந்தது போன்றிருக்கும். ஸமுத்ரம் மஹாநாகங்களையுடையது. ஆகாயமும் மஹாநாக ஸஞ்சாரத்தையுடையதே. ஸமுத்ரத்தில் அஸுரர்கள் இருப்பார்கள். ஆகாயத்தில் அப்படியே. ஸமுத்ரம் பயங்கரமாயிருக்கும். ஆகாயமும் அத்தகையதே. ஸமுத்ரம் பாதாளம்போல் கம்பீரமாயிருக்கும். ஆகாயமும் அவ்வாறே இருப்பது. ஆகையால் அப்பொழுது ஸமுத்ரம் ஆகாயம்போலும் ஆகாயம் ஸமுத்ரம் போலும் இருந்தது. இது ஸமுத்ரமென்றும் இது ஆகாயமென்றும் எள்ளளவும் பேதம் தோற்றுதிருந்தது. ஸமுத்ரஜலம் ஆகாயம் போலிருந்தது. ஆகாயம் ஸமுத்ரஜலம் போலிருந்தது. ஆகாயத்தில் ரத்னங்கள்போன்ற நக்ஷத்ரங்கள் விளங்குகின்றன. ஸமுத்ரத்தில் நக்ஷத்ரங்கள்போன்ற ரத்னங்கள் திகழ்கின்றன. ஆகையால் ஆகாயமும் ஸமுத்ரமும் ஒன்றையொன்று நிகர்த்து மற்றொரு பேதமுமின்றிப் புலப்பட்டுக்கொண்டிருந்தன. மேல் அலைகள்போன்ற மேகஸமூஹங்கள் வ்யாபித்திருக்கிற ஆகாயத்திற்கும் மேகங்கள் போன்ற அலைகள் வரிசை வரிசையாக நிறைந்திருக்கிற ஸமுத்ரத்திற்கும் எவ்விதத்திலும் பேதம் புலப்படவில்லை. அம்மஹா ஸமுத்ரத்தில் கிளம்புகின்ற அலைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு,

யுத்தத்தில் பெரிய பேரி வாத்யங்கள்போல் பயங்கரமான கோஷத்துடன் சப்தித்துக்கொண்டிருந்தன. ரத்னங்களும் ஜலப்ராவாஹங்களும் ஏராளமாயிருக்கப்பெற்று மிகுதியும் உரக்க சப்திப்பதாகி வாயுவேரொன்ருயிருப்பதுபோன்றதும் ஆகாயத்திற் கிளம்புவதுபோன்றதும் கொடிய ஜலஜந்துஸமூஹங்கள் நிறைந்திருக்கையால் கோபித்திருப்பது போன்றதும் காற்றுவேகத்திற் கிளம்புகிற அலைகளால் ஆகாயத்தில் பாய்வதுபோன்றதும் காற்றுவேகத்திஞல் மேல்கிளம்பின ஜலப்ரவாஹமுடையதுமாகிய அந்த ஸமுத்ரத்தை அவ்வானரர்கள் மிகுந்த உத்ஸாஹத்துடன் கண்டனர். அனந்தரம் அப்பொழுது வானரர்கள் பெருப்பெரிய அலைகள் கிளம்புகையால் பெருங்கோஷம் உண்டாகப்பெற்று ப்ரமம் பிடித்ததுபோல் புலப்படுகின்ற ஸமுத்ரத்தை ஆச்சர்யத்துடன் கண்டனர். நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸமுத்ரத்தைக் கண்டு ஸீதையை நினைத்துக்கொண்டு வருந்துகையில், லக்ஷ்மணன் ஸமாதானங்கூறுதல்.

வானரஸேஞதிபதியாகிய நீலன், ரக்ஷகர்களை நன்கு ஏற்படுத்தி பயமற்றதாகச்செய்து ஸமுத்ரத்தின் வடகரையில் நீதிசாஸ்த்ரத்திற் சொல்லிய க்ரமத்தின்படி ஒழுங்காக ஸேனையை இறங்கச்செய்தனன். அப்பொழுது அங்கு மைந்தன் த்விவிதன் என்கிற வானரதிலகர்களிருவரும் வானரஸைன்யத்தை எல்லாப்புறங்களிலும் காப்பதற்காகத் திரிந்து காத்துக்கொண்டிருந்தனர். அங்ஙனம் ஸைன்யமெல்லாம் ஸமுத்ரக்கரையில் இறங்கினவுடனே ராமன் தன்பக்கத்தில்

பணிந்துகொண்டு நிற்கின்ற லக்ஷ்மணனைப் பார்த்து, 'சோகமானது, காலம் கடந்து போகப்போகத் தானும் கழிந்துபோமென்று உலகத்திலுள்ளவர் சொல்லுவர். ஆயினும் ஸீதையைக் காணாமையால் எனக்குள்ள சோகமோவென்றால் உலகத்தவர் சொல்லுமாறு கழிந்துபோகிறதாயில்லை; நாளுக்குநாள் மேன்மேலும் வளர்ந்துவருகின்றதே! 'ஸீதையை மீளவும் திருப்பிக் கொண்டுவர வல்லனாயிருந்தும் நீ இங்ஙனம் சோகிக்கத் தகுமா' என்கிறாயோ? என் ப்ராணநாயகி தூரத்தில் இருக்கிறாளென்றாவது ராக்ஷஸன் பறித்துக்கொண்டு போனானென்றாவது எனக்கு வருத்தமில்லை. ஏனெனில், அவ்விடம் போய் அவனைக்கொன்று ஸீதையைக் கொண்டுவருவேன். ஆனால் அப்பெண்மணியின் யௌவனப்பருவம் வீணாகக் கடந்துபோகின்றதே யென்று இதற்குமாத்ரமே சோகிக்கிறேன்' என்றுரைத்து, அனந்தரம் அங்கு வீசுங்காற்றைப் பார்த்து 'வாயு! என் ப்ராணநாயகி எங்கிருக்கிறாளோ, அங்குப்போய் வீசுவாயாக. அங்ஙனம் அவ்விடத்தில் வீசி அப்பெண்மணியை ஸ்பர்சித்து என்னையும் ஸ்பர்சிப்பாயாக. அவளது ஸ்பர்சம் மற்றொருவிதத்தில் எனக்கு நேராது. அப்பெண்மணி சந்த்ரனைப் பார்க்கையில், அந்தச் சந்த்ரனை நான் காண்பேனாயின், அதன் மூலமாக நான் அவளைக் கண்டவனாவேன். அப்படியே அம்மாதரசியை ஸ்பர்சித்து நீ வீசுகையில், அப்படிப்பட்ட உன்னை நான் ஸ்பர்சிப்பேனாயின் அதன் மூலமாக அப்பெண்மணியை ஸ்பர்சித்தவனாவேன். இங்ஙனம் நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்வது சந்த்ரன் மூலமாக விளைவதுபோல் ஒருவர்க்கொருவர் உடம்பைத் தழுவியணைப்பதும் உன்மூலமாக நேரவேண்டும். ஸமஸ்த

போகங்களையும் துறந்து என்னைப் பின்றொடர்ந்து அடவிக்கு வந்த என் ப்ராணநாயகி, ராவணன் தன்னைக் கொண்டுபோகும்பொழுது தன் பாதிவ்ரத்யமாகிற அக்னியால் அவனை நீறுசெய்ய வல்லளாயினும் என்னிடத்திலுள்ள பக்தியினால் என்னையே கதியாக நினைத்து 'ஐயோ! நாதா!' என்று முறையிட்ட உரை என் ஹ்ருதயத்தில் பொறுக்கொண்டு பருகினவிஷம் போல் அவயவங்களையெல்லாம் தஹிக்கின்றது. மன்மதனென்னும் அக்னி ப்ராணநாயகியின் பிரிவினையே கட்டையாகவும், அப்பெண்மணியைப்பற்றின நினைவையே ஜ்வாலையாகவும் பெற்று என் தேஹத்தையெல்லாம் இரவும் பகலும் குளிர்காலமென்றும் வெயிற்காலமென்றும் பேதமில்லாமல் தஹிக்கின்றது. லக்ஷ்மணா! இம்மன்மத தாபமோ மற்றொரு விதத்தினால் தீரக்கூடியதன்று. உன்னைப் பார்க்கையில் சிறிது நினைவுக்கு வருகின்றது. ஆகையால் உன்னைவிட்டு ஸமுத்ரத்தில் புகுந்து படுத்துக்கொள்கின்றனன். அங்ஙனம் நீரில் படுப்பேனாயின், அப்பொழுது ஜ்வலிக்கின்ற மன்மதன் என்னை எவ்வளவோ வருத்தப்பட்டுத் தஹிக்கவேண்டுமாகையால் சிறிது குறைந்திருப்பான். ஸீதை பிழைத்திருக்கிறாளென்று தெரிந்தது. ஆகையால் அழகான துடைகளையுடைய அந்த ஸீதையும் நானும் ஓர் பூமியைப்பற்றியேயிருக்கிறோமல்லவா? இதுவே இங்ஙனம் பெருந்துக்கத்தினால் பிடிக்கப்பட்டிருக்கிற எனக்கு ப்ராணன்களை நிலைநிறுத்திக்கொள்ள இப்பொழுது பெரிய உபாயமாயிருக்கின்றது. இங்ஙனம், அவள் ஒரேபடுக்கையில் இருப்பவள்போல் ஒரு பூமியில் பிழைத்திருக்கிறாளல்லவா' என்று ஸமாதானம் விளைகையால், அவளைப் பிரிந்து பேராசைகொண்டிருக்கிற நான் பிழைத்திருக்

கக்கூடும். இந்த மனஸ்ஸமாதானமாயினும் ஸம்ப விக்காதாயின், எனக்குப் பிழைத்திருக்கவே முடியாது. நீரில்லாத கழனி நீருள்ள கழனியின் ஊற்றினால் உலரா திருப்பதுபோல், அவள் பிழைத்திருக்கிருளென்று கேள்விப்படுகிறேனுகையால் நானும் பிழைத்திருக் கின்றனன். நான் சத்ருக்களெல்லோரையும் வென்று அழகிய நிதம்பமும் தாமரை இதழ்போன்ற கண்களும் அமைந்து அழகாயிருக்கின்ற அம்மாதரார்மணியான ஸீதையை, செல்வப்பெருக்கெல்லாம் அமைந்த லக்ஷ்மி யைப்போல் எப்பொழுது காண்பேனே! அழகிய கோவைப்பழம்போன்ற அதாமுடையதும் தாமரை மலர்போல் மிக்க ரமணீயமுமான ஸீதையின் முகத்தை உயர நிமிர்த்து, ரோகி ரஸாயனமென்ற ஓர்வகை மருந் தைப் பருகுவதுபோல, அதாத்தின் அம்ருதத்தை எப் பொழுது பருகப்போகிறேனே! அம்மாதரார்மணி என் னைத் தழுவி அணைக்கையில், ஒன்ருேடொன்றிணைந்த வைகளும் பருத்துப் பனம்பழம்போன்றவைகளுமாகிய அவளது கொங்கைகள் அசைந்துகொண்டு என்மேனி யில் எப்பொழுது மோதப்போகின்றனவோ! கறுத்த கடைக்கண்களால் விளக்கமுற்ற அப்பதிவ்ரதை ராக்ஷ ஸர்களின் இடையில் அகப்பட்டு, நான் நாதனுயிருக் தும், அநாதைபோல், தன்னைப் பாதுகாக்குங் கதி யைப் பெருமல் வருந்துகின்றனளல்லவா! அப்பெண் மணி ஜனகராஜன் புதல்வியாயிருந்தும், எனக்கு மிகுதி யும் ப்ரீதிக்கிடமாயிருந்தும், தசரத மஹாசக்ரவர்த்தி யின் மருமகளா யிருந்தும், ராக்ஷஸ ஸ்த்ரீகளின் நடுவில் அகப்பட்டு வருந்துகின்றனள் ஏனே! சரத் காலத்தில் சந்த்ரகலே கறுத்தமேகங்களே உதறிக் கொண்டு வெளிப்படுவதுபோல், ஸீதை கலக்கமுடியாத

ராக்ஷஸர்களை உதறித்தள்ளி என்னெதிரில் எப்பொழுது கிளம்பி நிற்கப்போகின்றனள்? ஸீதை இயற்கையாகவே இளைத்திருப்பவள். இப்பொழுது தேசகாலங்கள் ப்ரதிகூலங்களாயிருக்கப் பெற்றுச் சோகத்தினாலும் உபவாஸத்தினாலும் மிகுதியும் இளைத்திருப்பாள். இது நிஜம். நான், ராக்ஷஸர்களுக்கெல்லாம் ப்ரபுவாகிய ராவணன் மார்பில் பாணங்களை நாட்டி எப்பொழுது மனத்திலுள்ள துயரத்தைத் துறந்து ஸீதையைத் திருப்பி அழைத்துக்கொண்டு வரப்போகின்றேனோ! தேவகன்னிகைபோல் புலப்படும் பதிவ்ரதையாகிய அந்த ஸீதை மிகுதியும் குதூஹலத்துடன் என்கழுத்தைத் தழுவி அணைத்து ஆனந்த பாஷ்பங்களை எப்பொழுது பெருக்கப்போகின்றனளோ? ஸீதையைப் பிரிகையாலுண்டான இந்த பயங்கர சோகத்தை, அழுக்கு வஸ்த்ரத்தை அவிழ்த்தெறிவது போல், வெகு சீக்ரத்தில், எப்பொழுது விடப்போகிறேனோ?' என்று புலம்பினன். இங்ஙனம் புத்தியிற் சிறந்தவனாகிய அந்த ராமன் அங்குப் புலம்பிக்கொண்டிருக்கையில் பகல்தீர்ந்து ஸூர்யன் காந்தி குறையப் பெற்று அஸ்தமயபர்வதஞ் சேர்ந்தனன். அனந்தரம் ஸந்த்யாகாலம் ஆயிற்று. பிறகு ராமன் லக்ஷ்மணனால் ஸமாதானஞ் சொல்லப்பட்டுத் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஸீதையை நினைத்துக்கொண்டு சோகத்தினால் ஆகுலம் செய்யப்பட்டவனாகவே ஸந்த்யாவந்தனஞ் செய்தனன். ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன், லங்கையில் ஹநுமான்செய்து போன கார்யங்களுக்குச் சிந்தையுற்று மேல் சத்ருக்கள் படையெடுத்து வருவதற்கு முன்னஞ் செய்யவேண்டிய ஏற்பாடுகளைப்பற்றி ஆலோசித்தல்.

லங்கையில் தேவேந்த்ரனைப்போன்ற பராக்ரமசாலியும் மஹானுபாவனுமாகிய ஹநுமான் எங்கும் புலப்படாதபடி நடத்தின பயங்கர கார்யத்தை ராக்ஷஸேஸ்வரனான ராவணன் கண்டு வெட்கத்தினால் சிறிது தலை வணக்கமுற்று ராக்ஷஸர்களெல்லோரையும் பார்த்து, 'கேவலம் ஓர் குரங்காகிய அந்த ஹநுமான் பகைவர்க்கு எவ்விதத்திலும் எதிர்க்க முடியாத இவ்விலங்கைமாநகரைப் பொருள் செய்யாமல் தைர்யத்துடன் இதனுள் புகுந்தனன். மற்றும், ஸீதையைக் கண்டும் போயினன். [1] சைத்யப்ராஸாதமும் முறிக்கப்பட்டது. உத்தமர்களான ராக்ஷஸர்பலரும் பாழ்செய்யப்பட்டனர். இங்ஙனம் ஓர் ஹநுமானால் லங்காபுரமெல்லாம் ஆகுலஞ்செய்யப்பட்டது. இனிமேல் செய்ய அடுப்பதென்? நமக்கெல்லாம் எது ஹிதமோ, எதைச் செய்தால் கார்யம் நிறைவேறுமோ, அப்படிப்பட்டது யாது? சொல்லுங்கள்; செய்கிறேன். உங்களுக்குச் சுபம் உண்டாகுக. பலிஷ்டனாகிய உனக்கு மந்த்ராலோசனை எதுக்காக?' என்கிறீர்களோ; கேளுங்கள். மிகுந்த பலமுடையவர்களே! கம்பீரமான மனமுடைய பெரியோர்கள் மந்த்ராலோசனையே ஜயத்திற்கு மூலகாரணமென்று சொல்வார்கள். ஆகையால் ராமன் விஷயத்தில் மந்த்ராலோசனை செய்ய விரும்புகின்றனன். உலகத்தில் புருஷர்கள் 'உத்தமர், மத்யமர்,

1. சைத்யப்ராஸாதம்—நகரத்திற்கு முக்யமான உப்பரிகை.

அதமர்' என்று மூன்றுவகைப்பட்டிருப்பர். அம் மூவரின் உண்மை ஒன்றோடொன்று கலந்திருக்கையால் பிரித்தறிவது கஷ்டம். ஆகையால் நான் அவர்களின் குணதோஷங்களைக் கூறுகின்றனன். எவன் மந்த்ராலோசனை நிர்மானிப்பதில் நிபுணரும் தன் ஹிதத்தை விரும்புவோர்களுமாகிய மந்த்ரிகளோடாவது தன் ஸுகதுக்கங்களையே தமது ஸுகதுக்கங்களாக நினைத்திருக்கும் நண்பர்களோடாவது தன் ஹிதத்தை விரும்புந் தன்மையுடைய பந்துக்களோடாவது கலந்து ஆலோசனை செய்து ஆரம்பிக்கவேண்டுங் கார்யங்களை நடத்திக்கொண்டு தெய்வத்தின்மேல் பாரத்தை இட்டிருப்பானோ, அவனை உத்தமபுருஷனென்பர்கள். எவன் தானொருவனே கார்யத்தை ஆலோசனைசெய்து ஒருவனே மனப்பூர்வமாகத் தெய்வத்தைப் பற்றி ஒருவனே கார்யங்களைச் செய்வானோ, அவனை மத்யமபுருஷ னென்பர்கள். எவன் நன்மை தீமைகளை நிச்சயித்துக்கொள்ளாமல் தெய்வத்தையும் பொருள் செய்யாமல், செய்கிறேனென்று கார்யத்திற்கு முயன்று, அதை முழுவதும் செய்துமுடிக்காமல் உபேக்ஷை செய்வானோ, அவனை அதமபுருஷனென்பர்கள். இங்ஙனம் புருஷர்கள் 'உத்தமர், மத்யமர், அதமர்' என்று மூன்றுவகைப்பட்டிருப்பதுபோல, மந்த்ராலோசனைகளும் 'உத்தமம், மத்யமம், அதமம்' என்று மூன்றுவகைப்பட்டிருப்பதை அறியவேண்டும். மந்த்ரிகளெல்லோரும் ஐகமத்யத்தில் இருந்து (ஒருமிடறாயிருந்து) நன்கு சாஸ்த்ரங்களை அப்யஸிக்கையால் சாஸ்த்ரஜ்ஞானமென்னும் த்ருஷ்டியுடன் கூடி ஆதரவுடன் எந்த ஆலோசனை செய்வார்களோ, அதை 'உத்தம மந்த்ரம்' என்பர்கள். எந்த மந்த்ராலோசனையில் மந்த்ரிகள் கார்

யத்தை நிர்ணயிக்கும் விஷயத்தில் முதலில் ஒருவர்க் கொருவர் மதபேதங்கள் பலவும் உண்டாகப்பெற்றிருந் தும் கடைசியில் ஐகமத்யத்தை அடைவார்களோ, அதை 'மத்யமமந்த்ர'மென்று நீதிசாஸ்த்ரமுணர்ந்தவர் கூறுவர். எந்த மந்த்ராலோசனையில் மந்த்ரிகள் ஒவ் வொருவரும் தந்தமது அபிப்ராயத்தையே முக்ய மாகச் செய்து அதை எள்ளளவும் விடாமல் வாதஞ் செய்வார்களோ, மற்றும் ஐகமத்யங் கொள்ளவேண்டு மென்னும் ப்ரீதியும் இல்லாதிருப்பரோ, அதை 'அதம மந்த்ர'மென்பர்கள். ஆகையால் புத்திசாலிகளில் சிறந் தவரான நீங்களெல்லோரும் ஐகமத்யத்துடன் ஆலோ சித்து, யுக்தமான கார்யம் இதுவென்று நிச்சயித்துத் தெரிந்துகொள்வீர்களாக. இப்படி ஐகமத்யத்துடன் நன்கு நிச்சயிக்கப்பட்ட கார்யமே எனக்கு மிகுதியும் செய்யத் தகுந்திருக்குமென்று அபிப்ராயம். 'நடந்தது போகட்டும். இனி ஆலோசனை செய்வதேதுக்கு? இனி நமக்குக் கெடுதி யாதிருக்கின்றது?' என்கிறீர்களோ? அப்படி அன்று. ராமன் வீரர்களான அனேகமாயிரம் வானரர்களுடன் கூடி, நம்மைத் தகையும் பொருட்டு லங்காபுரிக்கு வருவான். 'ஸமுத்ரம் ஒன்றிருக்கின்றதே, எப்படி வந்து நம்மைத் தகையப் போகிறான்' என்கிறீர் களோ? ராமன் தம்பியோடு கூடி ஸைன்யங்களும் ஸுக்ரீவன் முதலிய அனுசரர்களும் பின்றொடர்ந்து வரப்பெற்றுத் தனக்குத் தகுந்தவண்ணம் சக்தியை உபயோகப்படுத்தித் தன் வீர்யத்தினால் ஸமுத்ரத்தை உலர்த்தியோ, அல்லது அணைகட்டுவது முதலிய வேறு கார்யங்களைச் செய்தோ, எப்படியாவது ஸுகமாகத் தாண்டி வருவானென்று ஸ்பஷ்டமாகத் தோற்றுகின் றது. இங்ஙனம் நான் சொன்னபடி ராமன் வந்து லங்கை

யைத் தகையும்படி ஸம்பவிக்கையில் அதனுல் வானரர்களுக்கும் நமக்கும் விரோதம் நேரிடும். அப்பொழுது என் பட்டணத்திற்கும் என் ஸைன்யத்திற்கும் மேன்மையை விளைவிக்கவல்ல உபாயங்களையெல்லாம் ஆலோசிப்பீர்களாக'என்றுனன். ஆருவது ஸர்க்கம் முற்றிற்று.

ராவணனது மந்த்ரிகள் சத்ருவின் பலத்தை அறியாமல் ராவணனுடைய பராக்ரமாதிகளைப் புகழ்ந்து அவனை ஸந்தோஷப்படுத்தல்.

ராக்ஷஸேந்த்ரனுகிய ராவணன் இங்ஙனம் மொழிகையில், மஹாபலசாலிகளான அந்த ராக்ஷஸர்கள் கேட்டு, நீதி சாஸ்த்ரத்திற்கு வெளிப்பட்டவரும் புத்தி ஹீனருமாகையால், சத்ருவின் பலத்தை அறியாமல் எல்லோரும் ராக்ஷஸர் தலைவனுகிய அந்த ராவணனைப் பார்த்துக் கைகூப்பிக்கொண்டு 'ராஜனே! பலபேர்களை ஒரேதடவையில் கொல்லும் பெரிய கதைகளும் ஈட்டிகளும் கத்திகளும் சூலங்களும் குறுக்குக் கத்திகளும் ஏராளமாயிருக்கப் பெற்று, நம் ஸைன்யம் மிகுதியும் பெரிதாயிருப்பதல்லவா? இப்படியிருக்க, நீ ஏன் வருத்தப்படுகின்றனை? ஸைன்யங்களின் ஸஹாயம் ஏதுக்கு? நீ யொருவனே போதுமானவனல்லவோ? நீ பாதாள லோகத்தில் போகவதிக்குச் சென்று யுத்தத்தில் [1] பன்னகர்களை வென்றனை. கைலாஸ சிகரத்தில் பல யக்ஷர்களால் சூழப்பட்டிருக்கிற குபேரனோடு மிகுதியும் பெரிய யுத்தஞ்செய்து அவனை உனக்கு உட்படுத்திக்கொண்டனை. ப்ரபூ! அக்குபேரன் ருத்ரனுக்கு ஸ்நேஹிதனென்று புகழப்பட்டிருப்பவன்; லோக

1. பன்னகர்-ஸர்ப்பவிசேஷ ஜாதி.

பாலர்களில் சேர்ந்தவன்; மிகுந்த பலமுடையவன். அப்படிப்பட்ட குபேரனையுங்கூட நீ ரோஷமுற்று யுத்தத்தில் ஜயித்தனை. மற்றும், யக்ஷர்களைக் கூட்டங்கூட்டமாகக் கொன்றும் பலவாறுகக் கலக்கியும் பிடித்துச் சிறையில் வைத்தும் கைலாஸ சிகரத்தினின்று இந்தப் புஷ்பக விமானத்தைக் கொண்டுவந்தனை. ராக்ஷஸ புங்கவா! தானவேந்த்ரனுகிய மயன் உன்னிடம் பயத்தினல் உன்னுடன் ஸ்நேஹத்தை விரும்பி உனக்குப் பார்யையாகத் தன் புதல்வியான மந்தோதரியைக் கொடுத்தனன். பராக்ரமத்தினுல் கொழுப்புற்று எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாதிருப்பவனும், உனது உடன்பிறந்தவளாகிய கும்பீனஸியென்பவளுக்கு ஸுகத்தை விளைவிப்பவனும், தானவர் தலைவனுமாகிய மதுவென்பவனை யுத்தஞ்செய்து வசப்படுத்திக்கொண்டனை. மஹாபாஹு! நீ பாதாள லோகத்திற்குச் சென்று வாஸுகி தக்ஷகன் சங்கன் ஜடி என்னும் நாகேந்த்ரர்களை ஜயித்து, வசப்படுத்திக் கொண்டனை. ப்ரபூ! சத்ருக்களை அழிப்பவனே! காலகேயர்கள், சூர்ணஞ்செய்யினும் மீளவும் பிழைத்தெழுவார்களாகையால் நாசமடையாதவர்கள்; மிகுந்த பலமுடையவர்; மஹாசூரர்கள்; ப்ரஹ்மாவினிடம் வரம் பெற்றவர். அப்படிப்பட்ட அத்தானவர்கள் உன்னேடு ஒரு ஸம்வத்ஸரம் யுத்தஞ் செய்து கடைசியில் உனக்கு ஸ்வாதீனப்பட்டனர். ரக்ஷஸாதிபதி! மேலும், அவரிடத்தில் நீ பலவகை மாயைகளையுங்கூடத் தெரிந்துகொண்டனை. (நீ ரோஷமுற்று யுத்தத்தில் மஹாபலிஷ்டர்களான திக்பாலர்களையும் ஜயித்தனை. இங்கிருந்து தேவலோகத்திற்குச் சென்று இந்த்ரனையுங்கூட ஜயித்தனை.) மஹாபாஹு! மற்றும், நீ சூரர்களும் மஹா

பலசாலிகளும் சதுரங்க பல ஸஹிதர்களுமாகிய வருணபுத்ரர்களை யுத்தத்தில் வென்றனை. ராஜனே! யமதண்டமே பயங்கரமான பெரிய முதலையாகவும் முள்நிறைந்த சால்மலி வ்ருக்ஷத்தின் உருவம்போன்ற உருவமுடைய சால்மலி யென்னும் ஆயுதங்களை வ்ருக்ஷங்களாகவும் யமபாசங்களை பெருப்பெரிய அலைகளாகவும் யமகிங்கரர்களை ஸர்ப்பங்களாகவும் பெற்று இவ்வண்ணம் ஸமுத்ரம்போல் விளங்குகின்ற யமனுடைய மஹா ஸைன்யத்தில் புகுந்து யமனைத் தடுத்துப் பெரிய ஜயம் பெற்றனை. அங்கு நீ செய்த [1]ஸ்வல்ப யுத்தத்திற்கே லோகங்களெல்லாம் கிடுகிடு வென்று நடுக்கமுற்றன. வீரர்களும் தேவேந்த்ரனைப் போன்ற பராக்ரமசாலிகளுமாகிய க்ஷத்ரியர்கள் பலர் பூமிமுழுவதும் மஹாவ்ருக்ஷங்கள் நிறைந்திருப்பது போல் நிறைந்திருந்தனர். ராமன் பராக்ரமத்திலாவது குணங்களிலாவது உத்ஸாஹத்திலாவது யுத்தத்தில் அவர்களுக்கு எவ்விதத்திலும் நிகராகமாட்டான். ராஜனே! மிகுதியும் ஜயிக்க முடியாதவர்களான அப்படிப்பட்ட க்ஷத்ரியர்களையே நீ வலிமையினால் கொன் றிருக்கின்றனை. இனி உனக்கு ராமன் எவ்வளவு? மஹா ராஜனே! பேசாமல் இங்கேயே இருப்பாயாக; நீ ஶ்ரமப்படுவது எதுக்காக? மஹாபாஹுவாகிய இவ் விந்த்ரஜித்து ஒருவனே வானரர்களெல்லோரையும் உருமாய்க்கவல்லவன். மஹாராஜனே! இவ்விந்த்ரஜித்து மஹேஶ்வரனைக் குறித்து எங்கும் நிகரில்லாத யாகத் தைச்செய்து உலகத்தில் எப்படிப்பட்டவர்க்கும் லபிக்க முடியாத வரத்தைப் பெற்றிருக்கிறானல்லவா? சக்தி

1. இங்கு 'ஸாயுதீயே' என்று மூலம். ஸ்வல்பயுதீயேநேத் யர்த்த:—என்று கோவிந்தராஜர்.

தோமரங்களென்கிற ஆயுதங்களே மத்ஸ்யங்களாகவும் அங்கும் இங்கும் சிதறி விழுந்திருக்கிற நரம்புகளே வேலம்பாசியாகவும் ஏராளமான யானைகளே நிறைந்த ஆமைகளாகவும் குதிரைகளே தவளைகளாகவும் ருத்ரனும் ஆதித்யனும் பெரிய முதலைகளாகவும் மருத்துக்களும் வஸுக்களும் மஹா ஸர்ப்பங்களாக வும் ரதகஜதுரக ஸமூஹங்களே ஜலப்ரவாஹங்களாக வும் பெரிய காலாட்களே பெருப்பெரிய மணற்குன்று களாகவும் பெற்ற தேவதைகளின் மஹாஸைன்யமாகிற மஹாஸமுத்ரத்தில் புகுந்து இவ்விந்த்ரஜித்து தேவேந்த்ரனைப் பிடித்து, பந்தித்து லங்கைக்குக் கொண்டுவந்தானல்லவா? பிறகு ப்ரஹ்மதேவனது ஆஜ்ஞையைப்பற்றி, வணங்கச் சம்பராஸுரனையும் வ்ருத்ராஸுரனையும் ஜயித்த மஹானுபாவனுகிய அந்த தேவேந்த்ரனை விட்டுத் துரத்தினை. பிறகு அவன் ஸமஸ்த தேவதைகளாலும் வணங்கப்பெற்று ஸ்வர்க்க லோகம் போயினன். மஹாராஜனே! அப்படிப்பட்ட உன்புதல்வனுகிய இந்த்ரஜித்தையே யுத்தத்திற்கு அனுப்புவாயாக. ராமனையும் அவனுக்குள்ள அந்த வானரஸைன்யங்க ளெல்லாவற்றையும் அவலீலையாக உருமாய்த்து விடுவான். ராஜனே! கேவலம் அற்பனுகிய ஒரு ஹனுமானுல் இவ்வாபத்து இருந்தாற்போலிருந்து ஸம்பவித்தது. அதுவோ நடந்துபோயிற்று. ஆகை யால் நீ இதை மனத்தில் எள்ளளவும் வைத்துச் சிந் திக்கலாகாது. நீ தப்பாமல் ராமனைக் கொல்லப் போகின்றனை' என்றனர். ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ப்ரஹஸ்தாதி மந்த்ரிகள் தாம் ஒவ்வொருவரே ராமனை ஜயித்து வருவோமென்று கூறுதல்.

அனந்தரம் அப்பொழுது நீலமேகம்போல் கறுத்த பெருஞ் சரீரமுடையவனும் சூரனும் ஸேனாபதியுமாகிய ப்ரஹஸ்தனென்னும் ராக்ஷஸன் ராவணனைப் பார்த்துக் கைகூப்பிக்கொண்டு 'தேவதைகளாவது தானவர்களாவது கந்தர்வர்களாவது பிசாசர்களாவது பதகர்களாவது உரகர்களாவது எவரும் யுத்தத்தில் உன்னை எதிர்க்க வல்லரல்லர். இனி வானரர்களென்றால் எவ்வளவர்? நாமெல்லோரும் மனவூக்கமின்றி நம்மை எவரும் எதிர்க்க வல்லரல்லரென்னும் நம்பிக்கையோடு ஏமாறியிருந்தனம். ஆகையால் ஹநுமான் வந்து நம்மை வஞ்சித்துப் போயினன். இல்லையாயின், நான் பிழைத்திருக்கையில், அவ்வானரன் இவ்விடத்தினின்று ப்ராணன்களோடு போகமுடியாது. ஸமுத்ரங்கள் நான்கையும் சூழவுடைய இப் பூமண்டலம் முழுவதிலும், மற்றும் அதிலுள்ள பர்வதங்களிலும் வனங்களிலும் மஹாரண்யங்களிலும் மற்றும் எல்லா இடத்திலுமுள்ள வானரர்களெல்லோரையும் கொன்று இனி இப்பூமண்டலத்தில் வானரர்களே இல்லாதிருக்குமாறு செய்கின்றனன்; நீ எனக்கு ஆஜ்ஞை அளிக்கவேண்டும். இவ்வளவே ராவணா! நான் இந்த லங்காபுரத்தை வானரர்களிடத்தினின்று காத்துக்கொண்டே இருக்கின்றனன். ஆகையால் நீ ஸீதையை எடுத்துக்கொண்டு வந்த உன் அபராதத்திற்காக வானரர்களால் உனக்கு எத்தகைய துக்கமும் ஸம்பவிக்காது' என்றனன். அனந்தரம் துர்முகனென்னும் ராக்ஷஸன் மிகுதியும் கோபாவேசமுற்று, 'கேவலம்

ஓர் வானரன் வந்து நம்மெல்லோர்க்கும் இப்படிப் பட்ட அவமானத்தை விளைவித்தனன். இது மாத்ரம் பொறுத்திருக்கத் தக்கதன்று. இவ்வளவோடு போகாமல் நம் பட்டணத்தையும் மற்றும் அந்தப் புரத்தையும் அவமதித்தனன். செல்வப்பெருக்கனாகிய ராக்ஷஸேந்த்ரனையுங்கூடத் திரஸ்கரித்தனன். இதை எள்ளளவும் பொறுக்கலாகாது. நானொருவனே இப் பொழுதே போய், வானரர்களெல்லோரையும் பயங்கர மான ஸமுத்ரத்தில் ப்ரவேசிக்கினும் ஆகாயத்தில் கிளம்பிப்போயினும் பாதாளத்தில் மறையினும் விடா மல் வதித்துத் திரும்பிவருகிறேன்' என்றனன். அனந் தரம் மஹாபலிஷ்டனாகிய வஜ்ரதம்ஷ்ட்ரன் மிதமில் லாத கோபத்துடன் மாம்ஸமும் ரக்தமும் படிந்திருக் கிற பயங்கரமான இரும்புத்தடியை எடுத்துக்கொண்டு, 'ராமன் ஸுக்ரீவனோடும் லக்ஷ்மணனோடும் கூடித் திரஸ் கரிக்க முடியாதவனாயிருக்கையில், பயந்து ராத்ரிவேளை யில் ரஹஸ்யமாக இவ்விடம் வந்துபோன தீனனாகிய ஹனுமான் தயைசெய்வதற்கிடமே யாகையால் அவ னோடு உங்களுக்கு என்னப்ரயோஜனம் இருக்கின்றது? இப்பொழுது நானொருவனேயாகச் சென்று ராமனையும் ஸுக்ரீவனையும் லக்ஷ்மணனையும் இரும்புத்தடியால் ஸம் ஹாரஞ்செய்து வானரர்களெல்லோரையும் கலக்கிவிட்டு வருகின்றனன். ராஜனே! நான் இன்னம் ஓர் மொழி கூறு கின்றனன். சித்தம் உளதாயின் அங்கீகரிக்கவேண்டும். உபாயங்களில் வல்லவனே பகைவரை வெல்லுவான். பராக்குப்படாமல் உபாயங்களை ஏற்படுத்திக்கொண்டே பகைவரை ஜயிக்கவேண்டும். ராக்ஷஸர்தலைவனே! காம ரூபிகளும் சூரர்களும் அதிபயங்கர ஸ்வபாவர்களும் பயங்கரமான உருவமுடையவர்களுமாகிய ராக்ஷஸர்

கள் நிச்சயஞ் செய்துகொண்டு ஆயிரமாயிரமாய் மனுஷ்ய தேஹங்களைத் தரித்து ராமனிடம்போய் எல்லோரும் தழுதழுப்பின்றி அந்த ரகுகுலதிலகனைப் பார்த்து 'நாங்கள் உன் தம்பியான பரதனால் அனுப் பப்பட்டு வந்தனம். நீ வருவதைப்பற்றி வேண்டிய ப்ரயத்னங்கள் செய்யவேண்டும்' என்று மொழிவார் களாக. அந்த ராமன் ஸேனையைவிட்டு, சீக்ரமாகவே அவர்களைத் தொடர்ந்து போவான். அனந்தரம் நாம் இங்கிருந்து சூலங்களையும் சக்திகளையும் கதைகளையும் தனுஸ்ஸுக்களையும் பாணங்களையும் கத்திகளையும் தரித்துச் சீக்ரமாக அவ்விடம் போவோம். நாம் கூட்டங்கூட்டமாக ஆகாயத்தினின்று கற்களையும் ஆயுதங்களையும் பெரிய மழையாகப் பெய்து அவ்வானர ஸைன்யத்தையெல்லாம் பாழ்செய்து யமலோகத்திற்கு அனுப்பிவிடுவோம். இங்ஙனம் ராமலக்ஷ்மணர்கள் நாம் செய்த கபடத்தை அறியாமையால் நம்முடைய வர்களைத் தம்முடையவர்களாக நம்பி நீதியினின்று தவறுவார்களாயின், நீதிவழுவின அந்நம்பிக்கையால் அவச்யம் அவ்விருவரும் ப்ராணன்களை விடுவார்கள்' என்றனன். அனந்தரம் வீரனும் வீர்யமுடையவனு மாகிய கும்பகர்ணபுத்ரன் நிகும்பனென்பவன் மிகுந்த கோபாவேசத்துடன் [1]லோகராவணனாகிய ராவணனைப் பார்த்து 'நீங்களெல்லோரும் மஹாராஜனோடுகூட இங்கேயே இருப்பீர்களாக. நானொருவனே போய் ராமனையும் லக்ஷ்மணனையும் ஸுக்ரீவனையும் ஹனுமா னையும் வானரர்களெல்லோரையும் கொன்று விடுகிறேன்' என்றனன். பர்வதம்போன்ற உருவமுடைய வஜ்ரஹனு வென்னும் ராக்ஷஸன் கோபாவேசத்துடன் உணவை

1. லோகங்களை அழப்படுத்துந் தன்மையனான.

நினைத்துக்கொண்டு வாய் உலரப்பெற்று நாக்கினால் வாயை நக்கிக்கொண்டு 'நீங்களெல்லோரும் மனக்கவலையைத் துறந்து உங்கள் மனம்போனபடி கார்யங்களைச் செய்துகொண்டிருப்பீர்களாக. நானொருவனே அந்த வானரஶ்ரேஷ்டர்களெல்லோரையும் பக்ஷித்துவிடுகிறேன். நீங்கள் எந்தச் சிந்தையுமின்றி மதுவென்னும் மத்யத்தைப் பானஞ்செய்து ஸ்வஸ்தர்களாகி க்ரீடித்துக்கொண்டிருப்பீர்களாக. நானொருவன் மாத்ரமே போய் ஸுக்ரீவனையும் லக்ஷ்மணனையும் அங்கதனையும் ஹனுமானையும் யுத்தத்தில் எதிரிடக்கூடாத ராமனையும் வதித்து விடுகிறேன்' என்றனன். எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ நிகும்பாதிகள் எழுந்து யுத்தத்திற்குப் புறப்படுகையில் விபீஷணன் வேண்டாமென்று தடுத்தல். }

அனந்தரம் நிகும்பனும் ரபஸனும் மஹாபலனாகிய ஸூர்யசத்ருவும், ஸுப்தக்னனும், யஜ்ஞஹனும், மஹாபார்ச்வனும், மஹோதரனும், [1] துர்த்தர்ஷனான அக்னிகேதுவும், ராக்ஷஸத்தன்மையில் குறைவற்ற ரஶ்மிகேதுவும், மஹத்தான தேஜஸ்ஸும் பலமும் அமைந்து ராவணபுத்ரனுமாகிய இந்த்ரஜித்தும், ப்ரஹஸ்தனும், விரூபாக்ஷனும், மஹாபலனாகிய வஜ்ரதம்ஷ்ட்ரனும், தூம்ராக்ஷனும், அதிகாயனும், துர்முகனும் ஆகிய இவ்வரக்கர்கள் அனைவரும் பரிகங்களையும் பட்டயங்களையும் ஈட்டிகளையும் சக்தியென்னும் ஆயுதங்களையும் சூலங்களையும் கண்டக்கோடாலிகளையும் தனுஸ்ஸுக்களையும் பாணங்களையும் கூருள்ள

1. துர்த்தர்ஷன்—எதிரிடமுடியாதவன்.



பெருங்கத்திகளையும் தரித்து மிகுந்த கோபாவேசத்துடன் ஆஸனங்களினின்று கிளம்பித் தேஜஸ்ஸினால் மிகுதியும் விளக்கமுற்று ராவணனைப்பார்த்து, 'நாங்கள் இப்பொழுதே போய் ராமனையும் ஸுக்ரீவனையும் லங்காபுரியில் ரஹஸ்யமாகப்புகுந்து கெடுதியைச்செய்த அற்பனாகிய அந்த ஹனுமானையும் கொன்றுவிடுகிறோம்' என்றனர். அனந்தரம் அங்ஙனம் ஆயுதங்களை ஏந்திக்கொண்டு ப்ரயாணமாய்ப் போக முயன்றிருக்கிற அவ்வரக்கர்களெல்லோரையும் விபீஷணன் நிறுத்தி, மீளவும் உட்காரவைத்துக் கைகூப்பி ராவணனைப் பார்த்து 'என்னப்பனே! ஸாமதான பேதங்களென்கிற மூன்று உபாயங்களாலும் எதைப்பெற முடியாதோ, அதை ஸாதிப்பதற்காகப் பராக்ரமத்தை உபயோகப் படுத்த வேண்டும். எப்பொழுது இம்மூன்று உபாயங்களும் பயன்படாமற் போகின்றனவோ, அக்காலங்களே பராக்ரமத்தை உபயோகப்படுத்தவேண்டுங் காலங்கள் (அதாவது தண்டகாலங்கள்) என்று நீதிசாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவையே தகுந்தவையென்று புத்திசாலிகள் சொல்லுவார்கள். நாம் இன்னம் ஸாமாதி உபாயங்களை உபயோகிக்கவில்லை. ஆகையால் இது தண்டத்திற்குக்காலமன்று. இவ்வளவேயன்றிப் பகைவனும் தண்டிக்கத் தகுந்தவனல்லன். சப்தாதி விஷயங்களில் மனந்தாழப்பெற்று மனவூக்க மற்றிருப்பவரிடத்திலும் அவற்றில் மனப்பற்றின்றி ஜ்ஞானிகளாயிருப்பவரிடத்திலும் பக்கத்தரசர்களால் எதிர்க்கப்பட்டிருப்பவரிடத்திலும் தெய்வம் ப்ரதிகூலமாயிருக்கையால் ஸம்பத்து க்ஷீணிக்கப்பட்டிருப்பவரிடத்திலும், மற்றும் பாலர் வ்ருத்தர் முதலானவரிடத்திலும் நீதி சாஸ்த்ரங்களிற் சொன்ன விதியின்

படி விசாரித்து உபயோகப்படுத்தப்பட்ட பராக்ரமங்களே (தண்டங்களே) பயன்பெறும். மற்றொருவிதமாக உபயோகப்படுத்துவோமாயின், அவை எள்ளளவும் பயன்படா. ராமனோ அப்படிப்பட்டவனல்லன். அவன் எள்ளளவும் விஷயங்களில் கால் தாழ்ந்து ஏமாறியிருப்பவனல்லன்; ஜயிக்க விருப்பங்கொண்டிருப்பவன்; நிலைநின்ற பலமுடையவன்; அகாலத்தில் ரோஷத்தை ஏற்றுக்கொள்பவனல்லன். ஆகையால் அவனை எதிர்க்க முடியாது. அப்படிப்பட்டவனையுங்கூட எதிர்க்க விரும்புகிறீர்களே! எப்படி? ஹனுமான் பயங்கரமான நதநதிநாதனாகிய மஹா ஸமுத்ரத்தைத்தாண்டி எப்படிப்பட்டவர்க்கும் செய்யமுடியாத கார்யத்தைச் செய்தானே. இப்படி ஆகுமென்று எவனேனும் நினைக்கவாவது நினைப்பானா? ஆகையால் ராமனுக்குத் தெய்வமும் ப்ரதிகூலமன்று. ராக்ஷஸர்களே! சத்ருக்களின் பலங்களும் பராக்ரமங்களும் அளவிறந்தவையாகையால் முன்பின் பாராமல் நீங்கள் திடீரென்று அவர்கள் அற்பர்களென்று அவமதித்துச் சொல்லலாகாது. ராமனைத் தண்டிப்பது கஷ்டமென்று தெரிந்ததல்லவா! புகழ் நிறைந்தவனாகிய ராமனது பார்யையை, ராவணன் ஜனஸ்தானத்தினின்று கொண்டுவந்தனனே; இதற்கு ராமன் இந்த ராக்ஷஸ ராஜனுக்கு முன்பு என்ன அபகாரஞ் செய்தனன்? கரனைக்கொன்றானென்கிறீர்களா? கரன் தானே மிதம் மிஞ்சி ராமனைக் கொல்லப்போகையில் ராமன் அவனை யுத்தத்தில் கொன்றனன். அங்ஙனம் கொன்றானாயின் அதில் தோஷமென்? ப்ராணிகள் தந்தமது ப்ராணன்களைச் சக்தி உள்ளவரையிலும் ரக்ஷித்துக்கொள்ள வேண்டுமல்லவா? ஆகையால் ராமன் தண்டிப்பதற்குத் தகுந்தவனல்லனேயாவான்.

ராமன் அபகாரமே செய்திருப்பினுங்கூட அவன் பார்யையை அபஹரித்துக்கொண்டு வருவது யுக்தமன்று. பாதாரங்களைத் தீண்டுவது அபகீர்த்தியையும் ஆயுஸ்ஸின் முடிவையும் தனநாசத்தையும் விளைவிக்கும். அது பயங்கரமாயிருப்பது; பாபத்திற்கு மற்றொரு வடிவமென்னத் தகுந்தது. இந்தக் காரணங்களைப் பற்றி நமக்கு ஸீதையால் மிகுதியும் பெரிய பயம் ஸம்பவிக்கும். ஸீதையைப் பிடித்துக்கொண்டு வந்தாய் விட்டது. இனி அவளை விட்டுவிடவேண்டும். 'சிறந்த வஸ்துவைக் கைவிடலாகுமோ' என்னவேண்டாம். சிறந்ததாயினும் கலஹத்தை விளைப்பதாயின், அப்படிப்பட்டதைக் குறித்து என்ன கார்யம் செய்யினும் ப்ரயோஜனம் யாது? ராமன் மஹா பராக்ரமசாலி; தர்மத்தில் தவறாமல் நடப்பவன். அப்படிப்பட்டவனோடு வீண் வைரம் வைத்துக்கொள்வது நமக்கு யுக்தமன்று. அவனுக்கு ஸீதையைக் கொடுத்து விடுவோம். இந்த லங்கை யானைகளோடும் குதிரைகளோடும் கூடிப் பலரத்னங்கள் நிறைந்து ரமணீயமாயிருப்பது. இப்படிப்பட்ட பட்டணத்தை ராமன் வந்து பாணங்களால் பிளந்து பாழ்செய்வதற்கு முன்னமே அவனுக்கு ஸீதையைக் கொடுத்துவிடுவீர்களாக. மிக்க பயங்கரமாயிருப்பதும் எதிரிட முடியாததுமான பெரிய வானரஸைன்யம் வந்து நமது லங்கையைச் சுற்றிலும் சூழ்ந்து தடுப்பதற்கு முன்னமே ராமனுக்கு ஸீதையைக் கொடுத்து விடுவீர்களாக. ராமனுடைய அருமைக் காதலியான ஸீதையை நாமே அவனிடம் கொண்டுபோய்க்கொடாமாயின், நமது லங்காபுரமெல்லாம் நாசமடையும். வெறும் பட்டணம் மாத்ரமேயன்று, சூரர்களான இதிலுள்ள ராக்ஷஸர்களனைவரும் நாசமடைவார்கள்.

நீ எனக்கு ப்ராதாவாகையால் பந்துவாகிய உன்னை அருள்புரியும்படி வேண்டுகின்றனன். நான் சொல்லு கிறபடி செய்வாயாக. நான் ஹிதத்தை விளைப்பதும் [1] பத்யமுமான வசனத்தைக் கூறுகின்றனன். ராம னுக்கு ஸீதையைக் கொடுத்துவிடுவீர்களாக. ராஜ குமாரனாகிய ராமன், சரத்கால ஸூர்யகிரணங்கள்போல் மிகுதியும் தீக்ஷ்ணங்களும் பிடியும் நுனியும் புதிதா யிருக்கப்பெற்றுத் திடமாயிருப்பவைகளும் வீணாகாத வைகளுமான பாணங்களை உன்னை வதிக்கும்பொருட்டு ப்ரயோகிக்கப் போகின்றனன். ஆகையால் ராமனுக்கு ஸீதையைக் கொடுப்பாயாக. கோபம் ஸுகத்தையும் தர்மத்தையும் நாசஞ்செய்யும். ஆகையால் அதைத் துறப்பாயாக. ஸுகத்தையும் கீர்த்தியையும் வளரச் செய்வதான தர்மத்தைக் கைப்பற்றுவாயாக. மனந் தெளியப்பற்று நான் சொன்னபடி செய்வாயாக. அங்ங னம் செய்வாயாயின் நாம் பிள்ளைகுட்டிகளோடும் பந் துக்களோடும் ஜீவித்திருப்போம். ராமனுக்கு ஸீதை யைக்கொடுத்துவிடுவாயாக' என்றனன். ராக்ஷஸேஶ்வ வரனான ராவணன் விபீஷணன் சொன்னதைக் கேட்டு அந்த ஸபிகர்களெல்லோரையும் விடைகொடுத்தனுப் பித் தானும் தன் க்ருஹத்திற்குப் போயினன். ஒன்ப தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1. பத்யம்—வழியினின்று தவறாதது.

விபீஷணன் ராவணக்ருஹத்திற்குப் போய் ஸீதையைக் கொண்டுவந்தது முதலாக லங்கையில் விளையும் நானாவித துர்நிமித்தங்களைச்சொல்லி ஸீதையை ராமனுக்குக் கொடுக்கும்படி போதித்தலும் ராவணன் அதை அங்கீகரியாதிருத்தலும்.

அனந்தரம் பொழுது விடிந்தது. விபீஷணன் தர்மாதர்மங்களை நிச்சயித்துக்கொண்டு ராவணனுக்கு ஹிதோபதேசஞ் செய்கையாகிற பயங்கரமான கார்யத்திற்கு முயன்று அந்த ராக்ஷஸேஸ்வரனுடைய க்ருஹத்திற்குப் போயினன். அந்த க்ருஹம் பர்வதசிகரங்கள் போன்ற பற்பல சிகரங்கள் அமைந்து பர்வதசிகரம் போல் மிகவும் உயர்ந்திருந்தது. அது பிரிவினையுடன் நன்கு நிர்மிக்கப்பட்ட பல கட்டுக்களையுடையதும் மஹாஜனங்கள் (பண்டித ஜனங்கள்) ஓயாது திகழப்பெற்றதும், சிறந்த புத்தியும் மிகுந்த ப்ரீதியும் கார்யங்களை நிறைவேற்றுகிற வல்லமையும் அமைந்த ப்ரதானிகளால் சூழப்பட்டதும் ஆப்தர்களும் ஸமர்த்தர்களுமான பல ராக்ஷஸர்களால் நாற்புறத்திலும் நன்குபாதுகாக்கப்பட்டதுமாயிருந்தது. அதில் மதித்த யானைகளின் பூத்காரங்களால் (மூச்சுக்காற்றுக்களால்) காற்று கலக்கமுற்றுச் சுழலமிட்டுக்கொண்டிருந்தது. மற்றும், சங்கவாத்யங்களின் கோஷங்களால் பெருங்கோஷம் உண்டாகப்பெற்றதும் மற்றை வாத்யங்கள் பலவும் முழங்கப்பெற்றதும் சிறந்த பெண்மணிகளால் நிரம்பியதுமாயிருந்தது. மற்றும், அந்த ராவணக்ருஹத்தின் அகன்ற மார்க்கங்களில்கலகலவென்ற பேரொலி ஓயாதிருந்தது. அன்றியும் அது பொன்னால் இயற்றப்பட்ட நிர்யூஹங்கள் (சார்மணைகள்) அமைந்து சிறந்த அலங்கா

ரங்களால் அலங்கரிக்கப்பட்டு ஆடலும் பாடலும் ஓயா திருக்கையால் கந்தர்வர்களின் இருப்பிடம் போலும், ஐச்வர்யம் அளவற்றிருக்கையால் தேவதைகளின் இருப்பிடம்போலும், ரத்ன ஸமூஹங்கள் நிறைந்திருக்கையால் போகவதியென்கிற நாகர்களின் நகரம்போலும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. வீரனும் மிகுந்த ஒளிப்பெருக்குடையவனுமாகிய அவ்விபீஷணன் தன்னுடைய தேஜோ விசேஷமே பரந்த கிரணங்களாகப் பெற்று, ஸூர்யன் பெரிய மேகத்தினுள் புகுவதுபோல், அத்தகைய தமையன் மாளிகையில் ப்ரவேசித்தனன். மஹா தேஜஸ்வியாகிய விபீஷணன் அங்கு ராவணனுக்கு விஜயம் உண்டாகும்பொருட்டு வேதங்களை உணர்ந்த ராக்ஷஸர் உச்சரிக்கும் புண்யமான மந்த்ரத்வனிகளைச் செவியுற்றனன். அம்மஹாபலன், வேதங்களின் மந்த்ரபாகங்களையும் ப்ராஹ்மண பாகங்களையும் உணர்ந்த ப்ராஹ்மணர்கள் தயிர்ப் பாத்ரங்களாலும் நெய்களாலும் புஷ்பங்களாலும் அக்ஷதைகளாலும் பூஜிக்கப்பட்டிருக்கக் கண்டனன். மஹாபாஹுவாகிய அவ்விபீஷணன் ராக்ஷஸர்களால் புகழப்பட்டுத் தன் தேஜஸ்ஸினால் விளக்கமுற்று அம்மாளிகையினுட்சென்று ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்திருக்கும் குபேரன் தம்பியாகிய ராவணனுக்கு நமஸ்காரஞ் செய்தனன். விபீஷணன் பெரியோர்கள் தவறாமல் நடத்திவரும் ஆசாரங்களையெல்லாம் நன்கறிந்தவனாகையால் அப்பொழுது தான் ஆசரிக்கவேண்டிய 'ஜயவிஜயீபவ' என்ற ஜயசப்த ப்ரயோகஞ்செய்து அரசனது கண்ணால் குறிக்கப்பட்டதும் ஸ்வர்ணத்தினால் அலங்காரஞ் செய்யப்பெற்றதுமாகிய ஆஸனத்தில் உட்கார்ந்தனன். அனந்தரம் மற்றெவருமில்லாத ஏகாந்தத்தில் மந்த்ரிகள் மாத்ரம் அருகில்

இருக்கும்பொழுது பராக்ரமம் பொருந்தின ராவணனைப் பார்த்துப் பல யுக்திகளால் நன்கு நிச்சயிக்கப்பட்டதும் மிருதுவும் ஹிதமுமான வார்த்தையைச் சொல்லத்தொடங்கினன். விபீஷணனோ பேசும் வழியெல்லாம் நன்கறிந்தவன். எத்தேசத்தில் எக்காலத்தில் எந்தப்ரயோஜனத்தை அனுஸரிக்கவேண்டுமோ, அதெல்லாம் அவனுக்கு நன்றாகத் தெரியும். மற்றும், உலகத்தில் இது சிறந்ததென்றும் இது தாழ்ந்ததென்றும் கண்டறிந்தவனாகையால் ராவணன் அதர்மிஷ்டனென்றும் ராமன் தார்மிகனென்றும் தெரிந்தவன். ஆகையால் அவன் ஸ்தோத்ரவசனங்களால் அண்ணனை மனந்தெளியச்செய்து மதுரவசனங்களால் அவனுடன் 'ஸீதை இந்த நம் பட்டணத்திற்கு வந்தது முதல் அசுப சகுனங்கள் பலவும் புலப்படுகின்றன. அக்னி, மந்த்ரங்களைச் சொல்லி ஹவிஸ்ஸுக்களை விதிப்படி ஹோமஞ் செய்யினும் நெருப்புப் பொறிகளோடு கூடிப் புகைகள் பொருந்தின ஜ்வாலைகளுடையதாகிப் புகை மூடிக்கொள்ளுகையால் அடிக்கடி அணைந்தணைந்து எரிகின்றதேயன்றி நன்றாக ஜ்வலிக்கிறதில்லை. சமையல் செய்யும் அடுப்புகளிலும் அக்னிஹோத்ரக்ருஹங்களிலும் வேதாத்யயனஞ் செய்யுமிடங்களிலும் ஸர்ப்பங்கள் புலப்படுகின்றன. மற்றும் ஹோமஞ் செய்வதற்காக வைத்திருக்கிற ஹவிஸ்ஸுக்களுக்கு எறும்புகள் வருகின்றன. பசுக்களுக்குப் பால் உலர்ந்துபோகின்றன. மதங்கொண்ட யானைகள் மதங்குறைந்திருக்கின்றன. குதிரைகள் தீனமாகக் கனைத்துக்கொண்டு ஆஹாரத்தின்மேல் இச்சையில்லாதிருக்கின்றன, ராஜனே! நமது கழுதைகளும் ஒட்டகைகளும் கோவேறு கழுதைகளும் மயிர்கள் உதிரப்பெற்றுக் கண்ணீர் பெருக்குகின்றன.

நானுவித சிகித்ஸைகள் செய்யினும் பழைய ஸ்திதிக்கு வாராதிருக்கின்றன. காக்கைகள் கொடியவையாகி எங்குப் பார்க்கினும் கூட்டங்கூட்டமாகக் கூடிக் கூவுகின்றன. விமான சிகரங்களிலும் குவியல்குவியலாகப் புலப்படுகின்றன. கழுகுகள் பட்டணத்தில் வீடுகளின் மேல் குவியல் குவியலாக வந்து நிற்கின்றன. நரிகள் காலை மாலைகளில் பட்டணத்திற்கருகாமையில் வந்து அமங்களமாகக் கூவுகின்றன. மற்றும், மாம்ஸத்தைத் தின்பவையான நாய்முதலிய க்ரூரஜந்துக்களும் பட்டணத்து வாசற்படிகளில் கூட்டங்கூடி இடியிடித்தாற்போல் பெருந்த்வனிகளைச் செய்கின்றன. இங்ஙனம் அபசகுனங்கள் தோற்றுவதுபற்றியும் இவை தெரிவிக்கும் அபஜயம், லங்காதஹனம் முதலியவற்றால் நமக்கு நேர்ந்திருப்பது பற்றியும் இவ்வசுபங்களைத் தடுப்பதற்கு ப்ராயச்சித்தம் இதுவே. இது மற்றென்றுமன்று. உனக்கு விருப்பம் உளதாயின் ஸீதையை ராமனுக்குக் கொடுப்பாயாக. மஹாராஜனே! நான் கார்ய தத்வங்கள் தெரியாமையாலோ, பிழைப்பில் பேராசையாலோ இதை மொழிந்தேனாயினும் என்மேல் இதை அபராதமாகக் கொள்ளலாகாது. இதோ துச்சகுனங்கள் புலப்படுகின்றனவே; இவை அறிவிக்கும் அனர்த்தங்கள் ஒருவர்க்கு மாத்ரமேயன்று; ஸமஸ்தராக்ஷஸர்களுக்கும், ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்கும், அந்தப்புர ஸ்த்ரீகளுக்கும் பட்டணத்திலுள்ளவர் அனைவர்க்கும் தெரிந்திருக்கிறது. 'ப்ரஹஸ்தாதிகள் இருக்க, நீயே இதைச் சொல்வதேன்' என்கிறாயோ? மந்த்ரிகளெல்லோரும் கேவலம் உன்மனம் போனபடி நடப்பவராகவே இருக்கின்றனர். உன் முகமலர்த்திக்காக உனக்கு இவ்விஷயத்தை விண்ணப்பஞ் செய்யவுங்கூட முயற்சிகொள்ளா

திருக்கின்றனர். 'உனக்கு மாத்ரஞ் சொல்லும்படியான தைர்யமென்' என்கிருயோ? நான் உனக்கு ப்ராதாவாகையால் பார்த்தது கேட்டது எல்லாவற்றையும் அவஶ்யம் உனக்குச் சொல்லாமல் இராது. நீ ந்யாயத்தின்படி மனத்திலேயே ஆலோசித்து நிச்சயித்து, அங்ஙனம் நிச்சயித்த கார்யத்தைச் செய்யத் தகும்' என்று மொழிந்தனன். இங்ஙனம் தம்பியாகிய விபீஷணன் தன் தமையனும் ராக்ஷஸேஶ்வரனுமாகிய ராவணனுக்கு மந்த்ரிகளின் நடுவில் ஹிதமான வசனத்தைச் சொல்லினன். விபீஷணன் இங்ஙனம் ஹிதமாயிருப்பதும் பெரிய ப்ரயோஜனத்தை விளைவிப்பதும் நல்வார்த்தைகளை முன்னிட்டுக் கொண்டிருக்கையால் மெதுவானதும் யுக்திகள் அமைந்ததும் வருங்காலம் கழிகாலம் நிகழ்காலமாகிய மூன்று காலங்களிலும் மேன்மையை விளைவிப்பதுமாக மொழிந்த அம்மொழிகளைக் கேட்டு மிகுந்த கோபத்துடன் ஜ்வலித்துக் கொண்டு தான் நினைத்ததே நன்மையென்னும் பிடிவாதத்தை விடாமல் அவனைப் பார்த்து, 'எனக்கு எவ்விடத்தினின்றும் பயம் புலப்படவில்லை. ராமன் என் கையில் அகப்பட்ட ஸீதையை ஒருகாலும் திரும்பிப் பெறவல்லனுக மாட்டான். தேவேந்த்ரனும் தேவதைகளும் ஸஹாயமாய்வரினும் ராமன் யுத்தத்தில் என்னெதிரில் நிற்க எப்படி வல்லனுவான்? இனி யுத்தஞ் செய்வது எங்கே? ஆதலால் ஸீதையைப் பெறுவது எப்படி?' என்றனன். தேவதைகளின் ஸைன்யங்களை உருமாய்க்கவல்ல மஹாபலனும் யுத்தத்தில் பயங்கர பராக்ரமனுமாகிய ராவணன் இங்ஙனஞ் சொல்லி அப்பொழுது ஹிதத்தை உபதேசிக்கின்ற தம்பியாகிய விபீஷணனை விடைகொடுத்தனுப்பினன். பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ராவணன் மனக்கலக்கமுற்று மீளவும் ஆலோசனை செய்யும் பொருட்டு மந்த்ரிகளுடன் மந்த்ரஸபைக்கு வருதல் }

பாபஸ்வபாவனும் ராக்ஷஸராஜனுமாகிய அந்த ராவணன், ஸீதையிடத்திலுள்ள காமமோஹத்தினுலும் அவனிடத்தில் நன்மனமுடைய விபீஷணுதிகள் தாம் சொல்வதைக் கேட்கவில்லையே யென்று அநாதரஞ் செய்கையாலும் ஸீதையைப் பறித்துக்கொண்டு வந்த பாபகர்மத்தினுலும் சிந்தையிலாழ்ந்து வ்யாகுலமுற்றிருந்தனன். [1] மந்த்ராலோசனை செய்யவேண்டிய காலம் தவறிப்போனபின்பு யுத்தம் ப்ராப்தமாயிருக்கையில், ராவணன் மந்த்ரிகளோடும் நண்பர்களோடுங்கூடி ஆலோசிப்பதற்கு அப்பொழுது தகுந்த காலமென்று நினைத்தனன். அம்மஹாரதன், நாற்புறங்களிலும் பொற்சாளரங்களுடையதும் ரத்னங்களாலும் பவழங்களாலும் அலங்காரஞ் செய்யப்பெற்றதும் நன்கு சிக்ஷையில் தேறின குதிரைகள் பூட்டியிருப்பதுமாகிய மஹாரதத்தைக்கிட்டி ப்ரதக்ஷிணஞ் செய்து ஆரோஹித்தனன். ராக்ஷஸோத்தமனுகிய ராவணன் மஹாமேகம்போல்

---

1. இங்கு 'அதீதஸமயே காலே தஸ்மிந் வை யுயி ராவண:। அமாத்யைஶ்ச ஸுஹ்ருத்பிஶ்ச ப்ராப்தகாலமமந்யத' என்பது மூலம். (காலே அதீதஸமயே) ராவணனுடைய ஆயுஷ்காலம் விஞ்சிப்போகையில் (யுயி) யுத்தத்தில், (அமாத்யைஶ்ச ஸுஹ்ருத்பிஶ்ச ஸஹ ஆத்மாநம்) மந்த்ரிகளோடும் நண்பர்களோடுங் கூடின தன்னை, (பராப்தகாலம்) மரணகாலம் ஸமீபிக்கப்பெற்றவனுக (அமந்யத) நினைத்தனன். ராவணன் ஆயுள்முடிகையால் தனக்கும் தன் மந்த்ரிகளுக்கும் ம்ருத்யு ஸமீபித்ததென்று நினைத்ததாக வால்மீகியின் கருத்து. இங்ஙனம் கோவிந்தராஜர். 'மந்த்ரகாலமமந்யத' என்று மஹேஶ்வரதீர்த்தர் பாடம்.

கர்ஜிக்கின்ற அவ்வுத்தமரதத்தில் ஏறிக்கொண்டு மந்த்ராலோசன ஸபைக்குப் போயினன். சில ராக்ஷஸயோதர்கள் (போர்வீரர்) கத்தி கேடயங்களைத் தரித்தும், சிலர் ஸமஸ்த ஆயுதங்களை ஏந்தியும் ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணனுக்கு முன்னே புறப்பட்டனர். அந்த ராவணக்ருஹத்தினின்று பலவாறுயிருக்குமாறு விசேஷமான அலங்காரங்களைச்செய்துகொண்டு பலவகை ஆபரணங்களை அணிந்து அந்த ராவணனது பார்ஶ்வபாகங்களிலும் பின்புறத்திலும் சூழ்ந்து சென்றனர். அனந்தரம் அதிரதரான சிலராக்ஷஸர் தேர்கள்மேலும் சிலர் மதித்துச் சிறந்த யானைகள்மேலும், சிலர் நானாவித நடைகளால் விளையாடிக்கொண்டு நடக்கவல்ல குதிரைகளிலும் ஏறிக்கொண்டு ராவணனைப் பின்தொடர்ந்து சென்றனர். சிலர் கதைகளையும் பரிகங்களையும் தரித்தும் சிலர் சக்திகளையும் தோமரங்களையும் ஏந்தியும், சிலர் கண்டக்கோடாலியைப் பிடித்தும், சிலர் சூலங்களை எடுத்தும் போயினர். ராவணன் தன் மாளிகையினின்று ஸபைக்குப் போனவுடனே அநேகமாயிரம் வாத்யங்களின் பெருத்த்வனிகளும் சங்கத்வனிகளும் கலந்து மேற்கிளம்பின. மஹரதனியனாகிய அம்மஹாரதன் சக்கரக்கட்டுகளின் த்வனியால் திசைகளில் ப்ரதித்வனி விளையும்படி செய்துகொண்டு உடனே காந்தி விளங்கப் பெற்ற ராஜமார்க்கத்தில் ப்ரவேசித்தனன். அப்பொழுது ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணன்மேல் பிடிக்கப்பட்ட நிர்மலமான வெள்ளை குடையானது பூர்ணசந்த்ரன் போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. [1] இடையில்

1. இங்கு 'ஹேமமஞ்ஜரிகர்ஹேச ஶுத்தஸ்படிகவிக்ரஹ! சாமரவ்யஜநே' என்று மூலம். (ஹேமமஞ்ஜரிகர்ஹே) என்னும் விசேஷணத்திற்கு—'பொன்மயமான பல்லவங்கள் அமைந்தகொடிகள் இடையில் இயற்றப்பெற்றவைகள்' என்று பொருள் என்பதாக மஹேஶ்வரதீர்த்தர்.

பொன் கதிர்களுடையவைகளும் நிர்மலமான ஸ்படிகம் போன்ற உருவமுடையவைகளுமான இரண்டு சாமரங்கள் ராவணனுடைய வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் விளங்கின. அங்கு ராக்ஷஸர்களெல்லோரும் கீழே நின்றிருந்து கைகளைக்குவித்து ரதத்தின் மேலிருக்கிற ராக்ஷஸர் தலைவனாகிய அந்த ராவணனுக்குத் தலை வணக்கி நமஸ்காரஞ்செய்தனர். பகைவரெல்லோரையும் பாழ்செய்யவல்ல பராக்ரமசாலியாகிய அந்த ராவணன், ராக்ஷஸர்களின் ஜயசப்தங்களாலும் ஆசீர்வாதங்களாலும் துதிக்கப்பெற்றவனாகி, நன்கு நிர்மிக்கப்பட்டு அழகாயிருப்பதான ஸபையைச் சேர்ந்தனன். அந்த ஸபையில் ஸ்வர்ண ஸ்தம்பங்களும் வெள்ளி ஸ்தம்பங்களும் விளங்கின. அதன் மத்ய ப்ரதேசம் நிர்மலமான ஸ்படிகரத்னங்களால் இயற்றப்பட்டிருந்தது; அன்றியும், அந்த ஸபை ஸ்வர்ணமயமான பட்டுவஸ்த்ரத்தால் முழுவதும் பரப்பப்பட்டிருந்தது. அது ஆறுநூறு பிசாசர்களால் பாதுகாக்கப்பட்டிருந்தது. விஶ்வகர்மாவால் நன்கு நிர்மிக்கப்பட்டு அழகாயிருப்பதான அந்த ஸபையில், தன் தேஹகாந்தியால் விளங்கும் மஹாதேஜஸ்வியாகிய அந்த ராவணன் ப்ரவேசித்தனன். அதில் வைடூர்யமணிமயமான ஓர் ஸிம்ஹாஸனம் இருந்தது. அதன்மேல் ப்ரியகமென்னும் மானினுடைய மிருதுவான தோல் பரப்பப்பட்டிருந்தது. அது தலையணை இடப்பெற்றுப் பெரிதாயிருந்தது. ராவணன் அந்தச் சிறந்த ஸிம்ஹாஸனத்தின்மேல் உட்கார்ந்தனன். அனந்தரம் அந்த ராவணன் விரைவாக நடக்கவல்ல தூதர்களைப் பார்த்துத் தான் ராஜனாயிருக்கைக்குத் தகுந்தபடி 'நமக்கு இப்பொழுது மிகுதியும் பெரிய ப்ர

யத்னங்கொண்டு நிறைவேற்றவேண்டிய [1]பெரிய கார்யம் ஒன்றிருக்கின்றது. இந்நகரத்திலுள்ள ராக்ஷஸர்களை என்னிடம் சீக்ரமாக அழைத்துக்கொண்டு வருவீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். ராவணன் மொழிந்த அவ்வார்த்தையைக்கேட்ட ராக்ஷஸர்கள், விளையாடுமிடங்களிலும் படுக்கையறைகளிலும் உத்யான வனங்களிலும் க்ரீடித்துக்கொண்டிருக்கிற ராக்ஷஸர்களை நிர்ப்பயமாக அழைக்கத் தொடங்கி லங்கையில் வீடுகள்தோறும் திரிந்தனர். தூதர்கள் மூலமாய் ராஜனது ஆஜ்ஞையைக் கேட்டு அந்த ராக்ஷஸர்களில் சிலர் அழகான ரதங்களிலும், சிலர் மதித்திருக்கும் குதிரைகளின் மேலும் ஏறிக்கொண்டு போயினர். சிலர் கால்நடையாகச் சென்றனர். சிறப்புற்றதாகிய அந்நகரம், அங்ஙனம் தேர்களும் யானைகளும் குதிரைகளும் நிறைந்து வேகமாகப் போய்க்கொண்டிருக்கையில் பக்ஷிஸமூஹங்களோடு கூடின ஆகாயம்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அனந்தரம் அந்த ராக்ஷஸர் பல்லக்கு முதலிய நானாவித வாஹனங்களையும் குதிரை முதலிய பலவகை யானங்களையும் வெளியிலேயே நிறுத்தி ஸிம்ஹங்கள் பர்வதகுஹையுள் ப்ரவேசிப்பதுபோல், கால் நடையாகவே ஸபையில் ப்ரவேசித்தனர். அவர்களெல்லோரும் ராஜனாகிய ராவணனது பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரிக்கையில் ராவணன் அவர்களைப் பூஜித்தனன். அவர்களில் புரோஹிதர் முதலிய சிலர் பொன் முதலியவற்றால் நிர்மிக்கப்பட்ட பீடங்களிலும், ஸ்ரோத்ரியர்களான சிலர் தர்ப்பமயமான ஆஸனங்களிலும் புத்ரர் முதலிய சிலர்

1. பெரிய கார்யமொன்றிருக்கிற தென்கையால்—ராவணனுக்குச் சாரபுருஷர்மூலமாக ராமாதிகள் ஸமுத்ரக்கரைக்கு வந்திருப்பது தெரிந்திருக்கிறதென்று தோற்றுகிறது.

ஸாதாரணமான பாய்முதலியன பரப்பப்பெற்ற பூமிகளிலும் உட்கார்ந்தனர். ராஜனது ஆஜ்ஞையால் அந்த ராக்ஷஸர்கள் அங்ஙனம் வந்து அவரவர்க்குத் தகுந்தபடி ராக்ஷஸர் தலைவனான ராவணனது ஸமீபத்தில் உட்கார்ந்தனர். அங்குக் கார்யங்களை நிச்சயிப்பதில் பண்டிதர்களும் ப்ரமுகர்களுமான மந்த்ரிகளும், குணமுடையவர்களும் எல்லாமறிந்தவர்களும் புத்தியே கண்ணாகப்பெற்றவர்களுமான அமாத்யர்களும் அனேகம் பேர்வந்துசேர்ந்தனர். அப்பொழுது சூரர்கள் பலர் ஸமஸ்த கார்யங்களின் க்ஷேமங்களை விசாரிக்கும் பொருட்டு பொன்வர்ணமுடையதும் அழகியதுமான ராக்ஷஸேஸ்வரனது ஸபையில் கூட்டங்கூட்டமாக வந்துசேர்ந்தனர். அனந்தரம் மஹானுபாவனும் பெரும்புகழனுமாகிய விபீஷணன், அகன்றதும் நல்ல குதிரைகள் பூட்டப்பெற்றதும் முழுவதும் பொன்னால் சித்ரஞ்செய்யப்பட்டு அழகியதுமான உத்தம ரதத்தில் ஏறிக்கொண்டு அண்ணனது ஸபைக்குப் போயினன். அனந்தரம் தம்பியாகிய விபீஷணன் தன தண்ணனுக்கு, பெயரைச் சொல்லிப் பாதங்களில் நமஸ்காரஞ் செய்தனன். அங்ஙனமே சுகனும் ப்ரஹஸ்தனும் நமஸ்காரஞ் செய்தனர். அனந்தரம் ராவணன் அம்மூவர்க்கும் அவரவர் பெருமைக்குத் தகுந்தபடி ஆஸனங்களைக் கொடுத்தனன். அனந்தரம் அக்கொலுமண்டபத்தில், நானாவித ரத்னங்கள் இழைக்கப்பெற்ற ஸ்வர்ண ஆபரணங்களைத் தரித்து நல்ல வஸ்த்ரங்களை உடுத்துச் சிறந்த அகுரு சந்தனங்களைப் பூசிப் பூமாலைகளை அணிந்திருக்கிற அந்த ராக்ஷஸர்களின் பூமாலை மணமும், சந்தனாதி அங்கராகமணமும் முழுவதும் வீசிக்கொண்டிருந்தது. ஸபிகர்கள் எவரும் சப்தஞ்செய்யாதிருந்தனர். எவரும்

அபத்தங்கூறுதிருந்தனர். எவரும் அக்ரமப் பேச்சு களைப் பேசவில்லை. எல்லோரும் கருத்தெல்லாம் ஈடேறப்பெற்று மஹாவீர்யசாலிகளாயிருந்தனர். அப் பொழுது ப்ரபுவாகிய ராவணனுடைய முகத்தையே எல்லோரும் பார்த்துக்கொண்டிருந்தனர். [1]மனஸ்வி யாகிய ராவணன் அங்ஙனம் அந்த ஸபையில் ஆயுத மேந்தினவர்களும் தைர்யம்பொருந்தின மனமுடைய வரும் மஹாபலிஷ்டர்களுமான ராக்ஷஸர்களின் நடுவில், வஸுக்களின் நடுவில் தேவேந்த்ரன் போல் தன்தேஹ காந்தியால் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். பதி னொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் ஸீதையை ராமனுக்குக் கொடாமலே அவனை ஜயிப்பதற்கு உபா யத்தை ஆலோசித்தலும், கும்பகர்ணன் நிஜபராக்ரமத்தினால் கார்யங்களை யெல் லாம் நிறைவேற்றுவதாகக் கூறுதலும்.

அப்பொழுது, யுத்தத்தில் ஜயசீலனாகிய அந்த ராவணன் அந்த ஸபைமுழுவதும் பார்த்து அதில் ஸேனாபதியாகிய ப்ரஹஸ்தனை நோக்கி, 'ஸேனாபதீ! தனுர் வித்யையை நன்கு அப்பஸித்தவரும், தேர் மேலிருந்து யுத்தஞ்செய்பவர் யானையின்மேலேறிப் போர்புரிபவர் குதிரைகளின் மேல் ஆரோஹித்துச் சண்டைசெய்பவர் காலாட்கள் என்று நான்கு வகைப் பட்டவருமாகிய போர்வீரர்களுக்கு, முன்பைவிட அதிக மனவூக்கத்துடன் பட்டணத்தைப் பாதுகாக் கும்படி ஆஜ்ஞை இடுவாயாக' என்று கட்டளையிட் டனன். ராவணனுக்கு மிகுதியும் விஸ்வாஸத்திற்கிட

---

1. மனஸ்வி-சிறந்த மனமுடையவன்.

மான அந்த ப்ரஹஸ்தன் செய்யவேண்டிய ரீதியைப் புத்தியில் நிச்சயித்துக்கொண்டு ராஜாஜ்ஞையை நிறை வேற்ற விரும்பி ஸைன்யத்தை யெல்லாம் ராவணனது க்ருஹத்திற்கு உள்ளேயும் வெளியிலும் முழுவதும் காவலிருக்கும்படி ஏற்படுத்தினன். அனந்தரம் பட் டணத்தை ரக்ஷிக்கும்பொருட்டு வேறு ஸைன்யத்தை நிறுத்தி ப்ரஹஸ்தன், ராஜனுகிய ராவணனது ஸம் முகத்தில் வந்து உட்கார்ந்து அவனுடன் 'பலிஷ்ட னுகிய உன்னுடைய ஸைன்யத்தை வெளியிலும் உள் ளேயும் முழுவதும் காவல் வைத்திருக்கின்றனன். இனி மனக்கவலை தீர்ந்து நீ விரும்பினபடி செய்வாயாக. அது உனக்கு ஸித்திக்குமாக' என்றனன். ராஜ்யத் திற்கு ஹிதஞ் செய்வதிலேயே விருப்பமுடைய அந்த ராக்ஷஸர் தலைவனுன ராவணன் ப்ரஹஸ்தன் மொழிந்த மொழியைக்கேட்டு, ஜயத்தை விரும்பாமல் காம ஸுகத்தையே விரும்பி நண்பர்களைப் பார்த்து 'தர்மம் அர்த்தம் காமம் என்னும் மூன்றில் எதை ஸேவிக்க வேண்டுமோ என்கிற ஸந்தேஹம் உண்டாகும்பொழுது நீங்கள் அவ்வவைகளை அனுஷ்டிக்கையால் அவற் றிற்குப் பலனுக விளையும் ப்ரியாப்ரியங்களையும், ஸுக துக்கங்களையும் லாப நஷ்டங்களையும், நன்மை தீமை களையும் அறிவதற்கு வல்லவராகையால் அந்தப் பலன் களைப்பற்றி ஸேவிக்கத்தகுந்தது இதுவென்று ஸந் தேஹந்தீர்க்கச் சக்தராவீர்கள். எப்படியெனின், நீங் கள் எல்லாவிதத்திலும் நன்கு ஆலோசித்து நிச் சயித்து ஆரம்பித்த கார்யங்களில் ஒன்ருயினும் எப் பொழுதும் பயன்படாமற் போனதே இல்லை. எல்லாம் பயன்பட்டவைகளே. இந்த்ரன் சந்த்ர ஸூர்யாதி க்ரஹங்களோடும் நக்ஷத்ரங்களோடும் தேவதைக

ளோடுங்கூடி ஐயலக்ஷ்மியைப் பெறுவதுபோல், நான் உங்களோடு கூடி மிகுதியும் ஐயலக்ஷ்மியைப் பெறுவேன். உங்களெல்லோர்க்கும் இதற்கு முன்னமே இந்த ஸங்கதியைத் தெரிவிக்கலாயினன். கும்பகர்ணன் அப்பொழுது நித்ரையிலிருந்தபடியால் அவனுக்கு மாத்ரம் இந்த ஸங்கதியைச் சொல்லவில்லை. மஹாபலனும் ஆயுதந்தரிப்பவர்களனைவரினும் சிறப்புற்றவனுமாகிய இந்தக் கும்பகர்ணன் இவ்வாறுமாதங்களாக நித்ரித்துக்கொண்டிருந்தானல்லவா? அவன் இப்பொழுது தூக்கந்தெளிந்து எழுந்தனன். ஆகையால் இதற்கு முன்னம் தெரிவிக்க நேராமற் போயிற்று' என்று மொழிந்து, கும்பகர்ணனைப் பார்த்து 'ராமனுக்கு அருமைக்காதலியும் ஜனகராஜன் புதல்வியுமாகிய இந்த ஸீதையைத் தண்டகாரண்யத்தில் ராக்ஷஸர் திரியும் ஜனஸ்தானத்தினின்று இவ்விடத்திற்குப் பறித்துக்கொண்டு வந்தனன். [1] அம்மந்தகாமினி நான் எவ்வளவு வேண்டிக்கொள்ளினும் என் படுக்கையில் ஏற விருப்பமுறாதிருக்கின்றனள். 'ஆனால், அவளை விட்டுத் தொலைக்கலாகாதா' என்கிறீர்களோ? மூன்று லோகங்களினும் ஸீதைக்கு நிகரானவள் மற்றொருத்தியும் இல்லையென்று என்னபிப்ராயம். அப்பெண்மணி சிறுத்த இடையும் பருத்த இடையின் பின்புறமும் சரத்காலசந்த்ரன்போன்ற முகமும் அமைந்து பொன்ப்ரதிமையை நிகர்த்து மிகுந்த அழகுபொருந்தி க்ஷணந்தோறும் ஆச்சர்யத்தை விளைவிக்கும்படி மயனால் நிர்மிக்கப்பட்ட [2]மாயைபோல் திகழ்கின்றனள். உள்ளங்கால்கள் மிகுதியும் சிவந்திருக்கப் பெற்று, மிகுந்த

1. மந்தகாமினி-மெதுவாக நடக்குந்தன்மையள்.
2. மாயை-ஆச்சர்யவஸ்து.

மேன்மையும் பொருந்தி, மேடுபள்ள மில்லாமல் ஸம மாகி நல்ல சீர்திருத்தமும் அமைந்து சிவந்த நகங்க ளோடுங்கூடின அம்மாதரசியின் அடிகளைக் கண்ட வுடன் எனக்கு மன்மதவிகாரம் மேன்மேலும் வளர்ந்து எரிகின்றது. ஹோமஞ்செய்த அக்னியின் ஜ்வாலை போலவும், ஸூர்யகிரணம்போலவும் திகழ்கின்ற இவ ளைக் கண்டு, நான் காமவிகாரமுற்றனன். உயர்ந்த மூக்கு அமைந்ததும் அழகான கண்களையுடையதும் [1]அகன்றதும் அழகியதுமான அப்பெண்மணியின் முகத் தைக் காணக்காண, நான் ஸ்வாதீனந்தவறி மன்மதன் வசம் அகப்பட்டனன். மன்மதன் எவரையாயினும் அவர்க்குக் கோபம் வந்திருப்பினும் ஸந்தோஷம் உண்டாயிருப்பினும் ஒரேவிதமாகப் பாதித்துக்கொண் டிருப்பான்; மேனியின் நிறம் மாற எரிப்பான்; அவர்க்கு மனவருத்தம் உண்டாயிருப்பினும், சரீரபீடை மேலெழி னும் மன இரக்கம் உண்டாக்கி விட்டுத் தொலையாமல் இடைவீடின்றிப் பிடித்துத் தஹிப்பான்; அவன் தன்மை இதுவாகையால் அவன் என்னுடைய இந்த துர்த் தசையைக் கண்டும் தயையின்றி என் மனத்தை இங் ஙனம் வ்யாகுலப்படுத்துகின்றனன். 'அப்படியாயின் பலாத்காரஞ் செய்தாயினும் அவளை அனுபவிக்கலா காதா' என்கிறீர்களோ? அகன்ற கண்களையுடைய அந்த மாதரார்மணி தன் கணவனாகிய ராமன் வரு வானோ என்னவோ என்று அவன் வரவை எதிர்பார்ப்ப வளாகி, 'ஓராண்டுக்குள் ராமன் வராதபக்ஷத்தில் நீ

1. 'அகன்ற கண்களையுடைய ஸீதையைக் கண்டு மன்மதன் வசம் அகப்பட்டனன்' என்னும் பொருள் அடங்கிய அரைச்லோ கம் குண்டலிதமாயிருக்கிறது. இது வியாக்யானத்திற்கும் பொருந்தவில்லை.

சொன்னபடி செய்கின்றேன்' என்று ஒருவருஷகாலம் கெடுவேண்டிக்கொண்டனள். அப்பெண்மணியின் அழகானகண்களில் ஈடுபட்டு அம்மாதாசி இனிய உரையால் வேண்டிக்கொண்ட அவ்வார்த்தையை அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டனன். வெகுதூரம் வழி நடந்த குதிரைபோல், மன்மதனுல் இடைவிடின்றி வருந்தி இளைப்புற்றிருக்கின்றனன். 'அந்த ஸீதையைக் கொண்டுபோக ராம லக்ஷ்மணர்கள் ஸேனைகளோடு கூடி வர முயன்றிருக்கையில், அவள் உனக்கு எப்படி கிலேப்பாள்' என்கிறீர்களோ? ஸமுத்ரமோ கலக்க முடியாத பேராழமுடையது; திமிங்கிலம் முதலிய மஹா ஜந்துக்கள் நிறைந்தது. அப்படிப்பட்ட அதை வானரர்கள் எப்படித் தாண்டி வருவார்கள்? அந்த ராமலக்ஷ்மணர்களாயினும் அதை எங்ஙனம் தாண்டப் போகிறார்கள்? ஒருகால் தாண்டுவார்களென்றே நினைப்போம். ஸாதாரணமான ஒரு வானரனே நமக்குப் பெரிய மன வருத்தஞ்செய்து போயினனே! கார்யங்கள் எப்படியெப்படி போகுமோ தெரிவது கஷ்டமாயிருக்கின்றது. உங்களில் எவரெவர் புத்திக்கு எவ்வெவப்படி தோற்றுகின்றதோ அதையெல்லாம் சொல்வீர்களாக. உங்களை ஸஹாயமாக வைத்துக்கொண்டு தேவாஸுர யுத்தத்தில் வெற்றிபெற்றனன். அப்பொழுது ஸஹாயமாயிருந்து ஜயித்த நீங்களும் அப்படியே இப்பொழுதும் ஸஹாயமாயிருக்கிறீர்கள். இங்ஙனம் தேவேந்த்ரனையே ஜயித்த எனக்கு விபீஷணன் சொன்னபடி மனுஷ்யனுல் பயம் எள்ளளவும் உண்டாகாது. ஆயினும் நன்றாக ஆலோசித்துப் பார்ப்பீர்களாக. அங்கு ஸமுத்ரத்தின் அக்கரையில் ராமலக்ஷ்மணர்கள் ஸீதை யிருக்குமிடந் தெரிந்துகொண்டு,

ஸுக்ரீவன் முதலிய வானரர்களை முன்னிட்டுக்கொண்டு ஸமுத்ரக்கரைக்கு வந்து சேர்ந்திருக்கின்றனர். சேரட்டும்; அதனால் நமக்குப் பயம் என்ன? உங்களை ஆலோசித்துப்பார்க்கச் சொன்னது மற்றெதுவும் அன்று. ஸீதையைக் கொடாதிருக்கும்படிக்கும் தசாதகுமாரர்களான ராமலக்ஷ்மணர்களைக் கொல்லும்படிக்கும் நீங்கள் ஆலோசிக்க வேண்டும். அங்ஙனம் ஆலோசித்து, நன்றாக நிச்சயித்த உபாயத்தை எனக்குச் சொல்லவேண்டும். 'ஸமுத்ரத்தைத் தாண்டி வந்து நம்மை ஜயிப்பதற்கு ராமனுக்குச் சக்தியில்லையாயினும் அவன் ஸஹாயனாகிய எவனுக்காவது அப்படிப்பட்ட சக்தி இருக்கக்கூடும்' என்கிறீர்களோ? வானரர்களை ஸஹாயமாக அழைத்துக்கொண்டு ஸமுத்ரத்தைத் தாண்டி இவ்விடம் வருவதற்கு ராமனுக்கு மாத்ரமே அன்று; இவ்வுலகத்தில் மற்றெவனுக்குமே அப்படிப்பட்ட சக்தி இல்லை. ஆகையால் நிச்சயமாக எனக்கே ஜயம் உண்டாகும்' என்றனன். அங்ஙனம் ராவணன் மன்மத விகாரத்தினால் விபரீதபுத்திகொண்டு புலம்புவதுபோல் சோர்ச்சேர்த்தியாக மொழிந்த சொல்லைக் கேட்டுக் கும்பகர்ணன் மிகுதியும் கோபமுற்று அவனைப் பார்த்து, இங்ஙனம் சொல்லத்தொடங்கி 'நீ உனக்குள்ளேயே ஒரு தடவை ஆலோசித்து, அப்பொழுது ராமலக்ஷ்மணர்களிடமிருந்த ஸீதையைப் பலாத்காரமாக இவ்விடத்திற்குப் பறித்துக் கொண்டுவந்தனையே; அங்ஙனங் கொண்டுவரும் பொழுதே எங்களுடன் ஆலோசித்திருப்பாயாயின், உன்மனம் யமுனாநதி யாமுனபர்வதத்தை அடைவது போல், நன்றாக நிச்சயம் பெற்று நிர்மலமாயிருக்குமல்லவா? அப்பொழுதே எங்களுடன் ஆலோசிக்கவேண்

டிய காலம். இப்பொழுது விஞ்சிப் போயின பின்பு, ஆலோசிப்பதெல்லாம் வீணையாகையால் உன்மனம் குதிராமலிருக்கின்றது. 'அப்பொழுதே உங்களுடன் கலந்து ஆலோசித்திருப்பின் என்னபலன்?' என்பாயோ, மஹாராஜனே! இப்பொழுது செய்யும் ஆலோசனை யல்லாம் ஸீதையைப் பிடித்துக்கொண்டு வருவதற்கு முன்னமே எங்களுடன் செய்திருப்பாயாயின், மிகுதியும் நன்றாயிருக்கும். பத்துத்தலையனே! எவன், முன்னமே ஆலோசித்து ந்யாயத்தை அறிந்து, பின்பு அந்த ந்யாயத்தின்படி ராஜகார்யங்களைச் செய்கிறானோ, அம்மன்னவன், தன்மனங் கார்யநிச்யம் பெற்று நிர்மலமாயிருக்கையால், உன்னைப்போல் பின்பு பரிதாபம் அடையமாட்டான். கார்யங்களை விபரீத உபாயங்களுடன் செய்துகொண்டிருப்பினும், அல்லது அவற்றை விபரீதமாகச் செய்யினும், அவை பயன்படாமற் போவதுமாத்ரமேயன்றிப் பாத்ரமல்லாதவர்க்குக் கொடுத்த ஹவிஸ்ஸுபோல் தோஷத்தையும் விளைவிக்கும். எவன் கார்யத்திற்கு முன்னம் செய்யவேண்டிய ஆலோசனைகளைக் கார்யத்திற்குப் பின்பும், ஆலோசனைக்குப்பின் முயலவேண்டிய கார்யங்களை ஆலோசனைக்கு முன்னமும் செய்ய விரும்புவானோ, அவன் நன்மை தீமைகளை அறிந்தவனல்லன். ஹம்ஸங்கள் தமக்குக் கிளம்பித் தாண்டமுடியாத க்ரௌஞ்ச பர்வதத்தை ஸுப்ரஹ்மண்யன் செய்த ரந்த்ரத்தின்வழியாய் நுழைந்துதாண்டிப்போவதுபோல், சத்ருக்கள் தம்மைக்காட்டிலும் மேலான பலமுடைய பகைவனை எதிர்த்து வெல்லமுடியாதென்று விசாரித்து அவன் கார்யங்களை ஆலோசித்துச் செய்யாத சபலனாயின், அங்ஙனம் ஆலோசித்துச் செய்யாத ஸமயம் பார்த்துத் திடீரென்று அவன்மேல்

விழுந்து அவனைப் பரிபவிப்பார்கள். இங்ஙனம் நீ ஸீதையைப் பறித்துக்கொண்டு வந்தமையாகிற பெரிய காரியத்தை ஆரம்பித்தனை. இது எவ்வளவோ அபாய காமானது. இதை நீ ஆலோசிக்காமலே செய்தனை. இந்த [1]ரந்த்ரம் உன்னிடத்திலிருந்தும் உன்பாக்யவசத்தினுல், உன்னை ராமன் விஷத்துடன் கலந்த மாம்ஸம் போல் எவர்க்குந் தெரியாதபடி இதுவரையிலும் கொல்லாதிருக்கின்றனன். 'ஆனால் இனிக் கதி என்?' என்கிருயோ? இங்ஙனம் நீ உனக்குத் தகாத கார்யஞ் செய்தாயாகையால் அதை நான் தவிர மற்றெவராலும் ஸரிப்படுத்த முடியாது. நான் உன் சத்ருக்களைக் கொன்று அதைச் சீர்திருத்துகிறேன். நீ மனக்கவலையற்றுச் சுகமாயிருப்பாயாக. ராஜனே! உன் பகைவரெல்லோரையும் உருமாய்த்துவிடுகிறேன். 'அதிமாநுஷமான வைபவமுடைய அவர்களை வெல்லுவது எங்ஙனம் முடியும்' என்கிருயோ? அவர்கள் இந்த்ர ஸூர்யர்களாயினும், அக்னி வாயுக்களாயினும், குபேரவருணர்களாயினும், அவர்களோடு நான் யுத்தம் செய்வேன். நான் பர்வதம்போன்ற உருவத்துடன் பெரிய இரும்புத்தடியைத் தரித்துக் கூரானகோரைப்பற்களுடன் ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு யுத்தத்திற்குத் தொடங்குகையில் தேவேந்த்ரனுங்கூடப் பயந்து ஓடிப்போகவேண்டுமே. மற்றவரைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? [2]அந்த ராமன் என்மேல் முதலில் ஒரு பாணத்தை

1. ரந்த்ரம்—சந்து.

2. இங்கு 'புநர்மாம் ஸ த்விதீயேந ஶரேண நிஹநிஷ்யதி। ததோऽஹம் தஸ்ய பாஸ்யாமி ருதிரம் காமமாஶ்வஸ' என்பது மூலம். இதில் மற்றொருபொருள் தோற்றுகின்றது. எப்படியெனில்—(புனர்மாம் ஸ த்விதீயேந ஶரேண நிஹநிஷ்யதி) அந்த

எய்து மீளவும் இரண்டாவது பாணத்தைத் தொடுத்து அடிப்பதற்குள்ளாகவே நான் அவனுடைய ரக்தத்தைப் பருகிவிடுவேன். நீ நன்கு நம்பிக்கையுற்றிருப்பாயாக. [1] நான் ராமனைக் கொன்று உனக்கு அநாயாஸமாக வெற்றி விளையும்படி ப்ரயத்னஞ் செய்

---

ராமன் என்னை இரண்டாவது பாணத்தினால் அடிக்கப்போகின்றனன். (தஸ்ய) அந்த ராமனுடைய, (ததஃ) அந்த அடியினால், ராமன் அங்ஙனம் என்னை அடிப்பதனால் (ருதிரம்) என் குருதியை, (பாஸ்யாமி) பருகப்போகிறேன். நீ (காமம்) மிகுதியும், (ஆஶ்வஸ) நெடுமூச்சுவிட்டு வருத்தமுறுவாயாக என்பதே. இங்ஙனம் கோவிந்தராஜர். (புநர்மாம்...ஹநிஷ்யதி) ராமன் என்னை ஒரு பாணத்தினால் அடித்து மற்றொரு பாணத்தினால் அடிப்பானாயின். (ததஃ [ப்ராகேவ]) அதற்கு முன்னமே (தஸ்ய [வாநராணாம்])அந்த ராமனைச் சேர்ந்த வானரர்களின் (ருதிரம் பாஸ்யாமி) ரக்தத்தைப் பானஞ் செய்யப்போகிறேன். (ஆஶ்வஸ) நீ மனக்கவலை தீர்ந்திருப்பாயாக. இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

1 இங்கு 'வதேநவை தாஶரதேஸ்ஸுகாவஹம் ஜயம் தவாஹர்த்துமஹம் யதிஷ்யே। ஹத்வாச ராமம் ஸஹ லக்ஷ்மணேந வாதாமி ஸர்வான் ஹரியூதமுக்யாந்' என்பது மூலம். (வதேந) என் வதத்தினால்-நான் ராமனால் அடியுண்டு வதம் பெறுவதனால், (தாஶரதேஃ) ராமனுக்கு (தவ) உன்னிடத்தினின்று,(ஸுகாவஹம் ஜயம் ஆஹர்த்தும் அஹம் யதிஷ்யே) ஸுகத்தை விளைவிக்கும்படியான ஜயம் உண்டாகும்படி ப்ரயத்னம் செய்கிறேன். நான் சாவதனால் ராமன் உன்னை ஸுகமாக ஜயிக்கும்படி செய்கிறேன் (ராமம்) ராமனை, (ஹத்வா) 'ஹந ஹிம்ஸாகத்யோஃ' என்று கதியைச் சொல்லுமாகையால், அடைந்து என்று பொருள். (வாதாமி) பிழைப்பேனோ? ராமனை எதிர்த்து நான் பிழைக்கமாட்டேனென்று கருத்து. இங்ஙனம் கோவிந்தராஜர். (தாஶரதேர் வதே ஸதி) ராமன் வதம் பெறுகையில், (தவ ஸுகாவஹம் ஜயம் ஆஹர்த்தும் யதிஷ்யே) உனக்கு ஸுகங்கொடுப்பதாகிய ஜயத்தை விளைவிக்க நான் ப்ரயத்னிக்கமாட்டேன். ராமனைக் கொன்று உனக்கு அநாயாஸமாக ஜயம் விளையும்

கிறேன். அங்ஙனம் ராமனையும் லக்ஷ்மணனையும் கொன்று மேலான வானரர்களெல்லோரையும் பக்ஷித்து விடுகிறேன். [1]நீ உன்னிஷ்டப்படி விளையாடலுற்றிருப்பாயாக. மேலான மத்யத்தைப் பருகுவாயாக. நீ தடுமாற்றமின்றி உனக்கிஷ்டமான கார்யங்களைச் செய்து கொள்வாயாக. நான் போய் ராமனை யமபட்டணத்திற்கு அனுப்பிவிடுகிறேன். அனந்தரம் ஸீதை வெகுகாலம் உன்வசத்தில் இருப்பாள்' என்றனன். பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

படி செய்ய வல்லனல்லேன். ராமனைக் கொல்லமுடியாதென்று கருத்து. ஆனல் (ராமம்[விநா]) ராமனைத் தவிர, (லக்ஷ்மணேந ஸஹ ஸர்வாந் ஹரியூதமுக்யாந் ஹத்வா வாக்ஷாமி) லக்ஷ்மணனோடுகூட மற்ற வானரஸ்ரேஷ்டர்களெல்லோரையும் கொன்று பக்ஷித்து விடுகிறேன். ராமனைவெல்ல வல்லனல்லேன். ராமனைத் தவிர மற்றவரெல்லோரையும் பிடித்துப் பக்ஷிப்பேனென்று வாஸ்தவார்த்தம். இங்ஙனம் மஹேஸ்வரதீர்த்தர்.

1. இங்கு 'ரமஸ்வ காமம் பிப சாக்ர்யவாருணீம் குருஷ்வ கார்யாணி ஹிதாநி விஜ்வர:। மயாது ராமே கமிதே யமக்ஷயம் சிராய ஸீதாவஶகா பவிஷ்யதி' என்பது மூலம். (மயா) என்னல் (ராமே) ராமன் விஷயத்தில், (அக்ஷயம்) அழிவில்லாதிருக்குமாறு, (கமிதா) சேர்ப்பிக்கப்பட்டிருக்கிற,(இயம் ஸீதா) இந்த ஸீதை.(வஶகா) அந்த ராமன்வசத்தை அடைந்தவள் (பவிஷ்யதி) ஆவாள். (ரமஸ்வ விஜ்வர:)இங்குக்ரியைகளெல்லாவற்றிலும் காகுஸ்வரங்கொண்டு பொருள் கூறவேண்டும். அதாவது (ரமஸ்வ) ரமிப்பாயா? (பிப) பானஞ்செய்வாயா?என்று. க்ரீடிப்பது முதலியவற்றை நீ எங்ஙனஞ் செய்வாய்? என்றபடி.நான் என்னவோ ஸீதையை ராமனிடஞ் சேர்த்துவிடப் போகிறேன். ஆகையால் அவள் அவன்வசத்திலேயே இருக்கப் போகிருள். அதன் பிறகு நீ க்ரீடிப்பதும் குடிப்பதும் ஹிதகார்யங்களைச் செய்வதும் எப்படியோ பார்க்கிறேன் என்று பொருள். இங்ஙனம் கோவிந்தராஜர்.(மயா) என்னல் (ராமே) ராமன் விஷயமாக (யமக்ஷயம் கமிதே ஸதி) நீ யமபட்டணத்தைச் சேர்ப்பிக்கப்

மஹாபார்ஸ்வன் ஸீதையைப் பலாத்காரஞ்செய்து அநுபவிக்கும்படி ராவணனுக்கு உரைத்தலும், ராவணன் ப்ரஹ்ம சாபத்தினால் பரஸ்த்ரீகளைத் தான்பலாத்காரஞ்செய்யலாகாதென்று உரைத்தலும்.

ராவணன் கும்பகர்ணனது நீதிவசனங்களைக் கேட்டுக் கோபமுற்றிருக்கிறானென்று மிகுதியும் பலசாலியான மஹாபார்ஸ்வன் தெரிந்துகொண்டு சிறிதுநேரம் அவனை மனந்தெளியச்செய்யும் உபாயத்தைச் சிறிது நேரம் ஆலோசித்து உடனே கைகளைக் குவித்து 'எவன் தேன் பருகுவதற்காக ம்ருகங்களும் ஸர்ப்பங்களும் நிறைந்த அடவிக்குச்சென்று எவ்விதத்திலாயினும் அம்மதுவை ஸம்பாதித்துப் பருகாதிருப்பானோ அவன் மூடனே ஆவான். அங்ஙனம் ஸீதையை விரும்பி மிகவும் ப்ரயாஸப்பட்டு அவளைக்கொண்டுவந்தும் அநுபவியாமல் வெறுமனே இருப்பது யுக்தமன்று. சத்ருக்கள் உண்டாயிருக்கையில் அவர்களை வெல்லாமல் அதர்மத்தை விளைப்பதான இப்படிப்பட்ட கார்யத்தை எங்ஙனஞ் செய்யலாம்?' என்கிறாயோ? [1] நீ பகைவரை

---

பட்டவனாகையில், நான் செத்து உன்னையும் ராமனால் கொல்விக்கையில், (த்யம ஸீதா) இந்த ஸீதை (அவஶா) விஷ்ணுரூபனாகிய ராமன் வசத்தை அடைந்தவள் (பவிஷ்யதி) ஆவாள். அதன் பிறகு நீ உன்னிஷ்டப்படி ஹிதாஹிதங்களைச் செய்துகொள். பார்ப்போம்; என்று வாஸ்தவார்த்தம். இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

1. இங்கு 'ஈஶ்வரஸ்யேஶ்வர: கோஸ்தி தவ ஶத்ருநிவர்ஹண ரமஸ்வ ஸஹ வைதேஹ்யா ஶத்ரூநாக்ரம்ய மூர்தஸு' என்பது மூலம். (ஈஶ்வரஸ்ய ஈஶ்வர: கோஸ்தி) ஈஶ்வரனாகிய ராமனுக்கும் ஈஶ்வரனானவன் எவன்? ராமனை நிக்ரஹிக்க எவனுக்கும் ஸாத்யமன்றென்று கருத்து. (ஶத்ரூந்) உன்பகைவனாகிய ராமனை, 'பூஜாயாம்பஹுவசநம்' என்கிறபடியே கௌரவத்தைப்பற்றிப் பன்மை. (மூர்தஸு) பத்துத் தலைகளாலும் (ஆக்ரம்ய) ஆக்ரமித்து, சிரஸா

யெல்லாம் உருமாய்க்கவல்லவன். நீயே ஸர்வத்தையும் நியமிப்பவன். உன்னை நியமிப்பவன் எவன்? ஆகையால் அதர்மத்திற்குப் பயப்படவேண்டாம். சத்ருக்களின் தலையை மிதித்து ஸீதையுடன்கூடி விளையாடலுற்றிருப்பாயாக. 'அவள் என்னை விரும்பமாட்டேனென்கிருளே! என் செய்வேன்' என்கிருயோ? [1]நீ மிகுதியும் பலிஷ்டனல்லவா? ஸீதை விரும்பாதுபோயினும் வஞ்சனையில் புகுந்து அதிக்ரமித்துக் குக்குடவ்ருத்தியில் அப்பெண்மணியைப் பலதடவையும் மேல்விழுந்து பலவந்தமாக அனுபவிப்பாயாக. அங்ஙனம் போகங்களைப் பெற்று விசாரமில்லாமல் ஸுகமாயிருப்பாயாக. 'இதன் நிமித்தமாக மேல்வரும் பயத்தைத் தடுக்காமல் இவ்வண்ணம் எப்படி செய்யலாம்? பின்பு பயம் வரின் எப்படி தடுக்கலாம்?' என்கிருயோ? இங்ஙனம் நீ உன் காமத்தைத்

வணங்கி யென்றபடி. (வைதேஹ்யாஸஹாரமஸ்வ) வைதேஹியோடொக்க ரமிப்பாயாக. வைதேஹி தன்பர்த்தாவோடு ரமிப்பது போல், நீ உன்பார்யைகளோடு ரமிப்பாயாக, அல்லது-(வைதேஹ்யா ஸஹ ஶத்ரூந்மூர்த்ஸு ஆக்ரம்ய' என்று அந்வயம். வைதேஹியோடு கூடின ராமனை பத்துத்தலைகளாலும் நமஸ்கரித்து (ரமஸ்வ) ஸந்தோஷமுற்றிருப்பாயாக. ரமிப்பதாவது ஸந்தோஷிப்பது, விளையாடலுருவது, ஸம்போகிப்பது.

1. இங்கு 'வலாத் குக்குடவ்ருத்தேந வர்த்தஸ்வ ஸுமஹாவல। ஆக்ரம்யாக்ரம்ய ஸீதாம் வை தாம் ஹுங்க்ஷ்வ ரமஷ்வச' என்பது மூலம். (குக்குடவ்ருத்தேந வர்த்தஸ்வ) குக்குடவ்ருத்தியால் இதர ஸ்த்ரீகளிடத்தில் வர்த்திப்பாயாக. ஸீதையையோ, (வலாத்) பலமுள்ளவளவும், ஹுங்க்ஷ்வ ஹுஜ-பாலநாஸீயவஹாரயோ:' என்று ரக்ஷிப்பதும் இந்த புஜதாதுவுக்குப் பொருளாகையால் பாதுகாத்து வருவாயாக என்று பொருள். நீ குக்குடவ்ருத்தியைக் கைப்பற்றி இதர ஸ்த்ரீகளோடு ஸம்போகிக்கலாமன்றி ஸீதையை மாத்ரம் பலமுள்ளவளவும் ரக்ஷிக்கவேண்டுமென்று ரிஷியின் கருத்து. இங்ஙனம் கோவிந்தராஜர்.

நீர்த்துக்கொண்ட பின்பு உனக்கு ஏதேனும் பயம் ஸம்பவிக்குமாயின், அது இப்பொழுதும் வரினும் வருமாக. அல்லது மேல்வருமாயினும் வருமாக. உனக்கு இவையெல்லாம் ஒருபொருளல்ல. நீ எல்லாவற்றையும் பறக்கடித்துவிடுவாய். இவ்வளவென்? நீ இங்கேயே இருப்பாயாக. கும்பகர்ணனும் மஹாபலனாகிய இந்த்ரஜித்தும் ஆகிய இவ்விருவருமே எங்களை ஸஹாயமாக அழைத்துக்கொண்டு, வஜ்ராயுதத்தை ஏந்தித் தேவேந்த்ரன் வரினும் முன்னின்று தடுக்கவல்லவர். யுத்தஞ் செய்யக் கையிலாதவர் ஸாம தான பேதங்களை ஏற்படுத்தினர். ஆகையால் விபீஷணன் சொன்ன அம்மூன்றையுந்தள்ளித் தண்டோபாயத்தினால் கார்யத்தை நிறைவேற்றிக் கொள்வதையே உன்மனத்தில் ஏற்றுக் கொள்வாயாக. நிகும்பன் சொன்னபடி ராமாதிகள் இருக்குமிடத்திற்குப் போகவேண்டாம்; நீ மஹாபலிஷ்டனல்லவா? இந்த அற்பபலர்களைத்தடுக்க உன்னைப் போன்ற மஹாபலிஷ்டர் வேண்டுமோ? இந்த க்ஷுத்ர சத்ருக்களுக்கு மஹாபலிஷ்டனான நீ ஏன் பயப்படுகின்றனை? உன் சத்ருக்கள் இவ்விலங்கையின் அருகாமையில் வந்தவுடனே நாங்கள் அவர்களெல்லோரையும் எமது சஸ்த்ரபலத்தினால் உனக்கு வசப்பட்டிருக்கும்படி நிக்ரஹிக்கவல்லோம். இதற்கு ஸந்தேஹமில்லை' என்றனன். மஹாபார்ஶ்வன் இங்ஙனம் சொல்லுகையில் அப்பொழுது ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் தன் சித்தத்திற்குத் தகுந்தபடி மொழிந்தானென்று மிகுதியும் புகழ்ந்துகொண்டு, அவனைப்பார்த்து, 'மஹாபார்ஶ்வா! உன் வார்த்தைக்கு ஸந்தோஷித்தேன். என்னிடத்தில் ஒரு ரஹஸ்யம் உளது. அது உனக்குத் தெரிந்திருக்கட்டும். அது நடந்து வெகுகாலமாயிற்று.

முன்பு எனக்கு நடந்ததைச் சொல்லுகிறேன். முன்பு ஒருகாலத்தில் ஆகாயத்தில் புஞ்ஜிகஸ்தலை யென்னும் அப்ஸரமடந்தை என்னைப் பார்த்துப் பயந்து ஒதுங்கி யொதுங்கி மறைந்து அக்னிஜ்வாலைபோல் விளக்க முற்று ப்ரஹ்மதேவனது பவனத்திற்கு அத்தேவனை வந்தனஞ்செய்யும்பொருட்டுப் போய்க்கொண்டிருக்கக் கண்டனன். அனந்தரம் நான் அம்மடந்தையர்மணியைப் பலவந்தமாய்ப்பிடித்து வஸ்த்ரத்தை அவிழ்த்து ஸம் போகித்தனன். அவள் வாடிவதங்கின தாமரைக்கொடி போல் கலுங்கி, ப்ரஹ்மதேவனிடம் போயினள். நான் அங்ஙனம் அப்பெண்மணியை அழித்தது அப்பொழுது மஹானுபாவனாகிய ப்ரஹ்மதேவனுக்குத் தெரிந்தாற் போல் எனக்குத் தோற்றுகிறது. அனந்தரம் ப்ரஹ்ம தேவன் மிகுதியும் கோபமுற்று என்னைக்குறித்து 'இது முதலாக நீ இங்ஙனம் பரஸ்த்ரீகளைப் பலவந்தமாகப் புணருவாயாயின், அப்பொழுதே உன் தலை நூறுசுக்க லாகவெடித்துப்போம். இதற்கு ஸந்தேஹமே இல்லை' என்று சாபங்கொடுத்தனன். [1]இங்ஙனம் அந்த ப்ரஹ்ம தேவன் எனக்குச் சாபங் கொடுத்திருக்கையால், அந்தச் சாபத்தினின்று நான் மிகுதியும் பயந்தே, பரஸ்த்ரீ யாகிய ஸீதையை, அதிலும் மஹிமையுடைய விதேஹ

1. ராவணன் தனக்கு ரம்பையைப் பற்றி நலகூபான் கொடுத்த சாபம் இருப்பினும் அந்த நலகூபான் ப்ராக்ருததேவதை யாகையாலும் தனக்குப் புத்ரனாகையாலும் அவனது சாபத்தைப் பாராட்டாமல், பின்பு புஞ்ஜிகஸ்தலையென்னும் அப்ஸரமடந் தையைப் பலவந்தமாகப் பிடித்துப் புணருகையில் ப்ரஹ்மதேவன் கண்டு கோபித்துச் சாபங்கொடுத்தனன். ஆனதுபற்றியே ராவணன் உல்லங்கனஞ் செய்யமுடியாத பிதாமஹவாக்யத்தையே இங்குமொழிந்தானென்று தெரிகின்றது.

வம்சத்திற் பிறந்த வைதேஹியைப் பலவந்தமாக மேலான என்படுக்கையில் ஏற்றிக்கொள்ளாதிருக்கின்றனன். எனக்கு மற்றொருவன் ஸஹாயமாய் வரவேண்டிய அவசியமில்லை. எனக்கு ஸமுத்ர வேகத்தை நிகர்த்த வேகமும், வாயுவோடொத்த கமன சக்தியும் உண்டு. இந்த ஸங்கதி ராமனுக்குத் தெரியாது. ஆனதுபற்றியே என்மேல் ஸேனையுடன் எதிர்த்துவருகின்றனன். பர்வத குஹையில் நித்ரைசெய்கின்ற ஸிம்ஹத்தை நித்ரையினின்று எழுப்புவதுபோலும், உறங்குகின்ற ம்ருத்யுவைக் கண்விழித்துக்கொள்ளச் செய்வதுபோலும், வெறுமனேயிருக்கின்ற பரமகோபிஷ்டனாகிய என்னை ராமன் வேண்டுமென்று கிளப்புகின்றானே! அவன் சிறிதும் விவேகமில்லாதவன். அவன் என் பராக்ரமத்தைத் தெரிந்துகொள்ளவேயில்லை, இருக்கட்டும். ராமன் இதுவரையில் என்றும் யுத்தத்தில் இரண்டுநாக்குகளாலும் உதட்டின் ஓரங்களை நக்குகின்ற க்ரூரஸர்ப்பங்கள்போல் மிரட்டுகின்ற என் கூரிய பாணங்களையுங் கூடக் கண்டறிந்தவனல்லன். ஆனதுபற்றியே, என்மேல் எதிர்த்துவருகின்றனன். இனிச் சீக்ரத்திலேயே, யானையைக் கொள்ளிக்கட்டையால் பயந்தோடச் செய்வதுபோல் ராமனை என் தனுஸ்ஸினின்று நாலுநாலுகத் தொடுக்கப்பட்ட வஜ்ராயுதம் போன்ற பாணங்களால் பரிதபித்துப் பறந்தோடும்படிக்குச் செய்கின்றனன். அவன் போகையில், மற்றும் விடியற்காலத்தில் உதிக்கிற ஸூர்யன் நக்ஷத்ரங்களின் காந்தியையெல்லாங் கொள்ளைகொள்வதுபோல், நான் பெரிய ஸேனையுடன்கூடி ராமனுக்குள்ள அந்த வானர பலத்தையுங் கூட அடித்துப் பிளந்துவிடுகிறேன். ஆயிரங்கண்ணுடைய தேவேந்த்ரனுக்காயினும் மற்ற வருணனுக்காயி

னும் யுத்தத்தில் என்னை ஜயிக்கமுடியாது. மற்றும் நான் என் பாஹுபலத்தினால் குபேரனையுங்கூட ஜயித்து, அவன் முன்பு பரிபாலித்துக்கொண்டிருந்த இவ்விலங்கைமா நகரைப் பிடுங்கிக்கொண்டனன். இனி மனுஷ்யனாகிய ராமன் எவ்வளவன்?' என்றனன். பதின் மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விபீஷணன், ஸ்ரீராமன் எப்படிப்பட்டவர்க்கும் ஜயிக்க முடியாதவனென்றும் ஸீதையை அவனுக்குக் கொடுப்பதே ஸமஸ்த ராக்ஷஸர்களுக்கும் க்ஷேமகரமென்றும் கூறுதல்.

அனந்தரம் விபீஷணன், ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் மொழிந்த வசனத்தையும் கும்பகர்ணன் கர்ஜித்துச் சொன்ன பயனில்லாத வசனங்களையும் கேட்டு, உடனே ராக்ஷஸராஜமுக்யனாகிய ராவணனைப் பார்த்துச் செய்யவேண்டியதை அறிவிக்கிற ஹித வசனங்களைச் சொல்லத் தொடங்கி, 'ராஜனே! ஸீதையைக் கொடாமலே ராமனைக் கொல்லும் உபாயத்தைக் கேட்டனை. ஸீதை என்பவள் அணுகின மாத்ரத்திலேயே மனுஷ்யனை முடிக்கவல்ல பெரும் ஸர்ப்பம். அப்பனே! அதற்கு மார்பே, அகன்ற படம். சிந்தையே, விரோதிகளின் ப்ராணன்களைப் பறிப்பதாகிய விஷம். ஸ்வபாவஸித்தமான அழகிய புன்னகையே, கூரான கோரைகள். சிந்தையினால் வணங்கின முகத்தையேந்துவதும் விரல்களுடையதுமான கையே, ஐந்து தலைகளையுடைய பெரிய உடல். இப்படிப்பட்ட ஸர்ப்பத்தை என்னென்று விரும்பினை? இது உனக்கு மாத்ரமே அனர்த்தம் விளைப்பதன்று; உன்னைச் சேர்ந்தவர் அனைவர்க்

குமே அனர்த்தம விளைப்பதாகும். பர்வத சிகரம் போன்ற உருவமுடையவர்களும் கோரைப்பற்களும் நகங்களுமே ஆயுதமாயிருக்கப் பெற்றவருமான வானரர்கள் லங்கையின்மேல் எதிர்த்துவருவதற்கு முன்னமே ஸீதாதேவியை ராமனுக்குக் கொடுத்து விடுவாயாக. வஜ்ரம்போல் கடோரமாயிருப்பவைகளும் வாயுவேகொத்த வேகமுடையவைகளுமாகிய ராமபாணங்கள் [1]ராக்ஷஸபுங்கவர்களின் தலைகளை அறுத்துக் கொண்டு போவதற்கு முன்னமே ஸீதாதேவியை ராமனுக்குக் கொடுப்பாயாக' என்று மொழிந்து உடனே ப்ரஹஸ்தனைப் பார்த்து, 'ப்ரஹஸ்தனே! ப்ராணன்களைப் போக்குபவைகளும் இடியேயொடொத்த வேகமுடையவைகளுமான கூரான ராமபாணங்கள் இன்னம் உன் தேஹத்தைப் பிளந்துகொண்டு உள்ளே நுழையாவிருக்கின்றன. ஆனதுபற்றியே உன்னை இங்ஙனம் புகழ்ந்து கொள்கின்றனை. 'கும்பகர்ணாதிகள் ராமனைத் தடுப்பார்கள்' என்கிறாயா? கும்பகர்ணனாவது இந்த்ரஜித்தாவது நம் ராஜனாவது மஹாபார்ஶ்வ மஹோதரர்களாவது நிகும்ப கும்பர்களாவது அதிகாயனாவது எவரும் ராமனுக்கு எதிரில் யுத்தத்தில் நிற்கவல்லரல்லர். நீ ஸூர்யனது பாதுகாப்பில் இருப்பினும், தேவதைகள் எல்லோரும் உன்னைக் காக்கவரினும், நீ தேவேந்த்ரனுடைய துடைமேல் குழந்தைபோல் உட்கார்ந்திருப்பினும், ம்ருத்யுவின் மடியில் ஏறியிருப்பினும், ஆகாயத்திற்குக் கிளம்பினும், பாதாளத்திற் புகினும், நீ ப்ராணன்களோடிருக்கும் வரையில் உன்னை ராமன் விடமாட்டான்; கொன்றே தீருவான்' என்றனன். விபீஷணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, உடனே

1. ராக்ஷஸபுங்கவர்-சிறந்த ராக்ஷஸர்.

ப்ரஹஸ்தன் 'எங்களுக்குத் தேவதைகளாலாவது தானவர்களாலாவது மற்ற எவராலாவது பயம் கிடையாது. யக்ஷர்களாலாவது கந்தர்வர்களாலாவது மஹோரகர்களாலாவது கருடனாலாவது யுத்தத்தில் எமக்கு எள்ளளவும் பயம் இல்லை. இனி யுத்தத்தில் ஒருகால் ஒரு [1]நரேந்த்ரபுத்ரனாகிய ராமனிடத்தினின்று எப்படி பயம் நேரும்?' என்றனன். விபீஷணன் மஹாபுத்தியுடையவன்; ராஜனது மேன்மையில் கண்வைத்தவன்; ப்ரபுவின் தர்ம அர்த்த காமங்கள் மூன்றையும் நன்கு ஆலோசிப்பவன்; ஆகையால் ப்ரஹஸ்தன் மன்னவனுக்குக் கெடுதியை விளைக்கும்படியான வசனங்களைச் சொல்லக்கேட்டு, அவனைப் பார்த்து 'ப்ரஹஸ்தா! நீயும் நமது மன்னவனும் மஹோதரனும் கும்பகர்ணனும் ராமன் விஷயமாக எந்தெந்த கார்யங்களை எவ்வெவ்விதஞ் செய்யவேண்டுமென்று சொன்னீர்களோ; அவையெல்லாம் அவன் விஷயத்தில் அவ்வப்படி செய்து நிறைவேற்றுவது, அதர்மிஷ்டனுக்கு ஸ்வர்க்கம்போல், எள்ளளவும் ஸாத்யமன்று. ப்ரஹஸ்தா! தெப்பக்கட்டையாயினுமில்லாதவனுக்கு மஹாஸமுத்ரத்தைத் தாண்ட முடியுமா? அப்படியே எனக்காவது உனக்காவது ராக்ஷஸர்கள் அனைவர்க்குமாவது கார்யங்களில் ஸமர்த்தனாகிய ராமனை வதிக்க எங்ஙனம் ஸாத்யமாகும்? எவ்விதத்திலும் ஸாத்யமன்று. ஆகையால் அவர்கள் வதிக்கத் தகுந்தவரென்னும் புத்தியைத் துறப்பாயாக. ராமனோ, தர்மத்திற்கு விருத்தமான எப்படிப்பட்ட புருஷார்த்தத்தையாயினும் பொருள்செய்யாமல் தர்மத்தையே முக்கியமாகவுடைய தார்மிகன்; யுத்தத்

---

1. நரேந்த்ரபுத்ரன்-மனுஷ்யர்களுக்குத் தலைவனான அரசனுடைய குமாரன்.

தில் தன்னையும் ஸாரதியையும் ரக்ஷித்துக்கொண்டே பகைவரை முடிக்கும்படியான மஹாரதன்; இக்ஷ்வாகு வம்சத்திற்பிறந்தவனுகையால் ஜன்மஸித்தமான மஹா பராக்ரமமுடையவன்; ராஜ்யத்திலுள்ளவர் அனைவரும் ஸந்தோஷப்படுத்தும்படியான ராஜத்தன்மை அமைந்த வன்; மற்றும், விராதன் கபந்தன் முதலியவர்களை அங்ஙனங்கொன்று ப்ரஸித்திபெற்றவன். கார்யங்களில் ஸமர்த்தன்; அப்படிப்பட்ட ராமனுடைய யுத்தச் செயல்களைத் தேவதைகளும் அறியவல்லரல்லர். இனி உன்னைப் போன்றவர் எவ்வளவர்? ப்ரஹஸ்தா! கூரிய நுனியையுடையவைகளும் விரைவாகப் பறந்துபோய்ப் பிளக்க வல்லவைகளும் கணுக்கள் வணங்கி நேரா யிருக்கையால் அந்த க்ஷணமே பிளந்துகொண்டு வெளி வரத்தக்கவைகளும் கழுகின் இறகுகள் கட்டப்பெற் றிருக்கையால் மிகுந்த வேகமுடையவையாகி அணுக முடியாதவைகளும் ராமனுல் ப்ரயோகிக்கப்பட்டவை களுமான பாணங்கள் உன் தேஹத்தைப் பிளந்து கொண்டு உள்ளே நுழையப்போகின்றன; ஆனது பற்றியே நீ உன்னைப் புகழ்ந்து கொள்கின்றனை. (நீ சீக்ரத்தில் ராமபாணங்களால் அடியுண்டு சாகப்போகிற வனுகையால் உனக்கு இவ்வித மதிமயக்கம் உண்டா யிருக்கின்றது. விநாசகாலத்தில் விபரீதபுத்தி உண்டா மல்லவா!) ராவணனுவது மஹாபலனுகிய த்ரிசிர்ஷனுவது கும்பகர்ணனுவது அவன் பிள்ளை நிகும்பனுவது இந்த்ர ஜித்தாவது நீயாவது நீங்கள் எவரும் தேவேந்த்ரனை நிகர்த்த ராமனை எதிர்த்து யுத்தத்தில் நிற்கவல்லரல்லர். தேவாந்தகனுவது நராந்தகனுவது மஹாசரீரமுடைய வனும் அதிரதனுமாகிய அதிகாயனுவது பர்வதத்தை நிகர்த்த வலிமையுடைய அகம்பனனுவது யுத்தத்தில்



2532. ராவணன் விபீஷணாதிகளுடன் மந்த்ராலோசனை செய்தல்.

ராமனை எதிர்த்து நிற்கவல்லரல்லர்; 'இவன் நமக்கு மன்னவன்; மற்றும் ஆலோசித்துச் செய்பவனல்லன்; அன்றியும், காமம் க்ரோதம் முதலிய எழு வ்யஸனங்களால் மனநிலைமை தப்பியிருப்பவன்' என்று நினைத்து ஹிதஞ்செய்ய வேண்டியிருக்க, அங்ஙனம் செய்யாமல் நீங்கள் நண்பர்களென்னும் பேர்பூண்டு கார்யத்தில் சத்ருக்களை நிகர்த்தவரேயாகி அவனுடைய உக்ர ஸ்வபாவத்தை மாத்ரமே நினைத்து, அவன் போன வழியே போகிறீர்கள். அதனால் ராக்ஷஸர்களனைவர்க்கும் நாசத்தையே வரவழைக்கப் போகிறீர்களேயன்றி வேறில்லை. இதை நீங்கள் அறியீர்கள். ராக்ஷஸ ராஜனாகிய ராவணனை, முடிவில்லாமல் மிகவும் பெரிய உடலுடையதும் ஆயிரந்தலையுடையதும் பயத்தை விளைவிப்பதும் மஹாபலிஷ்டமுமாகிய ராமத்வேஷமென்னும் மஹாஸர்ப்பம் சுற்றிக்கொண்டிருக்கின்றது. நீங்கள் அந்த ஸர்ப்பத்தினின்று இவனை இழுத்து விடுவிப்பீர்களாக. 'ஸமயம் விஞ்சிப்போயிற்றே; என்னசெய்வோம்' என்கிறீர்களோ? அரசன் துன்மார்க்கத்தில் போவானாயின், அவனால் தமது விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்ற நண்பர்களனைவரும் ஒருமிடலாகி அவனைப் பயங்கரமான பலமுடைய பூதங்களால் பிடியுண்ட புருஷனைப்போல் பலாத்காரமாகத் தலைமயிர்களைப் பிடித்து இழுத்தாயினும், சத்ருக்கள் அவன் தலைமயிர்களைப் பிடித்துக்கொள்ளும் வரையில் பலவந்தமாக ரக்ஷித்து நல்வழிக்குக் கொண்டு வரவேண்டும். உங்களுக்கு ஸகல ஸுகங்களையும் விளைவிக்கிற இம்மன்னவன் இப்பொழுது விநாசம் பெறுவதற்காக லக்ஷ்மணனென்னும் [1] மஹாஸம்ஹாரியான ஸமுத்ரத்

---

1 நன்கு நாசஞ்செய்வதான.

தில் மூழ்கி ராமனென்னும் படபாக்னியின் முகத்தில் விழப்போகின்றனன். ஆகையால் நீங்களெல்லோரும் முந்துற முன்னம் ஒன்றுசேர்ந்து அவனைக் கைகொடுத்துக்கறையேற்ற வேண்டும். ராஜன் ஸீதையை ராமனுக்குக்கொடாதிருப்பின் இருக்கட்டும். நான் சொல்லுகிற இவ்வார்த்தையைக் கேளுங்கள். இது இந்த லங்காபுரத்திற்கும் ராஜனுக்கும் அவனது நண்பர்களாகிய உங்களெல்லோர்க்கும் மற்ற ராக்ஷஸர்களுக்கும் ஹிதத்தை விளைப்பதும் அழகியதுமாயிருப்பது. அதனால் என்னுடைய அபிப்ராயம் உங்களுக்கு நன்கு வெளியாகும். ராஜகுமாரனாகிய ராமனுக்கு அவன் பார்யையாகிய ஸீதையை, ராஜன் ஸம்மதியை எதிர்பாராமல், நாமாகக் கொடுத்துவிடுவோம். இதுவே நான் சொல்லுகிற வார்த்தை. 'நாங்களும் சத்ருக்களைக் கொல்லவேண்டும்' என்று நன்றாகவே யன்றோ சொல்லுகிறோம் என்கிறீர்களோ? மந்த்ரியாயிருப்பவன் சத்ருராஜாக்களின் பலத்தையும் தன் ராஜனுக்குள்ள பலத்தையும் நன்கு விசாரித்துக்கொண்டு அங்ஙனமே தன் பக்ஷத்திலுள்ள [1] ஸாம்யத்தையும்

---

1. ஸாம்யமாவது தாழ்வும் மேன்மையுமில்லாமல் நடுத்தரமாயிருத்தல் வ்ருத்தி-மேன்மை. க்ஷயம் தாழ்வும், அழிவும். பிறனுக்கு க்ஷயமும் தனக்கு வ்ருத்தியுமாயிருக்கும்பொழுது யானத்தையும், பிறனுக்கு வ்ருத்தியும் தனக்கு க்ஷயமுமாயிருக்கும்பொழுது ஸந்தியையும், பிறனுக்கும் தனக்கும் வ்ருத்திக்ஷயங்கள் ஒன்றாயிருக்கும் பொழுது ஆஸனத்தையும் மந்த்ரியாயிருப்பவன்ப்ரபுவுக்குச்சொல்லவேண்டுமென்று கருத்து. இங்கு ப்ரக்ருதத்தில் சத்ருவாகிய ராமனுக்கு வ்ருத்தியும் ராவணனுக்கு லங்காதஹனம் அக்ஷகுமாரநாசம் முதலியவற்றால் க்ஷயமும் உண்டாயிருக்கையால் ஸீதையைக் கொடுத்து ஸந்தி செய்துகொள்வதே நலமென்று மந்த்ரிகளாகிய நீங்கள் உமது ப்ரபுவுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று கருத்து.

வ்ருத்திக்ஷயங்களையும் ஸூக்ஷ்ம த்ருஷ்டியுடன் ஆலோசித்து யுக்தமாயிருப்பதையும் ப்ரபுவுக்கு ஹிதமாயிருப்பதையும் அவனுக்குச் சொல்ல வேண்டும்' என்றனன். பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்த்ரஜித்து விபீஷணனுடைய மதத்தைக் கண்டிக்கையில் விபீஷணன் அவனுடைய துர்ப்புத்தியைச் சொல்லி தூஷித்தல்.

அங்குள்ள ராக்ஷஸயோதர்களில் முக்யனும் மஹாபலனுமாகிய இந்த்ரஜித்து ப்ருஹஸ்பதியைப் போல் மிகுந்த மதியுடைய விபீஷணன் சொன்ன அவ்வார்த்தைகளை மனவருத்தத்துடன் கேட்டு, அனந்தரம் அவனைப் பார்த்து. 'சிற்றப்பனே! நீ கடைசியில் மொழிந்தனையே, அவ்வாறு எவரும் நடக்கப் போகிறதில்லையாகையால் அது பயனற்றது; நீ மிகுதியும் பயந்து மொழிந்தது. சீ! இதெவ்விடத்து வார்த்தை? இந்தப் புலஸ்த்ய வம்சத்தில் பிறக்காமல் மற்றொரு வம்சத்திற் பிறந்தவனுங்கூட இப்படிப்பட்ட வார்த்தை மொழியானே. இனிச் செய்ய நினைப்பனோ? இனி 'இந்த வம்சத்திற் பிறந்த நீ இங்ஙனம் உரைக்கத் தகுமா?' என்று மொழிந்து, உடனே ராவணனைப் பார்த்து, 'இந்த வம்சத்தில் எமது சிற்றப்பனாகிய இவ்விபீஷணனொருவன் மாத்ரமே பலமும் ப்ரபாவமும் முயற்சியும் ஸாஹஸத்தன்மையும் மன உறுதியும் கர்வமும் அற்றிருப்பவன். ஆகையால் இவன் சொன்ன

---

யானமாவது சத்ருவின்மேல் படையெடுத்துப் போதல். ஸந்தியாவது அவனோடு ஒத்துப்போதல். ஆஸனமாவது வெறுமனே இருத்தல்.

வார்த்தை இவன் ஸ்வபாவத்திற்குத் தகுந்ததே' என்றனன். மீளவும், அவன் விபீஷணனைப் பார்த்து 'ஓ ராக்ஷஸா! அந்த ராஜகுமாரர்கள் எவ்வளவர்? ஒரு பொருளோ? வெகு துர்ப்பலரல்லவா? எம்மில் மிகவும் துர்ப்பலனான ஒரு ராக்ஷஸன்கூட அவர்களைக் கொன்றுவிடவல்லன். பயப்படுந்தன்மையனே! நீ பயப்படுவது மாத்ரமேயன்றி எங்களையும் ஏன் வீணுக்குப் பயப்படுத்துகிறாய். அடே! இந்த்ரன் மூன்று லோகங்களுக்கும் நாதனாகையால் அவனது ஐஸ்வர்யத்தைச் சொல்லவேண்டிய அவஸ்யமில்லை; தேவதைகளனைவர்க்கும் மன்னவன்; ஆகையால் அவனுடைய ஸைன்ய ஸாமக்ரியும் கேவலமன்று. அப்படிப்பட்ட இந்த்ரனையும் நான் பூமியில் விழத்தள்ளினேன். மற்றும் தேவதைகளெல்லோரும் எனக்குப் பயந்து வருந்திக் கூட்டங் கூட்டமாகி ஒருவனும் மிகாமல் திசைகளைப் பற்றி ஓடிப்போயினர். ஐராவதம் என்றால் தள்ளுண்டு விகாரமான சப்தத்துடன் உரக்க விறிட்டுக்கொண்டு தரையில் விழ்ந்தது. நான் அதனுடைய தந்தங்களிரண்டையும் பிடுங்கித் தேவக்கூட்டங்களை யெல்லாம் மிகுதியும் பயப்படுத்தி ஓடத்துரத்தினன். மற்றும், நான் அஸுரஸ்ரேஷ்டர்களுக்கும் பலவாறு சோகத்தைக் கொடுப்பவன். அப்படிப்பட்ட நான் தேவதைகளின் கொழுப்பையுங்கூடப் பறக்கடித்தனன். இப்படிப்பட்ட மஹாவீர்யசாலியாகிய நான் தேவாதிகளல்லாமல் கேவல மனுஷ்யர்களேயாகி இந்த்ரன்போல் மிகுந்த வலிமையுடையவருமல்லாமல் ஸாமான்யருமாகிய அந்த ராஜபுத்ரர்களை வெல்ல எங்ஙனம் வல்லனாகமாட்டேன்? வெறுமனே ஏன் பயப்படுத்துகின்றனை?' என்றனன். அனந்தரம் இந்த்ரனைப் போன்றவனும் பகைவர்க்கு

அணுகமுடியாதவனும் மஹா தேஜஸ்வியுமாகிய இந்த்ரஜித்து மொழிந்த வார்த்தையைக் கேட்டு, அவன் சொன்னபடி பயந்தவனல்லாமல் ஆயுதம் பிடித்தவர்களனைவரிலும் தலைமையுள்ள விபீஷணன், இந்த்ரஜித்துக்கும் அறியமுடியாத பெரும் பொருளடங்கின வசனத்தை அவனுக்கு மொழியத்தொடங்கி 'அடா என்னப்பனே! நீ நேற்றுப் பிறந்தவன். உனக்கு ஆலோசனை செய்து 'இது நல்லது' என்று நிச்சயிக்கும்படியான சக்தி கிடையாது. அறியாத இளைஞன். இன்றும் உன் புத்தி பரிபக்வமாகவில்லை (நன்மை தீமைகளை நன்கறியுந்திறமை உனக்கு இன்றும் உண்டாகவில்லை.) ஆனதுபற்றியே நீ உனக்கே விநாசம் விளைவதற்காகப் பயனற்ற பேச்சுக்கள் பலவற்றையும் இங்ஙனம் பிதற்றலாயினை. அடே இந்த்ரஜித்து! இந்த ராவணனுக்கு ராமனால் புத்ரமித்ராதிகளுடன் விநாசம் ஸம்பவிக்குமென்று நான் சொல்லக்கேட்டும் அறிவின்மையால்[1] அதற்கு ஸம்மதிக்கின்றனையே! ஆகையால் நீ ராவணனுக்குப் பிள்ளையென்னும் பேர்கொண்டு மித்ரன்போல் வெளிக்குத் தோற்றுஞ் சத்ருவேயாகின்றனை. இங்ஙனம் தந்தையின் விநாசத்திற்கு ஸம்மதித்தமையால் அதிதுர்ப்புத்தியென்று உன்னை வதிக்க வேண்டும்; வதிக்காமல் வெறுமனே விடலாகாது; உன்னை மாத்ரம் வதித்தால் போதுமோ? உன்னை அறியாத இளைஞனென்றும், வெறும் வலிமை மாத்ரமேயுடையவனென்றும் மஹாஸாஹஸிகனென்றும் தெரிந்து இந்த ஸபையில் இப்பொழுது ஆலோசனை செய்பவர்களினருகில் உன்னை அழைத்துக்கொண்டு வந்து நுழையச் செய்தவனையும் வதிக்கவேண்டும். அடா

---

1 அந்த விநாசத்திற்கு.

இந்த்ரஜித்து! நீ நன்மை தீமைகளை அறியும் விவேக மில்லாதவன்; எல்லாந் தெரியுமென்ற கர்வம் மாத்ரம் ஓயாதிருக்கப் பெற்றவன்; பெரியோர்களிடம் ஸஹவாஸஞ்செய்து கற்பிக்கப்பட்டவனல்லை; கொடுந் தன்மையுடையவன். உன் புத்தி அற்பமாயிருப்பது; உன் மனமும் தோஷமுற்றது; எதையும் ஆலோசித்துச் செய்பவனல்லை. ப்ரஹஸ்தன் துர்ப்புத்தியுடையவன்; மஹாபார்ஸ்வன் மிகுதியும் துர்ப்புத்தியுடையவன்; நீயோ இவ்வளவு அவ்வளவென்று சொல்ல முடியாத பெருந்துர்ப்புத்தியுடையவன்; இப்படிப்பட்ட இளந் தன்மையால் எதுந்தெரியாமல் பிதற்றுகின்றனை. ப்ரஹ்மதண்டம்போல் ப்ரகாசிப்பவைகளும் ஜ்வாலைகள் அடர்ந்திருக்கப்பெற்றவைகளும் அந்தகனைப்போல் பயங்கரமான உருவமுடையவைகளும் யமதண்டம்போல் [1] உத்தண்டமா யிருப்பவைகளுமான பாணங்களை ராமன் யுத்தத்தில் ப்ரத்யக்ஷமாக ப்ரயோகிக்கையில் எவன்தான் ஸஹிக்க வல்லவன்?' என்றுரைத்து, உடனே ராவணனைப் பார்த்து 'ராஜனே! தனங்களையும் சிறந்த பதார்த்தங்களையும் பூஷணங்களையும் திவ்யமான வஸ்த்ரங்களையும் நானுவித ரத்னங்களையும் ஸீதாதேவி யுடன் ராமனுக்கு ஸமர்ப்பித்து, நாம் இங்கு வ்ருத்தத் தைத்துறந்து ஸுகமாயிருப்போம்' என்றனன்.

பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1. உத்தண்டம்-பயங்கரம்.

{ராவணன் விபீஷணனை அவமானஞ் செய்கையில் அவன் நான்கு மந்த்ரிகளுடன் விடைபெற்றுக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பியீளவும் ஹிதோபதேசஞ்செய்தல்.}

[1] அங்ஙனம் மனத்தில் நன்கு பொருந்தும்படி தெளிவான ஹிதவசனங்களைச் சொன்ன விபீஷணனைப்

1. இங்கு 'ஸுநிவிஷ்டம் ஹிதம் வாக்யமுக்தவந்தம் விபீஷணம்। அப்ரவீத் பருஷம் வாக்யம் ராவண: காலசோதித:' என்று மூலம். (ஸுநிவிஷ்டம்) அர்த்தம் தெரியாதிருப்பினும் கேட்டமாத்ரத்திலேயே மிகுதியும் ப்ரீதியை விளைவிப்பதாகி அழகான ஸந்நிவேசமுடைய வார்த்தையை. அதாவது-அர்த்தம் அந்விஷ்டமாயிருப்பினும் கேளாதிருக்க முடியாதென்றபடி. (ஸுநிவிஷ்டம்) இதைக் கீழ்வாக்யத்தோடு சேர்த்துப் பொருள் கூறினோம். இதை (உக்தவந்தம்) என்பதோடுஞ் சேர்த்துப் பொருள் கூறலாம் அப்பொழுது வார்த்தை அழகியதாயினும் மனத்தில் படாது போமாயின் அநாதரணீயமேயாகும். ஆகையால் மனத்தில் நன்கு பொருந்துமாறு மொழிந்தானென்று பொருள். (ஹிதம்) கேவலம் காதுக்கினிதாயிருக்கை மாத்ரமேயன்றி, மிகுந்த துர்த்தசையினின்றும் தாண்டுவிக்கும் உபாயமாயிருக்கையால் பத்யமுமாயிருப்பது. இது ஹிதமாயிருப்பதை ஆலோசித்தால் செவிக்குக் கடுவாயிருப்பினும் விடக்கூடாதது. இப்படிப்பட்ட வார்த்தை ஒருவனுக்குப் பொறுக்க முடியாதிருப்பதே! (வாக்யம்) சொல்லவேண்டிய ஹிதமெல்லாம் பரிபூர்ணமாயிருக்கப்பெற்றது. வாக்யமாவது ப்ரிபூர்ணமாகப் பொருளைக் கூறுவதல்லவா? இப்படிப்பட்ட வாக்யத்தை (உக்தவந்தம்) சொன்னவனை 'நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரப்ரூயாத்' என்றபடியே குருவினிடஞ் சென்று ஸ்ரீ பாதங்களில் விழுந்து ஸம்வத்ஸரத்திற்குக் குறையாமல் சுஶ்ரூஷை செய்து பரீக்ஷிக்கப்பட்டவனுக்குச் சொல்லவேண்டிய வார்த்தையை, இவனுடைய துர்க்கதியைப் பார்த்துத் தானே மொழிந்த மஹானுபாவனாகிய, (விபீஷணம்) தூரஸ்த்தனான மற்றொருவன் சொன்ன வார்த்தையாயின் அது வாஸ்தவமோ அன்றோ என்று சங்கித்துவிடக்கூடும். நேரே தம்பியாகிய ஸமீபஸ்த்தன்சொன்ன வார்த்தையைஎங்ஙனம்விடக்கூடும்?

பார்த்து ராவணன் அத்தகைய ஹிதவசனஞ் சொன்ன தற்கு அவனைப் புகழ்ந்து தான் அனுதாபப்பட வேண்டியவனாயிருந்தும், ம்ருத்யுவினால் தூண்டப்பட் டிருப்பது பற்றிப் பருஷ வசனங்களால் சத்ருவைப் போல் தூஷிப்பவனாகி அவனைப் பார்த்து, 'வெளிப் படையாகத் தெரியும் சத்ருவோடாவது மிகுதியும் கோபமுடைய கொடிய ஸர்ப்பத்தோடாவது ஸஹவாஸஞ் செய்யலாமன்றி மித்ரன்போல் புலப் பட்டுச் சத்ருவினிடம் பக்ஷபாதமுடைய ஸஹஜசத்ரு வோடு மாத்ரம் எப்பொழுதும் ஸஹவாஸஞ் செய்ய லாகாது. ராக்ஷஸா! ஸமஸ்த லோகங்களிலும் ஜ்ஞா திகளின் ஸ்வபாவம் எனக்குத் தெரியும். இந்தஜ்ஞா திகள் தமது ஜ்ஞாதிகளுக்கு வ்யஸனங்கள் நேரும் பொழுதெல்லாம் ஸந்தோஷமுற்றிருப்பார்கள். ஆகை

---

(பருஷம் வாக்யமப்ரவீத்) இப்படிப்பட்ட வார்த்தையைக் கேட்ட வுடனே'என் ஸந்தேஹமெல்லாம் தீரப்பெற்றேன்' என்று சொல்ல வேண்டும். அல்லது 'நீ பெரிய உபகாரஞ்செய்தனை'என்றாவது புகழ வேண்டும். அல்லது 'இப்படிப்பட்ட வார்த்தை சொன்னதற்குத் தகுந்த ப்ரத்யுபகாரஞ் செய்தற்கு இல்லையே' என்று அனுதாபமா வது படவேண்டும். இவை யெல்லாவற்றையும் விட்டுப் பகைவ னைப் பார்த்துச சொல்லவேண்டிய வார்த்தையைச் சொலலினன். (வாக்யம்) அவன் சொல்லவேண்டிய ஹிதங்களை யெல்லாம பரி பூர்ணமாகச் சொன்னாற்போல்,இவனும் பருஷவசனங்களில் இனிச சொல்லவேண்டியதில்லை என்னும்படி சொல்லினன். அவன் ஹிதஞ் சொலலும்பொழுது ஸுஸ்லிஷ்டமாச் சொன்னாற்போல், இவனும் மனம் புண்படும்படி ஸுவ்யக்தமாகப் பருஷ வசனங்களைப் பேசினான். இங்ஙனம் இவன் மறுமொழி கூறினதற்கு ஹேது என் னெனில்—(ராவண:) 'ராவயதி ரோதயதீதி ராவண: (அழப் படுத்துபவனாகையால் ராவணன்.) என்று பரஹிம்ஸை செய்வதில் ஜகத்ப்ரஸித்தன்.அல்லது 'ரௌதீதி ரவண:-ஸஏவ ராவண:' அழு

யால் ஜ்ஞாதியாகிய நீ என் வ்யஸனத்திற்கு ஸந்தோஷம் அடைந்து இங்ஙனம் கர்ஜிக்கின்றனே. ராக்ஷஸா! ஜ்ஞாதிகள் தமது ஜாதியில் மேன்மையுற்றவனையும் கார்யஸாதகனையும் அறிஞனாயிருப்பவனையும் தர்மஸ்வபாவனையும் சூரனையும் பெரிதாக நினைக்கமாட்டார்கள்; ஸமயம் பார்த்து அவமதிப்பார்கள். அவர்க்கு ஜ்ஞாதிகளின் வ்யஸனத்தில் ஸந்தோஷமும் அவரது மேன்மையில் அஸூயையையும் உண்டாகப் பெற்றிருக்கை மாத்ரமேயன்றி மற்றொரு ஸ்வபாவம் இல்லை. அவர்கள் தமது அபிப்ராயங்களை வெளிக்காட்டாமல் மறைவாகவே வைத்துக்கொண்டு வெளியில் ஒருவர்க்கொருவர் ஸ்நேஹமுள்ளவர்போலவே அபிநயித்துக் கொடிய கார்யங்களைச் செய்துகொண்டிருப்பார்களாகையால், வ்யஸனங்கள் உண்டாகும்பொழுது த்ரோஹஞ் செய்வார்கள். ஆகையால் அவர்கள் மூலமாய்த் தப்பாமல் பயம் விளையும். ஆனதுபற்றி நீ எமது வ்யஸனங்களில் எம்மையடிக்கப் பார்த்துக்கொண்டிருக்கின்றனே. ஒரு காலத்தில் பத்மவனமென்னும் ஓர் அரண்யத்தில் யானைகள் தம்மைப் பிடிக்கும் பொருட்டுக் கயிறுகளைக் கொண்டுவந்தவர்

---

பவனென்று பொருள். கைலாஸத்தை அசக்குதல், வாலியோடு யுத்தஞ்செய்தல் முதலாகத் தகாத இடங்களில் கால்வைத்து வருந்தித் தானும் ஆக்ரந்தனஞ் செய்பவனென்று கருத்து. இதனால்—தனக்கும் பிறர்க்கும் ஹிதமறியாத வக்ரஸ்வபாவனென்றமை தோற்றுகிறது. (காலசோதித:) ப்ராதாவான விபீஷணன் ராமனைச் சரணம் புகுவாயென்னில் காலன் 'அது வேண்டாம். என்வழியே வருவாயாக' என்றான். ப்ராதா மொழிந்த வார்த்தையை, 'த்விதா பஜ்யேயமப்யேவம் நநமேயம்' (இங்ஙனம் இருபிளவாக முறிந்துபோயினும் போவேனன்றி ராமனுக்கு வணங்கமாட்டேன்) என்று சொல்லிக் கேளாமல் தன் ஸ்வபாவத்திற்குத் தகுந்தபடி காலனது வழியையே தொடர்ந்துசென்றானென்று கருத்து.

களும் தமக்கு ஜ்ஞாதிகளான யானைகளை வைத்துக் காப்பவருமான சில புருஷர்களைப் பார்த்துச் சில ஶ்லோகங்களைப் பாடினவென்று கேள்வியுண்டு. அவைகளைச் சொல்லுகிறேன், கேள். 'எமக்கு நெருப்பினால் பயம் இல்லை. அக்னியைக் காட்டிலும் நொடிப்பொழுதில் நாசஞ் செய்யவல்ல மற்ற ஆயுதங்களாலும் பயமில்லை. மரணத்தைக் காட்டிலும் மிகுதியும் பொறுக்க முடியாத பாரதீனத்தை உண்டாக்கிப் பாதைப்படுத்தும் பாசங்களாலும் (கயிறுகளாலும்) பயமில்லை. ஆனால் தயையின்றித் தம் கார்யத்தையே பார்த்துக்கொண்டு நம்மைப் பிடித்துக் கொடுப்பவைகளும் புருஷர்களிடமிருப்பவைகளுமான நம் ஜ்ஞாதி யானைகளாலேயே நமக்குப்பயம் நேரிடுகின்றது! எப்படியென்னில்—இந்த நம் ஜ்ஞாதிகளே இவர்க்கு நம்மைப் பிடிக்கும் உபாயத்தை அறிவிப்பவை. இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. அக்னி முதலிய மற்றவையெல்லாவற்றினின்று விளையும் பயத்தைக் காட்டிலும் ஜ்ஞாதிகளாலுண்டாகும் பயமே மிகுதியும் மேலான பயம். இது நமக்குத் தெரிந்திருக்கின்றது. 'ஜ்ஞாதிகள் ஸ்நேஹமுடையவர்களே. அவரிடத்தினின்று பயம் எப்படி' என்னலாகாது. பசுக்களிடத்தில் ஸம்பத்திருக்கின்றது. ப்ராஹ்மணரிடத்தில் இந்த்ரியங்களை அடக்குந் திறமை இருக்கின்றது. ஸ்த்ரீகளிடத்தில் சாபலம் இருக்கின்றது. அங்ஙனமே ஜ்ஞாதிகளால் அவஶ்யம் பயம் இருக்கின்றது' [1] என்னும் ஶ்லோகங்களைப் படித்தனவாம். விபீஷணா! நீ நல்லியற்கையுடையவனே. ஆயினும் ஜ்ஞாதியாகையால் நான் இங்ஙனம் லோகங்களால் பூஜிக்கப்பட்டவனாகி மிகுந்த ஐஶ்வர்யம் பெற்று ஜ்ஞாதிகளுக்கெல்லாம்

1. என்னும் பொருளடங்கிய ஜலஶ்லோகங்களை.

தலைமேலிருப்பது உனக்குப் பொறுக்க முடியவில்லை. 'வெகுகாலம் கூடவே இருந்த விபீஷணன் அங்ஙனம் செய்வானு' என்கிறீர்களோ? தாமரையிலையில் படிந்த ஜலத்துளிகள் அதில் பற்றற்றிருப்பதுபோல், துஷ்டர்கள் எத்தனை காலம் ஸஹவாஸஞ் செய்யினும் ஸ்நேஹம் உண்டாகப் பெறமாட்டார்கள். 'உன்னையே அடுத்துப் பிழைப்பவனுக்கு உன்னிடத்தில் ஸ்நேஹம் உண்டாகாதிருக்குமா' என்கிறாயோ? வண்டு, புஷ்பங்களிலுள்ள தேனை மிகுந்த ஆசையுடன் பருகிப் பிறகு அந்தப் புஷ்பங்களில் தேன் கொடுத்த உபகாரத்தை நினைத்துச் சிறிதும் நிற்கமாட்டாதல்லவா? அப்படியே துஷ்டர்களுக்குத் தம்மைப் போஷித்தவரிடத்திலும் நல்லமனம் உண்டாகாது. அவ்வண்ணமே நீயும் என்னுல் ஸகல ஸுகங்களையும் அநுபவித்தும், என்னிடத்தில் ஸ்நேஹம் இல்லாமையால் என் மேன்மையை விரும்பாதிருக்கின்றனை. 'ஆயினும் செய்த ஸ்னேஹத்தை எங்ஙனம் இல்லை செய்வது?' என்கிறாயோ, யானை முதலில் நன்கு ஸ்நானஞ் செய்து உடனே தன் துதிக்கையாலேயே தூசியை எடுத்துத் தன் தேஹத்தை அழுக்காக்கிக் கொள்ளுகின்றதல்லவா? அப்படியே துஷ்டர்கள் முதலில் செய்த ஸ்னேஹத்தையும் பின்பு தாமே கெடுத்துக்கொள்வார்கள். மற்றும், சரத்ருதுவில் மேகங்கள் கர்ஜனஞ் செய்து மழை பெய்யினும் பூமி நனையாதாற்போல், துஷ்டர்கள் எவ்வளவு ஸ்நேஹஞ் செய்யினும், அந்த ஸ்னேஹம் பயன்படாது. ராக்ஷஸா! நீ தவிர மற்றொருவன் இப்படிப்பட்ட வசனங்களைப் பேசுவானுயின், அவன் இந்த க்ஷணத்திலேயே ப்ராணன்களோடிருக்க மாட்டான். நீ குலத்தைக் கெடுக்கப் பிறந்தவன். சீ! அப்புறம் போவாய்'என்றனன்.

விபீஷணன் ந்யாயத்தையே எடுத்துரைப்பினும் இங்ஙனம் தன் அண்ணன் பருஷவசனங்களைப் பேசுகையில், அங்கு நிற்கப்பொறுமல் கதையைக் கையில் எடுத்துக்கொண்டு நான்கு ராக்ஷஸர்களோடு ஆகாயத்திற் கிளம்பினன். அங்ஙனம் விபீஷணன் கோபமுற்று அந்தரிக்ஷத்தை (ஆகாயத்தை) அடைந்து ப்ரதிகூலமான ராவண ஸஹவாஸத்தை விட்டு அநுகூலமான ராமஸமாஶ்ரயணத்தில் அபிமுகனுகி அவ்வளவில் பெரிய ஒளிப்பெருக்குண்டாகப்பெற்றுத் தன் தமையனும் ராக்ஷஸாதிபதியுமாகிய ராவணனைப் பார்த்து 'இப்பொழுதாயினும் நல்ல புத்தி பிறவாதா' என்னும் நினைவுடன், 'ராஜனே! நீ எனக்குத்தமையன். ஆகையால் என்னை நீ என்னென்ன சொல்ல விரும்புகிருயோ' அதையெல்லாம் சொல்வாயாக. நான் மறுமொழி கூறலாகாது. நீ எனக்கு ஜ்யேஷ்ட ப்ராதாவாகையால் தந்தையைப் போல் பூஜிக்கத் தகுந்தவன். ஆயினும் நீ தர்மமார்க்கத்தில் நிற்பவனல்லை. மற்றும், என்மேல் இல்லாத தோஷத்தை ஏறிட்டுப் பருஷ வசனங்களைப் பேசினை. இதை மாத்ரம் பொறுக்கமாட்டேன். ராவணு! நான் உன் மேன்மையை விரும்பி நன்றாக நிச்சயித்து உனக்கு ஹிதமான வார்த்தையை மொழிந்தனன். ஆயினும் புத்தியில்லாதவர்கள் ம்ருத்யுவின்வசம் அகப்பட்டு ஹிதத்தை அங்கீகரிக்கமாட்டர்களாகையால் நீ என் வார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. ராஜனே! எப்படியாயினும் ப்ரியமாயிருக்கும் வார்த்தையைச் சொல்பவரும், கேட்பவரும் எப்பொழுதும் நிரம்பவும் அகப்படுவார்கள். கேட்க அப்ரியமாயினும் ஆராய்ந்து பார்க்கில் ஹிதமான வார்த்தையைச் சொல்பவனும்,

சொன்னால் செவி கொடுத்துக் கேட்பவனும், எங்கும் அகப்படமாட்டான். ஸர்வ ப்ராணிகளையும் ஸம்ஹரிப்பதும் தயையற்றதுமான காலபாசத்தினால் கட்டுண்டு நாசம் அடைகின்ற உன்னை எரிகிற க்ருஹத்தைப்போல் பார்த்து வெறுமனே இருக்கப்பொறாமல் இவ்வளவு தூரம் மொழிந்தனன். எரிகிற அக்னியைப்போல் தக தகவென்று ஜ்வலிப்பவைகளும் தீக்ஷ்ணங்களும் பொன்னால் அலங்காரஞ் செய்யப்பெற்றவைகளுமான பாணங்களால் ராமன் உன்னை அடிக்கையில் அதைப்பார்க்க என் மனம் பொறுக்க முடியாதிருக்கின்றது. யுத்தபூமியில் சூரர்களும் பலிஷ்டர்களும் அஸ்த்ரங்களை அறிந்தவர்களுமாயினும் ம்ருத்யுவினால் பிடியுண்டிருப்பார்களாயின், மணலால் இயற்றின அணைக்கட்டுகள்போல் நிமிஷத்தில் உருமாய்ந்துபோவார்கள். தமையனென்று உன் மேன்மையை விரும்பி நான் யாது மொழிந்தேனோ, அதை நீ பொறுக்க வேண்டும். நீ எல்லா விதத்திலும் உன்னைப் பாதுகாத்துக் கொள்வாயாக. இவ்வரக்கர்களையும் இவ்விலங்கை மாநகரையும் பாதுகாத்துக் கொள்வாயாக. உனக்குச் சுபம் உண்டாகுக. நான் போகிறேன். நான் போன பின்பு, நான் இல்லையல்லவா? ஆகையால் என்னை விட்டு நீ ஸுகமாயிருப்பாயாக. [1] ராக்ஷஸா! நான் ஹிதத்தை விரும்பி வேண்டாமென்று உன்னை எவ்வளவு தடுத்துச் சொல்லினும்

1. 'ராவணா! இங்குள்ள ராக்ஷஸக் கூட்டங்களில் உனக்கு ஹிதம் உபதேசித்து ஆலோசனை சொல்லித் தானே முன் நின்று உன்னை இந்தப் பாபகர்மத்தினின்று தடுக்கிற ஸுஹ்ருத்தாவது ஸகாவாவது ஒருவனும் இல்லை. இது நிச்சயம்' என்னும் பொருள் அடங்கிய ஒரு பத்யம் அதிகமாயிருக்கிறது. அதற்கு வியாக்யானம் இல்லை.

என் வார்த்தை உன் மனத்தில் ஏறுகிருக்கின்றது. மரணகாலம் ஸமீபிக்கப் பெற்றவர் செத்தாற் போலவேயல்லவா? அவர்கள் நண்பர்கள் சொல்லும் ஹிதவசனங்களைக் கேட்கமாட்டார்கள்' என்றனன். பதினாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விபீஷணன் ராமனிடம் போதலும், ஸுக்ரீவாதிகள் அங்கீகரிக்கலாகாதென்பதும், ராமன் ஹனுமானுடைய மதத்தின்படி அவனை அங்கீகரிக்க நினைத்து வரவழைத்தலும்.

ராவணனது தம்பியாகிய விபீஷணன் இங்ஙனம் அந்த ராவணனைக் குறித்துப் பருஷ வசனங்களைச் சொல்லி, உடனே முஹூர்த்த காலத்தில் ராமனும் லக்ஷ்மணனும் தங்கியிருக்கிற இடத்திற்கு வந்துசேர்ந்தனன். அனந்தரம் அங்ஙனம் அக்னியினின்று குளிர்ந்த ஜலமுடைய தாமரைத் தடாகத்தில் விழ விரைவுடன் வருவதுபோல் மிகுந்த வேகத்துடன் வருகின்றவனும், உயர்வினாலும் வலிமையினாலும் ரத்னங்கள் இழைக்கப் பெற்ற ஸ்வர்ணாபரணங்களாலும் மேருசிகரம்போன்ற உருவமுடையவனும் ப்ரதிபக்ஷிகளைத் துறந்து தன் பக்ஷத்தைக் குறித்து வருகையால் மேருசிகரம்போல் சிறந்த நிலைமை யுடையவனும் மிகுந்த ஒளியுடன் ஆகாயத்தில் ஸஞ்சரித்து வருகின்றமையாலும் 'ராம பக்தர்களான வானரர்கள் என்னை ராமனிடம் போக விடுவார்களோ விடமாட்டார்களோ' என்னும் பயத்தினால் நடுக்கமுற்றிருக்கின்றமையாலும் மின்னல் போல் புலப்படுகின்றவனும் ஆகாயத்தை அடைந்திருப்பவனுமாகிய விபீஷணனை, அவன் லங்கையினின்று

ஆகாயத்திற் கிளம்பும்பொழுதே பூமியிலிருந்த வானர முதலிகள் எல்லோரும் கண்டனர். [1] எப்படிப்பட்டவர்க்கும் எதிரிட முடியாதவனும் வானராதிபதியுமாகிய ஸுக்ரீவன் நான்கு மந்த்ரிகளுடன் தான் ஐந்தாவனுகி வருகின்ற விபீஷணனைக் கண்டு, புத்தியிற் சிறந்தவனுகையால் வானரர்களோடு கலந்து ஆலோசித்தனன். அவன் முஹூர்த்த காலம் ஆலோசித்து, ஹனுமான் முதலான அந்த வானரர்களெல்லோரையும் பார்த்து மேன்மையுற்ற இம்மொழியைச் சொல்லினன். 'இந்த ராக்ஷஸன் ஸமஸ்த ஆயுதங்களையும் தரித்து நான்கு ராக்ஷஸர்களோடுகூட எதிரே வருகின்றனன்; பாருங்கள். நம்மைக் கொல்வதற்கே வருகின்றனன். இதற்கு ஸந்தேஹமே இல்லை' என்றனன். ஸுக்ரீவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவ்வானரோத்தமர்கள் அனைவரும் திடீரென்று 'இது அது' என்று பாராட்டாமல் கையில் அகப்பட்ட வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் எடுத்துக்கொண்டு அந்த ஸுக்ரீவனைப் பார்த்து 'ராஜனே! விரைவில் ஆஜ்ஞை இடுவாயாக. நீ ராஜனுகையால் உனது ஆஜ்ஞை இல்லாமல் நாங்கள் எதுவுஞ் செய்யலாகாது. இந்தத் துர்ப்புத்திகளை மற்றொன்றும் செய்வதற்கன்றி வதிப்பதற்கே விரைவில்

1. 'அவன் மேகம்போலும் பர்வதம்போலுந் தோற்றித் தேவேந்த்ரனைப்போல் மிகுந்த பராக்ரமம் அமைந்து ஸமஸ்த ஆயுதங்களையுந் தரித்து, திவ்ய பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தனன். பயங்கர பராக்ரமர்களான அவனது அனுசரர்கள் நால்வரும் அப்படியே ஸமஸ்த ஆயுதங்களையும் தரித்து நானுவித ஆபரணங்களையும் அணிந்து விளக்க முற்றிருந்தனர்' என்னும் பொருளடங்கிய இரண்டு ஸ்லோகங்கள் குண்டலிதங்களாயிருக்கின்றன; வ்யாக்யானங்களிலும் எடுக்கவில்லை.

ஆஜ்ஞை இடுவாயாக. அல்பபலர்களான இவர்கள் மறு படியும் ஆகாயத்திற் கிளம்பாதபடி எம்மால் அடிக்கப் பட்டுப் பூமியில் விழுவார்களாக' என்றனர். அவர்கள் இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையில், விபீஷணன், 'எவர் என்ன பேசினாலும் ராமன் ரக்ஷிக்காமல் விட மாட்டான்' என்னும் நம்பிக்கையால் அவ்வார்த்தை களை யெல்லாம் பாராட்டாமல் அந்த ஸமுத்ரத்தின் வடகரைக்கு வந்து ஆகாயத்திலேயே பயநடுக்கங் களொன்று மின்றி நிலையாக நின்றிருந்தனன். விபீஷணன் பற்றவேண்டிய உபாயத்தை நன்கறிந்த மஹானுபாவனுகையால் ஆகாயத்தில் இருந்தே, அவ் வானரோத்தமர்களையும் அவர்களுக்கு ராஜாவான ஸுக்ரீவனையும் பார்த்து எல்லோர்க்கும் செவியிற் படும்படி பெரிய கண்டஸ்வரத்துடன் இங்ஙனம் கூறி னன். 'ஓ வானரோத்தமர்களே! ராக்ஷஸகுலத்திற்கு ப்ரபுவான ராவணனென்னும் ராக்ஷஸனொருவன் உளன். அவன் வெகு துர்மார்க்கன். நான் அவனுக்குப் பின் பிறந்தவன்; விபீஷணனென்று பேர்பெற்றவன். துர்ப்புத்தியாகிய அந்த ராவணன், கர்ப்பவாஸம் முதலிய துக்கங்களையும் அறியாமல் அருமையாக வளர்ந்த ஸீதை அயோத்யையைக் காட்டிலும் பல வகைப் போகங்களுக்கு ஏகாந்த ஸ்தலமாயிருக்கு மென்று ஜனஸ்தானத்திற்கு வந்திருக்கையில், அவளை அங்கிருந்து அபஹரித்துக்கொண்டு, தடுக்கவந்த ஜடாயுவையும் கொன்று லங்கைக்குச் சேர்ந்து அவளைச் சிறையில் வைத்தனன். அவள், இட்ட கால் கைகள் இட்டபடியே இருக்கப் பரதந்த்ரையாகி வருந்தி விகார உருவமுடைய ராக்ஷஸ ஸ்திரீகளால் நன்கு பாதுகாக்கப்பட்டிருக்கின்றனள். நான் அவனுக்கு

'ஸீதையை ராமனுக்குத் திருப்பிக் கொடுத்துவிடுவாயாக' என்று காரணங்கள் பொருந்தின பலவகை வாக்யங்களால் அடிக்கடி தெரிவித்தனன். சாக விரும்புவோன் ஔஷதத்தை வேண்டாமென்பதுபோல், அந்த ராவணன் காலனுல் தூண்டப்பட்டு நான் தனக்குச் சொன்ன ஹிதவசனத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அவன், அங்ஙனம் ஹிதங்கூறின என்னைப் பருஷவசனங்களால் விரட்டி மற்றும் தாஸனைப்போல் மிகுதியும் அவமதிக்கையில் பிள்ளைகளையும் பெண்டிர்களையும் துறந்து ரகுகுலாலங்காரனை ராமனையே சரணம் புகுந்தனன். [1] ஸமஸ்த லோகங்களையும் பாதுகாக்க

---

1. இங்கு 'ஸர்வலோக ஶரண்யாய ராகவாய மஹாத்மநே। நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்' என்பது மூலம். இங்ஙனம் ஶரண்யனுகிய ராமனுக்கு விண்ணப்பஞ்செய்யவேண்டிய அர்த்தத்தைச் சொல்லி இனி அதை அவனிடத்தில் விண்ணப்பஞ் செய்வதற்காகப் புருஷகாரபூதர்களை ப்ரார்த்திக்கின்றனன். (ஸர்வலோக ஶரண்யாய) குலம் வித்யை விருத்தி (நடத்தை) முதலிய பேதங்களைப் பாராமல் ஸமஸ்த லோகங்களுக்கும் ரக்ஷகனுயிருப்பவன். இங்ஙனம் அவன் ஸர்வர்க்கும் ஶரண்யனுகையால் அவனுடைய ஶரண்யத்வத்தில் (ரக்ஷகத்வத்தில்-காக்குந் தன்மையில்) நானுவித அபராதங்களைச் செய்த ராவணனுக்குங்கூட உங்களைப்போல் பாகம் உண்டு. அதாவது-ஸஜ்ஜனங்களாகிய உங்களைப்போல் துஷ்டனுகிய ராவணனையும் அவன் ரக்ஷிப்பவனேயென்கை. இனி அவனைச் சேர்ந்த எனக்கு அதில் பாகம் உண்டென்று சொல்லவேண்டுமோ? ஆனுல் ராவணன் அந்த ஶரண்யத்வத்தில் ருசி உண்டாகப் பெறுமையால் அதிலுள்ள தன் பாகத்தைப் போக்கடித்துக் கொண்டனன். நான் ஆபிமுக்யத்துடன் வருகையால் எனக்கு அதிலுள்ள பாகத்தைப் போக்கடிக்க உங்களால் தாமன்றென்று கருத்து. இதில் ஶரண்யத்வத்திற்கு அங்கமாகிய ஸௌலப்யமும் பரத்வமுமாகிய இரண்டு குணங்கள் முக்யமாகக் காண்பிக்கப்பட்டன. (ராகவாய மஹாத்மநே) ஸௌலப்யம் மாத்ரம் இருந்

வல்லவனும் மஹானுபாவனும் ரகுவம்சத்தில் வந்து அவதரித்தவனுமாகிய ராமனுக்கு விபீஷணனென்ப

தால் அனிஷ்டமே ஆகுமாகையால் ப்ரயோஜனமில்லை; மேரு பர்வதாதிகளைப்போல் பரத்வம் மாத்ரம் இருப்பினும் துர்லபனாகையால் இதுவும் ப்ரயோஜனகரமாகாது. ஆகையால் ஸௌலப்யமும் பரத்வமும் இரண்டு முடையவனென்கை. (ராகவாய) ரகுவம்சத்தில் பிறந்தவன். 'யத்தத்ரேச்யம்' இத்யாதியான வேதாந்தங்களில் ஒருவர்க்கும் புலப்படாததாக ஓதப்படுகிற பரப்ரஹ்மமே இங்ஙனம் மனுஷ்ய பசுபக்ஷ்யாதியான ஸமஸ்த பூதங்களும் ஸாக்ஷாத்கரிக்கும்படி ரகுகுலத்தில் மனுஷ்யனாக அவதரித்தான். இதைக்காட்டிலும் ஸௌலப்யாதிசயம் என்னென்று கருத்து (மஹாத்மநே) இங்ஙனம் மனுஷ்யனாய் வந்தவதரிக்கும் பொழுதும் தனது அப்ராக்ருத ஸ்வபாவத்தை விடாமலே இருக்கின்றமையால் நிகிலஹேயப்ரத்யனீகனும் (ஸமஸ்த தோஷங்களுக்கும் எதிராயும்) ஜ்ஞானசக்த்யாத்யனந்த கல்யாணகுணாகரனும் (ஜ்ஞானம் சக்திமுதலிய அளவிறந்த கல்யாண குணங்களுக்கு விளைநிலமும்)ஆகிய ராமனுக்கு,(நிவேதயத) அறிவியுங்கள். இங்குத் தான் வந்தமை ப்ரத்யக்ஷமாயிருக்கையில் அதை விண்ணப்பஞ் செய்யும்படி வேண்டுவதில் ப்ரயோஜனம் இல்லை. ஆகையால் தன்னுடைய அபராதபரிபூர்த்தியும் ஐஹிகங்களும் ஆமுஷ்மிகங்களுமான இதர பலன்களை அனுபவிப்பதில் வைராக்யமும் சரணாகதியென்கிற அபாயமில்லாத உபாயத்தை அங்கீகரித்திருப்பதும், ராமகைங்கர்யத்தில் அபிலாஷமும் அவனது பரிசாரகர்களில் உட்படுகையும் ஆகிய இவற்றையே விண்ணப்பஞ் செய்யவேண்டுமென்று விபீஷணனுடைய அபிப்ராயம். (க்ஷிப்ரம்.) சரண்யனாகிய ராமன் தானே அங்கீகரிப்பதற்கு முன்னமே நீங்கள் விண்ணப்பஞ்செய்து ஸுஹ்ருத்துக்கள் செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யுங்களென்று கருத்து. (விபீஷணம்) ராவணனைப்போல் நான் ப்ரதிகூலனல்லேன். 'விபீஷணஸ்து தர்மாத்மா' என்னும்படி நான் அனுகூலனே. (உபஸ்திதம்) மிக அற்பனாயிருப்பினும் அருகில் தேடி வருகையே ராமன் ரக்ஷிப்பதற்கு நிமித்தமென்று கருத்து. இதன் கருத்து விசேஷமாக விபீஷண சரணாகதியில் வெளியாகும்.



2551 விபீஷண சரணாகதி.

வன் ஒருவன் வந்திருக்கிறனென்று என்னை விரைவில் தெரியப்படுத்துவீர்களாக' என்றனன். விபீஷணன் இங்ஙனம் 'ராமனைச் சரணம் புகுந்தேன்' என்று மொழிந்த வார்த்தையைக் கேட்டு ஸுக்ரீவன் ராமனிடத்திற்குச் சீக்ரமாக நடந்து சென்று தன்னேடொத்த மனமுடைய லக்ஷ்மணனுக்கெதிரில் ப்ரேமத்தின் மிகுதியால் பரபரப்புற்று எழுத்துக்கள் தழதழக்க அவனைப்பார்த்துச் சொல்லத்தொடங்கி 'விபீஷணனென்பவன் நான்கு ராக்ஷஸர்களோடு உன்னைச் சரணம் அடைந்தனன். சத்ருக்களைத் தபிக்கச் செய்பவனே! நன்மை தீமைகளை அறியும் ஆலோசனைகளிலும், ஸேனைகளை ஒழுங்காக நிறுத்துகிற வ்யூஹகர்மத்திலும், ஆலோசனை செய்து நிச்சயித்த உபாயத்தை அந்தந்த விஷயங்களில் உபயோகப்படுத்துகிற நயத்திலும், எதிரிகள் ரஹஸ்யங்களை அறியும்பொருட்டு மறைவாக அனுப்புகிற சார புருஷர்களின் ஸமாசாரத்திலும், இவை வானரர் விஷயமாயினும் பகைவரான ராக்ஷஸர் விஷயமாயினும், எல்லாவற்றிலும் நீ மனவூக்கத்துடன் இருக்கவேண்டும். வானரர்களுக்கு மந்த்ராதிகளை உபயோகப்படுத்திக்கொண்டும் சத்ருக்கள் உபயோகப்படுத்தும் மந்த்ராதிகளை அறிந்து கொண்டும் ஜாக்ரதையுடன் இருக்கவேண்டும். இப்படி இருப்பாயாயின், உனக்கு க்ஷேமம் உண்டாகும். 'சிலர் அனுகூலராக வரின் நீ இங்ஙனம் தடுமாற்றமுறுவதேன்' என்கிருயோ? இந்த ராக்ஷஸர் காமரூபிகளாகையால் விரும்பினபடி கண்ணுக்குப் புலப்படாமல் வருவார்கள். இவர்கள் கபடோபாயங்களை அறிந்தவர்கள். நீ ரக்ஷிப்பதில் சூரனயிருப்பதுபோல இவர்கள் வஞ்சிப்பதில் மிகுதியும் சூரர்களாயிருப்பார்கள். ஆகையால் ஆயி

ரம் தடவை ஸஹவாஸஞ் செய்யினும் இவரிடத்தில் ஒருபொழுதும் நம்பிக்கை வைக்கலாகாது. ஆகையால் இவன் அனுகூலனல்லன். 'அனுகூலனல்லனாயின், பின்னை எப்படிப்பட்டவனாக வந்தான். எப்படிவரினும் மனவூக்கமுடைய நம் விஷயத்தில் இவன் செய்யும் கார்யம் என்' என்கிறாயோ? இவன் அனுகூலனாகாமல் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனுடைய சாரபுருஷனாயிருப்பான். 'சாரனாயின், விபீஷணனென்று தன் பேரை வெளிப்படுத்திக்கொள்வானா' என்னில், தான் ஒருவனாயிருந்தும் அதை மறைத்து மற்றொருவனாகச் சொல்லிக்கொண்டு, மாறுவேஷம் பூண்டு ஸீதையை எடுத்துக்கொண்டுபோன ராவணனுடைய சாரனாயிருப்பான். ஆகையால் அனுகூலன்போல் நடனஞ்செய்து நம்மில் புகுந்து ஸமயம் பார்த்து நமக்குள் ஒருவர்மேல் ஒருவர்க்கு மித்ரபேதம் விளையச்செய்வான். இதற்கு ஸந்தேஹமே இல்லை. ஆகையால் இவன் ப்ரதிகூலனாகி வஞ்சிக்க வந்தவனே. 'நாமெல்லோரும் ஒருவர்க்கொருவர் ப்ரீதியாயிருக்கையில் இவனால் மித்ரபேதஞ் செய்ய முடியுமா' என்கிறாயோ? ஒருகால் மித்ரபேதஞ் செய்ய முடியாமற்போயினும், நாம் விஶ்வாஸம் உண்டாகப் பெறும்வரையில் நம்மோடு பாலும் நீருமாகக் கலந்திருந்து, நாம் விஶ்வாஸம் அடைந்த உடனே, புத்திஸூக்ஷ்மமுடையவனாகையால், நாம் எமாறி யிருக்கும் ஸமயம் பார்த்து இவன் தானே ஒருகால் நம்மைக் கொல்லினும் கொல்லக்கூடும். 'நாம் எதிரிகள்மேல் தண்டெடுத்து வந்தவுடனே அவர் பக்கத்தினின்று வந்தவன் கதியற்று வந்தவனாயிருக்கவேண்டும். அப்படிப்பட்டவனைக் கைப்பற்றாதிருப்பது ராஜநீதியன்றோ. அப்படிப்பட்டவனை நாம் அங்கீகரிப்பதனால் சத்ருவுக்கு

பலக்குறையும் நமக்கு பலவ்ருத்தியுமல்லவா' என்கி றுயோ? மித்ரர்களைச் சேர்ந்த பலமும் அரண்யத்தி லுள்ள ஜனங்களாகிற பலமும் பரம்பரையாக வந்த மூலபலமும், அப்பொழுது சம்பளம் வாங்கிக்கொண்டு ஜீவிக்கும் ப்ருத்யபலமும் ஆகிய இந்த பலங்களையெல் லாம் அங்கீகரிக்கலாமன்றிச் சத்ருக்களுடைய பலத்தை மாத்ரம் அங்கீகரியாமல் துறக்கவேண்டுவதே ந்யாயம். அவன் சத்ருபலத்தில் சேர்ந்தவனுகையால் கைவிடத் தகுந்தவனே. 'சத்ருபலத்திற் சேர்தவ னென்று ஸாமான்யமாக உபேக்ஷிக்கக் கூடுமா? அங்கு ஸம்பந் தத்தைவிட்டு வந்தவன் நம்பிக்கைக் கிடமல்லனு என்கி றுயோ? இவன் சத்ருபலத்திற் சேர்ந்தவன் மாத்ரமே யல்லன்; ஜாதியில் ராக்ஷஸன்; மற்றும், ராக்ஷஸர் தலை வனுன உன் பகைவனுக்கு உடன்பிறந்தவன். இதை இவன் வாய்மூலமாகவே நாம் கேட்டிருக்கின்றனம். 'நீயும் உடன்பிறந்தவனைத் துறந்தல்லவோ என்னைப் பற்றினுய்' என்கிறுயோ? என்னைப்போல் உடன் பிறந்த வனுல் துரத்தப்பட்டு வந்தவனல்லன். இவன் நம் பகைவ னது கூட்டத்தினின்றே வந்தனன். இப்படிப்பட்ட இவனை அங்கீகரிக்கலாகா தென்பதற்குப் பலகாரணங் கள் இருக்கையில், இவனிடத்தில் எப்படி நம்பிக்கை வைக்கலாகும்? 'இவன் சரணமென்று வந்தானே; சரணு கதனை விடத்தகுமா' என்கிறுயோ? விபீஷணன் ராவண னுல் சாரகர்மத்தில் ஏவப்பட்டு வந்திருக்கின்றனன். ஆகையால் இவனது சரணுகதி மேல் வேஷமென்று அறிவாயாக. நீ யுக்தவ்யாபாரமுடையவர் அனைவரி லும் மேன்மை யுற்றவனுகையால் உனக்குத் தெரியாத யுக்த கார்யம் இல்லை. ஆகையால் இப்படிப்பட்ட மாயா வியை அங்கீகரியாமல் தண்டிப்பதே யுக்தமென்று

எனக்குத் தோற்றுகிறது. 'சாரர்களைக் கொல்வது யுக்தமா' என்கிறாயோ? ராகவனே! இவன் கேவலம் சார புருஷனேயாகி ஸங்கதிகளைத் தெரிந்துபோவதற்கு மாத்ரம் வந்தவனல்லன். ராவணன் அனுப்புகையில், கோணலான புத்தியால் தூண்டப்பட்டு முயன்று சாணுகதன்போல் மாயாவேஷம் பூண்டு தனது உண்மையை மறைத்துக்கொண்டு மனப்பொருத்தமின்றிய வாய் மாத்ரத்தினால் உன்னை ஏமாற்றித் தன்னை நம்பும்படி செய்து, அங்ஙனம் நம்பியிருக்கின்ற உன்னையும் லக்ஷ்மணாதிகளையும் ஸமயம் பார்த்து ஸுகமாகக் கொல்வதற்கு அருகே வந்தவன். 'இவனை இப்பொழுது அங்கீகரிப்போம். பிறகு இவனிடத்தில் கபடம் தோற்றுமாயின் இவனைப் பிடித்துக் கொல்லுவோம்' என்கிறாயோ? அது புலப்படுவது எங்கே? சத்ருவாயிருப்பவன் பேரறிஞனாகி 'நம்மைக் கொல்லவந்தவன்' என்று பிறர்க்குத் தெரியாதபடி நடித்து, அதனால் அவரது ஸைன்யத்தில் புகுந்து ஏதேனும் ஒரு ஸமயம் பார்த்து அவர்களெல்லோரையும் கொல்லுவான். 'அப்படி அவன் புகினும் ஒருவன் பலரை எங்ஙனம் கொல்வான்' என்கிறாயோ? [1] ஒரு காகம் பல கோட்டான்களைக் கொன்றாற்போல் கொன்று விடுவான். ஆகையால் அவனது கொடுமை எங்ஙனம் புலப்படும்? ஆனால் 'இப்பொழுது

---

1. இங்கு 'உலூகாநிவ வாயஸ:' என்று மூலம். கோட்டான்களுக்குப் பகலில் நடையாட்டமில்லை; காகங்களுக்கு ராத்ரியில் நடையாட்டமில்லை. காகம் தனக்கு அவகாசமான பகலில் தன் சத்ருக்களைக் கொல்வதுபோல் கொல்வானென்று கருத்து. 'உலூக இவ வாயஸாந்' என்றும் பாடமுண்டு. அப்பொழுது கோட்டான் தனக்கு அவகாசமான ராத்ரியில் காகங்களைக் கொல்வதுபோல் கொல்வானென்று கருத்து.

என்ன செய்யவேண்டும்' என்கிருயோ? இவனைப் பிடித்துக் கொடிய தண்டனை செய்து கொன்றே தீரவேண்டும். கேவலம் அடித்துத் துரத்தினேமாயின் மாரீசனைப்போல் மீளவும் அனர்த்தத்தையே விளைவிப்பான். வாலியைக் கொன்றூர்போல் ஒரு பாணத்தினுல் முடிக்கலாகாது, சிரஸ்ஸில் வர்த்திவைத்து விளக்கேற்றவேண்டும். இவன் மந்த்ரிகள் தலைகளை அறுத்து இவன் கையில் கொடுத்து அனந்தரம் இவனைக் கொல்லவேண்டும். ஏனெனில்—இவ்விபீஷணன் கொடியனுகிய ராவணனுடைய உடன்தோன்றலன்ருே?'' என்றனன். இங்ஙனம் வானர ஸேனைக்கெல்லாம் அதிபதியும், ராமனை வாய் திறக்கவொட்டாதபடி வசனங்களை மொழியவல்லவனும் தனக்குத் தோற்றின ஸித்தாந்தத்தை நிலைநிறுத்திப் பிறர் புத்தியில் படும்படி பேசுவதில் ஸமர்த்தனுமாகிய ஸுக்ரீவன், ராமனுடைய இஷ்டப்படி போகாமல் ப்ரேமத்தின்மிகுதியால் தானே பலாத்காரமாக இங்ஙனம் மொழிந்து, அனந்தரம் ராமன் மொழிவதைக் கேட்டு மறுமொழி கூறுவோமென்று மௌனமாயிருந்தனன். ராமன் தனக்குள் 'ஸுக்ரீவன் ப்ரேமம் தலைக்குமேல் ஏறப்பெற்றுக் கண்மண் தெரியாமல் மெய்ம்மறந்திருக்கையால் நம் வார்த்தையைக் கேட்கமாட்டான்' என்று நினைத்து மஹாதைர்யமுடையவனுகையால் ஸுக்ரீவன் மொழிந்த அவ்வசனத்தைக் கேட்டும் மனங்கலக்கப் பெருமல் அருகே இருக்கிற ஹனுமான் முதலிய ப்ரமுகர்களான வானரோத்தமர்களைப் பார்த்து, 'கபிராஜனுகிய ஸுக்ரீவன், ராவணன் தம்பியான விபீஷணனைக் குறித்து யுக்திகள் அமைந்ததும் பொருள் அடங்கியதுமாக மொழிந்த வார்த்தையை நீங்களும் கேட்டீர்கள். ஆயி

னும் நீங்கள் எனக்கும் ஸுக்ரீவனுக்கும் பவ்யப்பட்டவ ராகையால் 'எப்படி எவர் பக்ஷமாகச் சொல்லலாம்' என்று ஸந்தேஹிக்கவேண்டாம். நண்பனுகிய ஒருவன் ஒன்று சொன்னுனுயின் அதைக் கேட்டு மற்றொருவன் ஒன்றுஞ் சொல்லாமல் வெறுமனே இருக்கலாகாது. 'இது தகும், தகாது' என்று நிச்சயிக்கவல்ல புத்தி யுடையவனும் நிச்சயித்ததைப் பிறர் மறுக்கவொட்டாத படி சொல்ல வல்லவனும் ஶாஶ்வதமான நன்மையை விரும்புபவனுமாகிய மற்ற நண்பனும் கார்ய ஸங்கடங் களில் உபதேசஞ் செய்யவேண்டியது யுக்தமே. ஆகை யால் நீங்களும் உங்களுக்குத் தோன்றினதைச் சொல் வீர்களாக' என்றனன். இங்ஙனம் ராமனுல் வினவப் பட்ட அவ்வானரர்கள் அப்பொழுது ராமகார்யத்தில் மனவூக்கமுடையவராகி அவனுக்கு நன்மை செய்ய வேண்டுமென்னும் விருப்பத்துடன், அவனது மேன் மையை உபசாரத்துடன் புகழ்ந்துகொண்டு தந்தமது மதங்களைச் சொல்லத்தொடங்கி அவனைப் பார்த்து, 'ரகுகுலதீபனே! ராமா! மூன்று லோகங்களிலும் உனக் குத் தெரியாதது எதுவுமே இல்லை. நீ அறிஞனுயிருந் தும் வானரர்களுக்கு நண்பனென்னும் புகழை உலகத் தில் வெளிப்படுத்துவதற்காக எங்களை இங்ஙனம் வினவுகின்றனை. நீ சரணுகதரக்ஷணமென்னும் வ்ரதத் தைப் பழுதின்றி ஆசரிக்குந்தன்மையன். அந்த சரணு கதரக்ஷணத்திற்கு விக்னங்கள் பலவாயிரம் ஸம்பவிக்கி னுங் அவற்றைத் தடுக்கும்படியான ஶூரத்வமுடைய வன். அவற்றை தர்ம யுத்தத்தினுலேயே செய்யுந் தன்மையன். மற்றும் அந்த ஆஶ்ரித ரக்ஷணமென் னும் தர்மத்தைத் தன் ப்ரயோஜனத்திற்காகவன்றிப் பிறர்க்காகவே செய்யுந் தன்மையன். ஆகையால் தார்

மிகனென்று பேர்பெற்றவன். நீ செய்யும் ரக்ஷணம் முத லிய பராக்ரம கார்யங்கள் எவராலும் கெடுக்க முடியா மல் திடமாயிருக்கும். எதையும் ஆலோசித்துச் செய் பவன். பராக்ரமத்தை உபயோகப்படுத்தும் பொழுது பகைவரால் வரும் விரோதத்தைப் பராக்ரமத்தாலும் ஆஸ்ரிதர் மூலமாய் வரும் விரோதத்தைப் பொறுமை யாலும் தடுப்போமென்று ஆலோசித்துச் செய்பவன். மற்றும் ஆஸ்ரிதர் புத்தி பூர்வகமாகச் செய்யும் அபரா தங்களைப் பொறுப்பதற்கு ஹேதுவாக அவர் அதற்கு முன்புசெய்த ஆபிமுக்யத்தை என்றும் மறவாது நினைத் திருப்பவன். நீ இங்ஙனம் எல்லா விதங்களாலும் ரக்ஷ கனுயிருந்தும் உன் கார்யங்களையெல்லாம் உன் ஸ்னே ஹிதர்கள் நிறைவேற்றும்படி தன்னை அவரிடத்தில் ஒப்புவித்திருப்பவன். மற்றும் கணக்கில்லாத பல கல் யாண குணங்கள் நிறைந்திருப்பவன். இங்ஙனம் நீ உன் னைப் பற்றினுர்க்கு ஸ்வாதீனனுயிருப்பதுபற்றி உனக்கு நாங்கள் சொல்லுவதைக் கேட்டு, அப்படியே செய் வது இஷ்டமாகையால், கார்யத்தை நிச்சயிப்பதில் நிறைந்த மதியும் தாம் நிச்சயித்ததைப் பிறர்மனத்தில் படும்படி உரைக்கும் திறமையும் அமைந்த உன் மந்த்ரி கள் ஒவ்வொருவரும் தமக்குத் தோற்றினதைக் கார ணத்துடன் மொழிவார்களாக' என்றனர். இங்ஙனம் வானரர்கள் மொழிந்து நிற்கையில், ஸுக்ரீவனுக்குப் பின்பு வானரர்க்கெல்லாம் இளவரசனுகையால் ப்ரமுக னுயிருப்பது பற்றி மிகுந்த மதியுடைய அங்கதன் விபீஷணனைப் பரீக்ஷிக்கும் பொருட்டு அதற்கு வேண் டிய உபாயங்களை அறிவிக்கும்படியான வசனத்தை முதலில் சொல்லத்தொடங்கி, ராமனைப் பார்த்து, 'இவன் சரணுகதனுயினும், சத்ருவினிடத்தினின்று

வந்ததைப்பற்றி, அனுகூலனே அன்றே என்று சங்கிக்க வேண்டுவது யுக்தமேயல்லவா? ஆகையால் விபீஷணனைப் பரீக்ஷிக்காமல் உடனே அவனிடத்தில் நாம் நம்பிக்கை வைப்பது யுக்தமன்று. நம்பிக்கை வைத்தோமாயின் அனர்த்தமே விளையும். எப்படியெனில் குடிலபுத்தியாயிருப்பவர் கொல்வதற்காக வந்த தம் அபிப்ராயத்தை அறிவிக்கும் முகவிகாரம் முதலிய ஆகாரங்களையும் வெளிக்காட்டாமல் ஒளித்துச் சந்து அகப்படும் வரையில் பேசாமல் திரிந்துகொண்டிருப்பார்கள். நாம் நம்பி ஏமாறியிருக்கையில் சந்து பார்த்து மேல்விழுந்து கொல்வார்கள். பரீக்ஷிக்காமல் உடனே நம்பிக்கை வைப்பதனால் இப்படிப்பட்ட பெரிய அனர்த்தம் உண்டாகும். இவனை அங்கீகரித்தோமாயின், இவன் செய்யும் ப்ரயோஜனமும், அங்கீகரிக்காது போவோமாயின் விளையும் ப்ரயோஜனக்குறையும் இவையென்று நிச்சயித்துக்கொண்டு பிறகு விடுதலையும் அங்கீகரித்தலையும் நிச்சயிக்கலாமன்றி முன்பின் பாராமல் உடனே விடுவதும் அங்கீகரிப்பதும் கூடாது. குணம் உளதென்று ஏற்படுமாயின் அங்கீகரிக்கலாம். தோஷம் உளதென்று ஏற்படுமாயின் விடவேண்டும். ஆனால், 'எல்லாவிதத்திலும் குணமுடையவனேயாவது தோஷமுடையவனேயாவது உலகத்தில் அகப்படானாகையால் அங்கீகரிப்பதாவது துறப்பதாவது எப்படி?' என்னில்—ராஜனே! எது அதிகமாயிருக்கிறதென்பதே பார்க்கக்கூடுமாகையால் அவ்விபீஷணனிடத்தில் தோஷம் மிகுந்திருக்குமாயின் முன்பின் பாராமல் அவனைத் துறக்க வேண்டியதே. அல்லது குணங்களே பலவும் உளவென்று தெரியுமாயின் அவனை அங்கீகரிக்கலாம்' என்றனன். பிறகு சரபனென்பவன் தனக்குள் 'ஒருவனை

அங்கீகரித்து ஆண்டு பாராமல் அவனது குண தோஷங்கள் தெரியா. உடனே அங்கீகரித்தோமாயின், அவனால் நமது மந்த்ராலோசனைக்குக் கெடுதி ஸம்பவிக்குமாகையால் அங்கதனுடைய அபிப்ராயப்படி செய்யமுடியாதே' என்று தான் ஆலோசித்துச் செய்வதற்கு ஸாத்யமானபடி நிச்சயித்து, ராமனைப் பார்த்து 'ராஜ ஸிம்ஹனே! இவனை உடனே அங்கீகரியாமல் முன்பு 'இவன் துஷ்டனா அன்றா' என்று இவனுடைய உண்மையை அறியும்பொருட்டு இவனிடம் ஒரு சார புருஷனைச் சீக்ரம் அனுப்புவாயாக. சாரனை அனுப்பி, ஸூக்ஷ்மபுத்தியாகிய அந்தச் சாரன் மூலமாய் நீதி சாஸ்த்ரத்திற் சொன்ன விதியின்படி இவனது குண தோஷங்களைப் பரீக்ஷித்துப் பின்பு ந்யாயத்தின்படி அனுகூலனானாயின் அங்கீகரிக்கலாம்' என்றனன். பின்பு ஜாம்பவான், அங்கத சரபர்களைக்காட்டிலும் நீதி சாஸ்த்ரத்தில் மிகுதியும் பயிற்சியுடையவனாகையால் ராமபுத்தியை அனுஸரித்தே சொல்லவேண்டுமென்னும் பக்ஷபாதமில்லாமல் 'அங்கீகரித்து ஆண்டுபார்த்தாவது சாரன் மூலமாயாவது பரீக்ஷிக்கத்தகாது. அவனை நம்பாதிருப்பதற்குப்பல காரணங்களும் உண்டு' என்று சாஸ்த்ரயுக்தியால் விவேகித்துப் பார்த்து ஸந்தேஹாதிகள் இல்லாமையால் குணம் பொருந்தியதும் பக்ஷபாதமில்லாமையால் தோஷமற்றதுமான வாக்யத்தைச் செல்லத்தொடங்கி, ராமனைப்பார்த்து, 'நம்மோடு அழியாத வைரமுடையவனும் பாபிஷ்டனும் பாபிஷ்டரான ராக்ஷஸர்களுக்குத் தலைவனுமாகிய ராவணனிடத்தினின்று வந்தவன் இவன். 'அவன் துஷ்டனாயினும் இவன் தோஷமற்றவனாயிருக்கலாமே' என்னில், இவன் வந்த தேசமும் காலமும் தகுந்த

வையல்ல. ஆகையால் எல்லாவிதத்திலும் இவனைக் குறித்துச் சங்கிக்கவேண்டியதே' என்றனன். பிறகு மைந்தன், 'விபீஷணன் எல்லாவிதத்திலும் சங்கிக்கத் தகுந்தவனே யாயினும், ஸுலபமான உபாயத்தினல் அவனது குணதோஷங்களைப் பரீக்ஷிக்காத பக்ஷத்தில் அநுயாஸமாகத் தானே வந்த நண்பனைக் கைவிட வேண்டிவரும்' என்னும் அபிப்ராயத்துடன் ந்யாய அந்யாயங்களை நிச்சயிக்கவல்ல பண்டிதனும் தான் நிச்சயித்ததை நன்கு மொழியும்படியான பேச்சின் திறமையுடையவனு மாகையால் விபீஷணனைச் சோதிக்கவேண்டிய ப்ரகாரம் இதுவென்று ஸுக மாகக் கண்டுபிடித்து, ஸுக்ரீவன் சொன்னதைக் காட்டிலும் மிகுந்த யுக்திகள் அமைந்த வாக்யத்துடன் ராமனைப்பார்த்து 'மனிதர்களில் சிறப்புற்றவரிலும் சிறப்புற்றவனே! ராமா! அந்த ராவணன் நம்விஷயத்தில் என்ன சொல்லுகிறுனென்று இவ்விபீஷணனை, இவனுக்கு இன்னுனென்று தெரியாத ஒரு புருஷன்மூலமாக இவனுக்கு ஸந்தேஹம் உண்டாகாதபடி விரைவின்றி மெதுவாக இனிய உரைகளுடன் வினவ வேண்டும். புருஷஸ்ரேஷ்டனே! இங்ஙனம் துஷ்டனே அன்றே என்று பரீக்ஷித்து இவன் கருத்தை உள்ளபடி அறிந்துகொண்டால், துஷ்டனுயின் அதற்குத் தகுந்தபடியும், துஷ்டனல்லனுயின் அதற்குத் தகுந்த படியும் ஒருவன் வார்த்தையை எதிர்பாராமல் உன்புத்திக்குத் தோற்றினபடி செய்யலாம். 'சரணம் அடைந்தேன்' என்பதைமாத்ரமே எதிர்பார்க்கிறுயன்றிப் புருஷதிலகனுகிய உன் பெருமையைக் கணிசிக்கவேண்டாமா' என்றனன். அனந்தரம் சாஸ்த்ராப்யாஸத்தினல் நல்ல மனத்தெளிவுடைய மந்த்ரிஸத்தமனுகிய

ஹனுமான் மிகுந்த பொருளடக்கமுடையதும் செவிக்கினியதும் சப்தவிஸ்தாமின்றிக் கம்பீரமும் மென்மை யமைந்ததுமாகிய வசனத்துடன் ராமனைப் பார்த்து, 'நீ சிறந்த மதியுடையவர்கள் அனைவரிலும் தலைமை யுடையவன்; வல்லவன்; பேசுவோர்களில் மிகுதியும் மேன்மையுற்றவன். இப்படிப்பட்ட உன்னை, நாங்கள் மாத்ரமே அன்று; ப்ருஹஸ்பதி பேசினும் கடக்கமுடியாது. ராமா! ஸஹத்தின் திறமையாலாவது, 'என் முன்னே ஒருவன் பேசுவானு' என்னும் பொறாமையாலாவது, நான் சிறந்த மதியுடையவனென்றும் தட்டுத் தடங்கலின்றிப் பேச வல்லவனென்றும் எனக்கு மேன்மையுண்டாகவேண்டுமென்று நினைத்தாவது, மனம்போனபடி பேசுந் தான்தோன்றித்தனத்தினுலாவது நான் சொல்லவில்லை. ராஜனே! ஆயினும், ராம! நீ 'உன் அபிப்ராயத்தைச் சொல்வாய்' என்று என்மேல் வைத்த கௌரவத்தைப்பற்றி யதார்த்தமான வார்த்தையைச் சொல்லுகிறேன். குணதோஷங்களும் ப்ரயோஜன அப்ரயோஜனங்களும் அங்கீகரிப்பதற்கும் விடுவதற்கும் உபாயங்களென்று [1] உன்மந்த்ரிகள் சொன்னுர்களே; அதில் எனக்கு தோஷம் தோற்றுகின்றது. அங்ஙனம் பரீக்ஷித்துப்பார்ப்பது பொருந்தாது. எப்படியெனில்—ஒருவனை ராஜகார்யங்களில் தூண்டாதிருக்கும் பக்ஷத்தில், அவனுடைய நற்குணத்தைக் கண்டுபிடிக்க முடியாது. குணதோஷங்களை யறியாமல் திடீரென்று கார்யங்களில் தூண்டுவதும் தோஷமென்று எனக்குத் தோற்றுகின்றது. இங்ஙனம் குணதோஷங்களைப் பரீக்ஷித்தே கார்யங்களில் தூண்டவேண்டு

1 இங்கு மந்த்ரிகளென்று அங்கதனைச் சொல்லுகிறது.

மென்றும் தூண்டியே குணதோஷங்களைப் பரீக்ஷிக்க வேண்டுமென்றும் ஒன்றை யொன்று பற்றியிருக்கை யால் (அன்யோன்யாஸ்ரயமாயிருக்கையால்) இந்த மதம் சரிப்படாது. சாரபுருஷனை அனுப்பி, ரஹஸ்யமாக அவன் ஸங்கதியை அறிவது யுக்தமென்று[1] உன் மந்த்ரி கள் சொல்லினர்; அதுவும் யுக்தமன்று. தூரத்திலிருப் பவனுக்கல்லவோ சாரனை அனுப்புவதும், அவன் போய் ரஹஸ்யமாக மறைந்திருந்து அவன் ஸங்கதியைத் தெரிந்துகொள்வதும் யுக்தம். நமக்கு மிகுதியும் ஸமீ பத்தில் கண்ணெதிரில் பிடிப்பில்லாத ஆகாயத்தினி டையில் இருக்கின்ற இவனிடத்தில் சாரனை அனுப்பிப் பரீக்ஷிக்கும் ப்ரஸ்தாவமே உபயோகப்படாது. ஆகை யால் இவ்வுபாயமும் பொருந்தாது. 'இவ்விபீஷணன் யுக்தமல்லாத தேசத்திலும் அத்தகைய காலத்திலும் வந்தவன்' என்றூர்களல்லவா? அவ்விஷயத்தில் யதார்த் தமாக இதுவே தகுந்த தேசமும் காலமுமென்று என் புத்திக்குத் தோற்றினவளவு சிறிது சொல்லவேண்டு மென்று விருப்பம் உளது; அதை அறிவாயாக. விபீ ஷணன் அதமனுகிய ராவணனையும் உத்தமனுகிய உன்னையும் மனத்தில் ஆலோசித்து, அங்ஙனமே அவ னிடத்திலுள்ள தோஷத்தையும் உன்னிடத்திலுள்ள குணத்தையும் விசாரித்து, ராவணனிடத்தில் 'ஸீதை யைப் பறித்துக்கொண்டுவந்தது தகாது. மீளவும் அவளைக் கொடுத்து விடுவாய்' என்று எவ்வளவு வேண்டிக்கொள்ளினும் செவி கொடுத்துக்கேளாமை முதலிய துர்மார்க்கத்தனத்தையும், உன்னிடத்தில் கரன் தூஷணன் முதலியவர்களைக் கொல்வது வாலி யைக் கொன்று ஸுக்ரீவனுக்கு ராஜ்யங்கொடுத்தது

1. இங்கு மந்த்ரிகளென்று சரபனைக் குறிக்கிறது.

முதலிய பராக்ரமங்களையும் கண்டு புத்தியில் ஆலோசித்து ராவணனை விட்டு உன்னிடம் வருவது அவனுக்குத் தகுந்ததே. (இங்ஙனம் ப்ரதிகூலரிடத்தில் தோஷமும் அநுகூலரிடத்தில் குணமும் எங்கு எப்பொழுது தோற்றுமோ அதுவே தகுந்த தேசமும் காலமுமாகையால் யுக்தமான தேசகாலங்களிலேயே அவன் வந்தவன்.) ராஜனே! விபீஷணனுக்கு எவருடைய ஸ்வரூபம் தெரியாதோ, அப்படிப்பட்ட தெரியாத சில புருஷரை அனுப்பி அவனைக் கேட்க வேண்டுமென்று சொன்னர்களே! அவ்விஷயத்திலும், இம்மதம் நீதிவிருத்தமென்று நிரூபிப்பதற்கு நான் நன்கு பரீக்ஷிக்கையில் எனக்கு ஒரு யுக்தி தோற்றுகிறது. அது என்னெனில்—அவனை அங்கிகரிப்பதற்கு முன்னமே ராவணன் ஸங்கதியைத் திடீரென்று வினவினல் புத்திசாலியாகிய அவன், அவை தன்னை அங்கிகரித்த பின்பு கார்ய விசார ஸமயத்தில் கேட்கவேண்டியவையென்று தெரிந்து 'நாம் வணக்கத்துடன் சரணம் புகவரின் நம்மைச் சத்ருவாக நினைத்தார்களோ' என்று மிகுதியும் சங்கையுற்றவனுவான். அங்ஙனம் அவன் சங்கிப்பதனுல், நாம் ஒன்றை நினைத்துக்கொண்டு மனத்திலில்லாத மற்றொன்றை வினவி அனுயாஸமாக வந்த அப்படிப்பட்ட நண்பனைக் கைவிட வேண்டிவருமிவ்வளவேயன்றி, வேறில்லை. ராஜனே! ஒருவன் தான் திறமையுடன் வினவினும், பிறனும் திறமையுடையவனுகித் தன் அபிப்ராயங்களை வெளிப்படுத்தாமல் மறுமொழி கூறுவானுயின், அப்படிப்பட்ட வார்த்தைகளால் அவனபிப்ராயத்தைத் திடீரென்று தெரிந்துகொள்ள முடியாது; நெடுநாள் ஸஹவாஸஞ் செய்தே அறியவேண்டியதாயிருக்கும். ஆகையால் நண்பனைப் போக்கடித்

துக்கொள்வது மாத்ரமேயன்றி அவனபிப்ராயமும் தெரியாமலே போய்விடும். இவன் பலவார்த்தைகள் பேசினும் துஷ்ட அபிப்ராயமுடையவனென்பதற்கு அடையாளங்களான முகவிகாரம் புழுக்கம் தழதழப்பு முதலியவை எவையும் புலப்படவில்லை. அதற்கு விபரீதமாக நல்லவனென்பதற்கு அடையாளமாகவே இவன் முகம் தெளிவுற்றிருக்கின்றது. ஆகையால் மற்றவர்க்குச் சங்கிக்கத் தகுந்தவனென்று தோற்றினாற்போல் எனக்கு ஸந்தேஹம் சிறிதும் உண்டாகவில்லை. வானரர்கள் செடிகளைக்கொண்டு மேல்விழுவதைக் கண்டும் இவர்கள் ப்ரதிகூலரென்று சங்கிக்காமலே வந்தனன். மறைவாகக் கெட்ட எண்ணமுடையவன் இங்ஙனம் சங்கையின்றி மனத்தெளிவுடன் எதிர்கொண்டு வரமாட்டான். மற்றும், இவன் வார்த்தைகள் தழதழப்பு முதலியவை யொன்றுமின்றிச் சுத்தமாயிருக்கின்றன. ஆகையால் எனக்கு மாத்ரமேயன்றி மற்றவர்களுக்கும் இவன் விஷயத்தில் ஸந்தேஹப்பட வேண்டியதில்லை. 'மிகுதியும் வஞ்சகனாயிருப்பவன் கருத்தை மறைத்துக் கொண்டிருப்பானாகையால் அவனை எப்படி நம்பலாம்' என்னில் முகவிகாரத்தை எவ்வளவு மறைக்கினும் அது மறைந்திருக்க நேராது. அந்த முகவிகாரம் எவ்வளவு மறைக்கினும் பலாத்காரமாக வெளிப்பட்டு மனிதர்களின் மனத்திலுள்ள கருத்தைத் தப்பாமல் வெளிப்படுத்தியே தீரும். ராமா! நீ கார்யங்களை அறிந்தவர்கள் அனைவரிலும் சிறந்தவனாகையால் உனக்குத்தெரியாத கார்யம் இல்லை. செய்யவேண்டியவற்றைத் தகுந்த தேசத்திலும் தகுந்த காலத்திலும் தகுந்த புருஷரிடத்திலும் உபயோகப்படுத்தினால் செய்பவனுக்குத் தகுந்த பயன் யாதொரு தடையுமின்றிச் சீக்ரத்தில்

நிறைவேறும். 'இங்ஙனம் தன் பந்துவையும் ஐஶ்வர்யத்தையும் கைவிட்டு வெறுமனே நமது கட்பை மாத்ரம் எதிர்பார்த்து வருவானே? வருவதற்கு மற்றேதேனும் ஒரு ப்ரயோஜனத்தை உத்தேசித்திருக்க வேண்டு' மென்னில், கரதூஷணுதிகளை ஒரு முஹூர்த்தகாலத்தில் கொன்று ஸேனைகளோடு யுத்தத்திற்காக ஸமுத்ரக்கரையில் ராவணனைக் கொல்ல வந்திருக்கிற உன் முயற்சியைக் கண்டும் உனக்கு எதிரியான அந்த ராவணனுடைய கபடவ்யாபாரத்தைப் பார்த்தும், ராவணனைக்காட்டிலும் அதிப்ரபலனுகிய வாலியை ஒரு பாணத்தினுலேயே உன்னைப்பற்றின அவன் தம்பிக்காக முடித்ததையும், வாலியின் ராஜ்யத்தில் தான் அபிலாஷம் வைக்காமல் உன்னைப்பற்றின அவன் தம்பியாகிய ஸுக்ரீவனுக்குப்பட்டங்கட்டினதையும் கேட்டிருந்தமையால், அங்ஙனமே தனது அண்ணனைக் கொன்று அந்த ராஜ்யத்தையும் தான் விரும்பாமல் ஸுக்ரீவனைப் போல் உன்னைப்பற்றின தனக்குக் கொடுப்பாயென்னும் நினைவினுல் புத்திபூர்வமாக ராஜ்யத்தை விரும்பியே இங்கு வந்தவன். ஆகையால் ப்ரயோஜனத்தை உத்தேசித்தே வந்தவன். இங்ஙனம் பந்துத்வம் முதலியவற்றைப் பற்றி வந்தவனல்லனுகையால் ஸந்தேஹிக்கத் தகுந்தவனென்று உன் பரிகரங்களுக்குத் தோற்றினும் ராஜ்யத்தை விரும்பி வந்தவனென்னும் இவ்வளவைமாத்ரம் முன்னிட்டாவது இவனை அங்கீகரிக்கலாம். இவனை அங்கீகரிப்பதற்கு இவ்வளவு மாத்ரமே பொருந்தியிருக்கிறது. வானரர்கள் ராக்ஷஸனென்று ஜாதிமாத்ரத்தைப் பற்றி ஸந்தேஹித்த இவ்விபீஷணனுடைய நேர்மையைப் பற்றி என் சக்தியுள்ளவளவு எனக்குத் தோற்றினமட்டும்

சொல்லினன். புத்திமான்களனைவரிலும் நீ மேலானவன். நான் மொழிந்ததை யெல்லாம் செவியுற்றனை. ஆயினும் இவன் குணாதிகனோ, அல்லனோ, அங்கீகரிக்கத்தகுமோ, தகாதோ என்கிற எல்லாவற்றையும் நீயே நிர்ணயிப்பவன்' என்று மொழிந்து நின்றனன். பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸ்ரீராமன் சரணாகதரக்ஷணமே தனக்கு மஹாவ்ரதமென்று மொழிந்து ஸுக்ரீவனுக்குக் கபோதோபாக்யானத்தையுஞ் சொல்லி விபீஷணனை அழைத்துக்கொண்டு வரச் சொல்லுதல்.

அனந்தரம் ஸ்ரீராமன் வாயுகுமாரனாகிய ஹனுமானுடைய வசனத்தைக் கேட்டு, ஸுக்ரீவாதிகளின் வாக்யங்களால் கலங்கின மனம் தெளியப்பெற்று, வஸிஷ்டவாமதேவாதி மஹர்ஷிகளிடம் கபோத கண்டூபாக்யானாதிகளைக் கேட்டிருப்பவனாகையால் பூர்வபக்ஷங்களால் வெல்ல முடியாதவனாகித் தன் மனத்திலுள்ள அபிப்ராயத்தைச் சொல்லத் தொடங்கி, 'எனக்குங்கூட விபீஷணனைக் குறித்துச் சிறிது சொல்ல வேண்டுமென்னும் விருப்பம் உண்டு. நீங்கள் எனது நன்மையை விரும்புபவராகையால் நான் சொல்லுவதை யெல்லாம் கேட்கவேண்டுமென்று விரும்புகிறேன். [1]சரணமென்று வந்தவனை, அவனிடத்தில் எவ்வளவு தோஷம் இருப்

---

1. இங்கு 'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதம்சந। தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதா மேத தகர்ஹிதம்'. இங்கு மித்ரமென்கிறது விஸ்வஸநீய ஸ்தலத்தை. விஸ்வஸநீய ஸ்தலம்-நம்பத்தகுந்த இடம். 'தந்மித்ரம் யத்ர விஸ்வாஸ:' என்று விஸ்வாஸ

பினும் எவ்விதத்திலும் கைவிடமாட்டேன். அங்ஙனம் செய்வது ஸத்புருஷர்களால் புகழத்தக்கதேயன்றி நிந்திக்கப்படுவதன்று' என்றனன். அனந்தரம் வான

---

முள்ள இடம் மித்ரமென்று சொல்லப்பட்டது. அதாவது தன்னுடைய தாழ்மையைச் சொல்லிக்கொண்டு 'ராகவம் ஶரணம் கத:' என்று சரணம் அடைகை. இதுவஞ்சகனுக்கும் பொதுவாயிருக்குமே என்ன (ஹாவேந) பாவமாவது க்ரியை. விஶ்வாஸத்திற்கிடமாயிருப்பவருடைய வாக் வ்யாபாரமே போதும். (ஸம்ப்ராப்தம்) லங்கையில் இருந்து 'ராகவம் ஶரணம் கத:' என்ற இவ்வார்த்தை சொன்னனையின் அரை குலையத் தலைகுலைய கஜேந்த்ராழ்வானை ரக்ஷிக்க மடுவின் கரைக்குச் சென்றாற்போல் நாமே அங்குச் செல்ல வேண்டியிருக்க இவ்விடத்திற்கே வந்து அவ்வார்த்தையைச் சொல்லுகையால் நம் கார்யத்தை அவன் செய்தனன். (ஸம்ப்ராப்தம்) இவ்விடத்திற்கு வெறுமனே வருவது மாத்ரமன்றி 'த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச' என்று ப்ராதிகூல்யவர்ஜனம் முதலியவற்றோடு நன்றாக வந்திருக்கிறவன். (நத்யஜேயம்) இவன் வந்தவளவுக்கே கொண்டாட வேண்டியிருக்க விடலாமென்று நெஞ்சில் நினைப்பதுதானும் ஏது? இவனை விடலாமென்னும் ஸம்பாவனை உண்டாகிலன்றோ பரீக்ஷிக்க வேண்டுவது. இவனை விட்டால் நாம் உஜ்ஜீவிமாகிலன்றோ ஆராய்ந்து பார்க்க ப்ரஸக்தி உண்டு. 'ஒருவனை அங்கீகரிப்பவர் பரீக்ஷிக்காமலே தம்மை உபேக்ஷித்து அங்கீகரிக்க மாட்டார்களல்லவா? உம்மை உபேக்ஷித்து அவனை அங்கீகரிக்கப் பார்த்தீராயின் உம்மைப்பிரிந்து வாழப் பொறாத எங்களையும் கைவிடவேண்டி வருமல்லவா!' என்ன (கத்ம்சந) அப்படி செய்ய முடியாததைச் செய்தாயினும் இவனைக் கைவிடமாட்டேன். 'ராவணனுக்கு உடன் பிறந்தவன் ராக்ஷஸன், லோக பயங்கரன்' என்பது ஒப்புக்கொள்ள வேண்டிய அம்சமே. நமக்கு வதத்தையாவது ஒருவர்க்கொருவர் மனஸ்தாபத்தை விளைத்துப் பிரிவினையையாவது செய்யக்கூடும். இப்படி தோஷமுடையவனாயினும் இவனை எவ்விதத்திலும் கைவிடேனென்பது எப்படி? என்னில் (தோஷோ யத்யபித ஸ்யஸ்யாத) தோஷம் அவனுக்கு இருப்பினும் சரணாகதிக்கு ஜன்ம நியமமாவது வருத்தி நியமமாவது இல்லையாகையால்,

ரோத்தமனான ஸுக்ரீவன் ராமன் மொழிந்த அவ்வாக்யத்தைக் கேட்டு, அதன்பொருளைத் தனக்குள் தான் சொல்லிப் பார்த்து, நன்கு விமர்சித்து, நீதிசாஸ்த்ர ரஹஸ்யத்திற்கு மூலமாயிருப்பதும் ஸ்வாமியிடத்திலுள்ள ப்ரீதியின் மிகுதியால் வழிந்து வருவதும் ஆனதுபற்றியே மிக்க மங்களகரமுமான வாக்யத்துடன் ராமனைப் பார்த்து; 'தோஷங்கள் மிகுந்திருக்கப் பெற்றவனாயிருப்பினும் இருக்கட்டும்; தோஷங்களே இல்லாதவனாயினும் இருக்கட்டும். இவனோ ராக்ஷஸன். இவனால் நமக்கு விளையும் ப்ரயோஜனம் யாது? தனது அண்ணனுக்கு லங்கை எரிந்து புத்ரர்கள் பாழாகிப் பகைவர் எதிர்கரையில் ஸைன்யத்துடன்

---

ப்ரபத்தி யென்னும் சரணாகதியைப்பண்ணின இவனிடத்தில் என் அபிப்ராயத்தின்படி தோஷமே இல்லை. உங்கள் அபிப்ராயத்தின்படி தோஷம் இருப்பினும் நான் அவனை விடமாட்டேன். இவன் துஷ்டனென்று தெரிந்தும் இவனை அங்கீகரிப்பின் ஜனங்கள் நிந்திக்குமல்லவா? என்னில் (ஸதாமேதத-ந்ர்ஹிதம்) அல்லாதஇடத்தில் பயத்தைச் சங்கிக்கிற உங்களுக்கு நிந்திக்கத் தகுந்த விஷயமே யாயினும் ஸத்புருஷர்களுக்கு இவனை அங்கீகரிப்பது நிந்தைக்கிடமாகாதே. ஒருகால் (தோஷோயத்யபி) தோஷம் இருப்பினும், அவனுடைய தோஷமல்லவா. (ஸ்யாத்) இங்குள்ள லிங்ப்ரத்யயம் ப்ரார்த்தனையைக் காட்டுகிறது. நாம் ப்ரார்த்தித்துக்கொண்டிருப்பதன்றோ அது குணமுடையவனை ரக்ஷித்தோமாயின், அது அவன் குணங்களுக்கு விலையாகுமேயன்றி துஷ்டனை ரக்ஷித்தோமென்கிற ஏற்றம் நமக்கு வருமோ? அல்லது (தோஷோயத்யபி) நம்மை ஹிம்ஸிக்க நினைத்து நாம் அங்கீகரிக்கும் பொருட்டு 'ராகவம் சரணம் கத:' என்று பொய்யே பேசினவனாயினும் (தஸ்ய ஸ்யாத்) அவன் நினைத்த கார்யத்தை நிறைவேற்றினோமாகிறோம். மேல் கபோதோபாக்யானமாகையால் இதுவே பொருளாக உசிதமென்று பட்டர் அருளிச்செய்வர். இவ்வர்த்தத்தில் 'தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம்

வந்திருக்கையில், இப்படிப்பட்ட ஆபத்து நேர்ந்திருக்கும்பொழுது அவனை எவன் துறந்து வருவானோ; அப்படிப்பட்டவனுக்குக் கைவிடக்கூடாதவன் எவன்? அப்படிப்பட்ட உடன் பிறந்தவனையே கைவிட்டவன் எல்லோரையும் எப்படிப்பட்ட ஆபத்தையும் பாராமல் கைவிடுவான். ஆகையால் இவன் க்ருதக்னனே' என்றனன். ஸத்யபராக்ரமனும் ககுத்ஸ்தகுலாலங்காரனுமாகிய ராமன் வானரயூத நாதனாகிய ஸுக்ரீவனுடைய வாக்யத்தைக்கேட்டு எல்லோரையும் பார்த்து 'எனது மேலான சக்தியையும் சரணாகத ரக்ஷண வ்ரதத்தையும் நன்கு அறியாமல் ஏதோ பிதற்றுகிறான்' என்று சிறிது புன்னகையுடன் ராஜநீதி மர்யாதையின்படி மறுமொழி கூறத் தொடங்கிப் புண்ய லக்ஷணமுடைய லக்ஷ்மணனைப் பார்த்து 'வானரேஸ்வரனாகிய ஸுக்ரீவன் மொழிந்த இப்படிப்பட்ட வார்த்தை சாஸ்த்ரங்களைக் கற்காமலும் பெரியோர்களைப் பணியாமலும் இருப்பவன் சொல்லமுடியாது. ஸகல சாஸ்த்ரங்களையும் வாசித்துப் பெரியோர்களைப் பணிந்திருப்பவனுக்கே சொல்லமுடியும். அண்ணனை விட்டு இவன் வந்ததில் நீதிஶாஸ்த்ரத்தைப் பின்சென்றதும் அதிஸூக்ஷ்மமுமாகிய ராஜதர்மம் ஒன்று உளதேயன்றி இல்லாமல் போகவில்லை. அது ப்ரத்யக்ஷமாகப் புலப்படுவதும் லோகவ்யவஹார ஸித்தமுமாயிருப்பதே. அது ராஜாக்களனைவரிடத்திலும் உண்டானதே. இது

---

நப்ரதிப்ராயச்ஶந்தி' என்று ஶ்ருதி. இங்ஙனம் துஷ்டனையும் கைவிடாமை ஏதுக்காக? என்னில்—ஸத்கோஷ்டியில் பழி வாராமைக்காகவே. ஸத்துக்களாவார்—தம்மை அழித்தாயினும் பிறரை நோக்கும் கபோத விஶ்வாமித்ராதிகள். இதன் கருத்து விஶேஷமாக விபீஷணஶரணாகதியில் வெளியாகும்.

தான் எனக்கும் தோற்றுகிறதேயன்றி வேறில்லை. அது எதுவெனில்—ஜ்ஞாதிகளும் அக்கம் பக்கத்து தேசத்திலுள்ள ராஜாக்களும் ஆபத்து நேரும்பொழுது மேல்விழுந்து அடிப்பார்களாகையால் பகைவரென்றே கூறப்படுவார்கள். இவ்விபீஷணனும் ஆபத்தில் அடிக்கும்படியான ஜ்ஞாதியாகையால் இப்பொழுது ஆபத்து நேரப்பெற்ற ராவணனைக்கொல்லும் பொருட்டு இவ்விடம் வந்தனன். இல்லையாயின் அப்படிப்பட்ட ஆபத்தில் ராவணன் தன்னை அடிப்பானென்னும் பயத்தினால் வந்திருக்கலாம். எப்படிப்பார்க்கினும் நமக்கு அங்கிகரிக்கத் தகுந்தவனே. ஜ்ஞாதிகுலத்தில் பிறந்தவர்களாய்ச் சிறிதும் பாபிஷ்டராகாத ராஜஸ்ரேஷ்டர்கள் தமக்கு நன்மையைச் செய்கையே தன்மையாகப்பெற்ற ஜ்ஞாதிகளைக் கௌரவிப்பார்கள். அப்படிப்பட்ட புண்ய ஸ்வபாவர்களான ராஜாக்களுக்குங்கூட உலகம் பாபம் நிறைந்திருப்பதுபற்றி நல்லகுணமுடைய ஜ்ஞாதியையும் கூட வெகுவாக ஸந்தேஹிக்க வேண்டியதாகவே இருக்கின்றது. இனிப்பாபிஷ்டனாகிய ராஜனுக்கு அப்படிப்பட்ட ஜ்ஞாதி ஸந்தேஹிக்க வேண்டியதென்பது சொல்லவேண்டுமோ? ஆகையால் பாபிஷ்டனாகிய ராவணன் தன்னைக் குறித்துச் சங்கிக்கையில் அவனோடு விரோதத்தை ஏற்றுக்கொண்டே வந்தனன். (ராவணனை இவன் விட்டு வருவதற்குக் காரணம் அப்படியிருக்க, நான் இவனை விடமாட்டாமைக்குக் காரணஞ் சொல்லுகிறேன், கேள்.) சத்ருபலமாகிய விபீஷணனை அங்கீகரிக்கும் விஷயத்தில் சத்ரு பலத்தை விட வேண்டுமென்று பெரிய தோஷஞ்சொல்லினையே. அந்த தோஷமே அவனை அங்கீகரிப்பதற்கு நீதி சாஸ்த்ரத்தின்படி ஒருகாரணமுமாகின்றது. அதை உன்மனத்திற்

படும்படி சொல்லுகிறேன், கேட்பாய். நாம் இவன் குலத்திற் சேர்ந்தவரல்லலோமாகையால் இவனுடைய ராக்ஷஸ ராஜ்யத்திற்குத் தகுந்தவரல்லோம். இங்ஙனம் நாம் அதை விரும்பாமையால் ராவணனிடத்திற்போல் இவனிடத்தில் நமக்குப் பகைவனென்னும் சங்கையும் விளைய நேராதாகையால், இவன் சந்துபார்த்து நம்மைக் கொல்லமாட்டான். மற்றும் ராக்ஷஸனாகிய இவ் விபீஷணன் ராஜ்யாபேக்ஷையால் வந்தவனாகையால் அதற்காக நம்மைக்கொண்டு, ராவணனைக் கொல்விக்க ஸித்தமாயிருக்கிறானாகையால், தன்னுடையதான இந்தக்கார்யம் கெடுமென்னும் பயத்தினாலும் நமக்கு அபகாரஞ் செய்யமாட்டான். 'மூர்க்கர்களான ராக்ஷஸர்க்கு இவ்வளவு ஆலோசனை ஏது?' என்கிறாயோ? ராக்ஷஸர்களிலும் பெரியபண்டிதர் இருக்கின்றனர். ஆகையால் விபீஷணனை அங்கிகரிப்பது யுக்தமே. அந்த ஜ்ஞாதிகள் ஒருவர்க்கொருவர் எப்பொழுதும் கலக்கமின்றி ஸந்தோஷமுற்றவராகவே ஒருவரோடொருவர் எப்பொழுதும் கலந்திருக்கமாட்டார்கள். ஸமயம் நேர்ந்தபொழுது ஒருவர்க்கொருவர் வேறுபட்டுப் போவார்கள். இவனுடைய கண்டத்வனி பயந்தவனுடைய கண்டத்வனிபோல் மிகுந்த பேரொலியுடன் செவிப்படுகின்றது. ஆகையால் பலிஷ்டனாகிய ராவணனிடத்தினின்று இவனுக்கு பயம் ஸம்பவித்திருக்கின்றது. அந்த பயத்தினால் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள விரும்பி நம்மிடம் வந்திருப்பவனாகையால், இவனை அங்கீகரிப்பதே யுக்தம். 'துஷ்டனாயினும் பெரியவனை அனுவர்த்திப்பதேயன்றோ தர்மம்' என்கிறாயோ? அப்பனே! உடன் பிறந்தவர்களெல்லோரும் பரதனைப்போன்றவர் அல்லர். தகப்பனுக்குப் புதல்வரும் என்னைப்போன்றவர் அகப்

படார். நண்பர்களும் உன்னைப்போன்றவர் நேரார். இப்படிப்பட்ட தர்மிஷ்டர்கள் உலகமெங்கும் அகப்படுவது அரிதாகையால் ராவணன், உடன்பிறந்தவனென்று பாராமல், இவனைப் பிடிக்கத் தொடங்குகையில், அவனிடத்தினின்று பிரிந்தே இவன் வரக்கூடுமாகையால் அங்கீகரிக்கத் தகுந்தவனே' என்று மொழிந்தனன். ராமன் இங்ஙனம் மொழிகையில் மஹாப்ராஜ்ஞனாகிய ஸுக்ரீவன், லக்ஷ்மணனும் தானுமாக எழுந்து வணங்கிச் சரணாகதியைச் செய்து ராமனைப் பார்த்து, 'அந்த ராக்ஷஸன் ராவணனால் ரஹஸ்யமாக அனுப்பப்பட்டவனென்று அறிவாயாக. நீ தகுந்த கார்யங்களைச் செய்பவரில் சிறந்தவனாகையால் உனக்குத் தெரியாததில்லை. அவனைத் தண்டிப்பதே எனக்கு யுக்தமாகத் தோற்றுகின்றது. அநகா! மஹாபாஹோ! அந்த ராக்ஷஸன் குடிலபுத்தியாகிய ராவணனால் தூண்டப்பட்டு இவ்விடம் வந்து தன் உண்மையை மறைத்துக்கொண்டு நமக்கு நம்பிக்கையை விளைவித்து அந்நம்பிக்கையால் நாம் ஏமாறி யிருக்கையில், உன்னையோ என்னையோ மற்றை லக்ஷ்மணனையோ முடிக்க இருக்கின்றனன். ஆகையால் அத்தன்மையுள்ள இவனை மந்த்ரிகளுடன் வதித்தே தீரவேண்டுமன்றி வேறில்லை. இவன் கொடியனாகிய ராவணனுடைய தம்பியல்லவா? இவனை எப்படி நம்பலாம்' என்றனன். இங்ஙனம் பேசுந்திறமையுடைய வானர ஸேனாதிபதியான ஸுக்ரீவன், ரகுகுலதிலகனும் பேசுவதில் ஸமர்த்தனுமாகிய ராமனுக்குச் சொல்லி, உடனே ப்ராணயகோபத்தினால் பேசாதிருந்தனன். ராமனும் ஸுக்ரீவன் சொன்னதைக் கேட்டு, அதற்குப் பரிஹாரம் என்னென்று ஆலோசித்து, அதைக்காட்டிலும் அழகான வாக்யத்துடன் வானரோத்தமனைப்

பார்த்து, 'இந்த ராக்ஷஸன் மிகுதியும் துஷ்டனாயினும் ஆகட்டும். தோஷமில்லாதவனாயினும் ஆகட்டும். இவன் என்ன செய்யமுடியும்? எனக்கும் என்னைப் பற்றினவர்க்கும் என் ஸம்பந்தமுடையவரோடு ஸம்பந்தமுடையவர்க்கும் இவன் கெடுதியைச் சிறிதாயினும் செய்ய வல்லனல்லன். [1] வானரகணாதிபதி! இந்த ராக்ஷஸஜாதி ஒன்றே அன்று; க்ரூரஜாதிகளென்று சொல்லப்படுகிற பிசாசர்களும் தானவர்களும் யக்ஷர்களும் மற்றும் லங்கையிலுள்ள ராக்ஷஸர்களேயன்றிப் பூமண்டலத்திலுள்ள ஸமஸ்த ராக்ஷஸர்களும் ஒன்றாகக்கூடி எம்மேல் எதிர்த்து வரினும், எனக்கு இச்சை உளதாயின், இவர்களெல்லாரையும் ஆயுதாதிகளின் அபேக்ஷையில்லாமல் விரல் நுனியால் அநாயாஸமாகக் கொன்றுவிடுவேன். முன்பு தர்மத்தில் அதிகாரமில்லாத திர்யக்ஜாதியான ஓர் கபோதபக்ஷி (புறா) தன் பகைவனாகிய வேடன் தானிருக்குமிடமான மரத்தினடியில் வர, அவனைக் குளிர் காயச் செய்வது முதலிய உபசாரங்களால் தேவதையைப்போல் பூஜித்து ந்யாயத்தின்படி தன் சரீரமாம்ஸத்தையுங் கொடுத்து, 'இதைப்புசிப்பாய்' என்று ஆராதித்தது. இது எல்லார்க்கும் கேள்வியேயல்லவா? வானரோத்தமா! அந்தக் கபோதம், தன்பார்யையைக் கொன்ற வேடன் தன்னிடம் வந்தவுடனே அங்கீகரித்ததல்லவா? இனி என்னைப்போன்றவன் என்ன செய்யவேண்டுமோ, அதைச்சொல்ல வேண்டுமா? கண்வரிஷியின் புதல்வரான கண்டு மஹர்ஷி முற்காலத்தில் சரணாகதரக்ஷணஞ் செய்யவேண்டுமென்னும் சிறந்த தர்மத்தை அறிவிப்பதும் உண்மையான பொருளை உரைப்பதுமான ஓர் பழமொழியைக்

1. வானவர் கூட்டங்களுக்குத் தலைவனே.

கூறினர். அதைச்சொல்லுகிறேன், கேள். சத்ருக்களைத் தபிக்கச் செய்பவனே! கையைக் கூப்பிக்கொண்டு சரணம் வேண்டுகிற சரணுகதனை 'க்ரூரன்' என்று தனக்கு லோகாபவாதம் உண்டாகாதிருக்கும் பொருட்டு, அவன் சத்ருவாயினும் எவ்விதத்திலும் கொல்லலாகாது. பயந்தாவது பயந்தவன்போல் நடனஞ்செய்துகொண்டாவது பகைவரிடத்தினின்று ஓர் சத்ரு, பகையை உள்ளேயே வைத்து, மேலுக்குச் 'சரணம்' என்னும் வார்த்தையை மாத்ரம் சொல்லிக்கொண்டு சரணம் புகுவானுயின், குருகுலவாஸத்தினுல் பயின்று தர்மஶாஸ்த்ரத்தில் விஶ்வாஸமுடையவன் தன் ப்ராணன்களை இழந்தாயினும் அவனைப் பாதுகாக்கவேண்டும். சரணமென்று வந்தவனைக் காப்பாற்றினுல் தனக்கு ப்ராணஹானி வருமென்னும் பயத்தினுலாவது, சாஸ்த்ரார்த்தந் தெரியாமையாலாவது, அவன்மேல் பகையால் ஏதேனும் ஒரு லாபத்தை விரும்பியாவது, மனம்போனபடி நடக்குந் தன்மையைப்பற்றியாவது, தனக்குச் சக்தி உள்ளளவும் வாஸ்தவமாக எந்த நிமித்தத்தினுலும் வஞ்சனைசெய்யாமல் அவனை ரக்ஷிக்கவேண்டும். அங்ஙனம் ரக்ஷிக்காமை தோஷத்திற்கிடமாம். இவ்வளவேயன்றி, இதில் எல்லோராலும் நிந்தை உண்டாகும். ஒருவன் ஒருவனை 'ரக்ஷிக்கவேண்டும்' என்று சரணம் அடைகையில், அவன் ரக்ஷிக்கவல்லவனுயிருந்தும் அவனை ரக்ஷிக்காமல் வெறுமனே பார்த்துக்கொண்டிருப்பானுயின், அதனுல் அவன் தன் சத்ருவின் கையில் அகப்பட்டுநாசம் அடைவானுயின், அவன் அந்த ரக்ஷிக்காதவன் பலகாலமாக ஸம்பாதித்த புண்யத்தையெல்லாம் தான் பெற்று அதற்குப் பலனுக அடையவேண்டிய உத்தமலோகங்களைப் பெறுவான். இங்ஙனம் சரணு

கதனைப் பாதுகாக்காத பக்ஷத்தில் பெரிய தோஷம் ஸம்பவிக்குமே. அங்ஙனம் பாதுகாக்காதிருத்தல் ஸ்வர்க்கத்தைத் தடுத்து நரகத்திற்கும் ஹேதுவாம்; முன்பு பலர் பாதுகாத்து ஸம்பாதித்த யஶஸ்ஸையெல்லாம் பாழ்செய்யும். சரீரத்தில் பலவீர்யங்கள் இருப்பினும் பாதுகாக்காதிருப்பின் அந்த பலவீர்யங்களை நாசஞ்செய்யும். ஆகையால் கண்டு மஹர்ஷி ஸமஸ்த லோகங்களும் ஆதரிக்கும்படி வெறுமனே புகழ்ந்து கூறுதலின்றி யதார்த்தமாகச்சொன்ன அவ்வுத்தம வசனத்தை அனுஸரித்து நடத்தப்போகிறேன். ஏனென்னில்—அது பாபத்தைப் போக்குவது; பிறர் வருத்தம் பொறுமையாகிற பரமதர்மத்தோடு கூடினது; உலகமெங்கும் புகழை விளைவிப்பது; பலனைக்கொடுக்குங் காலத்தில் ஸ்வர்க்கத்தைக் கொடுக்கவல்லது; இங்ஙனம் இஹபரலோக ஸுகங்கள் இரண்டையும் கொடுப்பதாகையால் செய்யத்தக்கது. [1]ஒருகால் 'சரணம்' என்று சரணம் புகுந்தவனுக்கும் 'உன்னுடையவன்' என்று சொல்லி வேண்டுகிறவனுக்கும் ஸமஸ்த

---

1 இங்கு 'ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே। அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம' என்பது மூலம். இப்படிச் சொல்லியும் ஸுக்ரீவன் நன்கு தெளியாமல் மனக்கலக்கம் மாறாதிருக்கக் கண்டு ராமன் தன் ஸ்வபாவத்திற்குத் தகுந்தபடி ஶரணாகதரக்ஷணஞ் செய்யவேண்டுமென்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறான். 'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்' என்கிற ஶ்லோகத்தில் தன் ஸ்வபாவத்தைச் சொன்னான். இந்த ஶ்லோகத்தால் அந்த ஸ்வபாவத்திற்கு அனுகுணமான ப்ரதிஜ்ஞையைப் பண்ணுகிறான். மற்றும் 'ஶ்ருதிஸ் ஸ்ம்ருதிஸ்ஸதாசார: ஸ்வஸ்ய ச ப்ரியமாத்மந:। ஸம்யக் ஸங்கல்பஜ: காமோ தர்மமூலமிதம் ஸ்ம்ருதம்' என்று யாஜ்ஞவல்க்யர் சொன்ன ஐந்து தர்ம ப்ரமாணங்களில் ஶரணாகதி தர்மத்திற்கு 'தஸ்மாதபிவத்யம் ப்ரபந்நம் நப்ரதிப்ரயச்சந்தி' இத்யாதிகளால்

**பூதங்களிடத்தினின்றும் பயம் இல்லாதபடி அபயங் கொடுப்பேன். இதுவே என்வ்ரதம். வரனரோத்தமனே! உன்னையே புருஷகாரமாக அங்கிகரித்த இவ்விபீஷணனை நீயே அழைத்துக்கொண்டு வருவாயாக. சரணமென்றபொழுதே அவனுக்கு நான் அபயம் கொடுத்**

---

ஸ்ருதிப்ரமாணமும் கண்டு மஹர்ஷியின் காதையினால் ஸ்ம்ருதிப்ரமாணம், கபோதோபாக்யானம் முதலியவற்றால் ஶிஷ்டாசாரப்ரமாணமும், சத்ருக்களைத் தடுத்துச் சரணாகதரக்ஷணஞ் செய்ய வேண்டுமென்று நிரூபித்து அது தன்க்கு ப்ரியமென்பதைக் காட்டுகையால் 'ஸ்வஸ்யச ப்ரியமாத்மந:' என்ற நான்காம் ப்ரமாணமும் உண்டென்று காட்டப்பட்டன. இப்பொழுது 'ஸம்யக் ஸங்கல்பஜ: காம:' என்கிற ஐந்தாம் ப்ரமாணமும் இதற்குண்டென்று காட்டுகிறான். (ஸக்ருதேவ) ஒரேதடவை. பக்தி முதலிய மற்ற உபாயங்களில் ஆவ்ருத்தியே ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. ப்ரபத்தியில் ஆவ்ருத்தியில்லாமையே ஶாஸ்த்ரார்த்தம். 'ஸக்ருதேவ ஹி ஶாஸ்த்ரார்த்த: க்ருதோ஽யம் தாரயேந்நாம்' என்று ப்ரபத்தி ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டது. (ப்ரபந்நாய) ப்ரபத்தி செய்தவனுக்கும். இங்கு ப்ரபத்தியாவது அத்யவஸாயரூபமான மானஸப்ரபத்தி. (தவாஸ்மீதிசயாசதே) நான் உன்னுடையவனேயென்று யாசிப்பவனுக்கும், இது வாசிகமான ப்ரபத்தியைச் சொல்லுகிறது. இவ்விரண்டில் ஏதேனும் ஒன்று செய்தவனுக்கும், (ப்ரபந்நாய) என்று ப்ரபத்திரூபமான உபாயபரிக்ரஹத்தையும், (தவாஸ்மீதி யாசதே) என்று தச்சேஷவ்ருத்தி ரூபமான பலத்தையும் சொல்லுகிறது. நீயே எனக்கு உபாயமென்று நம்மையே உபாயமாகப்பற்றி உனக்கே நான் அடிமை பூண்டிருக்க வேண்டுமென்று சேஷவ்ருத்தியையே உபேயமாக விரும்பும் அதிகாரிக்கு. (ஸர்வபூதேப்ய:) எவரெவரிடத்தினின்று பயம் விளையுமென்று சங்கை தோற்றுமோ அவர்களெல்லோரிடத்தினின்றும். (அபயம்) பயமில்லாமையை (ததாமி) கொடுக்கிறேன். அபயமாவது மோக்ஷமே ஆகின்றது. எப்படியென்னில்—'அத ஸோऽபயம் கதோ பவதி' என்றும், 'ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் நபிபேதி குதஶ்சந' என்றும் அபயத்தையே ப்ரஹ்மவித்யைக்குப் பலமாக ஶ்ருதி சொல்லுகையால்

தாய்விட்டது. அவன் விபீஷணனாயினும் ஆகட்டும். அல்லது விபீஷணவேஷம் பூண்டு ராவணன் தானே வந்திருப்பினும் இருக்கட்டும். 'ராவணன் இவன், விபீ ஷணன் அன்று' என்று எனக்குச் சொல்வதற்காகவும் வெறுமனே நீ திரும்பி வராமல் எவனாயிருப்பினும் அழைத்துக்கொண்டே வருவாயாக' என்றனன். வான ரேஶ்வரனான ஸுக்ரீவன் அங்ஙனம் ராமன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு, 'ராவணனாயினும் அழைத்துக் கொண்டு வருவாய்' என்று எவ்வளவு துஷ்டனாயினும் சரணாகதனிடத்தில் அவன் காட்டும் ஸ்னேஹத்திற்கும் அபயங்கொடுத்ததுமன்றித் தன்னையேபோய் அழைத் துக்கொண்டு வரவேண்டுமென்கையால் தான் ஸம்ம தித்தபின்பே விபீஷணனை அங்கீகரிப்பதாகத் தன்னி டத்தில் வைத்திருக்கிற ஸ்னேஹத்திற்கும் மிகுதியும் ஆச்சர்யம் அடைந்து, அப்படிப்பட்ட ஸ்னேஹத்தை யுடைய மேன்மைக்கு மூலமான ககுத்ஸ்தவம்சத்தில்

---

அபயமாவது மோக்ஷமே ஆகின்றது. 'தவாஸ்மி' என்று பல விஶே ஷத்தை வேண்டுகிறதென்னும் பக்ஷத்திற்கு இது பொருந்துகின் றது. மற்றொரு பக்ஷத்தில் பகவானே ஸகலபலன்களையும் கொடுப் பவனாகையால் இவ்வபயஶப்தம் மோக்ஷத்தைமாத்ரமே யன்றி த்ரி வர்க்கமென்கிற தர்ம அர்த்த காமங்களையும் காட்டுகிறது. (ஏதத்வ்ர தம் மம) இது என் வ்ரதம். வ்ரதம்போல் எப்படிப்பட்ட தசையிலும் விடக்கூடியதன்றென்று கருத்து. (ஸர்வபூதேப்யோ(அ)பயம் ததாமி) ஶரணாகதனைச் சேர்ந்த ஸமஸ்தப்ராணிகளுக்கும் அபயங் கொடுக்கிறேனென்றுமாம். இங்ஙனம் 'பஶுர்மநுஷ்ய: பக்ஷீவா யேச வைஷ்ணவ ஸம்ஶ்ரயா:। தேனைவ தே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோ: பரமம்பதம்' என்று வைஷ்ணவனை ஆஶ்ரயித்த பஶு மனுஷ்ய பக்ஷிகளும் மற்றவைகளும் அவனோடு மோக்ஷம் பெறு மென்று சொல்லப்பட்டது. இதன் கருத்து விஶேஷமாக விபீ ஷணஶரணாகதியில் வெளியாகும்.

பிறந்த அந்த ராமனைப் பார்த்து, 'ராமா! நீ தர்மஸூக்ஷ்மங்களை அறிந்தவன்; லோகங்களை எல்லாம் ரக்ஷிக்கும் ஸ்வாமி; பிறர்க்கு ஸுகத்தை விளைவிப்பதற்கே அவதரித்தவன். உன் கருத்து புகழத்தக்கது. நீ ஸர்வசக்தி; தர்மத்தை நிலைநிறுத்துவதென்னும் ஸன்மார்க்கத்தில் தவறாது நடப்பவன். இப்படிப்பட்ட நீ இங்ஙனம் மிகுதியும் அழகாக உரைப்பதில் ஆச்சர்யம் என்ன இருக்கின்றது? 'என்னைப் புகழ்ந்து என்ன உபயோகம்? நீ மனந்தாழப் பெறிலன்றோ விபீஷணனை அங்கிகரிப்பது' என்கிறாயோ? உன் மனத்திற்குமாத்ரமேயன்றிக் கொல்லவேண்டுமென்றிருந்த என் மனத்திற்குங்கூட விபீஷணன் பரிசுத்தனாகவே தோற்றுகின்றனன். என் மனத்தைப் பற்றி மாத்ரமேயன்று; ஹனுமானும் நீயும் சொன்ன யுக்திகளைப் பற்றியும் இவனுடைய மனக்கருத்தை வெளிப்படுத்துகிற முகத்தெளிவு முதலிய அடையாளங்களைப்பற்றியும், ஆர்த்தத்வனியால் (துக்கத்தை வெளியிடுங் கண்டஸ்வரத்தினால்,) திகழ்கின்ற ம்ருது ஸ்வபாவத்தைப்பற்றியும், நான் கொல்லவேண்டுமென்னும் பொழுதும், நீ கைவிடமாட்டேனென்னும் பொழுதும் ஒரே ரீதியாயிருக்கிற இவனது நிலைமையைப் பற்றியும் உள்ளும் புறமும் இவனை நன்றாகப் பரீக்ஷித்தாய்விட்டது. ஆகையால் ராகவா! மஹாப்ராஜ்ஞனாகிய விபீஷணன் சீக்ரமாக எங்களோடு கலந்து ஒத்திருப்பானாக. எங்களுக்கு ஸ்னேஹிதனுமாவானாக' என்றனன். அனந்தரம் நரேஸ்வரனாகிய ராமன் ஸுக்ரீவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, உடனே அவ்வானரஸ்ரேஷ்டன் போய், தான் அபயங் கொடுத்து வரச்சொன்ன வார்த்தையை விபீஷணனுக்குச் சொல்லி அழைத்துக்கொண்டு வரு

கையில், தேவேந்த்ரன் கருத்மானுடன் கலப்பதுபோல் ராமன் சீக்ரமாக விபீஷணனோடு கலந்தனன். பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமவிபீஷண ஸமாகமமும், ஸ்ரீராமன் வானர மத்யத்தில் விபீஷணனை லங்காதிபதியாகப் பட்டாபிஷேகஞ்செய்தலும், ஸமுத்ரத்தைத் தாண்ட ஆலோசித்தலும்.

ரகுகுலாலங்காரனாகிய ராமன் அபயங்கொடுத்தவுடனே, மஹாப்ராஜ்ஞனும் ராவணன் தம்பியுமாகிய விபீஷணன் இஷ்ட ஸித்தியைப்பற்றி ஸந்தோஷமுற்றுத் தன்னிடத்தில் பக்தியுடைய [1] அநுசரர்களோடு கூட, காலை முன்வைப்பது தகாதென்று மூன் சரீரத்தை மிகுதியும் வினயத்துடன் வணக்கி, ராமனைச் சுற்றிலும் நிறைந்திருக்கிற ஸைன்யத்தின் இடையில் மந்த்ரிகள் தனக்கு ஒதுங்கிக் கொடுத்த பூமியை உற்றுப் பார்த்துக்கொண்டு ஆகாயத்தினின்று இறங்கினன். சரணாகதி தர்மத்தில் ஸ்திரபுத்தியுடைய அவ்விபீஷணன் ரக்ஷகனை அபேக்ஷித்து நான்கு ராக்ஷஸர்களோடு ராமனது பாதாரவிந்தங்களில் விழுந்தனன். அங்ஙனம் விழும்பொழுது எல்லோரும் ஒருமிடற்றராயிருக்கிற அந்த வானரஸபையில் விபீஷணன் சரண்யனாகிய ராமனையே நன்றாக உற்றுப் பார்த்து சரணாகதிக்கு அங்கமாகிய ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலிய தர்மங்களோடு கூடினதும், ஸமர்த்தனும் தயாளுவுமாகிய சரண்யனைப் பற்றினதாகையால் தகுந்திருப்பதும், முன்பு ஸுக்ரீவாதிகளின் செவிக்குக் கடோர

---

1. பின்தொடர்ந்து வந்தவர்களோடு.

மாயிருப்பினும் இப்பொழுது அவர்களெல்லோர்க்கும் மிக்க ஸந்தோஷத்தை விளைப்பதுமான வசனத்தை மொழியத்தொடங்கி, 'நான் ராவணனுடைய தம்பி. அவன் என்னை அவமானித்தனன். ஆகையால் ஸமஸ்த பூதங்களுக்கும் ரக்ஷகனாகிய உன்னைச் சரணம் அடைந்தனன். நான் என் வாஸஸ்தானமாகிய லங்கையையும் ஸ்நேஹிதர்களையும் அவரால் வரும் தனங்களையும் துறந்து, நீயே கதியென்று வந்தனன். இனி என் ராஜ்யமும் என் ப்ராணனும் என் ஸுகங்களும் உன்னதினமே' என்றனன். அவ்விபிஷணன் அங்ஙனம் தன் பாரத்தையெல்லாம் ராமனிடத்தில் வைத்துச் சொன்ன வார்த்தையைக் கேட்டு, அவனைப் பார்த்து, 'சரணம்' என்றபொழுதே உன்னை அங்கீகரிக்கவேண்டும்; இதுவரையில் தாமதஞ் செய்த குற்றத்தைப்பொறுப்பாயாக' என்று இனிய உரைகளால் ஸமாதானப்படுத்தி, அவன் மனத்தைக் குளிரச்செய்து கண்களால் பருகுபவன் போல் அவனைமிக்கஆதரத்துடன் பார்த்துக்கொண்டே 'எனக்கு ராக்ஷஸரது பலாபலங்களை உண்மையாகச் சொல்வாய்' என்று ராமன் வினவினன். பிறகு விபீஷணன், எத்தகைய கார்யத்தையும் அநாயாஸமாக நிறைவேற்றவல்லவனாகிய ராமன் மொழிந்த வசனத்தைக் கேட்டு ராவணனுடைய பலத்தை யெல்லாஞ் சொல்லத் தொடங்கினன். 'ராஜகுமாரனே! ராவணன் ப்ரஹ்மதேவனிடத்தினின்று வரம் பெற்றிருக்கையால் கந்தர்வர்க்கும் அஸுரர்க்கும் ராக்ஷஸர்க்கும் மற்றுமுள்ள ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அவனைக் கொல்ல முடியாது. ராவணனுக்குப் பின்பு மிகுந்த வீர்யமுடைய கும்பகர்ணன் எனக்குத் தமையனாகவேண்டும். அவன் மிகுந்த வீர்யமுடையவன்; யுத்தத்தில் தேவேந்த்ரனைப்

போல் மஹா பலமுடையவன். ராமா! அந்த ராவணனுக்கு ஸேனாபதி ப்ரஹஸ்தன். கைலாஸத்தில் நடந்த யுத்தத்தில் அவன் மாணிபத்ரனை வென்றனன். அவனை ஹனுமான்மூலமாய் நீ கேட்டிருக்கலாம். ராவணனுடைய புதல்வனாகிய இந்த்ரஜித்து எப்பொழுதும் பாணப்ரயோகஞ் செய்து கொண்டிருப்பவனாகையால் காணடி படாதிருக்குமாறு கைவிரல்களுக்கு உடும்புத் தோலால் செய்த கவசத்தையும் உடம்புக்குப் பிளக்க முடியாத பெரியகவசத்தையும் பூட்டிக்கொண்டு, வில்லை ஏந்தி யுத்தத்தில் நின்றிருந்தும் கண்ணுக்குப் புலப்படாமலிருப்பான். 'கண்ணுக்குப் புலப்படாதிருத்தல் எப்படி' என்கிறாயோ? ராமா! அவன் அக்னியை ஹோமங்களால் த்ருப்தி அடையச்செய்து யுத்தஸமயத்தில் இயற்றப்பட்ட ஸேனாவ்யூஹங்களில் அவ்வக்னியின் ப்ரபாவத்தால் பகைவரது கண்ணுக்குப் புலப்படாமலே அவர்களைக் கொல்வான். மஹோதரன் மஹாபார்ஶ்வன் ராக்ஷஸத்தன்மையிலுறுதியுள்ள அகம்பனன் என்கிற இம்மூன்று ராக்ஷஸர்கள் அவனுடைய ஸேனாபதிகள்; யுத்தத்தில் லோகபாலர்களுக் கொப்பாயிருப்பர். காமரூபர்களும் மாம்ஸத்தையும் ரக்தத்தையுமே ஆஹாரமாக உடையவருமாகிய இப்படிப்பட்ட ராக்ஷஸர் பதினாயிரங்கோடிப்பேர் லங்காபுரத்தில் இருக்கின்றனர். ராஜாவாகிய ராவணன் இவர்களோடு கூடியே லோகபாலர்களுடன் யுத்தஞ்செய்தனன். யுத்தஞ்செய்தமை மாத்ரமே அன்று; மஹாதீரனாகிய ராவணன் அந்தலோகபாலரையும் அவர்களுக்கு ஸஹாயமான தேவதைகளையும் தோல்வி அடையச்செய்தான்' என்றனன். திடமான பராக்ரமமுடைய ராமன் விபீஷணன் மொழிந்ததைக் கேட்டு, எல்லாவற்றையும்

மனத்தில் நன்கு ஆலோசித்து அவனைப் பார்த்து 'விபீஷணு! ராவணன் ஸௌர்யத்தினல் எவ்வெவ்வகைக் கார்யங்கள் செய்தானே, அவற்றை யெல்லாம் உள்ளபடி மொழிந்தனை. அவையெல்லாம் எனக்குத் தெரியும். ஆயினும் நான் அவற்றை ஒரு பொருள் செய்யேன்; அவற்றை யெல்லாம் ஸௌர்யகார்யங்களாக நான் நினைக்கமாட்டேன். நான் ராவணனையும் ப்ரஹஸ்தனையும் ராவண பந்துக்களையும் கொன்று உன்னை அரசனுகச் செய்ய ஸித்தமாயிருக்கின்றேன். இது உனக்கு ஸத்யமாகச் சொல்லுகிறேனன்றிப் பரிஹாஸ வார்த்தையன்று. ராவணன் பூமியின் சந்துகளிலாவது பாதாளத்திலாவது புகினும், தனக்கு வரங்கொடுத்த ப்ரஹ்மதேவனிருக்கும் ஸத்யலோகத்திற்குப் போயினும் ப்ராணன்களோடு என்னிடத்தினின்று தப்புவித்துக் கொள்ள வல்லனல்லன். நான் யுத்தத்தில் ராவணனை அவனது புதல்வர்களோடும் ஸைன்யங்களோடும் பந்துக்களோடும் கொல்லாமல் அயோத்யைக்குப் போகேன். இங்ஙனம், ப்ரஸித்தர்களான என் தம்பிகள் மூவர்மேலும் ஆணையிடுகிறேன்' என்றனன். எத்தகைய கார்யத்தையும் அனுயாஸமாகச் செய்து முடிக்குந் திறமையுள்ள அந்த ராமன் இங்ஙனம் மொழிந்த வார்த்தையைக் கேட்டுச் சரணுகதி தர்மநிஷ்டனுகிய விபீஷணன் தலைவணங்கி நமஸ்கரித்துச் சொல்லத் தொடங்கி, 'நீ ராக்ஷஸர்களைக் கொல்லும்பொழுது நான் ஸஹாயஞ் செய்கிறேன்; லங்கையையும் என்பலமுள்ளவளவும் எதிர்த்துத் தகைகிறேன். சத்ருஸைன்யத்தை என்னுற்கூடியமட்டும் எதிர்த்துச் சண்டை செய்கிறேன்' என்றனன். இங்ஙனம் மொழிகின்ற விபீஷணனை ராமன் அழுந்தக் கட்டியணைத்து ஸந்தோஷ

முற்று, லக்ஷ்மணனைப் பார்த்து, 'ஸமுத்ரத்தினின்று ஜலங்கொண்டு வருவாயாக. அந்த ஜலத்தினால் மஹாப்ராஜ்ஞனாகிய விபீஷணனை ராக்ஷஸராஜனாக, அவன் விரும்பாமற்போயினும் எனக்கு அங்ஙனஞ் செய்ய வேண்டுமென்னும் அனுக்ரஹம் உண்டாயிருக்கையால், அபிஷேகஞ் செய்வாயாக. நான் அருள் புரியில் அதற்குத் தகுந்த பலனைக் கொடுத்து வெகுமதிப்பவன் நீயே' என்றனன். ராமன் இங்ஙனம் மொழிந்தவுடனே லக்ஷ்மணன் ராஜாஜ்ஞையைப்பற்றி வானரஸ்ரேஷ்டர்களிடையில் விபீஷணனை ராக்ஷஸராஜனாக அபிஷேகஞ் செய்தனன். ராமன் அங்ஙனம் விரைவில் விபீஷணனிடத்தில் காட்டின அனுக்ரஹத்தைப் பார்த்து வானரர்கள் எல்லோரும் பரம ஸந்தோஷத்தினால் இரைச்சலிட்டுக்கொண்டு மஹானுபாவனாகிய ராமனை 'நல்லது நல்லது' என்று புகழ்ந்தனர். பிறகு மற்றொரு ஸமயத்தில் ஏகாந்தத்தில் ஹனுமானும் ஸுக்ரீவனும் ஸமுத்ரத்தின் துறையறிந்த விபீஷணனைப் பார்த்து, 'ஸமுத்ரத்தைத் தாண்டுவோமென்றால் அதைக்கலக்க எவர்க்குந் தரமல்லாமல் மிகுதியும் அகாதமாயிருக்கின்றது. அது வருணனுக்கு வாஸஸ்தானமல்லவா? ஆகையால் மஹாபலமுடைய வானர ஸைன்யங்களோடு நாம் எவ்வண்ணம் தாண்டுவோம்? நாமெல்லோரும் ஸைன்யங்களோடுகூட நத நதீபதியும் வருணனுக்கு வாஸஸ்தானமுமான ஸமுத்ரத்தைச் சீக்ரமாக எந்த உபாயத்தினால் தாண்டக் கூடுமோ, அந்த உபாயம் எமக்குத் தோற்றவில்லை. நீயே சொல்லவேண்டும்' என்றனர். தர்மஜ்ஞனாகிய விபீஷணன் அவர்கள் அங்ஙனஞ் சொல்லக்கேட்டு, அவர்களை நோக்கி, 'ரகுகுலதிலகனும் ராஜனுமாகிய ராமன் ஸமுத்ரத்தைச் சர

ணம் அடையவேண்டும். இம்மஹாஸமுத்ரம் ராமனது கூடஸ்தனுகிய ஸகரனுல் தோண்டுவிக்கப்பட்டு, அளவிட முடியாதபடி வளர்ந்திருக்கின்றது. ஆகையால் அவன் அந்த உபகாரத்தை நினைத்துச் சரணமென்பதை வ்யாஜமாகக்கொண்டு அவ்வுபகாரத்திற்கு ப்ரதியாக ராம கார்யமென்றறிந்து இதைத் தவருமற் செய்யவேண்டியவனே' என்றனன். ராக்ஷஸனுகையால் இடமறிந்தவனும், பண்டிதனுகையால் அப்பொழுதைக்குத் தகுந்த புத்தியுடையவனுமாகிய விபீஷணன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு ஸுக்ரீவன் ராமனும் லக்ஷ்மணனும் இருக்குமிடத்திற்கு வந்தனன். அகன்று அழகான கழுத்தையுடைய ஸுக்ரீவன், 'ராமன் ஸமுத்ரத்தைச் சரணம் அடையத்தகு'மென்று விபீஷணன் சொன்ன சுபவசனத்தை அவனுக்கு மொழிந்தனன். ராமன் இயற்கையாகவே தார்மிகனுகையால் தர்மிஷ்டமான அந்த ஸமுத்ரஸரணுகதிக்கு ஸம்மதித்தனன். ராமன் அப்பொழுது ஸந்தோஷாதிஸயத்தினுல் வடிவில் புகர் மேன்மேலும் படரப் பெற்றுத் தானே கார்யங்களை நிறைவேற்றிக்கொள்ள வல்லவனுயினும் விபீஷணனுடைய ஆலோசனையை வெகுமதிக்கும்பொருட்டு வானர்தலைவனுகிய ஸுக்ரீவனையும் லக்ஷ்மணனையும் பார்த்துப் புன்னகையுடன் 'லக்ஷ்மண! விபீஷணன் சொன்ன இவ்வாலோசனை எனக்கு ஸம்மதமாயிருக்கின்றது. உனக்கும் ஸுக்ரீவனுக்கும் இதுவே இஷ்டமாயின் உங்கள் அபிப்ராயத்தை மொழிவீர்களாக. ஸுக்ரீவன் எப்பொழுதும் ஆலோசனைகளில் ஸமர்த்தன். நீயும் மந்த்ராலோசனைகளில் பயின்று தீர்ந்தவனே. உங்களிருவர்க்கும் எது இஷ்டமோ, அதை நிச்சயித்து எனக்குச் சொல்வீர்களாக' என்றனன். ராமன் அவ்

வாறு கூறுகையில், வீரர்களான லக்ஷ்மண ஸுக்ரீவர்கள் இருவரும் கைகுவிப்பதுமுதலிய உபசாரங்களோடு 'புருஷ ஸிம்ஹனே! மற்றெந்த உபாயமும் தோற்ருத இந்த ஸமயத்தில் விபீஷணன் ஸுகமாகக் கார்யம் நிறைவேறும்படி மொழிந்த இவ்வுபாயம் எங்களுக்கு ஏன் இஷ்டமாயிராது? பயங்கரமாகி வருணனுக்கு வாஸஸ்தானமுமாகிய இம்மஹாஸமுத்ரத்தில் அணை கட்டாமல் தேவாஸுரர்களுக்கும் தேவேந்த்ரனுக்கும் லங்காபுரியுள் ப்ரவேசிக்க முடியாது. இனி நம்மைப்போன்றவர்க்குச் சொல்ல வேண்டுமா? ஆலோசனைகளில் சூரனுகிய விபீஷணன் சொன்ன இவ்வார்த்தை யதார்த்தமே. ஆகையால் இங்ஙனம் செய்யலாம். காலதாமதஞ் செய்யவேண்டாம்; போதும். நாம் ஸைன்யங்களோடுகூட ராவணன் பரிபாலித்து வருகிற லங்காபுரிக்குப் போய்ச்சேரும்படி இந்த ஸமுத்ரத்தை வேண்டிக்கொள்வாயாக' என்றனன். அவர்கள் இங்ஙனம் மொழிகையில் அப்பொழுது ராமன் நதநதீபதியான ஸமுத்ரத்தின் கரையில் தர்ப்பங்களைப் பரப்பி, அதின் மேல், வேதிகையில் அக்னிபோல் சயனித்துக் கொண்டனன். பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.



ராமன் ஸைன்யங்களோடு ஸமுத்ர தீரத்திற்கு வந்ததைச் சார்த்தூலன் மூலமாய் ராவணன் கேட்டு, ஸுக்ரீவனை ராமனிடத்தினின்று வேறுபடுத்துவதற்குச் சுகனை அனுப்ப, அவனை வானரர்கள் அடிப்பதும், ராமன் வேண்டாமென்று தடுத்தலும்.

அனந்தரம் மிகுந்த வீரத்தன்மையுடைய சார்த்தூலனென்கிற ஓர் அரக்கன் வந்து, ஸுக்ரீவனுல் காக்

கப்பட்டு ஸமுத்ரக்கரையில் இறங்கியிருக்கும் வானர ஸைன்யத்தைக் கண்டனன். அவன், அல்லாத காலத்தில் சார புருஷனை அனுப்பின துர்ப்புத்தியும் ராக்ஷஸர் தலைவனுமாகிய ராவணனுடைய சாரன். அவ்வரக்கன் அங்ஙனம் மனவூக்கத்துடன் அவ்வானரஸைன்யத்தையெல்லாம் நாற்புறத்திலும் உள்ளபடியே கண்டு, மீளவும் வேகமாக லங்கைக்குப் போய் ராவணனைப் பார்த்து, அதோ குரங்குகளும் கரடிகளும் நிறைந்த ராமஸைன்யம் அகாதமும் அளவிறந்ததுமாகிய இரண்டாவது ஸமுத்ரம்போல் விளக்கமுற்று லங்கையின்மேல் எதிர்த்து வருகின்றது. தசரதமஹாராஜனுடைய குமாரர்களான ராமலக்ஷ்மணர்கள் இருவரும் மேலான ஆயுதங்களை ஏந்தி ஸீதையிருக்கும் இடத்திற்கு வருவதாயிருக்கின்றனர். பேரொளியுடன் ஜ்வலிக்கின்ற அவ்விருவரும் ஸமுத்ரத்தைச் சேர்ந்து, அங்கே இறங்கியிருக்கின்றனர். வானரஸைன்யம் நாற்புறத்திலும் எங்குப் பார்க்கிலும் பத்து யோஜனை வரையிலும் பூமியை மறைத்துக்கொண்டிருக்கின்றது. மஹாராஜனே! நான் ஸாமான்யமாகப் பார்த்து வந்தனன். உள்ளபடி விரைவில் அதின் ஸங்கதியை நீ தெரிந்துகொள்வது யுக்தம். ஆகையால் உன் கட்டளைப்படி தூதர்கள் விரைவாகச் சென்று அவர்களை நன்றாகத் தெரிந்துகொண்டு வர வேண்டும். இவ்விஷயத்தில் [1]தானத்தையாவது ஸாமத்தையாவது பேதத்தையாவது உபயோகப்படுத்துவாயாக. தண்டோபாயத்திற்கு அவகாசமேயில்லை' என்றனன். ராக்ஷஸேஸ்வரனான ராவணன் சார்த்தூலன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, உடனே தாமதஞ் செய்யாமல் ஊக்கம் மிகப்பெற்றுத் தான் செய்யவேண்

1. தானம்-கொடுத்தல். ஸாமம்-நல்வார்த்தை

டிய கார்யம் இன்னதென்று நிச்சயித்துக் கொண்டு அப்பொழுது கார்யத்தை அறிந்தவர்களெல்லோரினும் சிறந்தவனாகிய சுகனென்னும் ராக்ஷஸனைப்பார்த்து, 'நீ வானரர் தலைவனான ஸுக்ரீவனைப் பார்த்துப் பருஷமாயிராமல் ம்ருதுவாயிருப்பதும் இனிதுமாகிய உரைகளை இங்ஙனம் மொழிவாயாக. சொல்லும்பொழுது நான் சொன்னதற்கு மேல்போகாமலும் பின்வாங்காமலும் தைர்யத்துடன் சொல்லவேண்டும். 'வானர மஹாராஜனே! நீ பெரிய குலத்தில் பிறந்தவன். ஆகையால் நிஷ்காரணமாக வைரம் வைத்துக் கொள்ளலாகாது. மற்றும், நீ மஹா பலமுடையவன். ஆகையால் நீ அற்ப பலனாகிய ராமனை அடுப்பது யுக்தமன்று. இவ்வளவேயன்றி நீ ப்ரஹ்மபுத்ரனாகிய ருக்ஷரஜஸ்ஸின் புதல்வன். ஆகையால் எனக்கு பந்துவாய் விட்டனை. அது அப்படியிருக்க, நீ ராமனை அடுப்பதால் பயன் யாதும் இல்லை; அடுக்காதபக்ஷத்தில் நஷ்டமும் கிடையாது. ஆகையால் வீண் வைரம் வைத்துக்கொள்வது யுக்தமன்று. எனக்கும் உன் தமையன் வாலிக்கும் மிகுதியும் ஸ்னேஹம் உண்டு. அந்த ஸம்பந்தத்தைப்பற்றி நீ எனக்கு உடன்தோன்றல்போல் ஆயினை. ஆகையால், வானரேஶ்வரா! ராமனை விட்டு என்னோடு நட்பு செய்வதே உரியது. 'ஸீதையைக் கொண்டுபோய் பெரிய அனர்த்தம் விளைத்தனையே' என்கிறாயோ? ஸுக்ரீவா! நான் ராஜகுமாரனாகிய அந்த ராமனுடைய பார்யையை அபஹரித்துக்கொண்டு வந்தேனாயின் வானரர்தலைவனாகிய உனக்கு அதனால் என்ன குறை? நீ புத்தியில் சிறந்தவன்; ஆலோசித்துப் பார். மற்றொன்றும் செய்ய வேண்டாம். நீ வெறுமனே கிஷ்கிந்தைக்குத் திரும்பி நடப்பாயாக. 'ஆரம்பித்த கார்யத்தை எப்படி

விடலாம்' என்கிருயோ? இவ்விலங்கைமா நகரம் [1]நரர்க்காவது வானரர்க்காவது எவ்விதத்திலும் ப்ரவேசிக்க முடியாதது. தேவதைகளும் கந்தர்வர்களும் புகவல்லரல்ல ரென்னில், இனி நரவானரர்களின் ஸங்கதியைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ?' என்று மொழிந்தேனென்று சொல்வாய்' என்றனன். ராக்ஷஸர் தலைவனுகிய ராவணன் அங்ஙனஞ் சொல்லியனுப்புகையில் அந்தச்சுகனென்னும் ராக்ஷஸன் பக்ஷியின் உருவம் தரித்து, விரைவில் ஆகாயத்தில் கிளம்பி ஸுக்ரீவாதிகள் இருக்கும் இடத்திற்கு வந்தனன். சுகன் ஸமுத்ரத்திற்குச் சிறிது மேலாக ஆகாச மார்க்கத்தில் வெகு தூரஞ் சென்று ஸுக்ரீவாதிகள் இருக்கு மிடஞ்சேர்ந்து ஆகாயத்திலேயே இருந்து ஸுக்ரீவனைப் பார்த்து துர்ப்புத்தியான ராவணன் சொன்ன வார்த்தைகளை யெல்லாம் ஒன்றையும் விடாமல் க்ரமமாகச் சொல்லினன். அங்ஙனம் சுகன் அவ்வார்த்தைகளைக் கேட்பித்துக் கொண்டிருக்கையில், வானரர்கள் அனைவரும் முட்டிகளால் குத்திச் சிறைகளை ஒடிக்கும் பொருட்டு விரைவில் ஆகாயத்தில் கிளம்பி அவனைச் சுற்றிக்கொண்டனர். அவர்கள் பலாத்காரமாக அந்த ராக்ஷஸனைப் பிடித்து ஆகாயத்தினின்று பூமியில் கபீலென்று விழும்படித் தள்ளினர். வானரர்கள் அங்ஙனம் ஹிம்ஸிக்கையில், சுகன் ராமனைப் பேர் சொல்லி அழைத்து, 'காகுத்ஸ்தா! தூதர்களை எவரும் கொல்லமாட்டார்களல்லவா? என்னை இவ்வானரர்கள் கொல்வதாயிருக்கின்றனர் ஆகையால், வேண்டாமென்று நன்கு தடுப்பாயாக. எவன் தன் ப்ரபு சொல்லியனுப்பின அபிப்ராயத்தைச் சொல்லாமல் தன்

1. நரர்-மனிதர்.



2589. வானரர்கள் சுகனை அடித்தலும் ராமன் வேண்டாமென்று தடுத்தலும்.

அபிப்ராயத்தைச் சொல்வானே, அவன் தனக்குச்சொல்லியனுப்பினதைச் சொல்லாத தூதனாவான்.' அப்படிப்பட்ட தூதனை மாத்ரம் கொல்வதே யுக்தம் என்றனன். சுகன் அங்ஙனம் புலம்பிக்கொண்டு சொல்லும் வார்த்தையைக் கேட்டு ராமன் கருணை கூர்ந்து, அவனை ஹிம்ஸிக்கின்ற வானரோத்தமர்களைப் பார்த்து 'இவனைக் கொல்ல வேண்டாம்' என்று ஆஜ்ஞாபித்தனன். அங்ஙனம் வானரர்களால் ஹிம்ஸித்து விடப்பட்ட அந்த ராக்ஷஸன் அபயம் பெற்று இறகுகள் பலவும் முறிந்து போகையால் சிறைகள் லேசாயிருக்கப்பெற்று வானரர்கள் பயங்காட்டுகையில் 'மீளவும் என்ன செய்வார்களோ' என்னும் பயத்துடன் ஆகாயத்தை அடைந்து ஸுக்ரீவனைப் பார்த்து, மீளவும் அவனுடன் 'ஸுக்ரீவா! நீ மிகுந்த யுக்தி யுடையவன், மஹா பலன்; மஹாபராக்ரமசாலி. ராவணன் லோகங்களையெல்லாம் அழுப்படுத்தும் ஸ்வபாவனாகையால் மறுமொழி தெரிந்துகொள்ளாமற் போவேனாயின், என்னைக் கொல்வான். ஆகையால் அவனுக்கு நான் என்ன சொல்ல வேண்டுமோ, அதைச் சொல்வாய்' என்றனன். அவன் அங்ஙனம் சொல்லுகையில் வானரர்க்கெல்லாம் அதிபதியும் வானரஶ்ரேஷ்டனும் மஹாபலனுமாகிய ஸுக்ரீவன் அப்பொழுது மனோதைர்யத்துடன் தழுதழுப்பின்றி கம்பீரமாக ராவணனது சாரனாகிய சுகனைப் பார்த்து, விரைவுடன் 'நீ எனக்கு நண்பனல்லை. ஆகையால் உன்னிடத்தில் எனக்கு தயை செய்யவேண்டிய அவஶ்யமில்லை. மற்றும், நீ எனக்கு எந்த உபகாரமும் செய்தவனல்லை. எனக்கு ப்ரியனுமல்லை. ஆகையால் உடன்தோன்றல்போல் எப்படி ஆவாய்? மற்றும் 'என் ஸ்னேஹிதனாகிய ராமனுக்கு நீயும் உன்னைச்

சேர்ந்தவர்களும் சத்ருக்களாகையால் நீ எனக்கும் சத்ருவே ஆவாய். உபகாராதிகளைப் பற்றி இல்லாமற் போயினும், வாலியுடன் ஸ்நேஹத்தைப் பற்றியாயினும் உடன்தோன்றல் போன்றவனாக மாட்டேனோ?' என்னில், என் சத்ருவாகிய வாலிக்கு நீ நண்பனாகையால் எனக்குச் சத்ருவே. ஆகையால் வாலியைப்போல் என்னால் நீ வதிக்கத் தகுந்தவனே. லங்கை புகமுடியாத தென்றனையே. உன்னையும், நீ ராக்ஷஸர்க்கு அரசனாகையால் உன் அபராதத்தைப்பற்றி உன் புதல்வர்களையும் பந்துக்களையும் தாயாதிகளையும் எல்லோரையும் கொன்று விடுகிறேன். பெரிய ஸைன்யத்துடன் சீக்ரத்தில் வந்து லங்காபுரத்தை யெல்லாம் நீறு செய்கின்றனன். 'நான் லங்கையில் இருந்தாலல்லவோ நீ அங்ஙனஞ் செய்வாய். மற்றோரிடத்திற்குப் போகின்றேன்' என்னில், ராவணா! நீ ஒன்றுமறியாத மூடன். தேவதைகள் தேவேந்த்ரனுடன் கலந்துவந்து உன்னைப் பாதுகாப்பார்களாயினும், நீ ஸூர்யத்வாரத்தை அடைந்து கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருப்பினும், பாதாளத்திற்குப் போயினும், ராமனிடத்தினின்று தப்புவித்துக் கொள்ளவல்லனல்லை. தப்பாமல் அவன் கையில் அகப்பட்டுச் சாவாய். ராமனது பாணங்களில் அகப்பட்ட உன்னை மூன்று லோகங்களிலும், தேவேந்த்ரனே காக்க வல்லமை யற்றிருக்க, இனி அவனைக்காட்டிலும் குறைந்த பிசாசனாவது கந்தர்வனாவது அஸுரனாவது ரக்ஷிக்கவல்லவன் எவனும் எனக்குப் புலப்படவில்லை. வயது முதிர்ந்து அஸமர்த்தனா யிருந்த ஜடாயுவைக் கொன்றனையே; அதில் உனக்கு என்ன ப்ரயோஜனம்? அதனால் உன்னை வீரனென்று 'சொல்லுவார்களோ? நான் அப்படிப்பட்டவனல்லேன். பார்யையைக்கொண்டு

வந்தபொழுது ஏதுஞ் செய்யமுடியாதிருந்த ராமன் இப்பொழுது என்ன செய்யப்போகிறான்' என்கிறாயோ? அகன்ற கண்களையுடைய அந்த ஸீதையை, ராமனாவது லக்ஷ்மணனாவது அருகே இருக்கும்பொழுது எடுத்துக்கொண்டு போயினையா என்ன? அவர்களில் ஒருவரும் இல்லாத ஸமயம் பார்த்தல்லவோ நீ அவளைத் திருடிக்கொண்டு போயினை. அங்ஙனம் அவளைக் கொண்டுவந்து அதனால் வரப்போகிற அனர்த்தத்தை அறியாதிருக்கின்றனையல்லவா? மஹாபலனும் மிகுந்த புத்தியுடையவனும் தேவதைகளுக்கும் எதிரிடக்கூடாதவனும் ரகுகுல திலகனுமாகிய ராமன் உன் ப்ராணன்களைப் பறிக்கப் போகிறவனென்று நீ அறியாய்' என்று உங்கள் ப்ரபுவான ராவணனுக்கு மறுமொழி கூறுவாயாக' என்றனன். அனந்தரம் வானரஸ்ரேஷ்டனும் வாலியின் புதல்வனுமாகிய அங்கதன் ஸுக்ரீவனைப் பார்த்து 'மஹாராஜனே! இவன் தூதனல்லன். ராவணனுடைய சாரனென்று எனக்குத் தோற்றுகிறது. இவன் இங்கேயே நம்மெதிரில் இருப்பதுபோலவே இருந்து நமது ஸேனையின் நிலைமையையெல்லாம் கண்டுகொண்டனன். இவனைப் பிடித்துக் கொள்வாய். லங்கைக்குப் போகவிடலாகாது. இதுவே எனக்கிஷ்டமாயிருக்கின்றது' என்றனன். அனந்தரம் ராஜனாகிய ஸுக்ரீவனது கட்டளையின்படி வானரர்கள் ஆகாயத்திற் கிளம்பி அநாதன்போல் புலம்புகின்ற அந்தச் சுகனென்னும் அரக்கனைப் பிடித்துக் கட்டிப் போகட்டனர். மிகுதியும் கோபிஷ்டரான வானரர்கள் அங்ஙனம் பிடித்து ஹிம்ஸிக்கையில்' சுகன் ராமனைக் குறித்து 'மஹானுபாவா! தசரத குமாரா!' என்று பேரைச்சொல்லிக் கதறி, 'மிகுந்திருக்கிற என் சிறைக

ளைப் பலவந்தமாகப் பிடித்து இழுக்கின்றனர். என் கண்களைப் பிடுங்கிப் போகடுகின்றனர். நான் அபராதஞ் சிறிதுமறியாத தூதனுகையால் இங்கு வானரர்களால் ஹிம்ஸிக்கப்பட்டு ப்ராணன்களை விடுவேனாயின், நான் பிறந்த நாள் முதற்கொண்டு சாகுந்தினம் வரையிலுள்ள மத்யகாலத்தில் எந்தெந்தப் பாபங்களைச் செய்திருப்பேனே, அவை யெல்லாம், அங்ஙனம் கொல்வித்த உன்னையே சேரும்' என்று உரக்கக் கதறினன். அப்பொழுது, ராமன் சுகனுடைய அழுகுரலைக் கேட்டு அவனைக் கொல்லவொட்டாமல் வானரர்களைப் பார்த்து 'வந்த தூதனை அவிழ்த்து விடுவீர்கள்' என்று ஆஜ்ஞாபித்தனன். இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

———

ராமன் தர்ப்பசயனத்தில் மூன்று இரவுகள் இருந்து ஆராதித்தும் ஸமுத்ரன் அருள்புரியாதிருக்கச் சினந்து பாணப்ரயோகத்திற்கு முயலுதலும் லக்ஷ்மணன் வேண்டாமென்று தடுத்தலும்.

அப்பால், ஸமஸ்த பூதங்களுக்கும் ரக்ஷகமான ரகுகுலத்தில் பிறந்த ராமன், பறல்கள் உறுத்தும்படியான ஸமுத்ர தீரத்தில் கூறிய நுனியுடைய தர்ப்பங்களைப் பரப்பி மஹாஸமுத்ரத்திற்கு அஞ்சலி செய்து ஸர்ப்பத்தின் உடல்போல் மிகவும் மிருதுவான [1] பாஹுவைத் தலையணையாக வைத்துக்கொண்டு கிழக்குமுகமாகி மஹாஸமுத்ரத்திற் கெதிரில் இருக்கிற மற்றொரு ஸமுத்ரம்போல் புலப்பட்டுக்கொண்டு சத்ருக்களுக்கு அப்பொழுதும் அணுக முடியாதவனுகத் தோன்றிப் படுத்துக்கொண்டனன். ஸ்ரீராமனுடைய வலபுஜம்

1. பாஹு—புஜம்—கை.



2592. ராமன் தர்ப்பசயனத்திலிருந்து ஸமுத்ர ராஜனைச் சரணமடைதல்.

முன்பு அயோத்யையில் இருக்கும்பொழுது ஸ்வர்ண மயமான பற்பல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதும், சிறந்த பொற்ருெடிகளேயும் முத்துமாலேகளேயும் அணிந்து [1] சிறந்த மடந்தையர்களின் ஹஸ்தங்களால்

1. இங்கு 'ஹஸ்தைஃ பாமநாரீணாமபிம்ருஷ்டமநேகதா' என்று ராமனது புஜம் பல உத்தம ஸ்த்ரீகளால் பிடிக்கப்பட்டதென்று சொல்லுகையால், ராமனுக்கு ஸீதையைக்காட்டிலும் வேறு பார்யைகளும் உண்டென்று சிலர் கூறுவர். அது ஸரியன்று. பால காண்டத்தில் எங்கும் ராமன் மற்ருெரு பார்யையை மணம் புரிந்ததாகச் சொல்லவில்லே. மற்றும் 'ராமஸ்து ஸீதயாஸார்த்தம் விஜஹார பஹூந்ருதூந்। மநஸ்வீ தத்கதஸ்தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பிதஃ' என்று ஸீதையோடு இடைவீடில்லாத போகமே சொல்லப்பட்டது. ஆனதுபற்றியே ஸீதையும் 'ஸமா த்வாதஸ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஸநே। புஞ்ஜாநாமாநுஷாந் போகாந் ஸர்வகாம ஸம்ருத்திநீ' என்ருள். இங்கு 'ஸமா த்வாதஸ' என்ற இவ்விரண்டாம் வேற்றுமை அத்யந்த ஸம்யோகத்தைக் காட்டுகிறது. அதாவது, பன்னிரண்டு வருஷங்கள் இடைவீடின்றி ராமனேடு போகங்களே அனுபவித்தேனென்றபடி. இப்படி ஸீதை நிரந்தரமான போகத்தைச் சொன்னபடியால் மற்ருெரு பார்யைக்கு இடமில்லேயே. ஆயினும் 'ராமஸ்ய தயிதா பார்யா' (ராமனுக்கு ப்ரியமான பார்யை) என்பதில் (ப்ரியமான) என்று விசேஷணம் இடுகையால், அவ்வளவு ப்ரியமல்லாத பார்யைகளும் இருக்கக்கூடும். 'ரோஹிணீயதா' என்று நக்ஷத்ரங்களில் ஒருத்தியாகிய ரோஹிணியை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகையால் பல பார்யைகளில் ஒருத்தியாக ஸீதை இருந்தமை தோற்றுகிறது. ஆகையால் ராமனுக்கு வேறு பார்யைகளும் உண்டென்றமை ஏற்படுகிறது' என்னில் அப்படி அன்று; 'தயிதோ ப்ராதுஃ' என்று லக்ஷ்மணனே ப்ரியனுகச் சொன்னுற்போல் கண்டுகொள்வது. இங்குத் தன்னேப் பின்ருெடாத் தகுந்தவளன்றென்று தெரிவிக்கைக்காக (தயிதா) என்ற விசேஷணம் இடப்பட்டது. 'தயிதோ ப்ராதுஃ' என்ற இடத்தில் லக்ஷ்மணனே ராமனுக்கு ப்ரியனென்னில்—மற்ற தம்பிகள் அப்படியல்லவென்று அபிப்ராயம் தோற்றும். அப்படியாயின் 'தாமேவேக்ஷ்வாகு நாயஸ்ய

ஸ்னுன அலங்காராதி ஸமயங்களில் பலவகைச் சந்தன அகுரு குங்குமாதிகளைக் கொண்டு நலங்கிடுதல் பூசுதல்

ஹாதஸ்ய கயாம் குரு' 'நஸர்வே ஹி ராதாஸ்தாத ஹவந்தி ஹாதோபமா:' என்ற பாதனும் ராமனுக்கு ப்ரியனென்று ஏற்படுகையால் இத்தோடு விரோதம் வரும். ஆகையால் 'ஒயிதா' என்ற விசேஷணத்தினால் பலரில் ஒருவளே ப்ரியமென்று அபிப்ராயங் கொள்ளாமல், ராமனுக்குள்ள ப்ரீதியின் மிகுதியாலும் ஸௌகுமார்யாதிசயத்தினுலும் ராஜக்ருஹத்திலேயே இருந்து திவ்ய ஸுகங்களை அனுபவிக்க வேண்டியவராயிருந்தும் ஸீதாலக்ஷ்மணர்கள் ராமனைப் பின் சென்றூர்களென்று கருத்து கொள்ளவேண்டும். 'ரோஹிணீ' என்ற இடத்தில் சொல்லப்பட்ட ரோஹிணி வேறொருத்தியேயன்றி ப்ரஸித்தையான ரோஹிணியன்று. ஏனெனில்-ரோஹிணி சந்த்ரனைத் தினந்தோறும் பின்றொடர்கிறதில்லை. ஆயினும் 'ஹ்ருஷ்டா: வலு ஹவிஷ்யந்தி ராமஸ்ய பரமா: ஸ்த்ரிய:। அப்ரஹ்ருஷ்டா ஹவிஷ்யந்தி ஸ்நுஷாஸ்தே ஹாதக்ஷயே' என்று மந்தரை கைகேயியைப் பார்த்து ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்குமாயின் அவனுடைய உத்தமவனிதைகள் ஸந்தோஷிப்பார்களென்றும், பரதன் க்ஷீணிக்கையால் உன் மருகியர் ஸந்தோஷத்தை இழந்திருப்பார்களென்றும் சொல்லினள். 'ஸ்நுஷா:' என்று கைகேயியின் மருகிக்குப் பதிலாகச் செல்லப்பட்டவர்கள் ராமனது பார்யைகளாகவேயிருக்க வேண்டுமென்றி, அவனைச் சேர்ந்த கௌஸல்யாதிகளாகமாட்டார்கள். ஆகையால் ராமனுக்குப் பல பத்னிகள் உண்டு. ஸுந்தர காண்டத்திலும் 'ஸ்த்ரீபிஸ்து மந்யே விபுலேக்ஷணாபிஸ்த்வம்ரம்ஸ்யஸே வீதஹய: க்ருதார்த:' என்று ஸீதை ராமனைப் பல பெண்மணிகளோடு விளையாடுபவனுகச் சொல்லினள். இங்கு 'ஹுமாஜை: பரமநாரீணாம ஹிம்ருஷ்டமநேகய:' என்று சொல்லப்பட்டது. ஆகையால் பத்னிகள் பலர் உண்டென்று தெரிகிறது' என்னில்—அப்படி அன்று. 'ராமஸ்ய பரமா: ஸ்த்ரிய:' என்று ராமனைச் சேர்ந்த கௌஸல்யை ஸீதை இவர்களுடைய தாஸீ ஜனங்கள் முதலியவரே சொல்லப்பட்டனர். அல்லது-பாதனுக்குப் பல பார்யைகள் இருந்ததாக ப்ரமாணமில்லாமையால் 'தே ஸ்நுஷா:' (உன் மருகியர்கள்) என்று கௌரவத்தைப்பற்றி, கைகேயியின் மரு

பிடித்தல் முதலியன செய்யப் பெற்றிருந்தது; முன்பு சந்தனம் அகுருமுதலிய வாஸனைகள் கமழப்பெற்றிருந்தது; மற்றும் பாலஸூர்யன்போன்ற செஞ்சந்தனம் பூசப்பெற்று ரமணீயமாயிருக்கும்; முன்பு ஹம்ஸதூலிகா

---

மகளான பரதனது பார்யை ஒருத்திக்கே பன்மைசொல்லப்பட்டது. கௌரவத்தைப் பற்றி ஒருமையிலும் பன்மை வழங்கி வருவது வெளிச்சமே. அப்படியே 'ராமஸ்ய பரமா꞉ ஸ்த்ரிய:' என்று ராமனது பார்யையாகிய ஸீதைக்கும் பன்மை சொன்னதாயிருக்கக்கூடும் 'த்வம் ரம்ஸ்யஸே' என்கிற இடத்தில் ஸீதை, தான் ராவணனால் கொல்லப்பட்ட பின்பு ராமன் வேறு பார்யைகளை மணம் புரிந்து க்ரீடிப்பானென்று லோகரீதியைப் பற்றிச் சொன்ன வார்த்தையேயன்றி வேறன்று. 'ஹஸ்தை꞉ பரமநாரீணாம்' என்ற இவ்விடத்திலும் அலங்காரஞ் செய்யும் ஸ்த்ரீகளென்று பொருள் கூறுவது யுக்தம். அல்லது (ஹஸ்தை꞉ பரமநாரீணாம் அபிம்ருஷ்டம்) சிறந்த மாதரார்மணிகளின் மெல்லிய கரகமலங்களால் பிடிக்கத் தகுந்ததேயன்றிப் பிடிக்கப் பட்டதன்றென்றும் பொருள் கொள்ளலாகும். இங்குச் சொன்ன பரமநாரிகள் (உத்தமவனிதைகள்) ஸ்ரீ பூமி நீளைகளும் ஆகக்கூடும். ராமன் மாத்ரமே தன்னை மனுஷ்யனாக நினைத்திருக்கிறானன்றி ரிஷிமாத்ரம் ராமன் விஷ்ணுவென்பதையே வெளியிடுகிறார். 'ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந꞉' என்று பாலகாண்டத்தில் விஷ்ணுவே ராமனாக அவதரித்ததைச் சொல்லினர். ஆனால் ராஜஸூயம் அஶ்வமேதம் முதலிய யாகங்களைச் செய்வது பார்யையில்லாமல் மற்றொரு விதமாகப் பொருந்தாதாகையால் ராமனுக்குப் பலபத்னிகள் இருக்கவேண்டுமே என்னில்—இருந்தால் இருக்கட்டும். இங்கு அவர்க்கு ஸம்பந்தமில்லை. அவர்கள் கேவல தர்மத்திற்காக வரிக்கப்பட்டவராகையால் ராமனைத் தொடுவதற்கும் போகிப்பதற்கும் தகுந்தவரல்லர். வாஸ்தவத்தில் அவர்கள் உண்டென்று கற்பிப்பதும் ஸரியன்று. ஏனென்னில்—உத்தரகாண்டத்தில் ஸீதையின் ப்ரதிமையே யாகத்தில் பத்னீகார்யத்தை நிர்வஹித்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் ராமனுக்கு ஸீதையொருத்தி தவிர மற்ற பார்யைகள் இல்லையென்பதே ஸித்தாந்தமாயிற்று.

மஞ்சத்தில் இருக்கும்பொழுது கங்கா ஜலத்திலிருக்கிற தக்ஷகனுடைய சரீரம்போல் திரண்டுருண்டு நீண்டு ஸீதாதேவியின் திருமுடி தன்மேல் இடப்பெற்று விளக்கமுற்றிருக்கும்; கோபுரவாசலிலிருக்கிற உழல் தடிபோல் தடுக்கமுடியாததாகி என்றும் யுத்தத்தில் பகைவர்க்குச் சோகத்தை மேன்மேலும் வளர்த்திக்கொண்டிருக்கும்; நண்பர்களுக்கோ ஆநந்தம் விளைப்பதாகும். அது மிகுதியும் நீண்டு ஸமுத்ரம் வரையிலுள்ள பூமண்டலத்திற்கெல்லாம் ஒதுங்குமிடமாகி, அப்ரதக்ஷிணமாக பாணங்களை விடும்பொழுது நாண் அடிகளால் தோல் தேய்ந்து காய்ப்பு உண்டாகப் பெற்றதுமாயிருக்கும். இங்ஙனம் பெரிய இரும்புத் தடிபோன்றதும் ஆயிரமாயிரமாகப் பசுக்களைத் தானஞ்செய்து புகழ் பெற்றதும் சிறந்ததுமான தன் வலபுஜத்தை, ஸமர்த்தனும் மஹா பாஹுவுமாகிய ராமன் தலையணையாக வைத்துக்கொண்டு, [1] 'இப்பொழுது ஸமுத்ரராஜன் என்சரணாகதிக்கு இசைந்து வழிவிடுவானாயின், ஸமுத்ரத்தை அநாயாஸமாகத் தாண்டுகிறேன்; இல்லையாயின் இந்த ஸமுத்ரத்தை த்வம்ஸஞ் செய்து விடுகிறேன்' என்று புத்தியைத் திடமாக நிலைநிறுத்தி ஸ்நானாதிகளால் சரீரசுத்தியைப் பண்ணிக்கொண்டு மௌனவ்ரதமுடையவனாகி மனநியமத்துடன் சாஸ்த்ரங்களிற் சொல்லிய விதிப்படி ஸமுத்ரத்திற்கெதிரில் படுத்துக்கொண்

1. இங்கு 'அஜீயமே மரணம் வாபி தரணம் ஸாகரஸ்யவா' என்று மூலம். சிலர் 'இப்பொழுது எனக்கு மரணமாவது ஸமுத்ரத்தைக் கடத்தலாவது விளையுமாக' என்று பொருள் கூறுகின்றனர். ஸமுத்ரன் என்சரணாகதிக்கு இசையானாகில் நான் இப்படியேயிருந்து மரணம் அடைகிறேன். இசைந்தானாகில் ஸமுத்ரத்தைத் தாண்டுகிறேனென்று கருத்து. ஆயினும் நம் பூர்வசார்யர்கள் கூறுவது கீழ்ச்சொன்ன பொருளேயாம்.

டனன். அங்ஙனம் நியமங்களில் ஏமாறுதலன்றி அந்த ராமன் தர்ப்பங்கள் பரப்பின தரையின்மேல் சயனித்திருக்கையில், மூன்று இரவுகள் சென்றன. ராமன் நீதிகளை அறிந்தவனும் தர்மங்களில் ப்ரீதியுடையவனுமாகையால் அந்த ஸமுத்ரக் கரையில் இங்ஙனம் மூன்று ராத்ரிகள் சயனித்திருந்து நதிகளுக்கு அதிபதியான ஸமுத்ரராஜனை ஆராதித்தனன். ஸமுத்ரராஜன் தெளிவில்லாத மூடனாகையால், அப்பொழுது ராமன் பரிசுத்தனாகி நியமந்தவறாமல் தன்னை ஆராதிக்கினும் தான் ப்ரத்யக்ஷமாகவில்லை. பிறகு ராமன் ஸமுத்ரத்தின் மேல் சிறிது கோபமுற்றவனாகிக் கடைக்கண்கள் சிவக்கப்பெற்று, அருகில் தன்கோபத்தை அறிந்து புன்னகையுடன் இருக்கின்ற சுபலக்ஷணமுடைய லக்ஷ்மணனைப் பார்த்து 'ஸமுத்ரன் இன்னமும் தன்னைக் காட்டாதிருக்கின்றனன். இது இவன் கர்வம். கோபமில்லாதிருத்தல், அபராதங்களைப் பொறுத்தல், குடிலமில்லாமை, இனிதாகப் பேசுதல் இவை முதலிய ஸத்புருஷர்களின் குணங்கள், குணமில்லாதவரிடத்தில் காட்டப்படுமாயின், அவர்கள் அவனை அஸமர்த்தனென்று நினைப்பார்கள். ஆகையால் இல்லாத அஸாமர்த்யமே ஏற்படும். 'அவர்க்கு வல்லவர் எவர்' என்னில்—தெளிவில்லாத ஜனங்கள், தன்னைத் தான் ஸ்தோத்ரஞ் செய்பவனையும், தயையில்லாதவனையும், வஞ்சகனையும், எல்லோரையும் அடித்துத் துரத்துபவனையும், நல்லவன் கெட்டவன் என்று பாராமல் எல்லோரிடத்திலும் தண்டனை செய்பவனையும் ஸமர்த்தனாகக் கௌரவிப்பார்களேயன்றிச் சாந்தி முதலிய குணங்கள் அமைந்தவனை அங்ஙனம் கௌரவிக்கமாட்டார்கள். லக்ஷ்மணா! இவ்வுலகத்தில் நல்வார்த்தையால் பலிஷ்டனென்னும்

புகழ் விளையாது. நல்வார்த்தையால் பராக்ரமமுடையவ னென்னும் ப்ரஸித்தி உண்டாக நேராது. யுத்தத்தில் வெற்றியும் நல்வார்த்தையால் பெறமுடியாது. இவற் றிற் கெல்லாம் தண்டமே உபாயம். லக்ஷ்மணா! இப் பொழுது மகராமீன்களுக்கு இருப்பிடமான இம் மஹா ஸமுத்ரம், என் பாணங்களால் பிளக்கப்பட்டு மேல் மிதக்கின்ற மகரமீன்கள் முழுவதும் நிரம்பின ஜலமுடை யதாயிருக்கப்போகின்றது, பார். லக்ஷ்மணா! இதோ! பெருஞ்சரீரமுடைய ஸர்ப்பங்களின் பருத்த உடல்களை யும் யானைபோன்ற மஹாமத்ஸ்யங்களின் துதிக்கை களையும் அறுத்துத் தள்ளுகிறேன்; பார். இப்பொழுது பாணங்களை ப்ரயோகித்துப் பெரிய யுத்தம் நடத்திச் சங்குகளும் முத்துச் சிப்பிகளும் குவியல் குவியலாயிருக் கப்பெற்று, மீன்களும் முதலைகளும் நிறைந்ததாகிய ஸமுத்ரத்தை யெல்லாம் உலரச் செய்கிறேன். 'பொறு மையே வடிவாயிருக்கப் பெற்ற உன்னைப்போன்றவர் இங்ஙனம் உரைப்பது தகுமோ' என்கிறாயோ? பொறு மை யுண்டாகப் பெற்றிருக்கையாலல்லவோ, இந்த ஸமுத்ரன் பிறரை எதிர்பாராமலே கார்யத்தை நிறை வேற்றிக்கொள்ள வல்லவனாகிய என்னை அஸமர்த்த னாக நினைக்கின்றனன். சீ! இனிப் பொறுமை பொருந்து மோ? 'இக்ஷ்வாகு வம்சத்தரசர் எப்பொழுதும் பொறு மையை விடமாட்டார்கள்' என்கிறாயோ? ராக்ஷஸரோடு ஸஹவாஸமுடைய இப்படிப்பட்ட துர்ஜனன் விஷயத் தில் பொறுமையை உபயோகப்படுத்துவது யுக்தமன்று. கோபமே தகுமன்றி நல்வார்த்தை எவ்வளவு நடப் பினும் ஸமுத்ரன் எனக்குத் தன்னுருவத்தைக் காட்டுபவனல்லன். [1]லக்ஷ்மணா! தனுஸ்ஸையும் கொடிய

1. இங்கு 'சாபமாநய ஸௌமித்ரே ஶராம்ஶ்சாஶீவிஷோபமாந்!

ஸாகரம் ஸோஷயிஷ்யாமி பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா:' என்பது மூலம். ஸமுத்ரனைப் பார்த்து வரம் வேண்டின ராமன்' ஜட ப்ரக்ருதியாகிய அவன் வந்து முகம் காட்டாமையால் 'இவன் என்னை அஸமர்த்தனாக நினைக்கிறான்' என்று 'மீன் படுங்குட்டமான இது என்னை மதிக்கிறதில்லை. கொண்டுவா வில்லை' என்கிறான். (சாபமாநய) குணமில்லாத இவனை அடக்க, குணமுடைய வில்லைக் கொண்டுவா, (குணம்-நற்குணமும், நாணும்). (சாபமாநய) இவனுடைய இருமாப்பைப் போக்கும்படி வணக்கமுடைய வில்லைக் கொண்டுவா. இதின் கட்டைக் குலைக்கும்பொருட்டுக் கட்டுடைய வில்லைக் கொண்டுவா. (சாபமாநய) இது புல்லைக் கவ்வும்படி வில்லைக் கொண்டுவா. என்றவளவில் லக்ஷ்மணன் தான் படுக்கையாகையாலே படுக்கைப்பற்றான இவனைப் படைப்பற்றாக்க வொண்ணாதென்று கூசி நிற்கையில், (ஸௌமித்ரே) தாய்மார் சொன்னதைச் செய்யுமதொழிய தமையன்மார் சொன்னதைச் செய்யலாகாதோ என்கிறான். (ஸௌமித்ரே) 'ராமே ப்ரமாதம் மா கார்ஷீ:' என்று ஆய்ச்சி சொன்னதைச் செய்யலாகாதோ என்றுமாம். (ஸௌமித்ரே) 'ஏகம் து:கம் ஸுகம் ச நௌ' என்னும்படியான ஸ்நேஹத்தைப் பார்த்தால் என்னுடைய பரிபவம் உனக்கில்லையோ? என்றவாறே லக்ஷ்மணன் பயப்பட்டு வில்லைக் கொண்டு வந்து கொடுக்க (ஶராம்ஶ்ச)இனி குறையுங் கொடுப்பாயென்கிறான். (ஶராம்ஶ்ச) 'கண்டகேநேவ கண்டகம்' என்று முள்ளைக்கொண்டு முள்ளை எடுப்பதுபோல், அம்புக்கு அம்பையிட்டு அழிக்க வேணுமென்கிறான் (அம்பு-ஜலமும், பாணமும்.) 'ஏகேந மஹேஷுணா' என்று ஓரம்பே அமைந்திருக்கப் பல அம்புகள் வேண்டுவானென்னென்னில்—'ஸமித்ரஜ்ஞாதி வாங்யவம்' இக்கடலோடு சேர்ந்த ஏழுகடல்களையும் அழிக்கவேண்டுமென்கிற திருவுள்ளத்தாலே. 'விஹேதச புநஸ்ஸாலாந் ஸப்தைகேந மஹேஷுணா। கிரிம் ரஸாதலம் சைவ' என்று மராமரமேழும் மலையேழும் கீழேழு லோகங்களுமாக மூவேழிருபத் தொன்றையும் ஓரம்பாலே துளையுருவப் பண்ணினவனுக்கு ஒரேழுக்குப் பல அம்புகள் வேணுமோ என்ன-யானை தன் பலம் அறியாதாற்போல் கோபத்தின் மிகுதியால் தன்

யாக. ஸமுத்ரத்தை முழுவதும் உலரச் செய்து விடு

---

மிடுக்கை மறந்து அருளிச் செய்கிறானாகவுமாம். (ஶோஷயிஷ்யாமி) என்று சொல்லுகிறவனுக்கு அம்பென்னென்னில் (ஶராந்) 'ஸிம்ஹ ஸிம்ஹ ஶரைர் ஷீதியம்' என்றும் 'தீப்தபாவகஸங்காஶைஶ்ஶரை:' என்றும் பாணங்களுக்கே தஹிக்கும் வல்லமை உண்டாகையால் அவற்றைக் கொண்டுவரச் சொல்லுகிறான். இங்ஙனம் பாணங்களை வினவுகையில் விளையாட்டுக்கு உபயோகப்படும் படியான சில பாணங்களைக் கொண்டு வந்து கொடுக்க, இவையன்று, (ஆஶீ விஷோபமாந்) உன்னைப்போல் சொன்னபடி செய்து முடிக்க வல்லவைகளைக் கொண்டு வருவாயென்கிறான். (ஆஶீவிஷோபமாந்) ஆஶீவிஷமென்றால் த்ருஷ்டிவிஷம். வாய் வைத்துக் கடிக்க வேண்டாதே கண்ணிட்டுப் பார்த்தபோதே படும்பாடியாயிருப்பது. அப்படியே இங்கும் வாய் படவேண்டாம்; உடலில் கண்பட்டபோதே எதிரி அழியும்படியா யிருப்பவை. பாணங்களைக் கொண்டு என் செய்வதாகத் திருவுள்ளம்? என்ன (ஸாகரம் ஶோஷயிஷ்யாமி) ஊணடங்க வீணடங்குமே, உணவை அடக்கினால் வம்புக் கதையெல்லாம் அடங்கிப்போம். ஆகையால் இவனுடைய மிடுக்கெல்லாம் அடங்கும்படி இவனுடைய ஜீவனத்தை முதலே அழிக்கப்பார்க்கிறேனென்கிறான். (ஜீவனம்—ஜலமும், பிழைப்பும்) (ஸாகரம் ஶோஷயிஷ்யாமி) இதை உண்டாக்கின வருத்த முண்டோ அழிக்கும் போது. (ஸாகரம் ஶோஷயிஷ்யாமி) 'ஏகஸ்த்வமஸி லோகஸ்ய ஸ்ரஷ்டா ஸம்ஹாரகஸ்ததா' என்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களிரண்டும் ஒருவனுடைய செயலன்றோ (ஸாகரம் ஶோஷயிஷ்யாமி) 'அப ஏவ ஸஸர்ஜாதௌ' என்று ஸ்ருஷ்டிக்கு முற்பட்டாற்போல் ஸம்ஹாரத்திலும் ராவணனுக்கு முற்பட்டதாக்குகிறேன். (ஸாகரம் ஶோஷயிஷ்யாமி) 'அச்சேத்யோ உயமதாஹ்யோ உயமக்லேத்யோ உஶோஷ்ய ஏவச' என்னும்படியான ஆத்மவஸ்துவன்றே. அசேதமான நீராகையாலே உலர்த்தி விடுகிறேன். (ஸாகரம்) அன்று ஸகரசக்ரவர்த்தியின் குமாரர்கள் அறுபதினாயிரம் பேர் கல்லினதை நான் ஒருவன் இல்லை செய்கிறேன். (ஸாகரம்) 'விஷவ்ருக்ஷோஉபி ஸம்வர்த்ய ஸ்வயம் சேத்துமஸாம்ப்ரதம்' என்கிற படியே நாமாக்கினதை நாமே அழிக்கலாகாது. நீர்க்களிப்பை

கிறேன். வானரர்கள் இதைக் கால் நடையாகவே கடந்து செல்வார்களாக. ஸமுத்ரம் கலக்க முடியாதபடி அகாதமாயினும், கோபித்திருக்கின்ற நான் இதை இப்பொழுது கலக்கி விடுகிறேன்; பார். அலைகளால் மேற்கிளம்பி வளர்ந்து வருகின்ற ஸமுத்ரம் நாற்புறத்திலும் கரைகள் எல்லையாக ஏற்படப்பெற்று அதை எப்பொழுதும் கடந்து செல்லாதிருக்கும். அப்படிப்பட்டதையும் பாணங்களால் அதை யெல்லாம் அறுத்துக்கொண்டு பூமி முழுவதும் பெருகிச்செல்லும்படி செய்கிறேன். 'ஸமுத்ரத்தினுல் வெகு காலமாகப் பாதுகாக்கப்பட்ட தானவர்கள் அதை இப்பொழுது காப்பார்கள்' என்கிருயோ? மஹாஸமுத்ரத்தையும் அதில் நிறைந்திருக்கும் தானவர்களையும் கலக்கிப் பாழ்செய்து விடுகிறேன்' என்றனன். இங்ஙனம் மொழிந்து, ராமன் தனுஸ்ஸைப் பிடித்து மிகுந்த கோபத்துடன் கண்களைக் கிரு கிருவென்று சுழற்றிக்கொண்டு ப்ரளய காலாக்னிபோல் ஜ்வலிப்பவனுகி எவர்க்கும் அணுக முடியாமல் புலப்பட்டனன். அப்பால் ராமன் பயங்கரமான தனுஸ்ஸை இடையில் முஷ்டியால் கெட்டியாகப்

---

அறும்படி உலர்த்தி விடுகிறேன். (ஶோஷயிஷ்யாமி) இதை ஆக்கும் போதன்றோ நாம் வேண்டுவது, அழிக்கும்போது ருத்ராதிகளை யிட்டாற்போலே அம்பையிட்டழிக்கிறே னென்கிறுன்.

இதனுல் கிடைக்கும் ப்ரயோஜனமென் என்னில்-(பதீஹீ யாம் யாந்து ப்லவங்கமா:) இவர்கள் மரக்கொம்பிலே பாயாமல் மணற் குன்றிலே பாய்ந்து போவார்களாக.(பதீஹீ யாம்) இவர்கள் கைநீச்சு நீஞ்சாமல் காலிட்டு நடப்பார்களாக (ஸாகரம் ஶோஷயிஷ்யாமி பதீஹீயாம் யாந்து ப்லவங்கமா:)இவன் பண்ணின பாராமைக்கு இதன் பெருமை யெல்லாம் தரைப்பட்டுக் குரங்குகள் காலின் கீழே துகையுண்ணும்படி பண்ணுகிறேன்.

பிடித்து, உலகத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் பாணங்களுக்குப் பயந்து கிடுகிடுவென்று நடுங்க, தேவேந்த்ரன் வஜ்ராயுதங்கள் பலவற்றை ப்ரயோகிப்பதுபோல் பயங்கரமான பாணங்களை ப்ரயோகித்தனன். அனந்தரம் அந்தச் சிறந்த பாணங்கள் மிகுந்த வேகமுடையவையாகிப் பேரொளியுடன் தகதகவென்று ஜ்வலித்துக் கொண்டு ஸர்ப்பங்கள் பயந்து வருந்தப் பெற்ற ஸமுத்ர ஜலங்களில் ப்ரவேசித்தன. அப்பொழுது ஸமுத்ரத்தில் மிகுதியும் அகன்ற அலைகளின் வரிசையானது காற்றோடுறைவதா லுண்டாகும் பெருங்கோஷ முடையதாகி முதலைகளும் மகரமீன்களும் நிறைந்து மிகவும் பயங்கரமாயிருந்தது. அப்பொழுது ஸமுத்ரம் கரையோரத்தில் பெருப்பெரிய அலைகள் வரிசை வரிசையாக மேற்கிளம்பப் பெற்றிருந்தது; நடுவில் கலங்கின அலைகளால் மேல் கிளப்பப்பட்ட சங்குகளும் முத்துச் சிப்பிகளும் நிறைந்திருந்தது. மற்றும் நடுவில் ஜ்வலிக்கின்ற பாணங்கள் புகுந்திருக்கையால் புகை உண்டாகப் பெற்றதும் பாணாக்னியால் சோஷிப்பதுமா யிருக்கையால், அலைகள் சுழித்துக் கொண்டிருந்தன. பாணங்கள் பாதாளம் வரையிலும் நுழைகையால் ஸமுத்ரத்திலுள்ள ஸர்ப்பங்கள் வாயால் விஷங்கக்கிக்கொண்டு ஜ்வலித்த முகமுடையவைகளும் கண்கள் மின்மினுக்கப் பெற்றவைகளுமாகி மிகுதியும் வருத்தமுற்றன. அங்ஙனம் பாதாளத்திலுள்ள மஹாவீர்யசாலிகளான தானவர்களும் பீடிக்கப்பட்டவராயினர். அப்பொழுது ஸமுத்ரத்தில் முதலைகளோடும் மகரமீன்களோடுங் கூடின பேரலைகள் விந்த்யபர்வதம்போலும் மந்தர பர்வதம்போலும் மிகுதியும் உயர்ந்து ஆயிரமாயிரமாய்க் கிளம்பின. அனந்தரம் அலைகளின் வரிசை முன்னும் பின்னும்

அலையவும் ஸர்ப்பங்களும் ராக்ஷஸர்களும் தடுமாறவும் பெரிய முதலைகள் தலைகீழாய் வருந்தவும் பெற்று அந்த ஸமுத்ரம் முழுவதும் புலப்பட்டது. மிகுதியும் பயங்கரமான வேக முடையதும் அளவிடமுடியாத வைபவம் அமைந்ததுமாகிய தனுஸ்ஸை, வீணாகாத பாணங்களைத் தொடுக்கும் பொருட்டு இழுத்துக் கோபத்தினால் பெருமூச்சு விடுகின்ற அந்த ராமனைப் பார்த்து லக்ஷ்மணன், 'இனி உபேக்ஷித்து வெறுமனே இருந்தால் உலகங்களெல்லாம் கொளுத்தப்படும்' என்று திடுமென வந்து 'வேண்டாம் வேண்டாம்' என்று வேண்டியும் அவன் ஓயாமலிருப்பதைக் கண்டு அந்த வில்லைப் பிடித்துக் கொண்டனன். இருபத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ராமன் ஸமுத்ரத்தின்மேல் ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ரயோகிக்கத் தொடங்குதலும் ஸமுத்ர ராஜன் ராமனுக்கு ப்ரத்யக்ஷமாகி ஸேதுகட்டும்படி அநுமதித்தலும், நலன் ஸேதுவை நிர்மிக்கையில் ராமன் ஸமுத்ரந்தாண்டி ஸுவேல பர்வதஞ் சேருதலும் தேவதைகள் ராமனை ஸ்தோத்ரஞ் செய்தலும். }

அனந்தரம் ரகுகுலதிலகனாகிய ராமன் அப்பொழுதும் புலப்படாதிருக்கின்ற ஸமுத்ரத்தைப் பார்த்து பயங்கரமான வசனத்துடன் 'ஸமுத்ரனே! உன்னை இப்பொழுதே பாதாளம் வரையில் உலரும்படி செய்கிறேன். ஸமுத்ர! என் பாணங்களால் ஜலமெல்லாம் கொளுத்தப்பட்டு உலர்ந்து போகையில் பூமியின் அடியிலிருக்கிற ஜலமும் சோஷிக்கையில் ஜலஜந்துக்களெல்லாம்

எரிந்துபோகையில் எவ்வளவு மழை பெய்தபோதிலும் ஒரு பொட்டு ஜலமுங்கூட நிற்க வொட்டாமல் மிகுதியும் சிறிய தூள்கள் கிளம்பும்படி உன்னை இப்பொழுதே பாழ் செய்கிறேன். ஜலமெல்லாம் உலர்ந்து போகையில், பாதாளம் வரையிலும் உலர்ந்து போகும். பாதாளத்திற்குப்போவது அஸாத்யமாகையால் ஆகாச மார்க்கமாகவே போகவேண்டியதாய் வரும். ஆகையால்'இப்பொழுதே ஆகாயவழியால்போவதுமேலாகையால் கோபம் ஏதுக்கு' என்கிறாயோ? ஸமுத்ரராஜனே! நான் ஸேது கட்டுவதற்கு ஶ்ரமப்படவேண்டிய அவஶ்யமில்லை. நான் தனுஸ்ஸினின்றும் பெய்த பாண வர்ஷங்களால் பாணங்களே ஸேதுவாக அமையப்பெற்று இப்பொழுதே வானரர்கள் கால்நடையாகவே உன்னைத் தாண்டி அக்கரை சேருவார்கள். நீ தானவர்க்கு இருப்பிடமானவன்; அவர்களோடு ஸஹவாஸத்தினால் என் பலத்தையும் என் பராக்ரமத்தையும் நன்கு ஆலோசித்துத் தெரிந்து கொள்ளாதிருக்கின்றனை. மற்றும், என்னால் விளையப்போகிற வருத்தத்தையும் தெரிந்து கொள்ளாதிருக்கின்றனை' என்றனன். மஹாபலனாகிய அந்த ராகவன் [1]ப்ரஹ்மதண்டத்தை நிகர்த்ததும் பயங்கரமுமான ஓர் பாணத்தை எடுத்து, அதை ப்ரஹ்

---

1. ப்ரஹ்மதண்டமாவது - ப்ரஹ்மஶாபம். ப்ரஹ்மஶாபம்போல் அமோகமாயிருப்பது. அல்லது ப்ரஹ்மதண்டமென்றால் ஒரு கேது விஶேஷம். நாரத ஸம்ஹிதையில் 'பிதாமஹாத்மஜঃ க்ரூரஸ் த்ரிவர்ணஶ்ஶிவாங்விதঃ। ப்ரஹ்மதண்டாஹ்வயঃ கேதுஸ் ஸர்வஹேதவிநாஶநঃ' (ப்ரஹ்மதண்டமென்னும் கேது ப்ரஹ்மாவுக்குப் பிறந்ததும் கொடியதும் மூன்று வர்ணங்களுடையதும் சிகரங்களோடு கூடி ஸமஸ்த ப்ராணிகளுக்கும் நாசம் விளைப்பதுமாயிருக்கும்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.)



2604. ஸமுத்ரன்மேல் ராமன் ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ரயோகிக்கத் தொடங்குதல்.

மாஸ்த்ரமந்த்ரத்தினுல் அபிமந்த்ரித்துமேலான தனுஸ் ஸில் தொடுத்துக் காதுவரையிலும் இழுத்தனன். அங் ஙனம் ராமன் தனுஸ்ஸை இழுக்கையில் ஆகாயமும் பூமியும் இருபிளவாகும் போலிருந்தன. பர்வதங்களெல் லாம் நடுங்கின. உலகமெல்லாம் இருள் மூடிக்கொண்டது. திசைகளெல்லாம் ஒளி மழுங்கப் பெற்றன. குளங்களும் நதிகளும் கலங்கின. சந்த்ர ஸூர்யர்களும் நக்ஷத்ரங் களும் பயத்தினுல் வக்ரமாகச் சேர்ந்து திரிந்தன. அப் பொழுது ஆகாயம் மிகுதியும் இருள் மூடப்பெற்றிருப் பதும் ஒளி மழுங்கின ஸூர்யகிரணங்களால் சிறிது வெளிச்சம் உண்டாகப்பெற்றதுமாகிக் குறைக்கொள்ளி களின் ஸமூஹங்களால் சூழப்பட்டதுபோல் ப்ரகாசித் தது. ஆகாயத்தினின்று பெருங்கோஷத்துடன் இடி கள் விழுந்தன. மற்றும் ஆகாயத்தில் வாதஸ்கந்தங் களென்று சொல்லப்படுகிற ஆவஹம் முதலிய புகழத் தகுந்த பெரிய காற்றுக்கள் கனமாக வீசின. அப் பொழுது காற்றுக்கள் பெரிய வ்ருக்ஷங்களை முறித்தன; மேகங்களை மேற்கிளப்பின; பர்வத சிகரங்களையும் சிறிய மலைகளையும் வருந்தச் செய்தன. அப்பொழுது மஹா மேகங்கள் ஆகாயத்தில் கூடிப் பெருங் கோஷத்துடன் வைத்யுதமென்கிற அக்னிகளைக் கக்கின. அவை அப் பொழுது பேரிடிகளாகித் தரையில் விழுந்தன. கண்ணுக்குப் புலப்படுகின்ற மனுஷ்யாதி பூதங்கள் இடியோடொத்த கோஷத்துடன் கதறலிட்டன. கண் ணுக்குப்புலப்படாத பிசாசாதி பூதங்களும் மிகுதியும் பயந்து நடுக்கமுற்றவையாகி இடிபோல் பயங்கரமான பெருந்த்வனிகளைச் செய்துகொண்டு நித்ரை அடைந் தாற்போல் பூமியில் விழுந்து அங்கும் சிந்தையால் வருந்திச் சிறிதும் அசையாமல் இருந்தன. அப்பால்

ராமன் ப்ரஹ்மாஸ்த்ரந் தொடுத்தவுடனே ஸமுத்ரம் பூதங்களோடும் ஸர்ப்பங்களோடும் ராக்ஷஸர்களோ டும் பெருப்பெரிய அலைகளோடுங்கூடி முன்பு வெறும் பாணங்களை ராமன் ப்ரயோகிக்கும்பொழுது கலங்கின வேகத்தைக் காட்டிலும் மிகவும் பயங்கரமான வேகத் துடன் ஜலப்ரவாஹங் கலங்கப்பெற்றது. பிறகு ஸமுத்ர ஜலப்ரவாஹம் ப்ரளயமில்லாத ஸமயத்திலும் ஒரு யோஜனை தூரம் கரையைக் கடந்து வந்தது. அப் பொழுது பகைவரைக் கொல்லவல்ல ராமன் அங்ஙனம் பெரிய வெள்ளப் பெருக்குடன் கரையைக் கடந்து வரு கின்ற நதநதிபதியான ஸமுத்ரத்தின்மேல் பாணப்ர யோகஞ் செய்யும் முயற்சியை விட்டு [1]வரம்பைக் கடவா திருந்தனன். அதன்பிறகு மிகுதியும் உயர்ந்து மேற்கிளம் பின ஸமுத்ரஜலத்தின் இடையினின்று ஸமுத்ரராஜன் எழுந்து மேருமஹா பர்வதத்தில் உதிக்கின்ற ஸூர்யன் போல் ப்ரகாசித்தனன். அவன் ஜ்வலிக்கின்ற முக முடைய ஸர்ப்பங்களொடு புலப்பட்டனன். அவனுடைய நிறம், நிருநிருப்புற்ற வைடூர்யமணியின் நிறம்போன் றிருந்தது. அவன் ஜம்பூநதியிலுண்டான சிறந்தபொன் னாற் செய்த பொற்பூஷணங்களை அணிந்து சிவந்த பூமாலைகளும் ஆடையும் தரித்திருந்தனன். அவனுடைய கண்கள் தாமரை யிதழ்போன்று அழகாயிருந்தன. அவன் சிரஸ்ஸில் ஸமஸ்தபுஷ்பங்களும் தொடுக்கப் பெற்ற திவ்யமான பூமாலையைத் தரித்து ஆகரத்தில் விளைந்த பொன்னாற் செய்த பூஷணங்களையும் பணிப் பொன் பூஷணங்களையும் தன்னிடத்திலுண்டான ரத்னங்கள் இழைக்கப்பெற்ற உத்தம பூஷணங்களையும்

1. ஸமுத்ரம் பயந்தோடுகிறபடியால் ஓடுகிறவன்மேல் பாணப்ர யோகஞ் செய்யலாகாதென்கிற வரம்பைக் கடவாதிருந்தனன்.

அணிந்து, பலவகை தாதுக்களால் திகழ்கின்ற ஹிமவத் பர்வதம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். அவன் அகன்ற மார்பில் தரித்திருந்த முத்துமாலையின் இடையில் ஒரு நாயகரத்னம் திகழ்வுற்றிருந்தது. அது கௌஸ்துப ரத்னத்திற்கு உடன்தோன்றலாகிச் சிவந்த ஒளியுடன் ப்ரகாசித்தது. ஸமுத்ரராஜன், அலைகள் வரிசைவரிசையாக நாற்புறத்திலும் கிளம்பிச் சுழலப் பெற்றுத் தன்னைப் பிரியாத மேகவரிசைகளாலும் காற்றாலும் வ்யாகுலமாயிருந்தனன். ப்ரபுவாகிய அந்த ஸமுத்ரராஜன் பெருப்பெரிய முதலைகள் சுழலவும் ஸர்ப்பங்களும் ராக்ஷஸர்களும் தழதழக்கவும் (அழகான பலவகை உருவங்களையுடைய கங்கை ஸிந்து முதலிய நதீதேவதைகள் சுற்றிலும் சூழ்ந்திருக்கவும்) பெற்று ப்ரத்யக்ஷமாகத் தோற்றினன். வீர்யத்தில் மிகுந்த ஸமுத்ரன் அருகே வந்து முன்னம் தானே ராமனை அழைத்துக் கைகூப்பிக்கொண்டு பாணமும் கையுமாயிருக்கும் ரகுகுலாலங்காரனாகிய ராமனைப் பார்த்து, 'நல்ல ஸ்பாவமுடையவனே! ராமா! என்னை ஆழ்ந்திருக்கிறேனென்கிறாயா? பூமியும் காற்றும் ஆகாயமும் ஜலமும் அக்னியும் ஆகிய இந்தப் பஞ்ச பூதங்களும் நிலைநின்ற ஏற்பாட்டில் இருப்பவையாகித் தந்தமது ஸ்வபாவத்தை என்றும் கடக்காதிருப்பவை. ஆகையால் நான் இப்படியே இருக்கவேண்டியவன். ஆழமில்லாமல் தாண்ட ஸுகமாயிருத்தல் எனக்கு வேற்றுமையே. அது என் ஸ்வபாவத்திற்கு விருத்தமே. இந்த உண்மையை உனக்குச் சொல்லினன். இதைப்பற்றியே நான் உன்னெதிரில் வாராதிருந்தனன். 'ஆழமாகவே யிருப்பாய். ஜலத்தையாவது ஸ்தம்பித்து நமக்கு வழிவிடலாகாதா' என்கிறாயோ? ராமா! நீ ராஜ

குமாரனுகையால் அந்தந்த மர்யாதைகளை யெல்லாம் நிலைநிறுத்துபவன். நான் த்ரவ்யத்தில் ஆசையாலாவது, லபித்த வஸ்துவைவிட மனம்பொருந்தாத லோபத்தினுலாவது, தண்டனை நேருமென்னும் பயத்தினுலாவது க்ராஹங்களும் நக்ரங்களும் முதலிய ஜந்துக்கள் நிறைந்திருக்கிற என் ஜலத்தை ஸ்தம்பித்திருக்கச் செய்வேனுயின், அவற்றிற்குப் பீடை உண்டாகுமே. ஆகையால் சிறிதும் ஸ்தம்பிக்கச் செய்ய வல்லவனல்லேன். ராமா! ஆயினும் என்னுற் கூடியமட்டும் ஸஹாயஞ் செய்கிறேன். அதுதான் என்னெனில், உன் ஸேனை ஸமுத்ரத்தைத் தாண்டும்வரையில் ஜலத்தில் போகுமவர்களை க்ராஹம் முதலிய ஜலஜந்துக்கள் ஹிம்ஸிக்காதிருக்கும். இதுவே நான் செய்வது. வானரர்கள் ஸமுத்ரந் தாண்டும் விஷயத்தில் அணைகட்டுவதற்கு வேண்டிய ஸாமக்ரிகளைக் கலையச்செய்யாமல் ஸேதுமார்க்கம் நிறைவேறும்படி செய்கிறேன்' என்றனன். அப்பொழுது ராமன் ஸமுத்ரராஜனைப் பார்த்து 'ஸமுத்ர ராஜனே! அப்படியாயின் இந்த என்பாணம் வீணுகாதது. இதை வில்லில் தொடுத்து விட்டனன். இதை எங்குவிடுவேன்?' என்று வினவினன். ஸமுத்ரன் ராமனுடைய வசனத்தைக்கேட்டு வில்லில் தொடுத்திருக்கிற அந்த பாணத்தைப் பார்த்துத் தன் விருப்பம் நிறைவேறுகையால் ஒளி விளங்கப்பெற்று ராமனை நோக்கி, இவ்விடத்திற்கு அருகான உத்தரபாகத்தில் த்ருமகுல்யமென்னும் மிக ரமணீயமான ஓர் ப்ரதேசம் உளது. அது உலகத்தில் உன்னைப்போல் புகழ்பெற்றது. அங்குச் செம்படவர் முதலிய பாபிஷ்டர்களான என் சத்ருக்கள் பலர் பார்க்கப் பயங்கரமான உருவமுடையவரும் பயங்கரமான கார்யங்களைச் செய்பவருமாகி என் ஜலங்களைப் பானஞ்

செய்து கொண்டிருக்கின்றனர். ராமா! பாபத்தொழி லர்களாகிய அந்த துஷ்டர்களின் தீண்டல் எனக்குப் பொறுக்க முடியாததாயிருக்கின்றது. ஆகையால் அமோகமாகிய இம்மேலான பாணத்தை அங்கு அவர்மேல் ப்ரயோகித்துப் பயன்பெறச் செய்வாயாக' என்றனன். அங்ஙனம் அவன் மொழிந்த வார்த்தை யைக் கேட்டு, வீரனாகிய அந்த ராமன் ஸமுத்ரராஜனது இஷ்டத்தின்படி, அவன் விரலால் சுட்டிக்காட்டின த்ருமகுல்ய மென்னும் ப்ரதேசத்தின் மேல் அந்த பாணத்தை ப்ரயோகித்தனன். ராமன் இடிபோல் பள பளவென்ற ஒளியுடன் ஜ்வலிக்கின்ற அந்த பாணம் ப்ர யோகித்த இடம் பூமியில் மருகாந்தாரமென்று ப்ர ஸித்திபெற்றது. அப்பொழுது அந்தபாணம் பூமியைப் பிளந்து கொண்டு உள்ளே நுழைகையில் அந்த அடி பட்ட இடத்தில் பாதாளத்தினின்று ஜலம் மேற்கிளம் பிற்று. அதனால் அவ்விடத்தில் பேரொலி ஒன்று உண்டாயிற்று. அங்ஙனம் அந்த பாணத்தின் அடியால் ஏற்பட்ட பள்ளமானது மிகுதியும் ஆழமாயிருக்கையால் ஓர் கிணறாகி வ்ரணகூபமென்னும் புகழ் பெற்றது. அங்குப் பாதாளத்தினின்று மேற்கிளம்பின ஜலம் இடைவீடின்றிப் பெருகுவதாகி ஸமுத்ரஜலம்போல் எப்பொழுதும் புலப்பட்டுக் கொண்டிருக்கும். அங்ஙனம் பாண அடியால் அங்குள்ள பூமியைப் பிளக்கும்பொழுது பயங்கரமான ஓர் த்வனி உண்டா யிற்று. ராமன் அவ்வாறு பாணப்ரயோகஞ்செய்து த்ருமகுல்ய மென்னும் ப்ரதேசத்தில் முன்பு செம்பட வர் முதலிய பாபிஷ்டர்களால் தூஷிக்கப்பட்ட பள்ளங் களில் தேங்கும் ஜலங்களை யெல்லாம் சோஷிக்கச் செய்தனன். அவ்வாறு ஜலமெல்லாம் வற்றிப்போகை

யால் அவ்விடம் மருகாந்தாரமென்று மூன்று லோகங்களிலும் பேர்பெற்றது. எல்லாம் அறிந்தவனும் பராக்ரமத்தில்[1] தேவதைகளைப் போன்றவனும் தசரதகுமாரனுமாகிய ராமன் ஸமுத்ரத்தின் மத்ய ப்ரதேசமாகிய மருகாந்தாரத்தை அங்ஙனம் தஹித்து, அப்பால் அம் மருகாந்தாரத்திற்கு ராமன் வரம் அளித்தனன். அதனால் அம்மருகாந்தாரம் பசுக்களுக்கு வேண்டிய பசும் புல் முதலியவை ஸம்ருத்தமாகவும் ரோகங்கள் ஆரம்பிக்கும் பொழுதே நசிப்பவைகளாகவும் பெற்று நாற்புறத்திலும் காய்கிழங்குகளும் மதுவும் நிறைந்து மிகுந்த நெய் பால்களுடையதும் நன்மணம் கமழப் பெற்றதும் நானாவித ஓஷதிகள் அமைந்ததுமாகி இங்ஙனம் போக்யவஸ்துக்கள் பலவும் பொருந்தி அழகான இடமுடையதுமாகி ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அப்பொழுது அங்ஙனம் அந்த ஸமுத்ர மத்ய ப்ரதேசமெல்லாம் கொளுத்தப்படுகையில் நதநதீபதியாகிய ஸமுத்ரன் ஸர்வசாஸ்த்ரங்களையும் உணர்ந்த ராமனைப் பார்த்து, 'நல்லியற்கையுடையவனே! இந்த நலனென்பவன் விஸ்வகர்மாவின் புதல்வன்; இவனுடைய தந்தை 'என்னைப்போன்ற குமாரன் உனக்குப் பிறப்பான்' என்று இவனது தாய்க்கு வரங்கொடுத்தமையால்

1. இங்கு 'ஶோஷயித்வா தத꞉ குக்ஷிம் ராமோ தஶரதாத்மஜ꞉। வரம் தஸ்மை ததௌ வித்வான் மருவே(அ)மரவிக்ரம꞉' என்பது மூலம். 'மோக்ஷயித்வா தத꞉ குக்ஷிம்' என்கிற பாடத்தில் (ஸமுத்ரத்தின் மத்ய ப்ரதேசத்தினின்று வேடர் முதலான பாபிஷ்டர்களைத் தொலைத்து) என்று பொருள். இங்கு மனுஷ்யத் தனத்தை நடனஞ் செய்கின்ற ராமன் தேவதைகளைப் போல் வரங்கொடுப்பது எப்படி என்னில் (அமரவிக்ரம꞉) என்றார். 'ஸத்யேந லோகாஞ்ஜயதி' என்று ஸர்வலோகங்களையும் வசப்படுத்திக் கொண்டிருக்கின்றமையால் அங்ஙனம் வரங் கொடுத்தானென்று கருத்து.

பிறந்தவன். ஸ்ரீமானுகிய இவன் சில்ப வித்யைகளில் விஶ்வகர்மாவுக்கு நிகரானவன். இவ்வானரன் மிகுந்த உத்ஸாஹத்துடன் என்மீது ஸேதுவை நிர்மிப்பானுக. அந்த ஸேது முழுகாதிருக்கும்படி நான் தாங்கிக் கொள்கிறேன். இவன் தந்தையைப்போல் விசித்ர ஸாமர்த்யமுடையவன்' என்றனன். ஸமுத்ரன் இங்ஙனஞ் சொல்லிக் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்தனன். அப்பொழுது வானரஶ்ரேஷ்டனும் மஹா பலிஷ்டனுமாகிய நலன் எழுந்து ராமனைப் பார்த்து 'நான் என் தந்தை கொடுத்த ஸாமர்த்யத்தைக் கைப்பற்றி விஸ்தீர்ணமுடைய இந்த ஸமுத்ரத்தில் ஸேதுவைக் கட்டுகிறேன். ஸமுத்ரன் உண்மையையே சொல்லினன்' என்றுரைத்து உடனே வானரர்களைப் பார்த்து 'உலகத்தில் புருஷனுக்குத் தண்டனையே மிகுதியும் மேலான உபாயமென்று என் அபிப்ராயம். நன்றியில்லாதவரிடத்தில் பொறுமையாவது நல்வார்த்தையாவது தானமாவது சி! உபாயமன்று. பயங்கரனுகிய இம் மஹா ஸமுத்ரன் ஸகர சக்ரவர்த்தியின் குமாரர்களால் தோண்டப்பட்டவன். ஆயினும் அந்த உபகாரத்தை நினையாமல் தண்டிப்பா னென்னும் பயத்தைப் பற்றியே ஸேதுவைக் கட்டி நிறைவேற்றும் விருப்பத்துடன் மேடான இடங்கொடுத்தனன். விஶ்வகர்மா மந்த்ரபர்வதத்தில் எனது அன்னைக்குத் தன்னைப் போன்ற புதல்வன் உண்டாகும்படி வரங்கொடுத்தனன். நான் அந்த விஶ்வகர்மாவுக்கு ஔரஸ புத்ரன்; ஶில்ப வித்தையில் விஶ்வகர்மாவுக்கு நிகரானவன். 'ஆனுல் இதுவரையில் இப்படிப்பட்டவனென்று ஏன் சொல்லாதிருந்தனை' என்கிறீர்களோ? ஸமுத்ரராஜன் எனக்கு நினைவு மூட்டினன். அவன் உண்மையையே சொல்லி

னன். மற்றும், பிறர் எவரும் சொல்லாமல் என் குணங்களை நானே சொல்பவனல்லேன். அப்படி சொல்வேனாயின் இப்படிப்பட்ட பெரியகார்யம் ஆரம்பிக்கும் விஷயத்தில் என்மேல் நம்பிக்கை உண்டாகாது. நான் இங்ஙனம் வெறுமனே சொல்வதுமாத்ரம் அன்று. ஸேதுவை ஸமுத்ரத்தில் கட்டி முடிக்கவும் வல்லவனாவேன். விருப்பம் உளதாயின், வானரோத்தமர்கள் கல்முதலியவற்றைக் கொண்டுவந்து இப்பொழுதே ஸேதுவைக் கட்டத்துடங்குவார்களாக' என்றனன். அனந்தரம் ராமன் தூண்டுகையில் வானரர்கள் மிகுந்த ஸந்தோஷத்துடன் அனேக மாயிரமாகக் கூட்டங்கூடி நாற்புறத்திலும் பெரிய அடவிகளுக்குப் போயினர். அப்பொழுது வானரக் கூட்டங்களுக்கெல்லாம் தலைவரும் பர்வதம்போன்ற உருவமுடையவருமாகிய அவ்வானரோத்தமர்கள், அவ்வரண்யங்களிலுள்ள நானுவகை வ்ருக்ஷங்களைப் பிடுங்கி ஸமுத்ரத்திற்காக இழுத்துக்கொண்டுவந்தனர். அவர்கள் அங்ஙனம் மராமரங்களையும் அஸ்வகர்ண வ்ருக்ஷங்களையும் தவவ்ருக்ஷங்களையும் மூங்கில்களையும் வெட்பாலை மரங்களையும் மருதமரங்களையும் பனைமரங்களையும் மஞ்சாடி மரங்களையும் திலகமரங்களையும் வில்வமரங்களையும் ஏழிலைப்பாலை மரங்களையும் புஷ்பித்த கோங்குமரங்களையும் மாமரங்களையும் அசோகவ்ருக்ஷங்களையும் பிடுங்கிக்கொண்டு வந்து ஸமுத்ரத்தை நிறைத்தனர். அந்த வானரஸ்ரேஷ்டர்கள் கார்யத்திலுள்ள விரைவைப்பற்றி வ்ருக்ஷங்களில் சிலவற்றை வேருடனும் சிலவற்றை வேரில்லாமலும் பிடுங்கி இந்த்ர த்வஜங்களைப்போல் மேல்தூக்கிக் கொண்டுவந்து ஸமுத்ரத்தில் போகட்டனர். அவர்கள் நாற்புரத்தினின்று பனைமரங்களையும் மாதுளைப் புதர்



2612. நலன் வானர ஸஹாயத்துடன் ஸமுத்ரத்தில் ஸேது கட்டுதல்.

களையும் தென்னை மரங்களையும் தானி மரங்களையும் மகிழ மரங்களையும் கருங்காலி மரங்களையும் வேப்ப மரங்களையும் எடுத்துக்கொண்டு வந்து ஸமுத்ரத்தில் போகட்டனர். அங்ஙனம் மரங்களையெல்லாங் கொண்டு போனபின்பு பெருஞ் சரீரமுடையவர்களும் மஹாபலிஷ் டர்களுமாகிய அவ்வானரர்கள் யானைகள்போன்ற கற் களையும் பர்வதங்களையும் பிடுங்கி வண்டி முதலான யந்த் ரங்களால் கொண்டுபோயினர். பர்வதங்களைக்கொண்டு வந்து ஸமுத்ரத்தில் போகடுகையில் திடீலென்று அதன் ஜலம் மேற்கிளம்பிற்று. அங்ஙனம் அது ஆகா யத்திற் கிளம்பி ஆங்காங்கு வ்யாபித்தது. மற்றும் வானரர்கள் ஸமுத்ரத்தில் நாற்புறங்களிலும் குண்டுக் கற்களைப் பரப்பிக் கலக்கினர். சிலர் ஏற்றக் குறைவுக ளில்லாமல் நேராயிருக்கும்பொருட்டு நூறுயோஜனை தூரம் வரையில் ஸூத்ரங்களை பிடித்துக் கொண்டிருந் தனர். நலன் நதநதீபதியான ஸமுத்ரத்தின் நடுவில் பெரிய ஸேதுவைக் கட்டினன். வானரர்கள் ஒரே தடவையில் பல பர்வதங்களைப் பிடுங்கிக்கொண்டு வரு கையால் பயங்கரமான செயலையுடையவராகி ஓரிடத்தில் பர்வதங்களைக்கொண்டு வந்து சேர்த்து நலன் கட்டுவது போல் தாமும் அவனுக்கு ஸஹாயமாயிருந்து ஸேது வைக் கட்டிக்கொண்டிருந்தனர். சிலர் அந்த ஸூத்ரங் கட்டின கொம்புகளையும் அவரவர் கட்டவேண்டிய பாகங்களைக்காட்டும் அளவுகோல்களையும் பிடித்துக் கொண்டிருந்தனர். சிலர் கோல்களைக் கொண்டு வானரர் களை த்வரைப் படுத்திக் கொண்டிருந்தனர். மற்றும் சிலர் நலன் கட்டின ஸேதுவின்மேல் கற்களைப்பரப்பினர். வேறு சிலர் இளைப்பினால் ஆங்காங்கு நிழல்களில் மறைந் திருக்கிற வானரர்களைத் தேடினர். சிலர் மேடுபள்ளங்

களைச் சோதித்துப் பார்த்தனர். நலனுக்கு ஸஹாய மாய் அனேகம் வானரர் ராமனது ஆஜ்ஞையை முன் னிட்டுக் கொண்டு மேகங்கள் போன்ற பர்வத சிகரங் களாலும் புற்களாலும் கட்டைகளாலும் நலன் கட்டின ஸேதுவின் மேல் ப்ரதேசங்களைக் கட்டினர். வானரர் கள் மெதுவாயிருக்கும் பொருட்டுப் புஷ்பித்த நுனி களையுடைய வ்ருக்ஷங்களையும் மேலே பரப்பி ஸேது வைக்கட்டினர். யானைகள்போன்ற வானரர்கள் மலை போன்ற பெரிய கற்களையும் பர்வத சிகரங்களையும் எடுத் துக்கொண்டு இங்கும் அங்கும் ஓடிக் கொண்டு புலப் பட்டனர். அப்பொழுது அந்த ஸமுத்ராத்தில் பெருப் பெரிய கற்களையும் பர்வதங்களையும் வீசி யெறிந்து கொண்டிருக்கையில் பெருந்த்வனி கிளம்பிற்று. யானை களைப்போன்ற பேருருவமுடைய வானரர்கள் மிகுந்த ஸந்தோஷத்துடன் விரைந்து முதனாள் பதினான்கு யோஜனை தூரம் ஸேதுவைக் கட்டினர். பயங்கரமான உருவமுடையவர்களும் மஹாபலிஷ்டர்களுமாகிய வான ரர்கள் இரண்டாவது நாள் இருபது யோஜனை தூரம் ஸேதுவைக்கட்டினர். பெருஞ் சரீரமுடைய அவ்வான ரர்கள் மிகுந்த வேகத்துடன் மூன்றாவது நாள் இரு பத்தொன்று யோஜனை தூரம் ஸேதுவைக் கட்டினர். இயற்கையாகவே மஹா வேகமுடைய அவ்வானரர்கள் அங்ஙனம் நான்காவது நாள் மிகவும் த்வரைப்பட்டு இருபத்திரண்டு யோஜனை தூரம் ஸேதுவைக்கட்டி னர். அவ்வானரர்கள் சீக்ரமாகக் கார்யம் செய்பவராகி ஐந்தாவதுநாள் ஸுவேல பர்வதம் வரையில் இருபத்து மூன்று யோஜனை தூரம் நிர்மித்து ஸேதுவை ஸமாப்தி செய்தனர். மிகுந்த ஒளியுடையவனும் விஸ்வகர்மாவின் புதல்வனும் பலிஷ்டனும் வானர திலகனுமாகிய அந்

நலன் தந்தையைப்போன்ற சக்தியுடையவனாகையால் அங்ஙனம் ஸமுத்ரத்தில் ஸேதுவைக் கட்டி முடித்தனன். நலன் மகர மீன்களுக்கிடமான ஸமுத்ரத்தில் நிர்மித்த ஸேதுவானது மிகுந்த ப்ரபாவமுடையதும் அழகியதும் சோபையுடையதுமாகி [1] ஆகாயத்தில் சாயாபதம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அப்பொழுது தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் அந்த அற்புதத்தைப் பார்க்கும் பொருட்டு வந்து ஆகாயத்தில் இருந்தனர். தேவதைகளும் கந்தர்வர்களும் பத்துயோஜனை அகலமும் நூறுயோஜனை நீளமும் உடையதாகிப் பிறர்க்கு எவ்விதத்திலும் செய்து நிறைவேற்ற முடியாததும் நலனால் நிர்மிக்கப்பட்டதுமான ஸேதுவைக் கண்டனர். வானரர்கள், ஸேது கட்டுவதைக் கண்டு ஒருவர்க்கொருவர் எதிர்முகமாகித் தாண்டவிடுவதும் தூரம் தூரமாகக் கிளம்பிப் பாய்வதும் கர்ஜிப்பதுமாகிப் பெரும் ஸந்தோஷமுற்றனர். இதற்கு முன்பு மனத்திலுங்கூடச் சிந்திக்க முடியாததும் எவர்க்கும் யத்னிக்க ஸாத்ய

1 இங்கு 'ஶுஶுபே ஸுபக: ஸ்ரீமாந் ஸ்வாதீபத இவாம்பரே' என்பது மூலம். ஸ்வாதீபதமென்றால் சாயாபதம், அல்லது ஸூர்யாதிகள் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் மூன்று மார்க்கங்களில் மத்யமார்க்கத்திலுள்ள ஸ்வாதி வீதி. 'ஸூர்யாதீநாம் த்ரயோ மார்கா தக்ஷிணோத்தர மத்யமா:' என்று தக்ஷிணம் உத்தரம் மத்யமம் என்று ஸூர்யாதிகள் ஸஞ்சரிக்கிற மூன்று மார்க்கங்களைச் சொல்லி 'தயா ஜீவேசாபி ஸல்ஹுர்யௌ மவாசைவார்ஷபீ மதா| ஹஸ்தஶ் சித்ரா தயா ஸ்வாதீ மத்யவீதி விதிஶ்ருதா| ஜ்யேஷ்டா விஶாகா நூராதா வீதிராஜஶவீ மதா| ஏதாஸ்து வீதயஸ் திஸ்ரோ மத்யமோ மார்க உச்யதே' என்று ஆர்ஷபி மத்யை ஆஜகவி என்ற மூன்று வீதிகளும் மத்ய மார்க்கமென்றும் அவற்றில் ஸ்வாதீநக்ஷத்ரம் மத்யவீதியென்றும் வாயுபுராணத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

மல்லாததும் அற்புதமா யிருப்பதும் மயிர்க்கூச்சலை விளைப்பதும் ஸமுத்ரத்தின் இடையில் நிர்மிக்கப்பட்டிருப்பதுமான அந்த ஸேதுபந்தனத்தை (அணைக்கட்டை) ஸமஸ்த பூதங்களும் கண்டன. ஸமுத்ரத்தில் ஸேது கட்டுவதற்கு ஸஹாயமாயிருந்த மஹா தேஜஸ்விகளான அனேக மாயிரங்கோடி வானரர்கள் ஸேதுவைக் கட்டிக்கொண்டே ஸமுத்ரத்தின் தென் கரைக்குப் போய்ச் சேர்ந்தனர். அம்மஹா ஸேது விலாசமும் திடமாக நிர்மிக்கப்பட்டதும் நேராயிருக்கையால் ஒளியுடன் ப்ரகாசிப்பதும் மேடுபள்ள மில்லாமலும் சந்து பொந்துகளில்லாமலும் சீர்திருத்தம் உண்டாகப் பெற்றதுமாகி ஸமுத்ரத்தில் வகிடுபோல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அப்பால் விபீஷணன், கையில் கதையைப்பிடித்து மந்த்ரிகளுடன் கூடிச் சத்ருக்கள் மேல்விழுவார்களாயின் அவர்களைத் தடுக்கும்பொருட்டு ஸமுத்ரத்தின் தென்கரையில் காத்திருந்தனன். அனந்தரம் ஸுக்ரீவன் ஸத்ய பராக்ரமனாகிய ராமனைப் பார்த்து 'நீ ஹநுமான்மேல் ஏறிக்கொள்வாயாக லக்ஷ்மணன் அங்கதன் மேல் ஏறிக்கொள்ளட்டும். ஏனென்னில், வீரனே! மகரமீன்களுக்கு இருப்பிடமான இம்மஹா ஸமுத்ரம் மிகுதியும் அகன்றிருப்பது. ஆகையால் நீங்கள் இவ்வளவு தூரம் நடந்துவருவது சரியன்று. இவ்வானரர்களிருவரும் உங்களிருவரையும் எடுத்துக்கொண்டு ஆகாய மார்க்கத்தில் நடந்து சென்று தாண்டுவிப்பார்கள்' என்றனன். தர்மிஷ்டனும் ஸ்ரீமானுமாகிய அந்த ராமன் வில்லைத்தரித்து லக்ஷ்மணனோடும் ஸுக்ரீவனோடுங்கூடி [1] அந்த ஸைன்

1. ஆகாயவழியாய்ப் போகும் ராமலக்ஷ்மணர்களோடு ஸுக்ரீவனும் போனனென்கையால் ஸுக்ரீவனும் ஆகாய வழியாய்ப் போனனென்று தெரிகின்றது.



2616. ஸேது வழியாய் ஸமுத்ரந் தாண்டுதல்.

யத்திற்கு முன்னே போயினன். அப்பொழுது சில வானரர் நடுவே போயினர். சிலர் பக்கங்களில் நடந்தனர். சிலர் நடக்க இடமில்லாமல் ஜலங்களில் விழுந்து எழுந்தனர். மற்றுஞ் சில வானரர் மார்க்கத்தில் போக இடமில்லாமையால் கரையிலே சிறிது நேரம் இருந்து அப்பால் நடந்து போயினர். சில வானரர் கருடனைப் போல் ஆகாயமார்க்கத்திற்சென்று ஸமுத்ரத்தைத் தாண்டினர். பயங்கரமான அவ்வானர ஸைன்யம் ஸமுத்ரத்தைத் தாண்டிக்கொண்டிருக்கையில், விளைந்த பெருந்த்வனி பயங்கரமாகி, மிகுதியும் கம்பீரமாகக் கிளம்புகிற ஸமுத்ர கோஷத்தையும் அடக்கி விஞ்சியிருந்தது. ராஜனாகிய ஸுக்ரீவனுடைய அந்த வானர ஸைன்யமானது, நலன் கட்டின ஸேதுவின் வழியாய் ஸமுத்ரத்தைத் தாண்டி ஸமுத்ரத்தின் தென்கரையில் காயும் கிழங்கும் வேரும் ஜலமும் நிரம்பியதான ஓரிடத்தில் இறங்கியது. தேவதைகளும் ஸித்தர்களும் சாரணர்களும் மஹர்ஷிகளும் ராமன் தவிர மற்றெவர்க்கும் மனத்தினாலுங்கூடச் செய்யலாமென்று நினைக்கமுடியாததும் அற்புதமாயிருப்பதுமாகிய அந்த ராம கார்யத்தைப் பார்த்து வேகமாக ராமனிடம் வந்து எல்லோரும் வேறுவேறாக ராமனை மங்கலஜலங்களால் அபிஷேகித்து 'நரதேவனே! ராமா! நீ சத்ருக்களை யெல்லாம் வெல்லுவாயாக. ஸமுத்ரத்தை எல்லையாகவுடைய பூமண்டலத்தை யெல்லாம் வெகுகாலம் பாதுகாத்து வருவாயாக' என்று இங்ஙனம் நரதேவர்களால் பூஜிக்கப்படுபவனாகிய அந்த ராமனைப் பலவகையான சுபவசனங்களால் பூஜித்தனர். இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸ்ரீராமன் யுத்தத்தை அறிவிக்கிற மஹோத்பாதங்களைக் கண்டு அவற்றை லக்ஷ்மணனுக்குக் காண்பித்தல்.

லக்ஷ்மணனுக்ரஜனாகிய ராமன் [1] சகுனங்களை நன்கறிந்தவனாகையால் சில சகுனங்களைப் பார்த்து வெகு காலமாக விருப்பத்துடன் எதிர்பார்த்திருந்த யுத்தம் ஸமீபித்ததே யென்னும் ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் லக்ஷ்மணனை அழுந்தக் கட்டியணைத்து, 'லக்ஷ்மணா! குளிர்ந்த ஜலங்களும் நல்ல காய்கிழங்குகளும் நிறைந்த அரண்யங்களோடு கூடின ப்ரதேசங்களை வாஸஸ்தானமாக ஏற்படுத்திக்கொண்டு ஸேனாஸமூஹத்தை, குரங்குகள் கரடிகள் கொண்டைமுயல்கள் என்னும் அந்தந்த பாகங்களாகப் பிரித்து, கருடவ்யூஹமாக ஏற்பாடு செய்து ஸுகமாயிருப்போம். அற்பஜனங்களை அழியச்செய்வதும், விசேஷித்து வானரபல்லூக ராக்ஷஸர்களில் மிகுந்த வீரர்களை நாசஞ்செய்வதும் பயங்கரமுமாகிய யுத்தம் ஸமீபித்திருக்கிறதென்று எனக்குத் தோற்றுகின்றது. காற்றுக்கள் கலக்கமுற்று வீசுகின்றன. பூமியும் [2] கிடுகிடுவென்று நடுங்குகின்றது. பர்வத சிகரங்கள் அல்லாடுகின்றன.

---

1. 'நிமித்தாங்யேவ ஶம்ஸந்தி ஶுபாஶுபஃபலோதயம்। தஸ்மாத்தாநி ஶாஸ்த்ரஜ்ஞோ ராஜா ஸமுபலக்ஷயேத்' என்று சகுனங்களே சுபாசுப பலன்களை அறிவிக்குமாகையால் ராஜன் அவற்றை அவஶ்யம் ஊக்கத்துடன் பார்க்கவேண்டும்.

2 இங்கு மிகுதியும் அனிஷ்டத்தை விளைவிக்கிற பூகம்பம் ஸந்த்யாகாலத்தில் உண்டாகுமென்று தெரிகின்றது. இதையே வஸிஷ்டர் 'யாமத்ரயாச்ச ஸுகம்போ ந்ருபத்விஜாதீநாமரிஷ்டதஃ। அரிஷ்டதஃ க்ஷிதீஶாநாம் ஸந்த்யயோருபயோரபி' என்று ராஜாக்களுக்கு அரிஷ்டத்தை அறிவிக்கிற பூமிநடுக்கம் ஸந்த்யாகாலத்தில் உண்டாகுமென்று மொழிந்தனர்.

வ்ருக்ஷங்கள் காரணமில்லாமலே முறிந்து விழுகின்றன. [1] மேகங்கள் செந்நாய் வர்ணமுடையவைகளும் பருந்து முதலியவைபோன்ற உருவம் அமைந்தவைகளும் கண்ணெடுத்துப்பார்க்க முடியாதவைகளுமாகிப் பருஷத்வனியுடன் கூடி பயத்தை விளைத்துக்கொண்டு ரக்தத் துளிகளோடு கூடின ஜலத்தை க்ரூரமாகப் பெய்கின்றன. ஸந்த்யை ரக்தசந்தனம்போன்ற மேகங்கள் நிறைந்து மிகுதியும் பயங்கரமாயிருக்கின்றது. ஸூர்யன் ஜ்வலித்துக் கொண்டிருக்கையில், அவனிடத்தினின்று இதோ பிண்டம் போன்ற அக்னி விழுகின்றது. (ஸூர்யன் ஜ்வலித்துக்கொண்டு நெருப்பை வர்ஷிக்கின்றனன்.) ம்ருகங்களும் பக்ஷிகளும் வருந்தின உருவத்துடனும் தீனஸ்வரத்துடனும் கொடியவையாகி நாற்புறத்திலும் ஸூர்யனைப்பார்த்து உரக்க இரைச்சலிட்டுக்கொண்டு பெரும்பயத்தை அறிவிக்கின்றன. ராத்ரியில், சந்த்ரன் ப்ரகாச மற்று [2] தாபத்தை விளைவிக்கின்றனன். [3] ஸூர்யனைச்சுற்றி ஓரங்களில் கறுத்த கிரணமண்டலமும், அப்புறத்

1. 'ஜ்வுல்காபதநஞ் சைவ ஜிவாநக்ஷத்ரஜர்ஸநம்। ஜிவாஸஜிஸ்தய॥ காஷ்஠தரூணரக்தப்ரவர்ஷணம்' என்று ரக்தமழை பெய்தல் அவசகுனமென்று வராஹமிஹிரன் சொல்லினன்.

2. குளிர்ந்த சந்த்ரன் வெப்பத்தை விளைப்பது உத்பாதமென்று கருத்து.

3. இங்கு மூன்று வர்ணங்களமைந்த மூன்று மண்டலங்களைச் சொல்லுகையாலும் ஸாயங்காலமாகையாலும் இங்குச் சொல்லுகிற ப்ரிவேஷம் ராஜாக்களுக்கு நாசத்தை அறிவிக்குமென்று தெரிவிக்கப்பட்டது. இதற்குக் காஸ்யபர் 'ஜிவிமண்ஙலஸீசமுபவீநோ ந்ருபவீநோ யஸ்த்ரிமண்ஙல:' என்று மூன்று மண்டலங்கள் உண்டாயின் ராஜாக்களுக்கு நாசத்தை விளைவிக்குமென்று சொல்லினர். 'ஜிஙகாபரிவேஷ: பூர்வயாமேது பீலா ஜிஙகாபரிவேஷோ

தில், சிறிது சிவந்த கிரணமண்டலமும் அமைந்து நடுவில் மிகச்சிவப்புடையதும் குறுகினதும் பயங்கரமும் இதுவரையில் என்றும் புலப்படாததும் ப்ராளயகாலத்தில் தோற்றும் பரிவேஷம் போன்றதுமாகிய பரிவேஷம் புலப்படுகின்றது. [1] லக்ஷ்மணு! மற்றும் நிர்மலமான ஸூர்யமண்டலத்தின் இடையில் சந்துபோல் கறுத்த அடையாளம் ஒன்று தென்படுகின்றது. லக்ஷ்மணு! நக்ஷத்ரங்கள் மிகுதியும் அழுக்கடைந்து ஒளியற்று உலகங்களுக்கு ப்ராளயத்தை அறிவிப்பவைபோலிருக்கின்றன; பார். காகங்களும் பருந்துகளும் கழுகுகளும் முதலிய பலிஷ்டங்களான பக்ஷிகளை வலிவற்ற பக்ஷிகள் கீழ்விழத்தள்ளுகின்றன. நரிகள், மிகுதியும் பயத்தை விளைவிப்பவைகளும் அமங்களகரங்களுமான த்வனிகளைச் செய்கின்றன. இனிச் சூரர்களான வானரர்களும் ராக்ஷஸர்களும் ஒருவர் மேல் ஒருவர் ப்ரயோகிக்கும் பர்வதங்களாலும் சூலம் கத்தி முதலிய ஆயுதங்களாலும் பூமிமுழுவதும் மறைக்கப்பட்டு ரக்தங்களும் மாம்ஸங்களும் நிறைந்ததாகும். இனித் தாமதம் வேண்டாம். இப்பொழுதே சீக்ரமாக வானரர்கள் எல்லோரும் சூழ்ந்து வரப்பெற்று எவர்க்கும் எதிர்க்க முடியாத லங்காபுரிக்கு வேகமாகப் போவோம்' என்றனன். தர்மஸ்வபாவனுகிய ராமன் இங்ஙனஞ் சொல்லி

---

வ்ருஷ்டியுதியம் த்விதீயே। திநகரபரிவேஷம் க்ஷேமமாஹுஸ்த்ருதீயே திநகரபரிவேஷ: ஸர்வநாஶஶ் சதுர்யே' என்று நான்காவது யாமத்தில் ஸூர்யபரிவேஷம் உண்டாயின் ஸர்வநாசத்தை விளைவிக்குமென்கிறது.

1. 'சந்த்ரார்க்கமண்டலச்சித்ரம் த்ருஷ்ட்வா ஜநபதக்ஷய:' என்று ஸூர்யமண்டலத்தில் ரந்த்ரம் (சந்து) தெரியுமாயின் ஜனபதத்திற்கு நாசத்தை விளைவிக்குமென்று தெரிகிறது.

யுத்தம் நேருவதற்கு மிகுதியும் ஸந்தோஷமுற்று ஸமர்த்தனுகையால் கையில் தனுஸ்ஸைத்தரித்து லங்கைக்கு எதிர்முகமாக வானர ஸைன்யங்களுக்கு முன்னே புறப்பட்டுப் போயினன். அப்பால் விபீஷணனேடும் ஸுக்ரீவனேடும் கூடின வானரோத்தமர்கள் எல்லோரும் சத்ருக்களை வதிக்கும் விஷயத்தில் திடமான மனவுறுதியுடையவராகி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டே சென்றனர். ராகவனுக்கு ஸந்தோஷத்தை விளைவிக்கும்பொருட்டு, தைர்யசாலிகளும் வீர்யமுடையவர்களுமாகிய வானரர்கள் யுத்தத்தில் தமக்குள்ள உத்ஸாஹத்தை அறிவிப்பவைகளான வாலாட்டுதல் முதலிய சேஷ்டைகளைச் செய்கையில் ரகுகுலாநந்தகரனுகிய ராமன் ஸந்தோஷித்தனன். இருபத்து மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸேனையைக் கருடவ்யூஹமாக ஏற்படுத்தலும், சுகன் ராவணனிடம் போய் ராமனுக்கு விதையைக் கொடுக்கும்படி விண்ணப்பஞ் செய்தலும்.

ராஜனுகிய ராமன் குளிர்ந்த நீர் முதலிய ஸௌக்யங்கள் அமைந்த இடத்தில் இறக்கும்படி ஏற்பாடு செய்யப்பெற்ற அவ்வானர வீரர்களின் ஸைன்யமானது சந்த்ரனுல் நிலைபெற்றுச் சுபநக்ஷத்ரங்களோடு கூடின ஶரத்காலத்துப் பூர்ணிமையின் ராத்ரிபோல் மிகுதியும் ப்ரகாசித்தது. ஸமுத்ரம்போல் அளவிட முடியாமல் ப்ரகாசிக்கின்ற அவ்வானர ஸைன்யங்களின் ஸமூஹத்தினுல் பூமிமுழுவதும் பீடிக்கப்பட்டு வருந்தி நடுங்கிற்று. லங்கையினின்று ஸைனிகர்களின் கோஷமும் பேரி ம்ருதங்கம் முதலிய வாத்யங்களின் த்வனியும் மயிர்க்

கூச்சலை விளைத்துக்கொண்டு [1] துமுலமாக வானரர்களுக்குச் செவிப்பட்டன. வானரயூதபதிகள் அந்த கோஷங்களைக் கேட்டு மிகுதியும் ஸந்தோஷமுற்றனர். மற்றும் அந்த த்வனியைக் கேட்கப்பொறாமல் அதைக் காட்டிலும் அதிகமானகோஷம் கிளம்பும்படி ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். ராக்ஷஸர்களும், அங்ஙனம் வானரர்கள் கொழுத்து மிடுக்குடன் இறைச்சலிட்டுக் கொண்டு ஆகாயத்தில் மேகங்கள்போல் கர்ஜிப்பதைச் செவியுற்றனர். ராமன விசித்ரங்களான த்வஜங்களாலும் பதாகைகளாலும் விளங்குகின்ற லங்காபுரியைக்கண்டு சிறிதும் மனக்களிப்பின்றி ஸீதையைக் குறித்து 'ஸாகேத நகரியில் ஸமஸ்த போகங்களுக்கும் உரியவளாயிருந்து மான்பேடுபோல் அலமருகின்ற கண்களையுடைய அந்த ஸீதை இவ்விலங்கைமா நகரத்தில் அங்காரகனென்னும் துஷ்டக்ரஹத்தினால் பீடிக்கப்பட்ட ரோஹிணிபோல் ராவணனால் சிறையில் அடைக்கப்பட்டிருக்கின்றனள்' என்று நினைத்துக் கொண்டனன். அனந்தரம் அவ்வீரன் யுத்தத்திற்கு ப்ரயாணமாய்ப் போகும் பொழுது ப்ராணநாயகியை நினைத்துக்கொண்டு வருந்துவது யுக்தமன்றாகையால் அதை அடக்கிக்கொண்டு உஷ்ணமான பெருமூச்சுக்களை எறிந்து லக்ஷ்மணனைப் பார்த்துத் தனக்கு அந்த ஸமயத்தில் ஹிதமான வாக்யத்தை மொழியத் தொடங்கி 'லக்ஷ்மணா! ஆகாயத்தில் உறைவதுபோல் மிகுதியும் உயர்ந்து விஸ்வகர்மாவால் த்ரிகூட பர்வதத்தின் சிகரத்தில் நிர்மிக்கப்பட்டு மனத்தினால் இயற்றப்பட்டது போன்ற லங்காபுரியைக் காண்பாய். இவ்

1. துமுலமாக—இது இன்ன சப்தமென்று நன்றாகக் கண்டு பிடிக்க முடியாமல் ஒன்றாகக் கலந்து.

விலங்கை பலநிலைகளையுடைய உப்பரிகைகள் பலவும் நிறைந்து வெளுத்த மேகங்களால் மறைக்கப்பட்ட ஆகாயம்போல் திகழ்கின்றது. இவ்விலங்கை மேலான மல்லிகை முதலிய பூஞ்செடிகள் நிறைந்து சைத்ராதம் போன்ற புஷ்பித்த வனங்களாலும் பலவகைப்பக்ஷிகளின் கலகலத்வனிகளாலும் மிகவும் ப்ரகாசிக்கின்றது. பழங்களைத் தின்று மதித்திருக்கின்ற கோகிலங்களும்(குயில்களும்)தேன்களைப் பருகி மதித்து அசையாதிருக்கின்ற வண்டுகளும் பெண் கோகிலங்களால் சூழப்பட்ட பூஞ்செடிப் புதர்களும் அமைந்த வனங்கள் மேலான காற்றுக்களால் அடிக்கடி அசைகின்றன' என்றனன். இங்ஙனம் தசரத குமாரனாகிய ராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்லி, உடனே நீதிஶாஸ்த்ரஜ்ஞானத்தினாலும் அதை உபயோகப்படுத்துந் திறமையாலும் ஸேனையை ஒழுங்கு படுத்த முயன்று, வானரபதிகளைப் பார்த்து 'மிகுந்த வீர்யமுடையவனும் பகைவர்க்கு வெல்லமுடியாதவனுமாகிய அங்கதன் நீலனுடன்கூடித் தன் கபிஸைன்யத்தை அழைத்துக்கொண்டு ஸேனையின் மத்யப்ரதேசத்தில் இருப்பானாக. வானரஶ்ரேஷ்டனாகிய ருஷபன் தனது வானர ஸமூஹங்களோடுகூடி வானரஸேனையின் வலப்பக்கத்தில் காத்திருப்பானாக. மதித்த யானைபோல் அணுகமுடியாதவனும் பலிஷ்டனுமாகிய கந்தமாதனன் தன் ஸைன்யங்களோடு வானர ஸேனையின் இடப் பக்கத்தில் இருப்பானாக. நானும் லக்ஷ்மணனும் மனவூக்கத்துடன் ஸேனையின் சிரஸ்ஸில் இருக்கின்றனம். ஜாம்பவான் ஸுஷேணன் வேகதர்சி என்னும் மஹாபுத்திசாலிகளான பல்லூக வானர முக்யர்கள் மூவரும் குக்ஷிஸ்தானத்தை (வயிற்றின் பாகத்தை) ரக்ஷிப்பார்களாக. மஹாதேஜஸ்வி

யாகிய வருணன் மேற்கு திசையைப் பாதுகாப்பது போல், வானர ராஜனாகிய ஸுக்ரீவன் வானர ஸைன்யத்தின் பின் பாகத்தை ரக்ஷிப்பானாக' என்று ஆஜ்ஞாபித்தனன். அவ்வானர ஸைன்யம் கருடவ்யூஹமாக நன்கு ஒழுங்கு செய்யப்பெற்றுப் பெரிய வானர வீரர்களால் பாதுகாக்கப்பட்டு மேகங்கள் ஸஞ்சரிக்கின்ற ஆகாயம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. வானரர்கள் பர்வத சிகரங்களையும் பெருப்பெரிய வ்ருக்ஷங்களையும் எடுத்துக்கொண்டு யுத்தத்தில் ராக்ஷஸர்களெல்லோரையும் மர்த்தனஞ் செய்யவேண்டுமென்னும் விருப்பத்துடன் லங்கையில் பரவேசிக்க முயன்றிருந்தனர். அவ்வானரோத்தமர்கள் 'பர்வத சிகரங்களை வீசியெறிந்தாவது பிடிகளால் புடைத்தாவது லங்கை முழுவதையும் பாழ்செய்வோம்' என்று மனத்தில் நிச்சயித்துக்கொண்டனர். மஹாதேஜஸ்வியாகிய ராமன் ஸுக்ரீவனைப்பார்த்து 'ஸைன்யங்களையெல்லாம் நன்றாகச் சீர்திருத்தியாயிற்றல்லவா? இனி இந்தச் சுகனை விட்டுவிடுவோம்' என்றனன். ராமன் சொன்னதைக் கேட்டு மஹாபலனாகிய வானரேந்த்ரன் ஸுக்ரீவன் அவனது ஆஜ்ஞையின்படி அந்த ராவண தூதனாகிய சுகனை விட்டுத் துரத்தினன். அங்ஙனம் வானரர்களால் பற்பலவகையிலும் பிடிக்கப்பட்டு மிகுதியும் பயந்திருக்கிற சுகன் ராமனது ஆஜ்ஞையால் விடுபட்டவுடனே நிமிஷமாயினும் அங்குக் காலூன்றப் பொறாமல் ராக்ஷஸாதிபதியான ராவணனிடம் போயினன். ராவணன் சிரித்துக்கொண்டே சுகனைப் பார்த்து 'உன் இரகுகள் அறுக்கப்பட்டவைபோல் புலப்படுகின்றனவே. அவை கட்டப்பட்டனவா என்? வானரர்கள் மனஞ் சபலமாயிருக்கப் பெற்றவராகையால் அகப்பட்டவனைக் கட்டு

வதும் விடுவதுமாயிருப்பார்கள். ஆகையால் அவர்கள் கையில் அகப்படவில்லையன்றோ' என்று வினவினன். அப்பால் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் 'ஸுக்ரீவன் எனக்கு என்ன பதில் உரைத்தனன்' என்று சுகனை வினவுகையில், அவன் பயத்தினால் தழதழப்புற்று அந்த மேலான ராக்ஷஸாதிபதியைப் பார்த்து 'நான் இங்கிருந்து ஸமுத்ரத்தின் வடகரைக்குச் சென்று அங்கு ஸுக்ரீவனைப் பார்த்து ம்ருதுவும் மதுரமுமான வசனங்களால் நல்வார்த்தை சொல்பவனாகி, நீ சொல்லியனுப்பின ஸங்கதி ஒன்றும் தவறாமல் தெளிவாக மொழிந்தனன். அவ்வானரர்கள் என்னைப் பார்த்தவுடனே மிகுதியும் கோபித்தவராகி மேற்கிளம்பி என்னைப் பிடித்துக்கொண்டனர். அவ்வளவே அன்று; பிடிகளால் புடைப்பதும் சிறைகளை அறுப்பதுமாகி என்னைக் கொல்லவும் தொடங்கினர். ராக்ஷஸேஸ்வரா! வானரர்களோடு பேசுவதற்கே அவகாசம் இல்லாமற் போயிற்று. கேட்டுப் பதில் தெரிந்து கொள்வது எங்கே? ஆகையால் அதுவும் இல்லை. வானரர்கள் இயற்கையாகவே மிகுதியும் கோபமுடையவர்; மிகவும் கொடியவர். விராதனையும் கபந்தனையும் கரனையும் கொன்று ப்ரஸித்தவீரனாகிய ராமன் ஸுக்ரீவனுடன் கூடி ஸீதையிருக்கிற இவ்விடத்திற்கு வந்திருக்கின்றனன். அப்படிப்பட்ட மேலான வில்லாளி அந்த ராமன் ஸமுத்ரத்தில் ஸேதுவைக் கட்டி லவணஸமுத்ரத்தைத் தாண்டி ராக்ஷஸர்களை த்ருணீகாரஞ் செய்து இதோ லங்கையின் வாசலில் வந்திருக்கின்றனன். பர்வதங்கள் போலும் மேகங்கள் போலும் புலப்படுகின்ற ருக்ஷவானர முக்யர்களின் ஸைன்ய ஸமூஹங்கள் அனேகமாயிரங்கணக்கில் பூமண்டலம் முழுவதும் சூழ்ந்திருக்கின்

றன. ராக்ஷஸ ஸைன்யங்களுக்கும் வானர ஸைன்யங்களுக்கும் சிறிதும் ஸந்தி நேராது. இதோ அவர்கள் லங்கையின் கோட்டைமேல் வரப்போகின்றனர். சீக்ரத்தில் ஸீதையையாவது ராமனுக்குக் கொடுப்பாய். அன்றி யுத்தத்தையாவது கொடுப்பாய். இவ்விரண்டில் ஏதேனுமொன்றைச் சீக்ரத்தில் செய்வாய்' என்றனன். சுகன் சொன்ன வார்த்தையைக் கேட்டு ராவணன் கோபத்தினால் கண்கள் சிவக்கப் பெற்றுச் சொர சொர வென்று கண்ணால் எரிப்பவன்போல் சுகனைப் பார்த்து 'தேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும் மற்றுமுள்ள எல்லோரும் என்மேல் எதிர்த்து யுத்தஞ் செய்யினும் ஸமஸ்த லோகங்களும் எனக்கு பயத்தை விளைவிப்பினும் ஸீதையைமாத்ரங் கொடுக்கமாட்டேன். வஸந்தருதுவில் புஷ்பித்த வ்ருக்ஷத்தின்மேல் வண்டுகள் வேகத்துடன் ஓடிப்பாய்வதுபோல், என் பாணங்கள் ராமனுக்கெதிரில் எப்பொழுது பாய்ந்து செல்லப் போகின்றனவோ? வெகு காலமாக யுத்தமில்லாமையால் அம்பறாத் தூணிகளில் வெறுமனே கிடந்து ஜ்வலிக்கின்ற என்பாணங்களை தனுஸ்ஸில் தொடுத்து ஆயிரமாயிரமாகப் பரப்பிக் குறைக்கொள்ளிகளால் வெளிச்சங்காட்டி யானையைத் துரத்துவதுபோல் ராமனை அவற்றின் ப்ரகாசம் சூழ்ந்திருக்கச் செய்து துரத்துவேன். ராமன் விராதாதிகளைக் கொன்றானென்று அவன் பலத்தைச் சொல்லினையே! மிகுந்த பலங்களால் சூழப்பட்டவனாகி அவனுக்குள்ள அந்த பலத்தையெல்லாம், ஸூர்யன் உதயமாகும்பொழுதே சந்த்ரனுடையவும் நக்ஷத்ரங்களுடையவும் காந்தியைத் திரஸ்கரிப்பதுபோல் நான் கீழ்ப்படுத்தி விடுகின்றனன். எனக்கு உலகங்களை மூழ்குவிக்கும்படியான ஸமுத்ரத்

தோடொத்த வேகமும் வாயுவைப்போன்ற கமன சக்தியும் உள்ளதென்று ராமனுக்குத் தெரியாதல்லவா? ஆனதுபற்றியே என்னோடு யுத்தஞ் செய்ய விரும்புகின்றனன். ராமன், க்ரூரமான விஷமுடைய ஸர்ப்பங்கள் போன்று என் அம்பருத்தூணிகளிலிருக்கும் பாணங்களை யுத்தத்தில் எப்பொழுதும் பார்த்தவனல்லன். ஆனதுபற்றியே என்னோடு யுத்தஞ்செய்ய விரும்புகின்றனன். ராமன் இதுவரையில் முன்பு யுத்தத்தில் என் பராக்ரமத்தை அறியான். நான் என் தனுஸ்ஸாகிற வீணையை என் பாணங்களாகிற வீணைவாசிக்கும் கோல்களால் வாசிக்கின்றனன். நாண் சப்தமும், வருந்தினவர்களும் பயந்தவர்களும் செய்யும் மஹா ரோதனமும், பாணங்கள் உள்ளங்கையில் உறைவதாலுண்டாகும் த்வனியும் ஆகிய மூன்று சப்தங்களும் அவ்வீணைக்கு மந்த்ர மத்யதாரங்களென்னும் ஸ்வரங்கள். சத்ருஸைன்யமே விசாலமான நாட்யரங்கம். அவ்வீணை மற்றெவர்க்கும் வாசிக்க முடியாதது. அப்படிப்பட்ட சத்ரு ஸைன்யமாகிற நாட்யரங்கத்தில் புகுந்து அந்த வில்லாகிற வீணையைக்கொண்டு யுத்தத்திற்கு வந்தவர் கேட்க வாசிக்கின்றனன். எனக்கு யுத்தம் விளையாட்டே. ஆயிரங்கண்ணுடைய தேவேந்த்ரனுயினும் ஸாக்ஷாத் வருணனுயினும் யமனுயினும் குபேரனுயினும் மஹா யுத்தத்தில் அக்னிபோன்ற பாணங்களை ப்ரயோகிக்கின்ற என்னை எதிர்க்க வல்லராகாமற் போயினரல்லவா' என்றனன். இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் சுகஸாரணர்களை அனுப்புதலும், விபீஷணன் அவர்களைப்பிடித்து ராமனிடம் ஒப்புவிக்கையில் ராமன் கருணையுடன் வானரஸைன்யங்களைப் பார்க்கச்செய்து விடுதலும், அவர்கள் போய் வந்த வ்ருத்தாந்தத்தை யெல்லாம் ராவணனுக்குச் சொல்லுதலும்.

தசரத குமாரனாகிய ராமன் வானரஸைன்யத்தோடுகூட ஸமுத்ரத்தைத்தாண்டி வந்ததைக்கேட்டு ஸ்ரீமானாகிய (செல்வப்பெருக்குடைய) அந்த ராவணன் தன் மந்த்ரிகளான சுகஸாரணர்களைப்பார்த்து 'வானர ஸைன்ய மெல்லாம் தாண்டமுடியாத ஸமுத்ரத்தைத் தாண்டி வந்தது. இதுவரையில் என்றும் கண்டதும் கேட்டதும் அறிந்ததுமாகாதா ஸேதுவை ராமன் கட்டினன். ஸமுத்ரத்தில் ஸேது கட்டினதில் எனக்கு இன்னமும் நம்பிக்கை வரவில்லை. மற்றும், எனக்கு அவ்வானர ஸைன்யம் உள்ள விதமெல்லாம் தெரியவேண்டும். நீங்கள் வானரர்களுக்குத் தெரியாதபடி ஏகாந்தமாக அவரது ஸைன்யத்தில் புகுந்து அதன் பரிமாணத்தையும் (அளவையும்) அவர்களுடைய வீர்யத்தையும், அதில் முக்யமானவர் எவர் என்பதையும், ராமனுடைய மந்த்ரிகளும் ஸுக்ரீவனுடைய மந்த்ரிகளும் எவரென்பதையும், வானரஸேனையில் யுத்தத்திற்கு முன் நிற்கும் சூரர்கள் எவரென்பதையும், அப்படிப்பட்ட மஹாஜலத்திற்கிடமான ஸமுத்ரத்தில் ஸேது கட்டின விதத்தையும், மஹானுபாவர்களான அவ்வவர்களின் விடுதிகளையும், ராமனுடைய மன நிலைமையையும், பராக்ரமத்தையும், ஆயுதங்களையும், லக்ஷ்மணனுடைய பராக்ரமத்தையும் இவையெல்லாவற்றையும் உள்ளபடி தெரிந்துகொண்டு வரவேண்டும். மஹா தேஜஸ்விக

ரான அந்த வானரர்களுக்குஸேனதிபதிஎவன்?நீங்கள் இவ்விஷயத்தை யெல்லாம் உண்மையாகத் தெரிந்து கொண்டு சீக்ரத்தில் இவ்விடம் வந்து சேரவேண்டும்' என்று ஆஜ்ஞாபித்தனன். வீரர்களான அந்தசுகஸார ணர்கள் இங்ஙனம் ராவணனால் ஆஜ்ஞை யிடப்பெற்று வானரரூபங்களைத் தரித்து வானர ஸைன்யத்தில் புகுந் தனர். அப்பால் அந்த சுகஸாரணர்கள், சிந்திக்க முடியாததும் காண்போர்க்கு மயிர்க்கூச்சலை விளைவிப் பதுமாகிய அவ்வானரஸேனையைப் பார்த்து ஆச்சர் யம் அடைந்து அதைக் கணக்கிடத் தெரியாதவராயி னர். ஏனென்னில் அவ்வானர ஸைன்யம் பர்வத சிகரங் களிலும் மலைவெடிப்புகளிலும் குஹைகளிலும் ஸமுத் ரக்கரைகளிலும் அரண்யங்களிலும் உத்யானவனங் களிலும் நிலைகொண்டதாகிச் சிலபாகம் ஸமுத்ரத் தைத் தாண்டிவருவதும், சிலபாகம் தாண்டிவந்ததும், சிறிது விடுதிகளை ஏற்படுத்திக் கொண்டிறங்கியிருப் பதும், சிறிது அப்பொழுதே இடம் பார்த்து இறங்கு வதுமாகி இங்ஙனம் நாற்புறங்களிலும் பலவிதமாக விளக்கமுற்றுப் பயங்கரமான சப்தங்களைச் செய்து கொண்டிருந்தது. இங்ஙனம் மஹாபலமுடையதும் கலக்க முடியாததுமான அவ்வானர ஸைன்யமானது ஸமுத்ரம்போல் அந்த ராக்ஷஸர்க்குப் புலப்பட்டது. அங்ஙனம் வானர வேஷம் பூண்டு மறைந்திருக்கிற அந்த சுகஸாரணர்களை மஹா தேஜஸ்வியாகிய விபீ ஷணன் கண்டுகொண்டனன். அப்பால் அவன் அந்த சுகஸாரணர்களிருவரையும் பிடித்து ராமனிடங் கொண்டுவந்து 'ராமா! சத்ரு பட்டணங்களை அழிக் கும் சூரனே! இதோ! பார். இவ்விருவரும் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனுடைய மந்த்ரிகள்; சுகஸாரணர்க

ளென்பவர்; லங்கையினின்று நமது ரஹஸ்யங்களைத் தெரிந்துகொண்டு போகும் விருப்பத்தினால் வந்த சார புருஷர்கள்' என்றான். அப்போது அந்த சுகஸாரணர்கள் மிகுதியும் துக்கித்தவராகிப் பிழைப்பில் ஆசையை இழந்து கைகூப்பிக்கொண்டு பயத்துடன் ராமனைப்பார்த்து 'நல்லியற்கையுடையவனே! ரகுநந்தனா! நாங்களிருவரும் ராவணனால் அனுப்பப்பட்டு உன் ஸைன்யத்தையெல்லாம் பார்த்துத் தெரிந்துகொள்வதற்காக இவ்விடம் வந்தோம்' என்றனர். ராமன் மஹாபுருஷனாகிய தசரதனுடைய குமாரனாகையால் ஸஹஜமான கருணையுடையவன்; ஸமஸ்தபூதங்களுக்கும் ஹிதஞ் செய்வதிலேயே விருப்ப முடையவனாகையால் சத்ருக்களிடத்திலும் வாத்ஸல்ய முடையவன். ஆகையால் அவன் அந்த சுகஸாரணர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ராவணனுடைய புத்திமாந்த்யத்திற்குச் சிரித்து, அவர்களை நோக்கி, 'இந்த ஸைன்யத்தையெல்லாம் பார்த்து எங்களை நன்றாகப் பரீக்ஷித்து ராவணன் சொன்னபடி கார்யமெல்லாம் நிறைவேறியிருக்குமாயின் இஷ்டப்படி திரும்பி உங்களூருக்குப் போகலாம். அப்படியில்லாமல் உங்களுக்கு இன்னம் பாராதது சிறிது உளதாயின், மீளவும் அதைப் பார்த்துக்கொள்ளலாம். அல்லது விபீஷணனே, உங்களுக்கு மீளவும் ஸைன்யத்தையெல்லாங் காண்பிப்பான். நீங்கள் இங்ஙனம் அகப்பட்டுக் கொண்டதனால் பிழைப்பு நக்காதென்று பயப்படவேண்டாம். ஆயுதமெடோமென்று ஆயுதந் துறந்தவரையாவது தூதர்களையாவது வதிக்கத்தகாது. நீங்கள் ஆயுதமற்றிருக்கையால் வதிக்கத் தகுந்தவரல்லீர்' என்றுரைத்து, விபீஷணனைப் பார்த்து, விபீஷணா! இவர்கள் தமது சத்ருபக்ஷத்தி

விருப்பவர்களைப் பலவகைப்பட்ட [1] ஸாமாதியான உபாயங்களால் தமது பக்ஷத்திற்கு இழுக்கும்படியான சாரர்கள். ஆயினும் அபயம் வேண்டுகின்றனர். அபயம் வேண்டின போதிலும் தமது சத்ருபக்ஷத்தை ஹிம்ஸிப்பவரே. ஆயினும், வேண்டுகிறார்களாகையால் இவ்விருவரையும் விட்டுத் துரத்துவாயாக' என்று மொழிந்து, அப்பால் அந்தச் சாரர்களைப் பார்த்து 'நீங்கள் இருவரும் லங்காபுரிக்குப்போய், குபேரனுடைய தம்பியும் ராக்ஷஸர்க்கு ராஜனுமாகிய ராவணனைப் பார்த்து நான் இப்பொழுது சொல்லும் வார்த்தைகளையெல்லாம் அப்படியே சொல்லவேண்டும். 'நீ எந்த பலத்தை அவலம்பித்து என் ஸீதையை அபஹரித்துக்கொண்டு போயினையோ, அந்த பலத்தை இப்பொழுது நீயும் உன் ஸைன்யமும் உன்பந்துக்களும் இஷ்டப்படி காண்பிப்பீர்களாக. நாளை விடியற்காலத்தில் இந்த லங்காபுரத்தையும் அதன் கோட்டைகளையும் வெளி வாசற்படிகளையும் ராக்ஷஸர் ஸைன்யத்தையும் த்வம்ஸஞ் செய்யப்போகிறேன்; காண். ராவணா! நாளை விடியற்காலத்தில் வஜ்ராயுதத்தில் பயிற்சிசெய்து கைதேர்ந்தவனாகிய இந்த்ரன் தானவர்கள்மேல் வஜ்ராயுதத்தை ப்ரயோகிப்பதுபோல், உன்மேலும் உன் ஸைன்யத்தின்மேலும் பயங்கரமான என் கோபத்தை ப்ரயோகஞ்செய்கிறேன். உன் பலத்தையெல்லாம் ஸித்தப்படுத்திக் கொண்டிருப்பாயாக' என்று மொழிய வேண்டும்' என்றனன். இங்ஙனம் ராமன் ப்ரதிஸமாசாரஞ் சொல்லுகையில், ராக்ஷஸர்களான அந்த சுகஸாரணர்கள் தர்மவத்ஸலனும் ரகுகுல ப்ரகாசகனுமாகிய ராமனை 'ஜய விஜயீபவ' என்று ஜய ஶப்தங்

1. ஸாமம் முதலிய.

களால் புகழ்ந்து லங்காபுரிக்கு வந்து ராக்ஷஸாதிபதியான ராவணனைப் பார்த்து 'ராக்ஷஸேஸ்வரா! விபீஷணன் எங்களைப் பிடித்து வதிக்கவேண்டுமென்று ராமனிடங் கொண்டுபோயினன். ஆயினும் அவன் தர்மஸ்வபாவனாகையால் தூதனைக்கொல்ல விரும்பவில்லை. மற்றும் அமித ப்ரதாபனாகையால் எம்மை விட்டால் என்ன கெடுதி வருமோ என்று பயப்படுவனல்லன். ஆகையால் எங்களை விட்டனன். ஸ்ரீமானும் தசரத குமாரனுமாகிய ராமனும் லக்ஷ்மணனும் விபீஷணனும் மஹாதேஜஸ்வியும் மஹேந்த்ரனைப்போன்ற பராக்ரமசாலியுமாகிய ஸுக்ரீவனும் ஆகிய இந்நால்வரும் லோகபாலகரைப் போன்றவரும் சூரர்களும் அஸ்த்ரங்களில் கைதேர்ந்தவரும் திடமான பராக்ரமமுடையவருமா யிருப்பவர். இப்படிப்பட்ட புருஷ ஸ்ரேஷ்டர்கள் நால்வரும், லங்கையைப் பாழ்செய்யும் பொருட்டு ஓரிடத்தில் சேர்ந்து ஐகமத்யம் உண்டாகப்பெற்றிருக்கின்றனர் (ஒருமிடறு யிருக்கின்றனர்). மற்றை வானர்களெல்லோரும் அங்ஙனம் இருக்கட்டும். இந்நால்வருமே லங்காபுரத்தை ப்ராகாரங்களோடும் வெளிவாசற்படிகளோடும் பிடுங்கி மற்றோரிடத்தில் வீசியெறியவல்லவர். ராமனது உருவமும் ஆயுதங்களும் எப்படிப்பட்டவையோ, அவற்றை ஆராய்ந்து பார்க்கையில், மற்றை அம்மூவரும் அப்படி யிருக்கட்டும்; அவனொருவனே லங்காபுரி முழுவதையும் த்வம்ஸஞ்செய்ய வல்லவனென்று எமக்குத் தோற்றுகின்றது 'ராமன் அஸஹாய சூரனாயினும், அவனது ஸேனையை ஹதஞ்செய்கையில் அவன் உத்ஸாஹமற்றவனாவானாகையால் அங்ஙனஞ் செய்வோம்' என்கிறாயா? ஸுக்ரீவனோடும் அங்கதாதிகளோடும் கூடி இவ்வளவு அவ்வளவென்று அளவிடக் கூடா



2632. சுகஸாரணர்கள் வானரஸேனையில் பரிபவப்பட்டு ராவணனுக்கு ஹிதங்கூறுதல்.

திருக்கின்ற அந்தக் கபி ஸைன்யத்தை ராமனுக்கு வலக்கைபோன்ற லக்ஷ்மணன் பாதுகாத்திருக்கையில் மனத்தினாலுங்கூட எதிர்ப்பதற்கு எப்படிப்பட்டவர்க்கும், கேவல மனுஷ்யாதிகளேயன்றி தேவதைகளுக்கும் தேவதைகளுக்கு மாத்ரமேயன்றி அவர்கள் த்வேஷத்தைவிட்டு அஸுரர்களோடு கலந்துகொண்டு வரினும் இவ்விருதரத்தவரும் தாங்தோன்றித்தனத்தை விட்டுத் தந்தமது ப்ரபுக்களின் ஆஜ்ஞையின்படி எதிர்த்து வரினும் எள்ளளவும் ஸாத்யமன்று. (அங்ஙனம் பத்துயோஜனை விஸ்தீர்ணமுடையதும் நூறு யோஜனை நீண்டதுமாகிய ஸேது ஸமுத்ரத்தில் கட்டப்பட்டதென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. வானரஸேனையும் ஸமுத்ரத்தைத் தாண்டியது. ராமன் ஸமுத்ரத்தினுடைய தென்கரையில் இழிந்திருக்கின்றனன். ஸைன்யங்கள் சிறிது தாண்டினதும் சிறிது தாண்டுவதுமாயிருக்கின்றன. அதற்கு முடிவே தெறியவில்லை.) திடமான மனத்துடன் உடனே யுத்தஞ்செய்ய விரும்பி வானரஸேனையிலுள்ளவரனைவரும் ஸந்தோஷம் மிகப் பெற்றிருக்கின்றனர். ஆகையால் அவர்களோடு விரோதித்தது போதும். கோபத்தை அடக்கிக்கொண்டு ஸீதையைக் கொடுத்துவிடுவாயாக' என்றனர். இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

வானரஸேனையைப் பார்க்கும்பொருட்டு மிகுதியும் உயர்ந்த உப்பரிகையின் மேலேறின ராவணனுக்கு ஸாரணன் அவ்வானர யூதபதிகளையும் அவரது பல பராக்ரமங்களையும் தனித்தனியே கூறுதல்.

ஸாரணன் ஹிதமாக வார்த்தையைப் பயமின்றி மொழிகையில், ராக்ஷஸராஜனாகிய ராவணன் கெட்டு

அவனைப் பழித்துக்கொண்டே 'தேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களுமாகிய அனைவரும் என்னைப் பயப்படுத்தினும், ஸீதையை எள்ளளவும் கொடுக்க மாட்டேன். ஸாரணா! நீ நல்லவனேயன்றிச் சூரனல்லே. வானர்களால் அடிக்கப்பட்டுத் தோல்வியடைந்து மிகுதியும் பயந்திருக்கின்றனை. ஆகையால் ஸீதையை இப்பொழுதே கொடுத்துவிடுவது நலமென்று நினைக்கின்றனை. என்னை யுத்தத்தில் வெல்லுந் திறமையுடைய பகைவனுவான் எவன்?' என்றனன். சத்ருக்களை அழச்செய்யுந் தன்மையனும் ராக்ஷஸேஸ்வரனுமாகிய ராவணன் இங்ஙனம் பருஷமாகப் பேசி, உடனே மிகுந்த ஒளியுடன் வானர ஸைன்யத்தை யெல்லாம் பார்க்க விரும்பிப் பனிபோல் வெளுத்திருப்பதும் பல பனை மாத்தளவு உபயர்ந்திருப்பதுமாகிய உப்பரிகையின் மேல் ஆரோஹித்தனன். (ஏறினன்.) ராவணன் கோபம் மேலெழப்பெற்றுச் சாரர்களான சுகஸாரணர்களோடு உப்பரிகையின் மேலிருந்து ஸமுத்ரத்தையும் பர்வதங்களையும் வனங்களையும் பார்த்துக்கொண்டு த்ரிகூடத்தின் கீழுள்ள பூமியெல்லாம் வானரர்களால் இடைவெளியின்றி நிறைந்திருக்கக் கண்டனன். ராக்ஷஸ ராஜனுகிய ராவணன் அளவிறந்திருக்கின்றமையால் இவ்வளவென்று கணக்கிடமுடியாத அவ்வானரமஹா ஸைன்யத்தைப் பார்த்து ஸாரணனைக்குறித்து 'இந்த வானரஶ்ரேஷ்டர்களில் எவர் சூரர்? எவர் மிகுந்த பலமுடையவர்? இவர்களில் மிகுந்த உத்ஸாஹத்துடன் எல்லா இடத்திலும் யுத்தத்தில் முன் நிற்பவர் எவர்? ஸுக்ரீவன் இவர்களில் எவருடைய வார்த்தையைக் கேட்பான்? மற்றும், இவர்களில் மேம்பட்ட யூதபதிகளான வானரர்கள் எவர்? எல்லாவற்றையும் உள்ளபடி



2635. ராவணன் உப்பரிகையின் மேலேறிச் சுகஸாரணர்கள் வானரஸேனையைக் காட்டக் காண்பது.

எனக்குச் சொல்வாயாக' என்று வினவினன். ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் வினவின வார்த்தையைக்கேட்டு ஸாரணன் வானரர்களில் முக்யர்களாயிருப்பவ ரனைவரையும் தெரிந்து கொண்டிருப்பவனாகையால் முக்யர்களான அவ்வானரர்களைத் தெரியச் சொல்பவனாகி, அவனைப் பார்த்து, 'இதோ வானரன் லங்காபுரிக்கு எதிர்முகனாகி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு நூறாயிரம் யூதபதிகளால் சூழப்பட்டிருக்கின்றனன், பார். இவன் செய்யும் மஹாத்வனியால் இவ்விலங்கை முழுவதும் ப்ராகாரங்களோடும் வெளி வாசற்படிகளோடும் பர்வதங்களோடும் சிறிய வனங்களோடும் பெரிய அரண்யங்களோடும் கிடுகிடுவென்று நடுங்குகின்றது. ஸமஸ்த வானரர்களுக்கும் ராஜனும் மஹானுபாவனுமாகிய ஸுக்ரீவனது ஸேனையின் முன் பக்கத்திலிருக்கும் வீரனாகிய இந்த யூதபதி நீலனென்பவன். கைகளை மேலே தூக்கிக் கால்களால் பூமியின்மேல் நிற்கின்ற இவ்வீர்யசாலியைக் காண்பாய். இவன் லங்கைக்கு எதிர்முகனாகிக் கோபத்தினால் உடம்பை நெரிக்கின்றனன். பர்வத சிகரம்போல் உயர்ந்து தாமரைத் தாதுபோல் பொன் வர்ணமுடைய இவன் மிகுதியும் கோபித்து லாங்கூலத்தை (வாலை) அடிக்கடி பூமியின் மேல் அடிக்கையில் அந்த த்வனியால் பத்துத் திசைகளும் ப்ரதித்வனி யெழப்பெறுகின்றன. இவனையே வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் யௌவராஜ்யத்தில் (இளவரசு பட்டத்தில்) அபிஷேகஞ் செய்திருக்கின்றனன். இவன் அங்கதனென்னும்பேருடையவன். உன்னை யுத்தத்திற்கு அழைக்கின்றனன். இவன் வாலிக்குத் தகுந்த புதல்வன். ஸுக்ரீவனுக்கு எப்பொழுதும் ப்ரியனாயிருப்பவன்; தேவேந்த்ரனுக்காக வருணன் முயற்சி

செய்வதுபோல், ராமன் நிமித்தமாகப் பாராக்ரமத்தை உபயோகப்படுத்த முயன்றிருக்கின்றன். ஹநுமான் மிகுதியும் வேகம் விளங்க ராமனது நன்மையை விரும்பி லங்கைக்கு வந்து ஸீதையைக் கண்டனனே; அவற்றிற்கெல்லாம் இவன் புத்தியே மூலம். வீர்யசாலியாகிய இவ்வங்கதன் வானரோத்தமர்கள் ஸமூஹங்கள் பலவற்றையும் அழைத்துக்கொண்டு அந்த ஸைன்யத்தினுல் எப்படிப்பட்டவர்க்கும் வெல்லமுடியாதவனுகி உன்மேல் எதிர்த்துவருகின்றனன். வாலிகுமாரனுகிய அங்கதனுக்குப் பின் பெரிய ஸைந்யத்தினுல் சூழப்பட்டு நலனென்பவன் இருக்கின்றனன். இவ்வீரன் யுத்தத்திற்காக வந்திருக்கின்றனன். இவனே ஸேதுவை நிர்மாணஞ் செய்தவன். இதோ அவயவங்களை ஸ்தம்பித்துக்கொண்டு ஸிம்ஹநாதங்களைச் செய்வதும் கர்ஜிப்பதும் ஆஸனத்தினின்று எழுந்து கோபத்தினுல் உடம்பை நெரிப்பதுமாயிருக்கின்ற இவ்வானரபுங்கவர்களைக் காண்பாய். இவர்களை எதிர்த்து நிற்கமுடியாது. இவர்கள் பயங்கரமான உருவமுடையவரும் அதிக்ரூரர்களும் உத்தண்டர்களும் சண்டபராக்ரமர்களுமாய் விளங்குவார்கள். பத்துநூறு கோடியே எண்பது லக்ஷங்கணக்குடைய இவ்வானரர்களும் சந்தனவனத்தில் வஸிக்குந்தன்மையுள்ள வீரர்களான பல வானரர்களும் நலனைப் பின்றொடரும் பரிவாரங்கள். இந்த நலன் தானெருவனே தன் ஸேனையுடன்கூடி லங்கையைப் பாழ்செய்ய விரும்புகின்றனன்.

வெள்ளிபோல் வெளுத்த சரீரமுடைய இவ்வானரன் ஶ்வேதனென்பவன். இவன் யுத்தத்தில் மிகுதியும் விருப்பமுடையவன்; பயங்கரபராக்ரமன்; மிகுதியும்

யுக்திசாலி; மஹாவீரன்; மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தி பெற்றவன். ஶ்வேதன் சீக்ரமாக ஸுக்ரீவனிடம் வந்து யுத்தத்தில் சபலமுடையவனுகையால் 'இப்பொழுதே லங்கையை த்வம்ஸஞ் செய்கிறேன்' என்றுரைக்க, அவன் நல்லவார்த்தை சொல்லுகையில், இடை வெளியின்றி நிறைந்திருக்கின்ற வானரஸேனையைத் தள்ளி நுழைந்து தன் ஸைன்யங்களை உத்ஸாஹப்படுத்திக்கொண்டு வேகமாகத் திரும்பிப் போகின்றனன். இவன் குமுதனென்னும் யூதபதி. இவன் முன்பு கோமதியென்னும் நதியின் கரையில் அழகியதும் பல வகை வ்ருக்ஷங்கள் நிறைந்திருப்பதுமாகிய ஸங்கோசனமென்னும் பர்வதத்தில் நாற்புறத்திலும் திரிந்து கொண்டு அங்குத் தன் வானர ராஜ்யத்தைப் பரிபாலித்திருந்தனன். இப்பொழுது ஸுக்ரீவனிடம் வந்திருக்கின்றனன். இவன் ஆயிரம் லக்ஷம் வானரர்களை அழைத்துக்கொண்டு வந்திருக்கின்றனன். இவன் வாலிலுள்ள மயிர்கள் மார்பு நீளமுடையவைகளாகிச் சில சிவந்தும் சில மஞ்சள் வர்ணமுடையவைளும் சில வெளுத்தும் சில கறுத்தும் விளங்குகின்றன. இவன் பயங்கரமான கார்யங்களைச் செய்யவல்லவன்; எள்ளளவும் மனவெறுப்புறுமல் மிகுந்த ரோஷமுடையவனும் ப்ரசண்டனுமாகி யுத்தத்திற்குக் கால்பதைக்கப்பெற்றிருக்கின்றனன். இவனும் தன்ஸைன்யத்துடன் லங்காபுரியை அழிக்கவேண்டுமென்று மிக விருப்புற்றிருக்கின்றனன். ராஜனே! பொன் வர்ணமுடையவனும் ஸிம்ஹம்போல் புலப்படுகின்கிறவனும் நீண்ட கண்களுடையவனுமாகி லங்கையை தஹிப்பவன்போல் இமை கொட்டாமல் சொர சொர வென்று உஷ்ணமான பார்வைகளுடன் உற்றுப்பார்க்கின்றுனே, இவன் ரம்பனென்

னும் யூதபதி. இவன் விந்த்யம் க்ருஷ்ணகிரி ஸஹ்யம் ஸுதர்சனம் என்னும் பர்வதங்களை எப்பொழுதும்விடா திருப்பான். சூரர்களும் க்ரூரர்களும் கொடிய பராக்ரம சாலிகளும் வானர ஸ்ரேஷ்டர்களுமாகிய வானரர்கள் நூற்று முப்பது லக்ஷம் பேர் இவ்விலங்கையைத் தமது தேஜஸ்ஸினால் அழிக்க விரும்பி இவனைச் சூழ்ந்து வருகின்றனர். ராஜனே! செவிகளை அகல நெரிப்பதும் குழுக்குவதுமாயிருக்கின்ற இவன் சரபனென்னும் யூதபதி இவன் ம்ருத்யுவுக்கும் பயப்படமாட்டான். யுத்தத்தில் பின்வாங்கி ஓடமாட்டான். இவன் ரோஷத்தினால நடுங்குகின்றனன்; அடிக்கடி குறுக்குப் பார்வை பார்க்கின்றனன்; மற்றும் தனது லாங்கூலத்தைப் பார்த்து ஸிம்ஹநாதஞ்செய்கின்றனன். ராஜனே! மஹா பலிஷ்டனும் மிகுந்தவேகமுடையவனும் பயமற்றவனுமாகிய இவன் எப்பொழுதும் ரமணீயமாகிய ஸால்வேய பர்வதத்தில் வாஸஞ் செய்து கொண்டிருப்பவன். ராஜனே! இவனுக்கு விஹாரர்களென்னும் பெயர் பெற்ற நாற்பது லக்ஷம் வானரஸ்ரேஷ்டர்கள் இருக்கின்றனர். அவர்களெல்லோரும் மிகுந்த பலமுடையவர். பெரிய மேகம்போல் ஆகாயத்தை மறைத்துக்கொண்டு வானரர்களின் நடுவில், தேவதைகளின் நடுவில் தேவேந்த்ரன்போல விளங்குகின்ற இவன் பனஸனென்னும் யூதபதி. யுத்தத்திற்கு விரும்புகின்ற வானரஸ்ரேஷ்டர்களின் நடுவில் இவன் செய்யும் பெருங்கோஷமானது பல பேரி வாத்யங்களினின்றுண்டான பெரியசப்தம் போல் இதோ செவியிற் படுகின்றது. இவன் செய்யும் யுத்தத்தில் எதிர்கொண்டு நிற்பது ஸாத்யமன்று. இவன் எப்பொழுதும் பாரியாத்ரமென்னும் சிறந்த பர்வதத்தில் வாஸஞ்செய்வான். இந்த யூதநாதனை ஐம்பது

லக்ஷம் யூதபதிகள் பணிந்திருக்கின்றனர். இந்த யூதபதிகளில்ஒவ்வொருவனுக்கும் வேறுவேறு யூதங்கள் உண்டு. இந்த யூதபதிகளின் கீழிருக்கும் யூதங்கள் வேறுவேறுகப் பிரிந்து இவனைப் பணிந்திருக்கும். ஸமுத்ரக்கரையிலிருப்பதும் பயத்தை விளைவிப்பதும் உத்ஸாஹத்தினால் இங்குமங்கும் உலாவிக்கொண்டிருப்பதுமாகிய வானர ஸைன்யத்தை விளங்கச்செய்து கொண்டு இரண்டாவது ஸமுத்ரம்போல் புலப்படுகின்றவனுமாகிய இவன் விநதனென்னும் யூதபதி. இவன் கங்கையின் ஸமீபத்திலுள்ள தர்த்துரமென்னும் மஹாபர்வதம் போன்றும், நதிகளிற் சிறந்ததாகிய பர்ணாசையென்னும் நதியின் ஜலத்தைப் பானஞ் செய்பவனாகி அந்த நதியின் கரையில் வாஸஞ் செய்வான். இந்த விநதனுடைய ஸைன்யம் அறுபது லக்ஷம் வானரர்கள். இவன் க்ரோதனனென்னும் யூதபதி; உன்னை யுத்தத்திற்கு அழைக்கின்றனன். இவனிடத்தில் மிகுந்த பராக்ரமமுடையவர்களும் பலிஷ்டர்களுமாகிய வானரர்கள் கூட்டங் கூட்டமாகத் தனித்தனியே பிரிந்திருக்கின்றனர். கைரிக தாதுபோல் சிவந்த தன் தேஹத்தை யுத்த உத்ஸாஹத்தினால் பெருக்கிக்கொண்டு பலத்தினால் கொழுத்திருக்கிற வானரர்களெல்லோரையும் பொருள் செய்யாதிருக்கின்ற இவன் கவயனென்பவன்; மிகுதியும் தேஜஸ்ஸுடையவன்; கோபத்தினால் உன்மேல் எதிர்த்து வருகின்றனன். இந்த கவயனை எழுபது லக்ஷம் வானரர்கள் பணிந்திருக்கின்றனர். இவனொருவன் தன் ஸைன்யத்துடன் லங்காபுரி முழுவதையும் பாழ் செய்யப் பெரு விருப்பமுற்றிருக்கின்றனன். யூதபதிகளான இவ்வங்கதாதிகளையும் யூதபதிகளிற் சிறந்தவரான இந்த ஸுக்ரீவாதிகளையும் எதிர்த்து நிற்க எவர்க்கும் ஸாத்ய

மன்று. இவர்கள் பயங்கரர்; பலிஷ்டர்; மற்றும் காம ரூபிகள். இவர்களில் ஒவ்வொருவர்க்கும் வேறு வேறு யூதங்கள் இருக்கின்றன.' இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸாரணன் ராவணனுக்கு ப்ரதான வானர யூதபதிகளைக் காட்டுதல்.

ராமன் நிமித்தமாகப் பராக்ரமத்தை நிறைவேற்று பவராகி ப்ராணன்களைப் பொருள் செய்யாமல் அவற்றைக் காக்கும் விருப்பமற்றுப் புகழ் பெற்றவருமாகிய யூதபதிகளைச் சொல்லுகிறேன். நீ பார்த்துக் கொண்டிருப்பாயாக. இவன் ஹரனென்னும் யூதபதி. பயங்கரமான செயல்களைச் செய்யுந் தன்மையுடைய இவனது லாங்கூலத்தினிடையிலுள்ள மயிர்கள் அனேகம் மார்பளவு நீண்டிருப்பவைகளும் வெளுத்தும் கறுத்தும் மேல் நெரித்துக் கொண்டிருக்கையால் இடைவெளியுடையவைகளும் மேகங்களில் பரவிப் பலவகை வர்ணங்களோடுகூடி இந்த்ர தனுஸ்ஸின் உருவமாய்த் தோற்றும் ஸூர்ய கிரணங்கள் போல் ப்ரகாசிக்கின்றன. சில ஸமயங்களில் இவை பூமியில் புரண்டு வரும். இந்த ஹரனுடைய சொற்படி நடப்பவராகையால் இவனுக்கு ப்ரபுவான ஸுக்ரீவனுக்குக் கிங்கரர்களாகிய வானர ஸ்ரேஷ்டர்கள் நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கூட்டங்கூடி வ்ருக்ஷங்களை எடுத்துக்கொண்டு சீக்ரமாக லங்காபுரிமேல் எதிர்த்துவர மிகவிருப்பத்துடன் விரைந்துகொண்டு இந்த ஹரனைப் பின்தொடர்ந்து வருகின்றனர். (இவன் மஹாதேஜஸ்விகளான ஆயிரங்கோடி வானரர்களுடன் கூடிச் சத்ருபட்டணங்களை

வெல்லுந் திறமையுடைய உன்னை யுத்தத்தில் வெல்ல விரும்புகின்றனன்.) ராஜனே! அதோ கறுத்த மேகம் போலும் கறுத்த மைபோலும் நிற்கிற கரடிகளைப் பார்க்கின்றனையே. இவை கணக்கிட முடியாமல் வேறு வேறாகச் சுட்டிக் காட்டவும் ஸாத்யமல்லாமல் யுத்தத்தில் உண்மையான பராக்ரம முடையவையாகி மஹா ஸமுத்ரத்தின் அக்கரைபோல் புலப்படுகின்றன. இவை பர்வதங்களிற் சிலவும் மேடுபள்ளமான இடங்களிற் சிலவும் நதிக்கரைகளிற் சிலவும் இருப்பவை. மிகுதியும் பயங்கரமான இக்கரடிகள் உன்மேல் எதிர்த்து வருகின்றன. ராஜனே! பயங்கரமான கண்களும் பயங்கரமான உருவமும் உடைய இந்தக்கரடிகளின் நடுவில் பர்ஜன்யதேவன் மேகங்களால் சூழப்பட்டிருப்பது போல் இவற்றால் சூழப்பட்டிருக்கின்ற இவன் தூம்ரனென்னும் யூதபதி. இவன் ஸமஸ்த பல்லூகர்களுக்கும் அதிபதி; நர்மதா நதியின் ஜலத்தைப் பானஞ் செய்து கொண்டு ருக்ஷவானென்னும் மேலான பர்வதத்தில் வாஸஞ் செய்பவன். பர்வதம் போன்ற உருவமுடைய இவனைக் காண்பாய். இவன் தூம்ரனுடைய பின் தோன்றல்; உருவத்தில் தமையனைப் போன்றவனேயன்றிப் பராக்ரமத்தில் அவனைக்காட்டிலும் மிகுதியும் மேற்பட்டவன். இவனே ஜாம்பவானென்பவன். இவன் மேலான யூதபதிகளில் ப்ரதானன்; பராக்ரமத்தில் மிகுந்தவன்; குரு ஶுஶ்ரூஷை செய்பவன்; யுத்தங்களில் எதிரிகளை உருமாய்க்காமல் திரும்பப் பொறுத ரோஷமுடையவன். புத்தியிற் சிறந்தவனாகிய இந்த ஜாம்பவான் முன்பு தேவாஸுர யுத்தத்தில் தேவேந்த்ரனுக்கு மிகுதியும் பெரிய ஸஹாயஞ் செய்து பல வரங்களைப் பெற்றிருப்பவன். இந்த ஜாம்பவானுடைய

ஸைன்யங்கள் கணக்கிட முடியாதவையாகிப் பெரிய உருவமும் பெரிய ரோமங்களும் அமைந்து தேஜஸ்வி ஞல் அக்னிபோல் விளக்கமுற்று ராக்ஷஸர்க்கும் பிசா சங்களுக்கும் ஒப்பாகிப் பர்வத சிகரங்களின் மேல் ஏறி அங்கிருந்து மஹாமேகம் போன்ற பெரிய கற்களை விழத்தள்ளும்; ம்ருத்யுவுக்கும் பயப்படாதவை. மிகுந்த பரபரப்புடன் எப்பொழுதும் கிளம்புவது போலிருக் கின்ற இவன் தம்பனென்னும் யூதபதி. இந்த மேலான யூதபதியை அங்குள்ள வானரர்களெல்லோரும் ஆச் சர்யத்துடன் பார்த்துக்கொண்டு நிற்கின்றனர். ராஜனே! இவ்வானரேஶ்வரன் மிகுதியும் பலிஷ்டனுகை யால் தன்பலத்தைக் காட்டி, தேவேந்த்ரனுக்கு ஸந் தோஷத்தை விளைவிக்குந்தன்மையன். ப்ரபூ! இவன் ஸந்நாதனன் என்பவன்; வானரர்களெல்லோர்க்கும் பாட்டன். இவன் நடக்கும்பொழுது ஓரடி இட்டவுடனே யோஜனை தூரத்திலுள்ள பர்வதம் தன் பக்கத்தில் சேர்ந்து நிற்கும்படி யோஜனை தூரம் அகன்ற சரீர முடையவன். மேலும், மேல் எழுந்து நிற்பானுயின், ஒரு யோஜனை தூரம் உயர்ந்திருப்பானுகையால் யோஜனையளவு உயர்ந்த சரீரமுடையவன். இவனைக் காட்டிலும் பெரிய உருவமுடையது சதுஷ்பாதஜாதி களில் (நாலுகால் ஜந்துக்களில்) எதுவுமே இல்லை. முன்பு தேவேந்த்ரன் அஸுரர்களோடு யுத்தஞ் செய் யும்பொழுது புத்தியிற் சிறந்த இவன் அந்த அஸுரர் களோடு முன் நின்று யுத்தஞ் செய்தனன். அப்பொ ழுது இந்த மேலான யூதபதி சிறிதும் தோல்வி அடைய வில்லை. இவன் பிறரை எதிர்த்துச் சண்டை செய்யும் பொழுது தேவேந்த்ரனே டொத்திருப்பான். இவன் அக்னிதேவனுக்கு ஒரு கந்தர்வ கன்னிகையிடத்தில்

பிறந்தவன். அப்பொழுது நடந்த தேவாஸுர யுத்தத்தில் தேவதைகளுக்கு ஸஹாயஞ்செய்வதற்கே அக்னி இவனைப் பிறப்பித்தனன். ராக்ஷஸேஸ்வரா! க்ரதனனென்னும் பேருடைய இவ்வானரோத்தமன், குபேரன் பரிபாலனஞ் செய்வதும் ஜம்பு வ்ருக்ஷங்களோடு கூடியதும் பலகிந்நரர்கள் உலாவப்பெற்ற பர்வத ராஜங்களிற் சிறந்ததும் உனது அண்ணனுகிய அந்தக் குபேரனுக்கு லீலாஸுகங்களை விளைவிப்பதுமாகிய ஹிமவத் பர்வதத்தில் வாஸஞ்செய்வான். ஸ்ரீமானும் மஹாபலிஷ்டனுமாகிய இவ்வானரஸிம்ஹன் யுத்தங்களில் எப்பொழுதும் ஆத்ம ஸ்துதி செய்யான். இவன் ஆயிரங்கோடி வானரர்களால் சூழப்பட்டு வந்திருக்கின்றனன். இவன் தானொருவனே லங்காபுரியையெல்லாம் மர்த்திக்க விரும்புகின்றனன். இதோ இங்கு ஒருயூதபதி இருக்கின்றனன். இவன் ப்ரமாதியென்பவன். இவன் கஜங்களுக்கும் குரங்குகளுக்கும் முன்புஉண்டானவைரத்தை நினைத்துக் கங்கையின் அருகாமையிலுள்ள யானைக் கூட்டங்களை விரட்டிக்கொண்டு நாற்புறங்களிலும் உலாவிக் கொண்டிருப்பான். இந்த யூதபதி யுத்தத்தில் நின்று ப்ரயாஸப்பட வேண்டிய அவஸ்யமில்லாமல் வெறுமனே போகும்பொழுதே சத்ருக்களை நாசஞ்செய்வான். பர்வத குஹைகளினின்று யானைகளைப் பிடித்து அவற்றால் பர்வதங்களையும், பர்வதங்களைப் பிடுங்கி அவற்றால் யானைகளையும், வ்ருக்ஷங்களைப் பிடுங்கி அவற்றால் யானைகளையும், யானைகளால் வ்ருக்ஷங்களையும் அடித்துக் கொண்டிருப்பான். இந்த ஸேனுதிபதி கங்காநதியின் ஸமீபத்தில் மந்த்ர பர்வதம்போன்ற உசிர பீஜமென்னும் பர்வதத்தில், தேவலோகத்தில் தேவேந்த்ரன்போல் விளையாடிக் கொண்டிருப்பான்

இந்த வானரத்தலைவன்கீழ் ஆயிரம் லக்ஷம் வானரர்கள் இருக்கின்றனர். மஹா பராக்ரமசாலிகளும் உத்ஸாஹம் மிகுந்திருக்கப்பெற்றவர்களும் மதித்து ஸிம்ஹநாதஞ் செய்பவர்களும் மஹாபலிஷ்டர்களும் மஹாதீரர்களு மாகிய இந்த ஆயிரம் லக்ஷம் வானரர்களுக்கும் இவன் நாயகன். ராஜனே! காற்று வேகத்தினால் மேற்கிளம் பின மேகம்போல் உனக்குப் புலப்படுகின்ற இந்த யூதபதி ப்ரமாதி யென்பவன். பகைவரை உருமாய்க்க வல்லவன்; எவராலும் எதிர்க்கமுடியாதவன்; காற் றினால் நாற்புறங்களிலும் கிளம்பியிருக்கிற சிவந்த காந் தியுடைய இந்தப் பெருந்தூளானது எந்த இடத்தில் புலப்படுகின்றதோ, அவ்விடத்தில் மிக்க பரபரப்புற்ற தும் மஹாபலமுடையதுமாகி விளங்கும் அவ்வானர ஸைன்யமும் ப்ரமாதியினுடையதே. கறுத்த முகமு டையவைகளும் பயத்தை விளைவிப்பவைகளும் மஹா பலிஷ்டங்களுமா யிருக்கின்ற இந்தக் கொண்டைமுயல் கள் ஸேதுபந்தனத்தைப் பார்த்து உத்ஸாஹத்தினால் பற்பலநூறு லக்ஷங்களாகி, மஹாவேகனும் கொண்டை முயல்களிற் சிறந்தவனுமாகிய கவாக்ஷனென்னும் தமது யூதபதியைச் சுற்றிலும் சூழ்ந்து பராக்ரமத்தி னால் இவ்விலங்கையை முறிக்க வருகின்றன; காண் பாய். எந்தப் பர்வதத்தில் விரும்பினவற்றை யெல்லாம் கொடுப்பவைகளும் எப்பொழுதும் பூத்திருக்கையால் வண்டுகளோடு கூடினவைகளுமான வ்ருக்ஷங்கள் விளங்குமோ; எதன் ஸமீபத்தில் ஸூர்யன் அதைப் போல் பொன்வர்ண முடையவனாகி ஸஞ்சரிப்பானோ; எதன் காந்தி பட்டு ம்ருகங்களும் பக்ஷிகளும் பொன் வர்ணமுடையவைகளாகி விளங்குமோ; எதன் தாழ் வரையில் மஹானுபாவர்களான மஹர்ஷிகள் இடை

வீடின்றி எப்பொழுதும் வாஸஞ் செய்வார்களோ; எதில் மிகுந்த ருசியுள்ள பழங்களைக் கொடுப்பவை களும் எக்காலத்திலும் மாறுமல் பழங்களை விளைத்துக் கொண்டிருப்பவைகளுமாகிய வ்ருக்ஷங்களும் மிகுதியும் மேலான தேன்களும் உண்டாயிருக்குமோ; ரமணீய மான அம்மேரு பர்வதத்தில் வானரமுக்யர்களெல் லோரிலும் மேன்மையுற்றவனுகிய கேஸரியென்னும் இந்த யூதபதி விளையாடிக் கொண்டிருப்பான். அனகா! இப்பூமியில் பர்வதங்கள் அறுபது நூறுள்ளன. அவை யெல்லாம் அழகான பொன்மலைகளாம். அவற்றின் நடுவில், ராக்ஷஸர்களில் நீ ஸர்வோத்தமனு யிருப்பது போல், மேருபர்வதம் முக்யமாயிருக்கும். கறுப்பும் சிவப்பும் கலந்த வர்ணமுடையவரும் வெளுப்பு நிற முடையவரும் சிவந்த முகமுடையவரும் தேன்போல் பிங்கள வர்ணமுடையவரும் கூரான கோரைப்பற்களும் நகங்களுமே ஆயுதமாயிருக்கப் பெற்றவருமாகிய இவ் வானரர்கள் அந்தப் பர்வதராஜத்தில் வாஸஞ் செய் பவர். இவர்கள் நான்கு கோரைப்பற்களையுடைய ஸிம் ஹங்கள்போலும், அணுகமுடியாமல் பயங்கரமான புலிகள்போலும் இருப்பார். இவர்களெல்லோரும் அக் னியைப்போல் உக்ரர்களும் சீறின ஸர்ப்பங்கள்போல் கோப ஸ்வபாவரும் மிகுதியும் நீண்டு அழகாய் விளங்கு கின்ற லாங்கூலமுடையவர்களும் மதித்த யானைகள் போன்றவரும் மஹாபர்வதம் போன்ற உருவமுடை யவரும் பெருப்பெரிய மேகங்கள்போல் கர்ஜிப்பவரும், உருண்டு கோரோசனை வர்ணம் பொருந்திக் கடையில் சிவந்த கண்களுடையவரும் மிகுதியும் பயங்கரமான நடையும் கண்டத்வனியும் உடையவருமா யிருப்பர். இவர்களெல்லோரும் இந்த லங்காபுரியைப் பார்த்து

இப்பொழுதே இதைப் பாழ்செய்ய விருப்புற்றிருக்கின் றனர். ராஜனே! இவ்வானரர்களுக்கு அதிபதி இதோ இவர்களின் நடுவில் இருக்கின்றனன்; பார். இவன் பேர் சதவலியென்று பூமண்டலத்தில் எங்கும் ப்ரஸித்தி பெற்றிருக்கும். புத்தியிற் சிறந்த இவன் ஜயத்தை விரும்பி ஸூர்யனை எப்பொழுதும் பூஜித்துக்கொண் டிருப்பான். இவனொருவனே தன் ஸேனையைக்கொண்டு லங்காபுரத்தையெல்லாம் பாழ்செய்ய விரும்புகின்றனன். இவன் மிகுந்த பராக்ரமமுடையவன்; மஹா பலிஷ்டன். சூரன்; பௌருஷத்தைச் சிறிதும் கைவிடாதிருப்பவன். இந்தச் சதவலி ராமனுக்குப்ரியஞ் செய்யவேண்டுமிடத் தில் தன் ப்ராணன்களையும் சிறிதும் பாராட்டமாட் டான். கஜனும் கவாக்ஷனும் கவயனும் நலனும் நீலனு மாகிய இவர்களில் ஒவ்வொருவனையும் பவ்வத்துக்கோடி ஸைன்யங்கள் சூழ்ந்திருக்கின்றன. அங்ஙனம் விந்த்ய பர்வதத்தில் வாஸஞ்செய்பவரும், மிகுந்தவேகமும் நடையும் அமைந்தவருமான வானரோத்தமர்களும் இருக்கின்றனர். அவர்கள் அனேகமாகையால் அவ ரைக் கணக்கிட முடியாது. மஹாராஜனே! இவ்வான ர்களனைவரும் மஹா ப்ரபாவர்கள். எல்லோரும் மஹா பர்வதம்போன்ற உருவமுடையவர். எல்லோரும் நொடிப்பொழுதில் பூமண்டலத்திலுள்ள பர்வதங்களை யெல்லாம் பொடிப் பொடியாக த்வம்ஸஞ்செய்து நாற் புறத்திலும் இறைக்க வல்லவர்' என்றனன். இருபத் தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸாரணன் ராவணனுக்குச் சொன்னது போக மிகுந்ததை யெல்லாம் சுகன் காட்டிச் சொல்லுதல்.

அனந்தரம் ஸாரணன் சொன்னதை யெல்லாங் கேட்டுச் சுகன், அவன் ஸம்பூர்ணமாகச் சொல்லவில்லை யென்று தான் ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணனுக்கு வானர ஸைன்யத்தை யெல்லாம் விரலால் சுட்டிக் காட்டி எல்லாவற்றையும் சொல்பவனாகி 'ராஜனே! மதித்த மஹாகஜங்கள் போலும் கங்கையின் கரை யிலுள்ள ஆலமரங்கள்போலும் ஹிமவத்பர்வதத் திலுள்ள மராமரங்கள் போலும் பேருருவமுடைய இவ் வானரர்களைக் காண்கின்றனையே! இவர்களை எதிர்க்க ஸாத்யமன்று. இவர்கள் மஹாபலமுடையவர்; காம ரூபிகள்; தைத்யதானவர்களை நிகர்த்தவர்; யுத்தத்தில் தேவதைகளைப்போல் பராக்ரமசாலிகள். இவர்கள் ஒன்பதினாயிரங் கோடியும் ஐயாயிரங்கோடியும் ஏழா யிரங்கோடியும் பலவாயிரம் சங்கங்களும் பலநூறு ப்ருந்தங்களுமா யிருக்கின்றனர். இவ்வானரர்கள் ஸுக்ரீவனுக்கு ஸஹாயமாயிருப்பவர்; எப்பொழுதும் அவனோடுகூடக் கிஷ்கிந்தையில் வாஸஞ் செய்பவர்; தேவதைகளுக்கும் கந்தர்வர்களுக்கும் பிறந்தவர். பிறந் தது முதல் காமரூபிகளாயிருப்பவர். தேவனே! அழு கான உருவமுடையவரும் யௌவனம் அமைந்தவரு மாகிய அவ்விருவரைப் பார்க்கின்றனையே! அவர்கள் மைந்த த்விவிதர்களென்பவர். அவ்விருவர்க்கும் யுத் தத்தில் ஈடுகொடுப்பவன் எவனுமே இல்லை. இவ்விரு வரும் ப்ரஹ்மதேவனது அனுமதியால் அம்ருதபானஞ் செய்தவர். இவர் யுத்தத்தில் தாமே பராக்ரமத்தினால் விளக்கமுற்று லங்கையைப் பாழ்செய்ய வேண்டுமென்று

விரும்புகின்றனர். இவரது பக்கத்தில் பர்வதம்போன்ற உருவமுடையவர் இருவர் பத்துக்கோடி ஸைன்யங்களால் சூழப்பட்டு லங்காபுரியைப் பார்த்துக்கொண்டிருக்கின்றனர்; பார். இவர் ஸுமுகனும் துர்முகனுமென்பவர்; ம்ருத்யுவின் புதல்வர்கள்; தந்தையை நிகர்த்த பராக்ரமமுடையவர். ப்ரபூ! மதித்த யானைபோல் நிற்கின்ற இவ்வானரனைப் பார்க்கின்றனையே! இவன் கோபிப்பானாயின் ஸமுத்ரத்தையும் கலக்கிவிட வல்லன். இவனே லங்கைக்கு வந்து ஸீதையைப் பார்த்து உன்னுடன் பேசிப்போனவன். முன்பு நீ இவனைப் பார்த்திருக்கின்றனை. இப்பொழுது மீளவும் வந்திருக்கின்றான்; காண்பாய். இவன் கேஸரியின் க்ஷேத்ரத்தில் (பார்யையிடத்தில்) பிறந்த மூத்தகுமாரன். இவன் வாயுதேவனுக்குப் பிறந்தவன். இவன் ஹனுமானென்னும் பேருடையவன். இவனே ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கைக்கு வந்த வானரோத்தமன்; காமரூபி; மஹாபலன்; பர்வதம்போன்ற உருவமுடையவன்; ஸர்வவ்யாபகனான வாயுதேவனைப்போல் தடுக்கமுடியாத கமனசக்தியுடையவன்; மிகுதியும் ஸமர்த்தன். முன்பு இவன் பால்யத்தில் ஸ்தன்யபானஞ் செய்யவேண்டிய பசியினால் வருந்தி, அப்பொழுது உதயமாகின்ற ஸூர்யனைப்பார்த்து, பலமும் கொழுப்பும் மிகப்பெற்றுப் 'பசி அடங்காதிருக்கின்றது. ஸூர்யனைப் பிடித்து பக்ஷிக்கிறேன்' என்று மனத்தில் நினைத்து [1]மூன்றுயோஜனை

1. இங்கு 'த்ரியோஜநஸஹஸ்ரந்து அயிவாதமவதீர்யஹி' என்பது மூலம். மூவாயிரம் யோஜனைகள் இறங்கினனென்று பொருள். அதாவது—ஹனுமானுடைய தந்தையாகிய கேஸரி மேருபர்வதத்தில் வாஸஞ்செய்பவன். அந்தப் பர்வதம் மிகவும் உயரமுள்ளது. ஆகையால் ஸூர்யனுக்கும் அதன் கொடுமுடிக்கும் நடுவுள்ள மார்க்

தூரம் மேருபர்வதத்தினின்று கீழே இழிந்து தேவரிஷிகளுக்கும் தானவர்களுக்கும் அணுகமுடியாத ஸூர்யனிடஞ் செல்பவனாகி அவனது தேஜஸ்ஸினால் அவனருகிற் போகமுடியாமல் உதயபர்வதத்தின் மேல் வீழ்ந்தனன். வலிவான தவடைகளையுடைய அவ்வானரன் அங்ஙனம் உதயபர்வதத்தில் கல்லின்மேல் விழுகையில், அந்தத்தவடைகளில் ஒன்று சிறிது முறிந்தது. அதைப்பற்றியே அவனுக்கு ஹநுமானென்று பேர் வந்தது. எனக்கு நம்பத்தகுந்த ஒரு ஆப்தனால் இந்த ஹநுமானுடைய ஸங்கதி தெரியவந்தது; இது உண்மையே. இந்த ஹநுமான் காமரூபியாகையால் இவனுடைய உருவமாவது பலமாவது ப்ரபாவமாவது சொல்லத் தரமல்லாதது. இவனொருவனே தன் தேஜஸ்ஸை விளங்கச்செய்து இவ்விலங்கைமா நகரம் முழுவதையும் பாழ்செய்ய வேண்டுமென்று விரும்புகின்றனன். ராஜனே! இந்த ஹநுமானுடைய தோளின் மேல் ஏறியிருக்கையால் இவனைப் பிரியாதிருக்கின்றானே, அவனைப் பார். ஹநுமானுடைய தோள்மேல் ஏறியிருப்பதைப் பற்றியே இவன் எப்படிப்பட்ட சூரனோ என்பதை அறிந்துகொள்வாய். பொன் சிகரத்தின்மேல் ஏறின கறுத்தமேகம்போல் அழகான மேனியுடையவனும், தனது அழகான மேனியென்னும் தடாகத்தில் மலர்ந்த தாமரை மலர்போல் ரமணீயமான

---

கம் மூவாயிரம் யோஜனை அளவுடையதென்று சொல்லப்பட்டது. ஆனது பற்றியே இறங்கினதாகச் சொல்லிற்றேயன்றிக் கிளம்பினதாகச் சொல்லவில்லை: அல்லது—ஸூர்யன் பூமிக்குமேல் லக்ஷயோஜனை தூரத்திலிருக்கிறானாகையால் 'த்ரியோஜநஸஹஸ்ரம்' என்றது பல வாயிரங்களுக்கு உபலக்ஷணமாகக் கொள்க. பல வாயிரம் யோஜனைகள் போனானென்று கருத்து.

கண்களுடையவனுமாகித் திகழ்கின்றனன். இவன் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களில் அனரண்யனைப் போன்றவனல்லன்; ஒருவராலும் வெல்ல முடியாதவன். இப்படிப்பட்டவனென்பது என் வார்த்தையைப்பற்றி யன்று; கராதிகளைக் கொன்றமையாலும் உன் வைரியான வாலியை வதித்தமையாலும் இவனது பௌருஷம் உலகமெங்கும் ப்ரஸித்தமே. பௌருஷம் மாத்ரமே உடையவனல்லன். ஜாபாலி முதலியவர் அசக்கப்பார்க்கினும் [1] தர்மம் இவனிடத்தில் சிறிதும் அசையாமல் நிலைகொண்டிருக்கும். பரதன் ஸீதை முதலியவர் எவ்வளவு தடைசெய்யினும் பித்ருவசனத்தையும் முனிவர்க்குச்செய்த ப்ரதிஜ்ஞையையும் தவறாமல் நிறைவேற்றுந் தர்மத்தைக் கடவாதிருப்பவன். பௌருஷமும் தர்மமும் மாத்ரமே அன்று; ப்ரஹ்மாஸ்த்ர மந்த்ரத்தையும் வேதங்களையும் அறிந்தவன்; வேதங்களை உணர்ந்த வஸிஷ்டாதிகளைக் காட்டிலும் மேற்பட்டவன். இவனது பௌருஷம் எப்படிப்பட்டதென்னில், இவன் பாணங்களால் ஆகாயத்தில் திரியும் விமானங்களை முறிக்குந் திறமையுடையவன்; மற்றும், ம்ருத்

---

1 கானெடு யுத்தஞ் செய்யும்பொழுது பின் அடி வைக்கவில்லையா? கபடமாக வாலியை ஜயிக்கவில்லையா? ஆகையால் ராமன் தர்மத்தைக் கடக்கவில்லையென்பது எப்படி? என்னில்-பாணந் தொடுக்க இடம் உண்டாகும்பொருட்டுக் கரயுத்தத்தில் பின்னடியிட்டனன். காஞ்சனமாலை யணிந்த வாலியை மற்றொருவகையில் எதிர்த்துக்கொல்ல முடியாதாகையாலும் ஆஸ்ரிதனான ஸுக்ரீவனுக்குச் செய்த ப்ரதிஜ்ஞையைத் தீர்க்காமல் தவறலாகாதாகையாலும் கபடமாய்க் கொல்வதும் அதர்மமன்று. ஆகையால் தோஷமே இல்லை. அன்றியே 'திர்யக்ஷு நைவஹிவிபக்ஷயோபசார:' என்று ஆழ்வான் அருளிச்செய்த பரிஹாரத்தையுங் கண்டுகொள்க.

யுவைப்போல் மஹாகோபமும் தேவேந்த்ரனைப்போல் மிகுந்த பராக்ரமமும் உடையவன். இவனுடைய பார்யையாகிய ஸீதையையே ஜனஸ்தானத்தினின்று நீ அபஹரித்துக்கொண்டு வந்தனை. இவனே ராமன். ராஜனே! அங்ஙனம் பார்யையைப் பறித்துக்கொண்டு வந்தாயாகையால் உன்மேல் யுத்தஞ் செய்ய எதிர்த்து வருகின்றனன். இந்த ராமனது வலப் பார்ஸ்வத்தில் அழுக்கெடுத்த பொன்போன்ற மேனியின் வர்ணமுடையவனும் அகன்ற மார்பும் கோபத்தினாற் சிவந்த கண்களும் கறுத்துச்சுருண்ட தலைமயிர்களும் அமைந்து விளங்குகின்றவனைக் காண்பாய். இவனே லக்ஷ்மணன்; இந்த ராமனுடைய பின்தோன்றல்; ராமனுக்கு ப்ராணன்போல் மிகுதியும் ப்ரீதிக்கிடமானவன்; நீதிசாஸ்த்ரங்களிலும் யுத்தத்திலும் வல்லவன்; மற்றைச் சாஸ்த்ரங்களெல்லாவற்றிலும் பண்டிதன்; பகைவரைப் பார்த்துப் பொறுக்கமாட்டான்; எவராலும் ஜயிக்கமுடியாதவன்; எப்படிப்பட்டவரையும் ஜயிக்குந்திறமையுடையவன்; மிகுதியும் பராக்ரமமுடையவன்; புத்தியிற்சிறந்தவன்; மஹாபலிஷ்டன்; ராமனுக்கு வலக்கை போன்றவன்; மற்றும், ராமனுக்கு எப்பொழுதும் வெளியில் உலாவும் ப்ராணன்போல் மிகுதியும் ப்ரியமானவன். இவன் ராமன் விஷயத்தில் ப்ராணன்களையும் எதிர்பார்க்கமாட்டான்; தானொருவனே யுத்தத்தில் ஸமஸ்த ராக்ஷஸர்களையும் வதிக்கவேண்டுமென்று பறக்கின்றனன். ஒவ்வொருவனும் ஒவ்வொரு ராக்ஷஸகணம் போலிருக்கின்ற நான்கு ராக்ஷஸர்களால் சூழப்பட்டு ராமனது இடப்பார்ஸ்வத்தில் இருக்கின்றானே! [1] இவன்

---

1 இந்த 'ராஜாஹ்யேஷ விபீஷண:' என்பது மூலம். இங்கு 'ஹ்' என்பது காயத்ரியின் பதினாறாவது அக்ஷரம்.

உனது ராஜ்யத்திற்கு ராஜாவான விபீஷணன். எல்லா விருப்பங்களும் நிரம்பப் பெற்றிருக்கையால் இந்த லங்காராஜ்யத்தை ஆசைப்படாத ஸ்ரீமானும் [1]ராஜ ராஜனுமாகிய ராமன் இவ்விபீஷணனை லங்காராஜ்யத்திற்கு ராஜனாகும்படி அபிஷேகஞ் செய்தனன். இவன் பரபரப்புற்று உன்னையே எதிர்த்து யுத்தத்திற்கு வருகின்றனன். இந்த ராமவிபீஷணர்களின் நடுவில் ஒருவன் பர்வதம்போல அசையாதவனாகி நின்றிருக்கக் காண்கின்றனையல்லவா; இவன் ஸமஸ்த வானரமுக்யர்களுக்கும் ராஜனாகிய ஸுக்ரீவன்; எங்கும் என்றும் தோல்வியடையாதவன். ஹிமவத்பர்வதம் ஸமஸ்த பர்வதங்களிலும் மேன்மையுற்றிருப்பதுபோல், இவன் தேஜஸ்ஸிலும் யசஸ்ஸிலும் புத்தியிலும் [2]ஆபிஜாத்யத்திலும் ஸமஸ்த வானரர்களிலும் மேன்மையுற்று ப்ரகாசிப்பவன். கோட்டை முதலியவற்றால் புகக்கூடாததும் பர்வதமாகிற துர்க்கத்தினிடையி லிருப்பதும் வனவ்ருக்ஷங்கள் சுற்றிலும் சூழ்ந்திருப்பதும் குஹாரூபமுமாகிய கிஷ்கிந்தையென்னும் நகரத்தில் இவன் ப்ரதானர்களான யூதபதிகளுடன்கூடி வாஸஞ்செய்பவன். இவன் மார்பில் நூறுகமலங்களையுடைய காஞ்சன மாலையொன்று விளங்குகின்றது; பார். இது, தேவதைகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் ஆசைப்படத் தகுந்தது. இதில் வீரலக்ஷ்மி நிலைபெற்றிருக்குமாகையால் இதைத் தரித்தவன் என்றும் தோல்வி அடைய மாட்டான். ராமன் யுத்தத்தில் வாலியைக் கொன்று

---

1. 'விபீஷணாதிகளை ராஜர்களாகச் செய்யோமாயின், நம்முடைய ராஜராஜத்வம் பயன்படாது' என்று விபீஷணனுக்கு லங்காராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ் செய்தானென்று கருத்து.

2. ஆபிஜாத்யம்-நல்ல குலத்தில் பிறப்பு.

ஸுக்ரீவனுக்கு இந்தக் காஞ்சனமாலையையும் தாரையையும் ஶாஶ்வதமான வானர ராஜ்யத்தையும் கைகூடுவித்தனன். [1]பண்டிதர் நூறு லக்ஷங்களைக் கோடியென்பர்கள். நூறுயிரங் கோடிகளைச் சங்கமென்பர்கள். நூறுயிரஞ் சங்கங்கள் மஹா சங்க மெனப்படும். நூறுயிரம் மஹாசங்கங்கள் ப்ருந்தம். நூறுயிரம் ப்ருந்தங்கள் மஹாப்ருந்தம். நூறுயிரம் மஹாப்ருந்தங்கள் பத்மம். நூறுயிரம் பத்மங்கள் மஹா பத்மம். நூறுயிரம் மஹாபத்மங்கள் கர்வம். நூறுயிரம் கர்வங்கள் மஹாகர்வம். நூறுயிரம் மஹாகர்வங்கள் ஸமுத்ரம். நூறுயிரம் ஸமுத்ரங்கள் ஓகம். நூறுயிரம் ஓகங்கள் மஹௌகம். இங்ஙனம் அந்தந்த ஸேனுபதிகளின் கீழ் வேறுவேருக ஆயிரம் கோடிகளும் நூறுசங்கங்களும் ஆயிரம் மஹாசங்கங்களும் நூறு ப்ருந்தங்களும் ஆயிரம் மஹாப்ருந்தங்களும் நூறு பத்மங்களும் ஆயிரம் மஹாபத்மங்களும் நூறுகர்வங்களும் நூறு ஸமுத்ரங்களும் நூறு மஹௌகங்களும் கோடிமஹௌகங்களுமாகி ஸமுத்ரம்போல் கரையுமற்று விளங்கும் ஸேனையுடன்கூடி, விபீஷணனும் அவன் மந்த்ரிகளான ராக்ஷஸர்களும் சூழ்ந்து வர, மஹாஸைன்யத்தினுல் சூழப்பட்டு எப்பொழுதும் மஹா பல பராக்ரமசாலியும் வானரராஜனுமாகிய ஸுக்ரீவன் உன்மேல் யுத்தஞ்செய்ய எதிர்த்து வருகின்றனன். மஹாராஜனே! ஜ்வலித்துக்கொண்டு க்ரூர க்ரஹம்போல் வருகின்ற இம் மஹாஸைன்யத்தைப் பார்த்து, இனி நமக்கு ஜயம் உண்டாகும்படிக்கும் சத்ருக்களால் தோல்வி நேரிடா

---

1. சொன்னவர்களும், சொல்லாதவர்களுமான ஸமஸ்த வானரர்களின் கணக்கைத் தெரிவிக்கைக்காக முதலில் கணக்கை நிரூபிக்கிறுர்.

திருக்கும்படிக்கும் பெரியப்ரயத்னம் செய்வாயாக'என்ற னன். இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் சுகஸாரணர்களை திக்காரஞ்செய்து சார்த்தூலன் முதலான சாரர்களை அனுப்ப அவர்கள் வானர ஸைன்யத்தில் புகுந்து பிடியுண்டு ராமனால் விடுபட்டுத் திரும்பி லங்கைக்கு வருதல்.

ராவணன், சுகன் சொன்ன வானரயூதபதிகளனைவரையும் ராமனது ஸமீபத்திலிருக்கும் தன்தம்பியாகிய விபீஷணனையும் மஹாவீர்யசாலியாகையால் ராமனுக்கு வலபுஜம்போன்ற லக்ஷ்மணனையும் பயங்கரபராக்ரமனும் ஸமஸ்த வானரர்களுக்கும் ராஜனுமாகிய ஸுக்ரீவனையும் (கஜன் கவாக்ஷன் கவயன் மைந்தன் த்விவிதன் பலிஷ்டனும் வாலியின் குமாரனுமாகிய அங்கதன் பராக்ரமசாலியாகிய ஹனுமான் ஜயிக்க முடியாத ஜாம்பவான் ஸுஷேணன் குமுதன் நீலன் வானரதிலகனாகிய நலன் முதலானவர்களையும்) பார்த்து மனத்தில் சிறிது பயந்து பரஸ்தோத்ரஞ் செய்ததைப் பற்றிக் கோபமும் உண்டாகப்பெற்று எல்லாஞ் சொல்லி முடிந்தபின்பு வீரர்களான அந்தச் சுகஸாரணர்களைப் பருஷ வசனங்களால் விரட்டினன். அவன், தனக்கு நமஸ்கரித்துத் தலைவணங்கியிருக்கிற அந்தச் சுகஸாரணர்களைப் பார்த்துக் கோபமுற்று ரோஷத்தினால் வார்த்தைகள் தழதழக்கப்பெற்றுப் பருஷவாக்யங்களால் விரட்டினன். 'மற்றெல்லாம் இருக்கட்டும்; முதலில், நீங்கள் இதை ஆலோசிக்கவேண்டும். அதாவது நிக்ரஹத்தையும் அனுக்ரஹத்தையும் செய்ய ஸமர்த்தனாகிய ராஜனுக்கு, அவனிடத்தில் பிழைத்துவரும் மந்த்

ரிகள் இங்ஙனம் அப்ரியமான வார்த்தைகளைச் சொல்வது சிறிதும் உரியதன்றல்லவா? இது அப்படியிருக்க, நமக்கு ப்ரதிகூலராகிய நம்பகைவர் யுத்தஞ்செய்ய நம்மேல் எதிர்த்து வருகின்றபடியால், ஸமயமல்லாத இப்படிப்பட்ட யுத்தாரம்ப ஸமயத்தில் நீங்களிருவரும் இவ்வாறு பரஸ்தோத்ரஞ் செய்தல் தகுமா? நீங்கள் ராஜநீதி சாஸ்த்ரத்தில் முக்யாம்ஸமாகிய ப்ருத்யக்ருத்யங்களை (வேலைக்காரர் கண்டறியவேண்டிய முக்ய கார்யங்களை) அறியாதிருக்கின்றீர்கள்; ஆகையால், பெரியோர்களும் ஜ்ஞானம் வயது சீலம் ஆகிய இவற்றில் குறைவற்றவருமாகிய நீதிசாஸ்த்ரோபதேசஞ் செய்யுங் குருக்களை நீங்கள் ஆராதித்ததெல்லாம் வீணே. ‘வெகு காலம் குருவை ஆராதித்தவனுக்கு அஜ்ஞானம் இருக்குமா’ என்னில், ஒருகால் நீங்கள் அதை வாசிக்கினும் அதன் பொருளை நன்றாக உணரவில்லையோ! அல்லது பொருள் தெரியுமாயினும் அதன் அனுஷ்டானமில்லாமையால் வெறும் ஜ்ஞானமாகிற பாரத்தைச் சுமக்குகிறீர்களோ! வெறும் ஜ்ஞானத்தினால் உபயோகமில்லையே. இப்படிப்பட்ட மூர்க்கர்களான மந்த்ரிகளுடன் கூடியிருக்கிறேனாகையால் நான் எப்பொழுதோ சத்ருக்களால் அடிக்கப்பட்டிருக்க வேண்டியவனே; ஆயினும் தெய்வத்தின் ஸஹாயத்தால் கெடாமல் ஜீவித்துக்கொண்டிருக்கின்றனன். நான் ஆஜ்ஞை செய்கையில் என் நாக்கு ஒருசொல் சொன்னமாத்ரத்தில் சுபமாயினும் அசுபமாயினும் தவறாமல் உண்டாகுமல்லவா? (என் நாக்கு அசைந்த மாத்ரத்தில் தடையின்றி என் ப்ரியனுக்கு நன்மையும் அப்ரியனுக்குத் தீமையும் விளையுமென்பது தெரிந்த விஷயமே யல்லவா?) அப்படியிருக்க நீங்கள் இங்ஙனம் பருஷவசனங்களை என்முன்

கூறுகிறீர்களே! உங்களுக்கு ம்ருத்யு ஸம்பவிக்குமென்னும் பயமில்லையா என்ன? அரண்யத்தில் காட்டுத்தீயில் அகப்பட்ட வ்ருக்ஷங்களாயினும் க்ஷேமமாயிருக்கக்கூடுமன்றி ராஜன் விஷயத்தில் அபராதப்பட்டு அவன் கோபத்திற் கிலக்காயிருப்பவர் மாத்ரம் ஒருகாலும் க்ஷேமமாயிருக்க முடியாது. இவர்கள் எனக்கு முன்பு செய்த உபகாரங்கள் நினைவுக்கு வருவது பற்றி என் கோபம் கொடிதாகாமல் மெதுவுபட்டது; இல்லையாயின், நான் இப்பொழுதே, சத்ருபக்ஷத்தை ஸ்தோத்ரஞ் செய்கிற பாபிஷ்டர்களான இந்தச் சுக ஸாரணர்களை வதித்துவிடுவேன். உங்களது அதிகாரத்தினின்று நழுவுங்கள்; போங்கள். என் கண்முன்னே நிற்கவேண்டாம். நீங்கள் முன்பு செய்த உபகாரங்கள் நினைவுக்கு வருகின்றமையால் உங்களைக் கொல்ல எனக்கு புத்தி உண்டாகாதிருக்கின்றது. நீங்கள் க்ருதக்னர்களென்றும் (நன்றியறியாதவரென்றும்) என்னிடத்தில் நட்பில்லாதவரென்றும் கைவிடுகையே உங்களை வதித்ததாகும். வேறுவதஞ் செய்யவேண்டிய அவஶ்யமில்லை' என்றனன். இங்ஙனம் ராவணன் மொழியக் கேட்ட அந்தச் சுக ஸாரணர்கள், இருவரும் லஜ்ஜை அடைந்து ராவணனை 'ஜய விஜயீபவ' என்று புகழ்ந்து உடனே வெளியிற் போயினர். அப்பால் ராவணன் தன் ஸமீபத்திலிருக்கின்ற மஹோதரனைப் பார்த்து 'ராஜநீதியில் மிகுதியும் பண்டிதரான சாரர்களை என்னிடம் அழைத்துக் கொண்டு வருவாய்' என்று கட்டளையிட்டனன். அங்ஙனம் ராவணன் மொழிந்தவுடனே மஹோதரன் சாரர்களைச் சீக்ரமாக வரும்படி ஆஜ்ஞாபித்தனன். அனந்தரம் சாரர்கள் ராஜாஜ்ஞையின்படி விரைவுடன் வந்து அஞ்சலிசெய்து 'ஜய விஜயீபவ' என்று ஆசீர்வாதத்தி

ஞல் புகழ்ந்து பணிந்திருந்தனர். ராக்ஷஸேஸ்வரனுகிய ராவணன், பிறகு விஸ்வாஸ பாத்ரரும் சூரரும் சத்ருக்களிடம் பயப்படாதவரும் ப்ரபுவிடம் பக்தியுடையவருமாகிய அந்தச் சாரர்களைப் பார்த்து 'நீங்கள் இங்கிருந்து ராமனிடம் போவீர்களாக. போய், அவன் செய்யவேண்டியதாக நிச்சயித்திருக்கும் கார்யம் எதுவென்று பரீக்ஷித்துப் பாருங்கள். அப்படிப்பட்ட நிச்சயம் தளர்ந்திருக்குமாயின், அவனைப்பயமுறுத்துவோம். மந்த்ரிகளில் அவனுக்கு அந்தரங்கரா யிருப்பவரும் ப்ரீதியுடன் ஒரு நீராகக் கலந்தவருமாகிய நண்பர்கள் எவரோ, அவர்களையும் பரீக்ஷித்துப் பார்ப்பீர்களாக. அந்த ஸ்னேஹமும் திடமாயிராத பக்ஷத்தில் அவர்களை அவனிடத்தினின்று வேறுபடுத்துவோம். அவன் எப்படி நித்ரை செய்கின்றனன்? தனியனுக நித்ரை செய்கின்ருனு? விழித்துக்கொண்டிருக்கின்ற பலஅந்தரங்கர்களால் சூழப்பட்டு நித்ரை செய்கின்ருனு? தனியனுக நித்ரை செய்வானுயின், யுத்தம் நடத்தக்கூடும். எங்ஙனம் விழித்துக் கொண்டிருக்கின்றனன்? சிந்தையுற்றவனுகியா? சிந்தையுற்றிருப்பானுயின் மேல்விழுந்து அடிக்கக்கூடும். இன்னம் என்ன செய்ய இருக்கின்றனன்? பட்டணத்தைக் கொஞ்சகாலம் தாமதித்துத் தடுக்கப் போகிருனு? இப்பொழுதே அங்ஙனஞ் செய்யப்போகிருனு? தாமதிப்பானுயின், அப்படியே தாமதிக்கும்படி வஞ்சிக்கக்கூடும். நீங்கள் மறைந்திருந்து நான் சொன்னதை யெல்லாம் எல்லாவிதத்திலும் அனைவரும் தெரிந்துகொண்டு வரவேண்டும். ஸமர்த்தரான ராஜர்கள் சாரன் மூலமாகச் சத்ருவின் மர்மங்களை யெல்லாம் முழுவதும் அறிந்து யுத்தத்தில் ஸ்வல்ப யத்தனத்தினுலேயே அவனைப் பிடித்துத் துரத்திவிடுவார்கள்' என்

றனன். அனந்தரம் அந்தச் சாரபுருஷர்கள் ராவண னோடு அப்படியே செய்கிறோமென்று சொல்லி மிகுதி யும் ஸந்தோஷமுற்றவராகிச் சார்த்தூலனை முன்னிட் டுக்கொண்டு ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனுக்கு ப்ர தக்ஷிணஞ் செய்தனர். அங்ஙனம் அந்தச் சாரர்கள் மஹாதீரனாகிய ராக்ஷஸோத்தமனுக்கு ப்ரதக்ஷிணஞ் செய்து, உடனே ராமனும் லக்ஷ்மணனும் இருக்கு மிடத்திற்குப் போயினர். அந்தச் சாரர்கள் மற்றொரு வேஷந்தரித்துப் போய் ஸுவேலபர்வதத்தின் ஸமீபத்தில் ஸுக்ரீவனோடும் விபீஷணனோடும் கூடி யிருக்கின்ற ராமலக்ஷ்மணர்களைக் கண்டனர். அவர் கள் அந்த ராமலக்ஷ்மணர்களையும் அந்த வானரஸேனை யையுங் கண்டவுடனே பயத்தினால் விலவிலத்தனர். தர்ம ஸ்வபாவனும் ராக்ஷஸேந்த்ரனுமாகிய விபீ ஷணன் அந்தச் சாரர்களைக் கண்டுகொண்டனன்; அவர் கள் அந்த ஸேனையில் உலாவிக்கொண்டிருக்கையில் ஆகஸ்மிகமாக விபீஷணன் கண்டு விரட்டினன். சார்த் தூலனொருவனை மாத்ரம் மிகுதியும் துஷ்டத்தனமுள்ள ராக்ஷஸனென்று விபீஷணன் வானரர்கையில் பிடித் துக்கொடுத்தனன். வானரர்கள் அந்தச் சார்த்தூல னைச் சாகும்படி அடித்துக்கொண்டிருக்கையில் ராமன் அவனை விடுவித்தனன். ராமன் தயையினால் மற்றைச் சாரர்களான ராக்ஷஸரையும் வானரர்செய்யும் ஹிம் ஸையினின்று விடுவித்தனன். அந்தச் சாரர்கள் அங் ஙனம் மிகுதியும் விரைவான கதியும் பராக்ரமமுமுடைய அவ்வானரர்களால் பிடித்து ஹிம்ஸிக்கப்பட்டு நெடு மூச்செறிந்துகொண்டு மிகமனவருத்தத்துடன் லங் கைக்குப் போய்ச் சேர்ந்தனர். அப்பால் சத்ரு ராஜ் யங்களிலுள்ள வ்ருத்தாந்தங்களை அறியும்பொருட்டு

எப்போழுதும் வெளிதேசங்களில் ஸஞ்சாரஞ் செய்யும் மஹாபலரான அந்தச் சார ராக்ஷஸர்கள் ராவண னிடம் போய் ராமன் பயங்கரமான ஸைன்யங்களோடு ஸுவேல பர்வதத்தின் ஸமீபத்தில் இருக்கிறுனென்று தெரிவித்தனர். இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற் றிற்று.

---

சார்த்தூலாதிகள் ராவணனிடம் ராமன் வானரவீரர்களோடு ஸுவேல பர்வ தத்தினருகில் இறங்கி யிருப்ப தாகக் கூறுதல்.

அனந்தரம் அந்தச் சார்த்தூலன் முதலிய சாரர் கள், ராமன் கலக்கமுடியாத மஹாஸைன்யத்துடன் ஸுவேல பர்வத ஸமீபத்தில் இறங்கி யிருப்பதை லங் காதிபதியான ராவணனுக்குச் சொல்லினர். ராவணன் சாரர்மூலமாய் மஹாபலனுகிய ராமன் வந்தானென்று கேள்விப்பட்டுச் சிறிது பயமுற்றுச் சார்த்தூலனைப் பார்த்து, 'சார்த்தூலா! உன் முகவொளி எப்பொழுதும் போல் இல்லை. மிகுதியும் தீனனுமாயிருக்கின்றனை. கோபிஷ்டரான சத்ருக்கள் கையில் அகப்படாதிருந்து வந்தனையா? அவர் கையில் அகப்படுகையால் அவரது உண்மை தெரியாமற் போயிற்ரு என்ன?' என்று வினு வினன். இங்ஙனம் ராவணன் வினவுகையில், அப்பொ ழுது சார்த்தூலன் தான் வானரர்களிடம் பட்டபாட் டினுல் பயமடைந்து அவயவங்கள் விலவிலக்க, அந்த ராக்ஷஸேந்த்ரனைப் பார்த்து மெதுவான வார்த்தை களுடன் 'ராஜனே! அந்த வானரோத்தமர்களின் ரஹஸ் யத்தைக் கண்டுபிடிப்பது சாரர்களுக்கு ஸாத்யமன்று. வானரர்கள் மிகுந்த பராக்ரமமுடையவர்; மஹாபலம் அமையப்பெற்றவர்; மேலும், ராமனுல் பாதுகாக்கப்

பட்டிருக்கின்றனர்; ஆகையால் அவர்களோடு பேசுவதே ஸாத்யமல்லாதிருக்கின்றது. இனி வானரர்களைப் பரீக்ஷிப்பது எங்கே? அது கிடைக்கத தக்கதன்று. நாற்புறத்திலும் எங்குப் பார்க்கிலும் பர்வதம்போன்ற உருவமுடைய வானரர்கள் மார்க்கங்களுக்குக் காவலராயிருக்கின்றனர். ஆகையால், நான் அந்த ஸேனையில் புகுந்தது மாத்ரமே; மற்றெங்கும் திரிந்து பார்க்கவும் கூட இல்லை. இதற்குள்ளேயே என்னைக்கண்டுகொண்டனர். அந்த வானர ஸேனையின் மர்மம் சாரர்களால் கண்டுபிடிக்கக் கூடியதல்ல. விபீஷணனுடைய மந்த்ரிகளான ராக்ஷஸர் என்னை பலாத்காரமாகப் பிடித்துக் கொண்டு, பலவாறு தரையில் புரளுவித்தனர். மற்றும், பலிஷ்டர்களான வானரர்கள் என்னைப் பார்த்துப் பொறுக்கமுடியாமல் பயங்கரமாக முழந்தாள்களால் அடித்தும் பிடிகளால் குத்தியும் பற்களால் கடித்தும் உள்ளங்கைகளால் அறைந்தும் இங்ஙனம் ஹிம்ஸித்து அந்த ஸைன்யத்தைச் சுற்றிலும் என்னை இழுத்துக் கொண்டு சுற்றுவித்தனர். அங்ஙனே ஸமஸ்த அவயவங்களும் ரக்தங்களால் நனைந்து மூர்ச்சித்து இந்த்ரியங்களெல்லாம் கலுங்கப்பெற்றிருக்கிற என்னை வானரர்கள் சாக அடித்துக்கொண்டே ஸைன்யம் முழுவதும் 'சாரன் இவன் சாரன்' என்னுங் கோஷத்துடன் சுற்றச்செய்து ராமன் வீற்றிருக்கும் ஸபைக்குக் கொண்டுபோயினர். நான் கைகளைக்குவித்து என்னைக் காப்பாற்றும்படி யாசித்துக்கொண்டே போயினன். அப்பால் ராமன் என்னை ரக்ஷித்தனன். இங்ஙனம் தெய்வாதீனமாய்ப் பிழைத்து வந்தனன். ராமன் இதோ மலைகளாலும் சிலைகளாலும் மஹாஸமுத்ரத்தை நிறைத்துத்தூர்த்து வழி ஏற்படுத்திக்கொண்டு

வந்து வில்லுங்கையுமாக லங்கையின் த்வாரத்தை அடுத்து நின்றிருக்கின்றனன். ராமன் என்னை விடுவித்துவிட்டு கருடவ்யூஹமாக நிறுத்தப்பட்ட வானர ஸைன்யத்தினுல் முழுவதும் சூழப்பட்டு மஹாதேஜஸ்வியாகையால் இதோ லங்கையைக்குறித்தே எதிர்த்து வந்திருக்கின்றனன். ராமன் த்வரையிலேயே முதலில் கோட்டையைத் தடுக்கப்போகின்றனன். நீ சீக்ரத்தில் இவ்விரண்டில் ஒன்றைச் செய்வாயாக. ஸீதையையாவது விரைவில் கொடுப்பாயாக. அல்லது நன்ருக யுத்தத்தையாவது செய்வாயாக. சீக்ரத்தில் இவ்விரண்டில் எதையாயினு மொன்றை நடத்துவாயாக' என்றனன். அனந்தரம் ராக்ஷஸாதிபதியாகிய அந்த ராவணன் சார்த்தூலன் சொன்னதைக் கேட்டு மனத்தில் ஆலோசித்து மிகுதியும் பெரிய வார்த்தையைச் சொல்லத்தொடங்கி அவனைப் பார்த்து, 'ஸீதையைக் கொடுக்கலாம்' என்கிருய்; தேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும் ஒருமிடருகி வந்து என்னை எதிர்த்து யுத்தஞ் செய்யினும், எனக்கு ஸமஸ்த லோகங்களாலும் பயம் விளையுமாயினும் ராமனுக்கு ஸீதையைக் கொடுக்கமாட்டேன்' என்று மொழிந்து, மீளவும் அம்மஹாதேஜஸ்வி அவனைப் பார்த்து 'நீ சூரர்களான வானரர்கள் நிறைந்த வானரஸேனையையெல்லாம் நன்ருகத் திரிந்து பார்த்தனையல்லவா? நல்லியற்கையுடையவனே! சார்த்தூலா! அதில் அணுக முடியாத வானரர்களின் உருவம் எப்படி இருக்கும்? அவரது ப்ரபாவம் எப்படிப்பட்டது? அவர்கள் எவருடைய பிள்ளைகள்? எவருடைய பேரன்மார்? அவருடைய நிலைமையை யெல்லாம் உள்ளபடி எனக்குச் சொல்வாயாக. அங்ஙனஞ் சொல்லக் கேட்டு அவ்வா

னரர்களின் பலாபலங்களை அறிந்து அவர் விஷயத்தில் செய்ய வேண்டியதைத் தெரிந்துகொள்கின்றனன். யுத்தஞ் செய்ய விருப்பமுடையவர் அவஶ்யமாகச் சத்ரு பலத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும்' என்றனன். அனந்தரம் உத்தமசாரனாகிய அந்தச் சார்த்தூலன், ராவணன் அவ்வாறு வினவின பின்பு அந்த ராவண ஸந்நிதியில் மறுமொழி கூறுபவனாகி 'ராஜனாகிய ஸுக்ரீவன் ருக்ஷரஜஸ்ஸின் புதல்வன்; யுத்தத்தில் மிகுதியும் ஜயிக்கமுடியாதவன். இந்த ஸேனையில் கத்கதனுடைய பிள்ளை ஒருவன் ஜாம்பவானென்று ப்ரஸித்தன்; கத்கதனுடைய பிள்ளையே மற்றொருவன் தூம்ரனென்பவன் உளன். யுத்தத்தில் அக்ஷன் முதலிய பல ராக்ஷஸர்களைத் தானொருவனேயாகிக் கொன்ற ஹனுமான் எவனுடைய பிள்ளையோ, அந்தக் கேஸரியென்பவன் ப்ருஹஸ்பதியின் புதல்வன். ராஜனே! [1] தர்மஸ்வபாவனும் மிகுந்த வீர்யமுடையவனுமாகிய ஸுஷேணன் தர்மதேவதையின் புதல்வன். ராஜனே! இதில் நல்லியற்கையுடைய ததிமுகனென்னும் வானரன் சந்த்ரனுடைய குமாரன். ஸுமுகன் துர்முகன் வேகதர்சி

1. இங்கு 'ஸுஷேணஶ்சாபி யர்மாத்மா புத்ரோ யாமஸ்ய வீர்யவாந்' என்பது மூலம். இங்கு ஸுஷேணன் தர்மதேவதையின் புதல்வனென்று சொல்லுகிறது. 'வருணோ ஜநயாமாஸ ஸுஷேணம் நாம வானாம்' என்று ஸுஷேணன் வருணபுத்ரனாகச் சொல்லிற்று. இந்த விரோதத்திற்குப் பரிஹார மெப்படியெனில், அவ்வருணனே இங்கு தர்மனென்று சொல்லப்பட்டனனென்று கண்டுகொள்வது. அல்லது-சார்த்தூலன் பயத்தினால் மனங்கலங்கப் பெற்றிருக்கையால் மற்றொருவிதமாக இதை ப்ரமித்திருப்பான். அன்றியே, அந்த ஸுஷேணன் மற்றொருவனென்றும் சிலர் கூறுவர். இங்ஙனமே மற்றை இடங்களிலும் கண்டுகொள்க.

என்னும் இவ்வானரர்கள் ஒவ்வொருவரும் வானர உருவமாக ப்ரஹ்மதேவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ம்ருத்யுவேயென்னும்படி ம்ருத்யுவைப்போன்றிருப்பவர். இது உண்மையே. மற்றும், வானரஸேனுதிபதியாகிய நீலன் அக்னிதேவனுடைய புதல்வன். இதில், முன்பு கேஸரியின் புத்ரனென்று சொல்லப்பட்ட ஹநுமானென்பவன் வாயுதேவனுக்கு ஔரஸபுத்ரன். எவர்க்கும் அணுக முடியாதவனும் பலிஷ்டனும் யௌவனப்பருவம் நிறைந்தவனுமாகிய அங்கதன் தேவேந்த்ரனுடைய பேரன். பலிஷ்டர்களான மைந்த த்விவிதர்களிருவரும் அஶ்வி தேவதைகளின் குமாரர். இதில், கஜன் கவாக்ஷன் கவயன் சரபன் கந்தமாதனன் ஆகிய இவ்வைந்துபேர்களும் ப்ரளயகால அந்தகனைப்போன்றிருப்பவர்; இவர்கள் யமனுடைய புதல்வர்கள். இங்ஙனம் தைர்யவீர்யாதி லக்ஷ்மீ விலாஸம் பொருந்தி மிகுந்த உத்ஸாஹப் பெருக்குடன் விளக்கமுற்றவரும் தேவதைகளுக்குப் பிறந்தவரும் யுத்தத்தில் மிகுதியும் விருப்பமுடைய மஹாசூரர்களுமான பத்துக்கோடி வானரர்கள் இருக்கின்றனர். இவர்கள் பிறந்த இடம் முதலிய மற்ற விசேஷங்களைச் சொல்ல என்னால் தரமன்று. கரனையும் தூஷணனையும் த்ரிசிரனையும் கொன்ற மஹாவீரனாகிய இந்த ராமன் தசரத குமாரன்; அழகான அவயவங்கள் அமையப்பெற்றவன்; மிகுந்த யௌவனமுடையவன். விராதனையும் யமன்போன்ற கபந்தனையுங் கொன்ற ராமனுக்குப் பராக்ரமத்தில் நிகராயிருப்பவன் பூமண்டலத்தில் எவனுமே இல்லை. ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களெல்லோரையும் வதஞ்செய்த மஹாவீரசூரனாகிய ராமனது குணங்களை வர்ணிக்கப் பூமியில் எந்தமனுஷ்யனுக்கும் ஸாத்யமன்று. இதில் தர்மிஷ்டனாகிய லக்ஷ

மணனும் தசரதனுடைய குமாரனே; மேன்மையுற்ற கஜஸ்ரேஷ்டம் போன்றவன். அவனது பாணங்களில் பட்டு தேவேந்த்ரனாயினும் ஜீவித்துப்போக வல்லனல்லன். இதில் ஸ்வேதன் ஜ்யோதிர்முகன் என்கிற இவ்விருவரும் ஸூர்யனுடைய புத்ரர்கள். வருணனுக்கு மற்றொரு புதல்வன் ஹேமகூடனென்னும் வானரன் உளன். வீரனும் வானரோத்தமனுமாகிய நலன் விஸ்வகர்மாவுக்குப் பிறந்தவன். இதில் வானரர்களில் பராக்ரமசாலியும் மஹாபலிஷ்டனுமாகிய ஸுதுர்த்தரனென்பவன் வஸுதேவதைகளின் குமாரன். லங்காராஜ்யத்தை ராமனால் பெற்று அவனுக்கு ஹிதஞ் செய்வதில் மிகுதியும் மனவூக்கமுடைய ராக்ஷஸஸ்ரேஷ்டனாகிய விபீஷணன் உன் தம்பியாகையால் அவனது ஜன்மாதிகளைச் சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. ஸுவேலபர்வதத்தின் ஸமீபத்தில் இறங்கியிருக்கிற இவ்வானர ஸைன்யத்தின் மர்மத்தையெல்லாம் இங்ஙனம் உனக்குத் தெரிவித்தனன். இனிமேற் செய்யவேண்டிய கார்யத்திற்கு தேவனே ப்ரமாணம்' என்றனன். [1]முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.



1 இங்குச் சொல்லப்பட்ட வானர ஜன்மத்தின் விதம் அநேகமாய் பாலகாண்டத்தில் சொன்னதற்கு விரோதமாயிருக்கையாலும், இந்த ஸர்க்கம் இல்லாதுபோயினும் முன்பின்கதை அமைந்திருக்கையாலும் இந்த ஸர்க்கம் நூதனமாய் நிர்மிக்கப்பட்டதென்று சிலர் சொல்லுவர்.

ராவணன் மாயாவியாகிய வித்யுஜ்ஜிஹ்வ
னைக்கொண்டு துண்டிக்கப்பட்ட ராம
சிரஸ்ஸையும் நாணேற்றின தனுஸ்ஸை
யும் ஸீதை முன்பு ஹநுமான் மூலமாய்
அனுப்பின சூடாமணியையும் மாயையால்
நிர்மிக்கச்செய்து ஸீதைக்குக் காட்டுதல்.

அனந்தரம் சார்த்தூலன் முதலான சாரர்கள் ராமன் கலக்க முடியாத மஹாஸைன்யத்துடன் ஸுவேல பர்வதத்தின் அருகாமையில் இறங்கியிருக்கிறுனென்று லங்காதிபதியான ராவணனுக்குத் தெரிவித்தனர். ராவணன் மஹாபலனுகிய ராமன் வந்திருக்கிறுனென்று சாரர் மூலமாய்க் கேள்விப்பட்டுச் சிறிது பயம் உண்டாகப்பெற்று மந்த்ரிகளைப் பார்த்து 'நமக்கு ஆலோசிக்கவேண்டியகாலம் இதோ வந்திருக்கின்றது. ஆகையால் மந்த்ரிகளும் நீதியில் வல்லவரான ராக்ஷஸர்கள் அனைவரும் சீக்ரத்தில் இங்கு வருவார்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். அந்த ராவணன் அங்ஙனம் ஆஜ்ஞைசெய்ததைக் கேட்டு மந்த்ரிகளெல்லோரும் வேகமாக அவனிடம் வந்தனர். அப்பால் அவன் மந்த்ரி ராக்ஷஸர்களோடு கலந்து ஆலோசனை செய்யத் தொடங்கினன். அனந்தரம், எவர்க்கும் பரிபவிக்கமுடியாத அந்த ராவணன் ராமன் ஸமீபித்து வந்ததற்பின் எது செய்வதற்குப் பொருந்துமோ அதை நன்றாக ஆலோசித்துக்கொண்டு மந்த்ரிகளை விடை கொடுத்தனுப்பித் தன் மாளிகைக்குப் போயினன். பிறகு மஹா மாயாவியாகிய அந்த ராவணன், மாயைகளில் நிபுணனும் மஹாபலனுமாகிய வித்யுஜ்ஜிஹ்வனென்னும் ராக்ஷஸனை அழைத்து அவன் தன்பின்னே தொடர்ந்து வரப்பெற்று ஸீதையிருக்கிற இடத்திற்குப் போயினன். ராக்ஷஸாதிபதி ராவணன் மாயைகளை அறிந்த வித்யுஜ்

ஜிஹ்வனைப் பார்த்து 'நாம் மாயையைச் செய்து ஜனக ராஜன் பெண்ணான ஸீதையை மோஹிக்கச் செய்வோம். ராக்ஷஸா! நீ மாயையால் ராமனது சிரஸ்ஸு ஒன்றைச் செய்து அதையும் பாணத்துடன் கூடின மஹாதனுஸ்ஸையும் எடுத்துக்கொண்டு என்னிடம் வருவாய்' என்றனன். ராவணன் இவ்வாறு மொழிகையில் அந்த வித்யுஜ்ஜிஹ்வனென்னும் ராக்ஷஸன் அப்படியே செய்கிறேன்' என்றனன். அதைக்கேட்டு அந்த ராக்ஷஸராஜன் ஸந்தோஷமுற்றவனாகி அவனுக்கு ஓர் விலையுள்ள பூஷணத்தைக் கொடுத்தனன். மஹாபலனும் ராக்ஷஸாதிபதியுமாகிய அந்த ராவணன் ஸீதையைப் பார்க்கவேண்டுமென்னும் பெருவிருப்பத்துடன் அவ்வசோகவனிகைக்கே போயினன். அனந்தரம் குபேரன் தம்பியாகிய அந்த ராவணன் துக்கத்திற்கு எவ்வளவும் தகாதவளாயினும் துக்கித்து முகம் வாடிவதங்கிச் சோகத்தில் மூழ்கித் தரையின்மேல் உட்கார்ந்து பர்த்தாவையே த்யானஞ் செய்துகொண்டு பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸஸ்த்ரீகள் நாற்புறமும் காத்திருக்கப்பெற்று அசோகவனிகையிலிருக்கின்ற ஸீதையைக் கண்டனன். (பூர்ணசந்த்ரன் போன்ற அழகான முகமுடைய அந்த ஸீதாதேவி ராக்ஷஸிகளால் சூழப்பட்டு, உத்பாத மேகஸமூஹங்களால் சூழப்பட்ட சந்த்ரகலையைப்போன்று மங்களார்த்தமாகத்தரிக்கவேண்டிய சிறந்த சில ஆபரணங்களை மாத்ரமே அணிந்து காற்றினால் அசைக்கப்பட்ட பூங்கொடிபோல் இங்கும் அங்கும் உலாவிக்கொண்டு சிறிது நேரம் ராமனை அணைத்தாற்போல் மனத்தில் நினைத்து ஸந்தோஷத்தையும் சிறிதுநேரம் ராமவிரஹத்தை நினைத்துச் சோகத்தையும் அனுபவிப்பவ

ளாகித் துக்கத்தின் மாறுருவம்போன்று, மிகுதியும் ஆழ்ந்திருக்கையால் அசையாது பெருகி வருகின்ற கங்கையைப்போல் துக்கத்தின் மிகுதியால் ஏதுந் தோற்றப் பெறுமல் ஸ்தப்தையா யிருந்தனள்.) அப்பால் ராவணன் ஸீதையைக் கிட்டிச்சென்று நல்ல ஸந்தோஷ வார்த்தையைச் சொல்பவன்போல் நடனஞ் செய்துகொண்டு அவ்வழகியைப் பார்த்து மிகுதியும் துஷ்டமான இவ்வார்த்தையைச் சொல்லத்தொடங்கி 'கல்யாணீ! நான் எவ்வளவு நல்வார்த்தையாக வேண்டிக்கொள்ளினும், எவனை ஆஶ்ரயமாகப் பற்றி என்னை அங்ஙனம் நிஷ்டூர வசனங்களால் திக்கரித்துச் செருக்குற்றிருக்கின்றனையோ, கராதிகளைக்கொன்று என்னோடு வைரம் விளைத்துக்கொண்ட உன் பர்த்தாவாகிய அந்த ராமன் என்பகைதீர யுத்தத்தில் ஹதனுயினன் (அடிபட்டுப் போயினன்.) உனக்கிருந்த ஆதாரத்தையெல்லாம் வேரோடு பிடுங்கிவிட்டனன். உன்கொழுப்பையெல்லாம் பாழ் செய்தனன். இனி நான் ப்ரார்த்திக்க வேண்டிய அவஶ்யமும் இல்லை. உன் வ்யஸனத்தினுலேயே வேறு கதியில்லாமல் நீ எனக்குப் பார்யையாவாய். அறிவு கெட்டவளே! இனி இந்த புத்தியைத் துறப்பாயாக. செத்தவனோடு உனக்கு என்ன கார்யம்? மங்கள ஸ்வபாவமுடையவளே! என் பார்யைகளனைவர்க்கும் நீ ஈஶ்வரியாயிருப்பாயாக. புண்யம் அற்பமாயிருக்கப் பெற்றவளாகையால் நீ இதுவரையில் புருஷார்த்தங்களை இழந்திருந்தனை. ஏதும் தெரியாமற் போயினும் எல்லாம் தெரிந்ததாகவே பாவித்துக் கொண்டிருக்கின்றனை. ஸீதே! வ்ருத்ராஸுரன் செத்தாற்போல் உன் கணவனுகிய ராமனும் கோரமாக உயிர்மாண்டனன். அவ்விதத்தைக் கேட்பாயாக.

ராமன் என்னைக் கொல்லுவதற்காக வானரேந்த்ரனாகிய ஸுக்ரீவன் அழைத்துக்கொண்டு வந்த மஹாஸைன்யம் சூழ்ந்து வரப்பெற்று ஸமுத்ரக்கரைக்கு வந்தானும். அப்பால் ராமன் ஸமுத்ரத்தின் வடகரையில் பெரிய ஸேனையுடன் முழுவதும் நிரம்ப, ஸூர்யன் அஸ்தமிக்கக்கண்டு இறங்கினன். அந்த ஸைன்யம் முழுவதும் வழிநடந்து இளைப்புற்றிருக்கையால் ஸ்ரமந்தீர இறங்கி அர்த்த ராத்ரியில் ஸுகமாக நித்ரித்துக் கொண்டிருக்கும்பொழுது முதலில் சாரர்களை அனுப்பி அங்குள்ள மர்மங்களையெல்லாம் கண்டுகொண்டனம். ராமனும் லக்ஷ்மணனும் இருந்த அந்த வானரஸைன்யத்தையெல்லாம் ப்ரஹஸ்தனென்பவன் என் பெரிய ஸைன்யத்தைக் கொண்டுபோய் ராத்ரியில் ஹதஞ்செய்தனன். ராக்ஷஸர்கள் குறுக்குக்கத்திகளையும் உழல்தடிகளையும் சிறிய சக்ராயுதங்களையும் பெரிய இரும்புத்தடிகளையும் சிறந்த இரும்பினால் செய்யப்பட்ட கத்திகளையும் பாணஸமூஹங்களையும் சூலாயுதங்களையும் இரும்பாணிகள் இடப்பெற்று ப்ரகாசிக்கின்ற கதைகளையும் ஸாதாரணமான தண்டாயுதங்களையும் பருத்த நுனியுடைய கதைகளையும் ஈட்டிகளையும் பெரிய சக்ராயுதங்களையும் உலக்கைகளையும் வானரர்மேல் எடுத்து எடுத்து ஆயிரமாயிரமாய் ப்ரயோகித்தனர். அனந்தரம் யுத்தத்தில் பகைவரை நன்கு முடிப்பவனும் கைதீர்ந்தவனுமாகிய அந்த ப்ரஹஸ்தன் எள்ளளவும் தாமதஞ் செய்யாமல் பெரிய கத்தியை எடுத்துக்கொண்டு, நித்ரித்துக்கொண்டிருக்கிற ராமனது சிரஸ்ஸைத் துண்டித்தனன். விபிஷணன் ஆகாயத்திற்குக் கிளம்பிப் போகப் பார்க்கையில் ராக்ஷஸர்கள் தெய்வாதீனமாய் அமுந்தப் பிடித்துக் கொண்டனர். லக்ஷ்மணனும்

மற்றை ஸமஸ்த வானரர்களும் திசைகளைப்பற்றி ஓடிப் போயினர். ஸீதே! வானராதிபதியான ஸுக்ரீவன் கழுத்து முறியப்பெற்று வீழ்ந்திருக்கின்றனன். ராக்ஷஸர்களால் அடிக்கப்பட்டு ஹனுமான் தவடைகள் முறிந்து விழுந்திருக்கின்றனன். அப்பால் ஜாம்பவான் கிளம்பிப் போவதாயிருக்கையில் அவனை முழங்கால் முறிய அடித்துப்போகவொட்டிலர். அனந்தரம் ராக்ஷஸர் அவனைப் பட்டஸமென்னும் பல ஆயுதங்களால் கண்டிக்கையில், அறுக்கப்பட்டு விழுந்த வ்ருக்ஷம் போலிருக்கின்றனன். பெரிய சரீரமுடையவர்களும் பகைவரைக் கொல்லுந் தீரர்களுமாகிய மைந்த த்விவிதர்களென்னும் வானரதிலகர்களிருவரும் இடுப்பில் ராக்ஷஸர்களால் துண்டிக்கப்பட்டு ரக்தத்தில் நனைந்து நெடுமூச்செறிந்து ரோதனஞ்செய்துகொண்டு ப்ராணன்களை விட்டனர். பனஸன் பலாப்பழம்போல் பலவாறு துண்டிக்கப்பட்டுத் தரையில் விழுந்திருக்கின்றனன். தரீமுகன் பல நாராசபாணங்களால் அறுக்கப்பட்டு ஓர் குகையில் விழுந்திருக்கின்றனன். மஹாதேஜஸ்வியாகிய குமுதன் பாணங்களால் ப்ராணன்கள் கிளம்பப்பெற்று நிஸ்ஸப்தமாயிருக்கின்றனன். ராக்ஷஸர்கள் தலைப்பட்டுப் பல பாணங்களை எய்து பிளக்கையில் அங்கதன் குருதியைக் கக்கிக்கொண்டு தோள்வளைகள் நழுவப்பெற்றுத் தரையில் விழுந்திருக்கின்றனன். படுத்து நித்ரித்துக் கொண்டிருந்த சில வானரர்கள் யானைகளால் துகைக்கப்பட்டும் ரதஸமூஹங்களால் முறிக்கப்பட்டும் சின்னபின்னமாயினர். மற்றுஞ் சிலர் காற்றுவேகத்தினுல் கலைக்கப்பட்ட மேகங்கள் போல் குதிரைகளால் மிதிக்கப்பட்டு மாண்டனர். மற்றுஞ் சிலர் அடிக்கப்பட்டு பயந்து நாற்புறங்களிலும்

ஓடிப்போகையில் ஸிம்ஹங்கள் மஹாகஜங்களைப் பின்றொடர்ந்து முடிப்பதுபோல் ராக்ஷஸர்கள் அவரைப் பின்றொடர்ந்து அடித்து விழத்தள்ளினர். சில வானரர்கள் ஸமுத்ரத்தில் வீழ்ந்தனர். சிலர் ஆகாயத்திற் கிளம்பிப்போயினர். கரடிகள் தமக்குள்ள வானரஸ்வபாவத்தைக் கைப்பற்றி வ்ருக்ஷங்களின்மேல் ஆரோஹித்தன. மற்றும் பல ராக்ஷஸர் ஸமுத்ரக் கரையிலுள்ள இடங்களிலும் பர்வதங்களிலும் வனங்களிலும் வானரர்களைத் தேடித்தேடிப் பலரையும் பிடித்துக்கொன்றனர். இங்ஙனம் என் ஸைன்யம் உன் பர்த்தாவையும் அவன் ஸேனையையும் கொன்றது. ரக்தத்தில் நனைந்து தூள் படிந்திருக்கிற ராமனது சிரஸ்ஸையுங்கூட இதோ கொண்டு வந்திருக்கிறார்கள்' என்றனன். அனந்தரம் சிறிதும் பரிபவிக்க முடியாதவனும் ராக்ஷஸாதிபதியுமாகிய ராவணன் ஸீதை கேட்டுக்கொண்டிருக்கையில் அருகேயிருக்கிற ஒரு ராக்ஷஸியைப் பார்த்து 'அடி! யுத்தப்ரதேசத்தினின்று ராமனது சிரஸ்ஸைத் தானே கொண்டுவந்து பயங்கரமான கார்யத்தைச் செய்த ராக்ஷஸனாகிய வித்யுஜ்ஜிஹ்வனை அழைத்துக்கொண்டு வருவாயாக' என்றனன். அந்த ராக்ஷஸி அங்ஙனே சென்று ராவணன் கட்டளையிட்டதைச் சொன்னபின்பு வித்யுஜ்ஜிஹ்வன் அந்த ராமனது சிரஸ்ஸையும் தனுஸ்ஸையும் எடுத்துக்கொண்டு வந்து தலைவணங்கி நமஸ்காரஞ் செய்து ராவணனுக்கெதிரில் நின்றிருந்தனன். அப்பால் ராக்ஷஸராஜனாகிய ராவணன், பெரிய நாக்குடையவனாகி அருகே இருக்கின்ற வித்யுஜ்ஜிஹ்வனைப் பார்த்து 'ஸீதையின் எதிரில் சீக்ரமாக ராமனது சிரஸ்ஸைக் கொண்டுவந்து வைப்பாயாக. இந்த தரித்ரமுடையவள் தன் பர்த்தாவுக்கு



2671. ராவணன் ஸீதைக்கு மாயாசிரஸ்ஸைக் காண்பிக்க அவள் வருந்துதல்.

நேர்ந்த கடைசி அவஸ்தையை (மரணத்தை) நன்கு காண்பாளாக' என்றனன். இங்ஙனம் அவன் சொல்லுகையில், ராக்ஷஸனாகிய வித்யுஜ்ஜிஹ்வன் பார்க்க இனிதாயிருக்கின்ற அந்த ராமசிரஸ்ஸை ஸீதையின் முன்னே வைத்து அப்புறம் தொலைந்து போயினன். அதன் பிறகு ராவணன் மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தி பெற்றதும் ஒளியுடன் திகழ்வதுமாகிய அந்த தனுஸ்ஸை வித்யுஜ்ஜிஹ்வனுடைய ஹஸ்தத்தினின்று இழுத்துக்கொண்டு ஸீதையைப் பார்த்து 'நாணுடன் கூடிய இந்த தனுஸ்ஸு உன் ராமனுடையது; இதோ பார். ப்ராஹஸ்தன் கேவல மனுஷ்யனாகிய அந்த ராமனை இரவில் கொன்று இதை இங்குக்கொண்டு வந்தான்' என்று மொழிந்தனன். அந்த ராவணன் வித்யுஜ்ஜிஹ்வனும் தானும் வரிசையாக ராமசிரஸ்ஸையும் தனுஸ்ஸையும் ஓரிடத்தில் ஸீதையின் முன்னே நிலத்தில் வைத்துப் பாதிவ்ரத்யத்தினால் புகழ்பெற்ற விதேஹராஜன் புதல்வியாகிய அந்த ஸீதையைப் பார்த்து 'இனி எனக்கு உட்படுவாயாக' என்றனன். முப்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை மாயா ராமசிரஸ்ஸைப் பார்த்துப் புலம்புதல்.

அந்த ஸீதை, அந்த ராமனது சிரஸ்ஸையும் அந்த உத்தம தனுஸ்ஸையும் பார்த்து, ஹனுமான் முன்பு மொழிந்த ராம ஸுக்ரீவர்களின் சேர்த்தியை ராவணன் மூலமாகவும் அறிந்து ராமனுக்குத் தகுந்திருக்கிற அந்தக்கண்களின் அழகையும் அம்முகத்தின் நிறத்தையும் அம்முகத்தையும் அந்தத் தலைமயிர்களை

யும் அம்மயிர்களின் நுனிகளையும் மேலான அந்தச் சூடாமணியையும் பார்த்து இவ்வடையாளங்கள் எல்லாவற்றினாலும் அது ராமனது சிரஸ்ஸேயென்று அடையாளம் அறிந்து மிகுதியும் வருந்தி அழுகுரல் பக்ஷி போல் புலம்பிக்கொண்டு ராமனைக் குறித்துக் கைகேயியை நிந்திக்கத் தொடங்கி, 'கைகேயி! உன் கருத்து ஈடேறப் பெற்றவளாவாயாக. ரகுகுலத்திற்கெல்லாம் ஆநந்தம் விளைவிப்பவன் இதோ பாழாயினன்! உன் கருத்து ஈடேறிற்றா? கலஹத்தையே ஸ்வபாவமாகக் கொண்டு இவ்வளவு தூரம் செய்தனை. ஊரிலிருந்து துரத்தும் வ்யாஜத்தினால் ராமனைக்கொல்ல நினைத்தனை. கடைசியில் குலத்தை யெல்லாம் பாழ்செய்தனையே! நீ நினைத்ததற்கு நேரே விபரீதமாக வம்ச நாசமே ப்ரயோஜனமாக ஏற்பட்டது. கைகேயி! நீ ராமனை மாவுரி உடுத்தச் செய்து என்னோடுகூட அரண்யத்திற்கு அனுப்பினையே! எல்லோர்க்கும் ப்ரியத்தைச் செய்பவனாகிய ராமன் உனக்கு அவ்வளவு அப்ரியம் என்ன செய்தனன்?' என்று நிந்தித்தனள். மிகுதியும் மன இரக்கம் விளைப்பவளாகிய அந்த ஸீதை இங்ஙனம் நிந்தித்து, துக்கத்தினாலும் பயத்தினாலும் கிடுகிடு வென்று நடுக்கமுற்று அறுக்கப்பட்ட வாழைமரம்போல் தரையில் விழுந்தனள். அப்பால் அந்த ஸீதை சிறிது நேரங்கழித்து மூர்ச்சை தெளிந்து அந்த சிரஸ்ஸை மோந்து கண்ணீர் ததும்பி மறைக்கையால் நன்றாகப் பார்க்கும் பொருட்டுத் தனது அகன்ற கண்களை மலர விழித்து 'ஐயோ! பாழாயினனே! மஹா பாஹுவே! சத்ருவைக் கொல்லாமல் திரும்பமாட்டேனென்ற வீரவ்ரதமுடையவனல்லையா? உன் வ்ரதம் இப்படி வீணாயிற்றா? நீ இங்ஙனம் மரணாவஸ்தை அடையக் கண்டேனா;

விதவையாயினனே. முதலில், பார்யைக்கு முன் பர்த்தா மரணமடைவானுபின், அதற்கு பார்யையிடத்தில் குண மில்லாமையையே காரணமாகச் சொல்லுவார்கள்; நான் நன்கு பிழைத்திருக்கையில் எனக்கு முன்னமே நீ மரணம் அடைந்தனையே; இப்படி விடிவதற்கு ஹேது என்னிடத்தில் குணமில்லாமையே அன்றி நல்ல நடத்தையுடைய உன் தோஷமன்று. என்குணமில் லாமைக்கு நிதர்சனம் வேண்டுமோ? நான் துக்கத்தின் மேல் துக்கமாக நேரப்பெற்று வந்தனன். இப்பொழுது சோக மஹா ஸமுத்ரத்திலேயே மூழ்கிப்போயினனே! ஏனெனில், என்னைக் காப்பாற்ற முயன்று வந்த நீயும் பாழாய்விட்டனையே! மூழ்கினவளல்லேனு? இனி என் செய்வேன்? ராமா! என் மாமியாராகிய அந்தக் கௌஸல்யாதேவி, கன்றினிடத்தில் மிகுதியும் விருப்ப முடைய பசு கன்றைப் போக்கடித்துக்கொண்டு வருந்து வதுபோல், புத்ரனுகிய உன்னைப் போக்கடித்துக் கொண்டு பெருந்துக்கம் அடைவாள். ராமா! நினைக்க முடியாத பராக்ரமமுடையவனே! முன்பு நீ வெகு காலம் தீர்க்காயுவாயிருப்பாயென்ற ஜ்யோதிஷர்களின் வார்த்தை இப்பொழுது அஸத்யமாய் விட்டதே. நீ அல்பாயுவாயினையே. அங்ஙனம் அவர்கள் அஸத்யஞ் சொன்னுர்களென்பானென்? ஸமஸ்த பூதங்களுக்கும் காரணமாயிருக்கிற இக்காலன் (பரமாத்மா) நீ செய்த கர்மங்களை இங்ஙனம் பயன்படும்படி செய்கின்றமை யால், அந்தக் காலனது மஹிமையாலேயே, வருங் காலத்திலுள்ள விஷயங்களையெல்லாம் நன்கறியுந் திறமையுடைய ப்ராஜ்ஞனுகிய ஸத்புருஷனுக்கும் உன் விஷயத்தில் ப்ரஜ்ஞை மழுங்கிப்போயிற்று. (ஆகை யால் அஸத்யஞ் சொன்னவனல்லன். அவன் தெய்வத்

நின் செயலால் அங்ஙனம் தன் நினைவில் தோற்றின தையே மொழிந்தானுகையால் எப்படி அஸத்யஞ் சொன்னவனுவான்? தெய்வமோ இங்ஙனம் இவ்வளவு பரிபவங்களை யெல்லாம் நடத்த உத்தேசித்திருந்தமை யால் உண்மை நமக்குத் தெரியுமாயின் நாம் இவ்வாறு வரநோதென்று அதை மறைத்து ப்ராஜ்ஞனுக்கும் வேறுவிதமாகத் தோற்றும்படி செய்தது. ஆகையால் அது தெய்வத்தின் விஷமமே. ஆனுல் அந்த தெய்வ மும் நமது சுபாசுப கர்மங்களுக்குத் தகுந்தபடி பலன் களை விளைக்கிறதாகையால் அதன்மேலும் தோஷ மில்லை. என்றிப் பார்க்கையில் நமது பாக்யஹானியே!) நீ வ்யஸனங்களைத் தாண்டுவதற்கு வேண்டிய உபாயங் களை யெல்லாம் அறிந்த நிபுணனே; மற்றும், நீதிசாஸ்த் ரங்களை நன்குணர்ந்தவன். இங்ஙனம் நித்ரை ஸமயத் தில் நேர்ந்தமையால் கண்டுபிடிக்க முடியாத ம்ருத் யுவை, ஏமாறிப்போய் எங்ஙனம் அடைந்தாய்? நீ ஸமுத்ரக்கரையில் இறங்கின அந்த ராத்ரியானது கொடியதும் பயங்கரமுமானது. அந்தக்காளராத்ரி யானது, தாமரையிதழ்போன்ற கண்களையுடைய உன் னைப் பார்த்து மோஹித்து, உன்னை அங்ஙனம் அணைத்து என்னிடத்தினின்று திடீலென்று பிரித்து அபஹரித்துக் கொண்டுபோயிருக்கும். நீண்டுருண்ட பாஹு தண்டங்களை யுடையவனே! திக்கற்றவளும் மன இரக்கத்திற்கிடமுமாகிய என்னைவிட்டுப் பூமியை என் னைக்காட்டிலும் அன்பிற்கிடமான ஓர் பெண்மணியைப் போல் கட்டியணைத்துப் படுத்திருக்கின்றனையே! புருஷ ஸ்ரேஷ்டனுகிய உனக்கு இது யுக்தமா? பொன்னுல் அலங்காரஞ் செய்யப்பெற்று விளங்குவதும் நீயும் நானுமாகக் கலந்து கந்தமால்யங்களை (சந்தன புஷ்

பாதிகளை) இட்டு ஸர்வகாலமும் பூஜித்துக்கொண்டிருந்ததும் எனக்கு மிகவும் ப்ரியமுமான இந்த தனுஸ்ஸு, இப்பொழுது இப்படி ஆயிற்றே! அனகா! நீ ஸ்வர்க்கத்தில் ஸமஸ்தபித்ருக்களோடுங் கூடியிருக்கும் என் மாமனாராகிய உன் தந்தை தசரதமஹாராஜருடன் சேர்ந்திருக்கின்றனை. இது நிச்சயம். இதற்கு முன்னமே ஸ்வர்க்கம் அடைந்தவர்களும், பெரிய புண்யகர்மங்களைச் செய்து அத்தகைய கர்மங்களுக்குப் பலனாக விரும்பத்தகுந்த பதவியிலிருப்பவர்களும் புண்யர்களுமாகிய உன்வம்சத்திற் பிறந்த இக்ஷ்வாகு முதலிய ராஜரிஷிகளை நீ ஸ்வர்க்கத்தில் விமானத்தில் வீற்றிருந்து பார்த்துக் கொண்டிருப்பாய். ராஜனே! ஒன்றும் அறியாதவளும் இளம்பருவத்திலேயே உன்னால் மணம்புரியப் பெற்றவளும் உனக்கே பரிக்கத் தகுந்தவளும் உன் பார்யையும் உன்னை எப்பொழுதும் பிரியாமல் உன்னோடுகூடவே திரிகின்றவளுமாகிய நான் இங்ஙனம் துரவஸ்தையில் அகப்பட்டுக் கொண்டிருப்பினும், என்னைக் கண்ணெடுத்துப் பாராதிருக்கின்றனையேனோ? மற்றும் பேசாதிருக்கின்றனையேனோ? காகுத்ஸ்தா! நீ விவாஹத்தில் என்கையைப் பிடிக்கும்பொழுது உன்னோடுகூடவே இருப்பேனென்று ப்ரதிஜ்ஞை செய்தனையே! அதை இப்பொழுது நினைத்துக் கொள்வாயாக. நினைத்து, வருந்துகின்ற என்னையும் உன்னிடம் அழைத்துக்கொண்டு போவாயாக. ராமா! நீ உத்தம கதியுடையவரெல்லோரிலும் உத்தமனாயிருப்பவன்; உன்னைப் பிரிந்து மனக்களிப்பற்றிருக்கிற உன் அருமைப் பத்னியான என்னையும் விட்டு ஏன் இந்த லோகத்தினின்று பரலோகத்திற்குப் போயினை? முன்பு, மங்கல த்ரவ்யங்களான சந்தனாதிகளுக்கு மிக உரிய

தும் என்னொருத்தியால் மாத்ரமே ஆலிங்கனஞ் செய்யப்பட்டிருந்ததுமாகிய இந்தச் சரீரம், இப்பொழுது கழுகுகள் முதலியவை தப்பாமல் இங்குமங்கும் பிடித்து இழுத்துக் கொண்டிருக்கும்படி ஆயிற்றே. [1] வனவாஸத்தைத் தாண்டின பின்பு ஸம்பூர்ணமான தக்ஷிணைகளுடன் அக்னிஷ்டோமாதி யாகங்களால் தேவபூஜனஞ் செய்து யஜ்ஞஸம்பந்தியான அக்னியினால் என் ஸம்ஸ்காரம் பெறுமற் போயினையோ? அயோத்யையினின்று புறப்பட்டு அரண்யத்திற்குப் போன மூவரில் லக்ஷ்மணன் ஒருவன் மாத்ரமே திரும்பி வரக்கண்ட கௌஸல்யை சோகத்தினால் வருந்தி 'ஸீதையும் ராமனும் எங்கே?' என்று வினவப்போகின்றனள். அங்ஙனம் கௌஸல்யை வினவிக்கொண்டிருக்கையில், அந்த லக்ஷ்மணன் அவளைக்குறித்து, 'ராத்ரிகாலத்தில் ராக்ஷஸர் வந்து உன்னையும் உன்மித்ர ஸைன்யத்தையும் வதித்துப்போயினர்' என்று நிச்சயமாகச் சொல்லப்போகின்றனன். ராமா! அவள், நீ நித்ரித்துக் கொண்டிருக்கும் பொழுது அடிபட்டதையும் நான் ராக்ஷஸக்ருஹத்தில் அகப்பட்டுக்கொண்டிருப்பதையும் கேட்டு ஹ்ருதயம் வெடிக்கப்பெற்று இனி இருக்க மாட்டாள்; ப்ராணன்களைத் தப்பாமல் விடுவாள். இங்

1. வனவாஸத்திற்கு முன்பு ராமனுக்கு அக்னி ஆதானமில்லை ஆகையால் 'இந்த வனவாஸந் தீர்ந்தபின்பு பட்டணஞ்சென்று அக்னிஷ்டோமாதியாகங்களை அனுஷ்டித்துப் பின்பு க்ரமத்தில் ஆயுள் முடியப்பெற்று யாகத்தில் வழங்கின அக்னியால் ஸம்ஸ்காரம் அடையவேண்டிய நீ இடையிலேயே இங்ஙனம் ஏன் மாணம் அடைந்தாய்? என்று ஸீதை புலம்புகின்றனள். இதனால் ராமன் வனவாஸத்திற்கு முன்பு யாகஞ்செய்யவில்லை யென்று தெரிய வருகிறது. இதுவே அயோத்யாகாண்டத்தில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டது.

னம் நித்ரித்துக் கொண்டிருக்கும்பொழுது வதம் பெறுதற்குத் தகாத அந்த ராஜகுமாரன் பலிஷ்டனாகிய ராமன், ஸமுத்ரம்போல் கலக்கமுடியாது பயங்கரர்களான கரன் முதலிய ராக்ஷஸர்களெல்லோரையும் கொன்று ஸமுத்ரத்தைத் தாண்டியும் கடைசியில் துர்ப்பாக்யையாகிய என் நிமித்தமாக ஒரு குளப்படியில் ப்ராஹஸ்தனால் அடிக்கப்பட்டனனே! இதை என்னென்று சொல்வேன்! ராமன் என்னைத் தன்குலத்தைப் பாழாக்குபவளென்று அறியாமல் மணம் புரிந்தனன். ஆகையால் என்கணவனாகிய ராமனுக்கு மணம் புரிந்த பார்யையே ம்ருத்யுவாயினள். நான் பூர்வ ஜன்மத்தில் எவரோ கன்யாதானஞ் செய்ய நினைத்திருக்கும் பொழுது அதற்கு விக்னஞ் செய்திருப்பேன்; ஆனது பற்றியே ஸர்வரக்ஷகனும் ஸர்வர்க்கும் அதிதிபோல் பூஜிக்கத் தகுந்தவனும் ஸமஸ்த அதிதி பூஜகனுமாகிய இப்படிப்பட்ட ராமனுக்குப் பார்யையாயினும் இந்த ஜன்மத்தில் இத்தகைய போககாலத்திலேயே துக்கப்படுகின்றனன். ராவணா! ராமனை அடித்தாற்போல் என்னையும் சீக்ரமாக அடித்து அவன்மேல் விழத்தள்ளுவாயாக. பதியைப் பத்னியுடன் சேர்ப்பாயாக. இது மிகவும் மங்கலமான கார்யமல்லவா? இதை நடத்துவாயாக. ராவணா! ராமனது ஸிரஸ்ஸோடு என் ஸிரஸ்ஸையும் அவன் சரீரத்தோடு என் சரீரத்தையும் சேர்ப்பாயாக. மஹானுபாவனாகிய என் கணவன்போன போக்கையே நானும் பின்றொடர்ந்து போகின்றனன். கணவனது கதியைப் பின் செல்லுகிறேன். (பர்த்தா போனபின்பு இங்ஙனம் அநாதையாகி முஹூர்த்த காலமாயினும் பாவப்பிழைப்பு பிழைத்திருக்கப் போறேன். நான் என் தந்தையினகத்தில் இருக்கும்

பொழுது வேதங்களை உணர்ந்த ப்ராஹ்மணர் 'எந்த ஸ்த்ரீகள் பர்த்தாவிடம் ப்ரீதியுடனிருந்து அவன் தம்மிடத்தில் ப்ரீதியோடிருக்கும்படி நடப்பார்களோ, அவர்க்கு மிகுதியும் நன்மையை விளைக்கும்படியான லோகங்கள் ஸம்பவிக்கும்' என்று சொல்லக்கேட்டிருக்கின்றனன். பொறுமையும் இந்த்ரிய நிக்ரஹமும் தானமும் ஸத்யமும் தர்மமும் க்ருதஜ்ஞதையும் (செய்த நன்றியை மறவாமையும்) ப்ராணிகளை ஹிம்ஸியாதிருத்தலும் எவனிடத்தில் உளவோ, அப்படிப்பட்ட கணவனைப் பிரிந்தால் எனக்கு வேறு கதி ஏது?') என்று இங்ஙனம் அந்த ஸீதை அகன்ற கண்களை மலரவிழித்து பர்த்தாவின் சிரஸ்ஸையும் தனுஸ்ஸையும் அடிக்கடி பார்த்து வருத்தத்தினால் பரிதபித்துப் புலம்பினள். ஸீதை இங்ஙனம் புலம்பிக்கொண்டிருக்கையில் வாசற்காப்பவனாகிய ராக்ஷஸன் ஒருவன் கைகூப்பிக்கொண்டு ப்ரபுவான ராவணனிடம் வந்தனன். அவன் 'ப்ரபூ! ஜய விஜயீபவ' என்று நமஸ்கரித்து அருள் புரியச்செய்து 'ஸேனாபதியாகிய ப்ரஹஸ்தன் வந்தான்' என்றனன். மீளவும் அவன் ராவணனைக் குறித்து 'ப்ரபூ! ப்ரஹஸ்தன் மந்த்ரிகளனைவரோடும் கூடி உன்னிடம் வந்திருக்கின்றனன். அவன் உன்னைப் பார்க்க விரும்பி எங்களை அனுப்பினன். 'ப்ரஹஸ்தன் அனுப்பினனென்றுவது அல்லாத ஸமயத்தில் எப்படி வந்தாய்' என்கிறாயோ? மஹாராஜனே! பெரிய கார்யம் ஒன்று நிஜமாயிருக்கின்றது. அது மிகுதியும் கஷ்டஸாத்யமாயிருப்பது. ஆகையால் அவர்க்கு தர்சனங் கொடுப்பாயாக' என்றனன். அந்த ராக்ஷஸன் தெரிவித்த அந்த வார்த்தையைக் கேட்டு ராவணன் அசோகவனிகையை விட்டு மந்த்ரிகளைப் பார்க்கப் போயினன். அந்த

ராவணன் ராமனது பராக்ரமத்தைத் தெரிந்துகொண்டு ஸபையில் நுழைந்து தான் செய்ய வேண்டிய கார்யத்தை யெல்லாம் மந்த்ரிகளுடன் கலந்து ஆலோசித்து நிச்சயித்துக்கொண்டு அப்பொழுதைக்கு வேண்டிய கார்யத்தைச் செய்தனன். ராவணன் புறப்பட்டுப் போனவுடனே அந்த ராமனது ஶிரஸ்ஸூம் அம்மேலான தனுஸ்ஸூம் அந்தர்த்தானமாயின (கண்ணுக்குப் புலப்படாமல் போயின.) அப்பொழுது ராக்ஷஸேஶ்வரனாகிய ராவணன் பயங்கர பராக்ரமர்களான மந்த்ரிகளுடன் கலந்தாலோசித்து ராமனைக்குறித்துத் தான் செய்யவேண்டிய கார்யத்தை நிச்சயித்தனன். காலனைப்போன்ற ராக்ஷஸேஶ்வரன் ராவணன் தன் மேன்மையை விரும்பி ஸமீபத்திலிருக்கும் ஸேனாதிபதிகளைப்பார்த்து பேரி வாத்யத்தைக் கோல்களால் அடித்து ஸ்பஷ்டமாக வாசித்துச் சீக்ரம் என் ஸைன்யங்களை யெல்லாம் வரவழைப்பீர்களாக; காரணம் யாதுஞ் சொல்லவேண்டாம்' என்றனன். அனந்தரம் அந்த ஸேனாதிபதிகள் அப்படியே ஆகட்டுமென்று அவன் வார்த்தையை அங்கீகரித்துத் தங்கமது பெரிய ஸைன்யங்களை வரவழைத்து, அங்ஙனம் அவையெல்லாம் வந்திருப்பதை யுத்தத்தில் விருப்பமுடைய தம் ப்ரபுவான ராவணனுக்குத் தெரிவித்தனர். முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விபீஷணனது பார்யையாகிய ஸரமை யென்பவள் ஸீதையை ஸமாதானப் படுத்தல்.

அனந்தரம் ஸரமையென்னும் ராக்ஷஸி, ஸீதை மோஹித்து ராமனைக்குறித்து விபரீதமாக ப்ரமித்

திருப்பதைக் கண்டு, அவள் தனக்கு மிகுதியும் ப்ரியத்துக்கிடமாகித் தன்னுடன் ஸ்னேஹித்திருக்கும் ஸகியாயிருப்பது பற்றி அவளிடம் போயினள். ஸீதை, ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனால் ராமன் மரணம் அடைந்ததாக அறிவித்து வஞ்சிக்கப்பட்டு மிகுதியும் துக்கித்திருக்கையில், அப்பொழுது ஸரமை ம்ருதுவான வசனங்களைச் சொல்லி அவளை ஆஶ்வாஸப்படுத்தினள்.[1] அந்த ஸரமை ராவணனது ஆஜ்ஞையால் ஸீதையை ரக்ஷித்துக்கொண்டிருந்தனள். அவள் மிகுதியும் மன இரக்கமுடையவளாகையால் அவளது பாதுகாப்புக்குட்பட்ட ஸீதை அவளைத் தனக்கு ஸகியாகச் செய்துகொண்டனள். மற்றும், அந்த ஸரமை பிடித்த பிடியை விடாதிருப்பவளாகையால் ஸீதையுடன் ஸ்னேஹந் தவறாதிருந்தனள். அனந்தரம் அந்த ஸரமை, ராமன் விஷயத்தில் விபரீதமாக ப்ரமித்திருக்கிற அந்த ஸீதை, தரையில் புரண்டு தூள்படிந்து

1. விபீஷணனுடைய பார்யையை ராவணன் ஸீதையைப் பாதுகாத்து வரும்படி நியோகிப்பது எப்படிப் பொருந்தும்? நியோகித்திருப்பின், அப்பொழுது அவள் ராவணனுக்குப் பயந்து மறைந்திருப்பதேன்? என்னில் விபீஷணன் லங்கையிலிருக்கும்பொழுது ஸீதையின் யோக க்ஷேமங்களை விசாரிக்கும்பொருட்டு ஸரமை அந்தரங்கையாக நியோகிக்கப்பட்டனள். விபீஷணன் புறப்பட்டுப் போனபின்பு ராவணனுடைய அந்தரங்க வார்த்தைகளைக் கேட்க ஸரமை பயந்தமையால் மறைந்திருந்து செவியுற்றனள். ஸரமையை நியோகிக்கையாவது ஸரமை தன் தாஸியை அனுப்பி ஸமாசாரந் தெரிந்துகொள்ளும்படி நியோகிக்கை யென்று உணர்க. தமையனுக்குத் தம்பியின் பார்யை மருமகள் போன்றவளாகையால் அவனெதிரில் நிற்கக்கூடாமையால் மறைவிலிருந்து செவியுற்றாளென்றுங் கண்டுகொள்ளலாம் இந்த ஸரமை மற்றொருத்தியென்று சிலர் அபிப்ராயப்படுகின்றனர்.

எழுந்திருந்த பெண்குதிரைபோல் தூள்படியப் பெற்றிருக்கக் கண்டனள். வ்ரதத்தைச் சிறிதும் தவறாதிருக்குந் தன்மையளாகிய அந்த ஸாமை முன்னம் கையால் தடவிக்கொடுப்பது முதலிய உபசாரங்களால் ஸமாதானப்படுத்தி, பின்பு ஸகியிடத்திலுள்ள ஸ்னேஹத்தால் ராவண வ்ருத்தாந்தத்தை அறிவித்து ஸமாதானப்படுத்த முயன்று 'ஸீதே! வைதேஹி! ஸமாதானமுற்றிருப்பாயாக; மனத்தில் வருத்தமுற்றிருக்கவேண்டாம். நீ பயப்படுந்தன்மையளாகையால் பயப்படுகின்றனை. ராவணன் உன்னோடு சொன்னதையும், அதற்கு நீ அவனுக்கு மறுமொழி உரைத்ததையும் எல்லாவற்றையும் நான் ஸகியாகிய உன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் கேட்டுக்கொண்டிருந்தனன். 'அப்பொழுது நீ அருகாமையில் இல்லையே; எப்படி கேட்டாய்' என்கிறாயோ? அப்பொழுது நான் ஆகாயத்தில் ஓர் மரத்தின் சந்தில் எவருமில்லாத இடத்தில் மறைந்திருந்து செவியுற்றனன். 'ராவணன் பயங்கரனல்லவா? பயமற்று எப்படி கேட்டுக் கொண்டிருந்தாய்' என்கிறாயோ? உன் நிமித்தமாக நான் ப்ராணன்களின்மேலும் ப்ரீதி வைக்கமாட்டேன். ஆகையால் ராவணனிடத்தில் பயத்தைத் துறந்து செவியுற்றனன். உனது அகன்ற கண்களின் அழகைப் பார்க்கையில் உன் வருத்தத்தை நான் எங்ஙனம் பொறுத்திருப்பேன்? ஸீதே! மற்றும், எதற்காக ராக்ஷஸ ராஜன் ராவணன் விரைந்து போயினனோ, அந்தக் காரணத்தையுங்கூட நான் வெளியில் போய் முழுவதுந் தெரிந்துகொண்டனன். அது நமக்குத் தெரியாமலே இருந்தாலும் நாம் ஆலோசித்துப் பார்க்கில் அவன் சொல்லுவது பொருந்தவில்லை. ராமனை வதிப்பதற்குத் தகுந்த காரணம் இல்லை.

இதைப்பற்றியும் ஸமாதானம் அடைவாயாக. ராமன் எப்பொழுதிலும் எல்லாவிடத்திலும் எல்லாம் அறிந்த மதியுடையவன். அவனை சித்ரை போகும்பொழுது மோசஞ்செய்து வதிக்க முடியாது. மற்றும் அவன் புருஷஸ்ரேஷ்டனாகையால் எப்படிப்பட்ட தசையிலிருப்பினும் அவனை வதிப்பதற்கு எள்ளளவும் உபாயம் புலப்படவில்லை. மற்றும், வானரர்களைக் கொல்வதும் பொருந்தாது. அவர்கள் வ்ருக்ஷங்களைப் பிடுங்கிக் கொண்டு பயங்கரமாகச் சண்டை செய்யும் தன்மையர்; மற்றும் தேவேந்த்ரனால் தேவதைகள் பாதுகாக்கப்பட்டிருப்பதுபோல் ராமனால் நன்கு ரக்ஷிக்கப்பட்டிருப்பவர். ஆகையால் அவர்களைக் கொல்வதும் ஸாத்யமன்று. அன்றியும், ஸீதே! ராமன் திரண்டுருண்டு நீண்ட புஜதண்டங்களை யுடையவன்; மிகுதியும் காந்தி விளங்கப்பெற்றவன்; பரந்த மார்புடையவன்; அளவின்றிய தேஜஸ்ஸுடன் ப்ரகாசிப்பவன்; நல்ல வில்லாளி; அழகான அவயவங்கள் பொருந்தப் பெற்றவன்; தர்மஸ்வபாவன்; பூமண்டலத்தில் எங்கும் புகழ்பெற்றவன்; மிகுதியும் பராக்ரமசாலி; தம்பியாகிய லக்ஷ்மணனுடன் கூடி ஸர்வகால ஸர்வ அவஸ்தைகளிலும் தன்னைப் பாதுகாத்துக்கொள்வது மாத்ரமேயன்றிப் பிறரையும் பாதுகாத்துக்கொண்டிருப்பவன்; மிகுந்த க்ஷேமமுடையவன்; நீதிசாஸ்த்ரங்களை அறிந்தவன்; அவன், சத்ரு ஸைன்யங்கள் கூட்டங்கூடிவரினும் பொருள் செய்யாமல் உருமாய்க்க வல்லவன்; நினைக்க முடியாத பலபௌருஷங்கள் அமைந்தவன்; ஜயலக்ஷ்மீ விலாஸம் என்றும் மாறாதிருக்கப்பெற்று விளங்குந்தன்மையன்; சத்ருக்களை அழிக்குந்திறமை யுடையவன். இங்ஙனம் கேவலபலாதிகள் மாத்ரமேயன்றி ஸௌபாக்ய

லக்ஷணங்களும் அமைந்த ராமனை எவரும் கொல்லவல்ல ரல்லராகையால் அவன் கொல்லப்படவில்லை. 'ஆனால் அவன் சிரஸ்ஸு முதலியவை எங்ஙனம் அகப்பட்டன' என்கிறாயோ? ராவணனது புத்தியும் அவன் வ்யாபாரங் களும் அவனுக்குத் தகாதவை. மற்றும், அவன் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் விரோதியா யிருப்பவன்; மாயைகளெல்லாம் தெரிந்தவன்; பயங்கர ஸ்வபாவன்; ஆகையால் உன்னை வஞ்சிக்கும்பொருட்டு இம்மாயை யைச் செய்தனன். உன் துக்கமெல்லாம் போயிற்று. நன்மை உன்னைப்பெறக் காத்துக்கொண்டிருக்கின்றது. ஸந்தேஹமில்லாமல் இனி உன்னை லக்ஷ்மி அடையப் போகின்றனள். இது நிஜமே. ப்ரீதியை விளைக்கும்படி யான என் ப்ரிய வார்த்தையைக் கேட்பாயாக. ராமன் வானர ஸைன்யத்தோடுகூட ஸமுத்ரத்தைத் தாண்டி அதன் தென்கரையில் இழிந்திருக்கின்றனன். ராமன் லக்ஷ்மணனோடுகூடி ப்ரயோஜனம் முழுவதும் கைகூடப் பெற்றிருக்கக் கண்டேன். அவன் ஸமுத்ரக்கரையில் வானர ஸைன்யங்களால் நன்கு ரக்ஷிக்கப்பட்டிருக் கின்றனன். இந்த ராவணன் விரைவாகச் செல்லுந் திறமையுடைய ராக்ஷஸர்களை அனுப்பி ராமனது ஸங்கதியைத் தெரிந்துகொண்டு வருவீர்களென் கையில், அவர்கள், ராமன் ஸமுத்ரந் தண்டியாயிற் றென்றே ஸமாசாரங்கொண்டு வந்தனர். அகன்ற கண்களையுடையவளே! ராக்ஷஸாதிபதியாகிய அந்த ராவணன் இந்த ஸமாசாரத்தைக் கேட்டே இப் பொழுது மந்த்ரிகளெல்லாரோடும் கூடி ஆலோசிக் கின்றனன்' என்று மொழிந்தனள். இங்ஙனம் ஸரமை சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே ஸேனாஜனங்கள் செய்யும் ஸமஸ்த ப்ரயத்னங்களாலும் ஓர் பயங்கர

த்வனியைத் தானும் ஸீதையுமாகச் செவியுற்றனள். அனந்தரம் ஸரமை, தண்டங்களால் அடிக்கப்பட்டு முழங்கும் பேரி வாத்யத்தின் மஹாத்வனியைக் கேட்டு ஸீதையைப் பார்த்து, இனிய வசனங்களால் 'ஸீதே! நீ பயப்படும் ஸ்வபாவமுடையவளல்லவா? ஆகையால் வீணுக்கு பயப்படுகின்றனே. ராவணன் சொல்லுவது உண்மையாயின் இந்த ஸந்நாஹங்கள் எதற்காகவென்று ஆலோசிப்பாயாக. ஸேனையிற் சேர்ந்தவரெல்லோரையும் யுத்தத்திற்கு ஸந்நாஹப்படுத்தும் பொருட்டு, பேரி வாத்யத்தை இங்ஙனம் பயங்கரமாக வாசிக்கின்றனர். மேகத்வனிபோல் கம்பீரமாயிருக்கின்ற பேரிவாத்யத்தின் த்வனியைக் கேட்பாயாக. மதித்த யானைகளை அலங்கரிக்கின்றனர். ரதங்களுக்குக் குதிரைகளைப் பூட்டுகின்றனர். குதிரைக்காரர்கள் ஈட்டிகளைக் கையிலேந்தி அனேகமாயிரம்பேர் ஸந்தோஷத்துடன் செருக்குற்றிருக்கின்றனர். ஆங்காங்குப் பதாதிகள் (காலாட்கள்) யுத்த ஸந்நாஹமுடையவராகிக் கூட்டங் கூடுகின்றனர். ஸேனைகளிற்கூடின ரத கஜ துரகபதாதிகள் (தேர் யானை குதிரை காலாட்கள்) மிகுந்த வேகத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்வதும், அந்தந்த விசேஷ அலங்காரங்களால் காண்போர்க்கு வியப்பை விளைவிப்பதுமாகி, மிகுந்த வேகமுடையவைகளும் இரைச்சலிட்டுக்கொண்டு வளர்ந்து வருபவைகளுமான ஜலப்ரவாஹங்கள் ஸமுத்ரத்தை நிரப்புவது போல் ராஜமார்க்கங்களை நிரப்புகின்றனர். சாணை பிடித்திருக்கையால் நிர்மலங்களாகித் தளதளவென்று திகழும் ஆயுதங்களினின்றும் பலகங்களினின்றும் கவசங்களினின்றும் ரத கஜ துரகங்களினின்றும், பல அலங்காரங்களை அணிந்து காந்தியுடன் திகழ்கின்ற

ராக்ஷஸரிடத்தினின்றும் மேல் கிளம்புகின்ற காந்தி இதோ நானாவர்ணமுடையதாகி, வெயிற்காலத்தில் அடவியை எரிக்கின்ற காட்டுத்தீக்குள்ள தேஜஸ்ஸு நானாவித ஓஷதிகளில் பற்றுகையால் நானாவர்ணங் களுடையதா யிருப்பதுபோல் புலப்படுகின்றது; பார். யானைகளுக்குக் கட்டியிருக்கும் மணிகளின் ஓசையை யும் தேர்ச்சக்கரக் கட்டுகளின் த்வனிகளையும் கேட்பா யாக. வாத்யத்வனிகள் போன்ற குதிரைகளின் கனைப் புகளையும் கேட்பாயாக. ராக்ஷஸ ராஜனாகிய ராவண னுடைய போர்வீரர்களான ராக்ஷஸர்கள் ஆயுதங் களைக் கைகளிலேந்திக் காண்போர்க்கு மயிர்க்கூச்சல் உண்டாகும்படி இடைவெளியின்றி ஸங்நாஹஞ் செய் கின்றனர். இனி உன் துக்கங்களை யெல்லாம் போக் கடித்து உனக்கு விஜயலக்ஷ்மி விளையப்போகின்றது. ராக்ஷஸர்க்கு பயம் ஸம்பவித்தது. ராமன் தாமரை இதழ்போன்ற கண்களுடையவனாகையால் அப்படிப் பட்ட நேத்ர ஸௌபாக்ய லக்ஷணமுடைய அம்மஹாநு பாவனை லக்ஷ்மி அவஶ்யம் அடையாமல் தவருள். மற்றும்,தேவதைகளில் தேவேந்த்ரன்போல்,எல்லோர்க் கும் மேலாகி விளங்கும் ப்ரபாவத்தைப்பற்றியும் அவனை லக்ஷ்மி விடமாட்டாள். ஒரு பாணத்தினால் மருகாந்தாரத்தில் வஸிக்கும் ஸமஸ்த சோரர்களையும் பறக்கடித்தவனாகையால் அவனுடைய பராக்ரமம் இப் படிப்பட்டதென்று சிந்திக்கவும் ஸாத்யமன்று. ‘அப் படிப்பட்டவன் இப்பொழுது ஏன் தாமதிக்கிறான்’ என்கிறாயோ? ராவணன் எதிர்ப்படாமையால் கோபத் திற்கு இலக்கில்லாமல் அதை அடக்கிக்கொண்டு வெறு மனே இருக்கின்றனன். உன் கணவனாகிய அந்தராமன் தேவேந்த்ரன் தைத்யர்களை ஜயிப்பதுபோல்,யுத்தத்தில்

ராவணனை ஜயித்து உன்னை அடையப்போகின்றனன். சத்ருக்களைக் கொல்ல வல்லவனாகிய இந்த்ரன் தன் தம்பியாகிய உபேந்த்ரனென்கிற விஷ்ணுதேவனுடன் கூடிச் சத்ருக்களிடத்தில் பராக்ரமத்தை நிறைவேற்று வதுபோல், உன் கணவனாகிய ராமன் லக்ஷ்மணனுடன் கூடி ராக்ஷஸரிடத்தில் பராக்ரமத்தை நிறைவேற்றப் போகின்றனன். 'இங்ஙனஞ் சொல்லுகின்றனையே! இதனால் உனக்குப் பயன் யாது' என்கிறாயோ? பகைவன் முடிந்த பின்பு, வெகு காலமாய்ப் பிரிந்திருக்கிற ராமன் உன்னிடம் வருகையில், நீ கருத்து நிறைவேறப்பெற்று அந்த ராமனது மடியில் உட்கார்ந்திருக்கையில், நான் இனிச் சீக்ரத்திலேயே பார்க்கப்போகின்றனன். அப் பொழுது உன் முகமலர்த்தியைக் காண்கையே எனக் குப் பயன். கல்யாணி! பரந்த மார்புடைய அந்த ஸ்ரீராமன் உன்னிடம் வந்து கலந்து உன்னைக் கட்டி யணைக்கையில், நீ அவனது வக்ஷஸ்தலத்தில் ஆநந்தத் தினால் விளையும் கண்ணீர்களைப் பெருக்கப் போகின்றனை. ஸீதே! நீ பதியைப் பிரிந்தது முதல் இன்றீறான பல மாதங்களாகப் பிரிக்காமல் அங்ஙனே தரித்திருக்கின்ற மையால் ஒரே பின்னலாகப் பின்னிக்கொண்டு உனது நிதம்பம் வரையிலும் தொங்குகின்ற இந்தப் பின்னலை, மஹாபலிஷ்டனாகிய ராமன் இனிச் சீக்ரத்திலேயே அவிழ்க்கப்போகின்றனன். தேவீ! உதயமாகின்ற பூர்ண சந்த்ரன் போன்ற அந்த ராமனது அழகிய முகத்தை நீ சீக்ரத்திலேயே பார்த்து, ஸர்ப்பம் தோலை உரிப்பது போல், சோகத்தினால் விளையுங் கண்ணீரைத் துறக்கப் போகின்றனை (கண்ணீர் பெருக்குவதற்கு முக்யமாகிய சோகத்தை அடியோடு துறக்கப் போகின்றனை.) ஸீதே! ஸுகத்திற்கே உரியவனாகிய ராமன் இனிச்

சீக்ரமாகவே யுத்தத்தில் ராவணனைக் கொன்று மன விருப்பம் நிறைவேறப்பெற்று ப்ரீதிக்கிடமான உன்னுடன்கூடி ஸுகத்தை அடையப்போகின்றனன். பயிர்களோடு கூடின பூமி நல்ல மழை பெய்யப்பெற்று விளக்கமுறுவதுபோல், நீ மஹானுபாவனான ராமனுடன் கூடி அவன் பராக்ரமத்தைக் கண்டு மிகுதியும் ஸந்தோஷம் அடையப்போகின்றனை. பர்வதஸ்ரேஷ்டமாகிய மேருவைச் சுற்றிலும் ப்ரதக்ஷிணமாகத் திரிந்துகொண்டு குதிரைபோல் மண்டலகதிகளை முப்பது முஹூர்த்தங்களுக்குள் சீக்ரமாகச் செய்பவனும் கிரணங்களால் ப்ரகாசிப்பவனுமாகிய ஸூர்யனைச் சரணம் அடைவாயாக. இந்த தேவன் ஸமஸ்த ப்ராஜைகளுக்கும் காரணமாயிருப்பவன். ஆகையால் ஸமஸ்த சுபங்களையும் கொடுப்பான்' என்றனள். முப்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸரமை ராவணனது அபிப்ராயத்தைத் தெரிந்துகொண்டு ஸீதையிடம் வந்து சொல்லுதல்.

அங்ஙனம் ஸீதை, முன்பு அந்த ராவணன் சொன்ன வார்த்தையால் வஞ்சிக்கப்பட்டு ராமனைக் குறித்து வருத்தமுற்றிருக்கையில், ஸரமை தான் அங்ஙனம் மொழிந்த நல்வார்த்தைகளால், ஆகாசம் ஜலத்தினால் பூமியைக் குளிரச் செய்வதுபோல், அவளை ஸந்தோஷப்படுத்தினள். அனந்தரம் புன்னகையுடன் பேசுந் தன்மையளான ஸரமை, எப்பொழுது எதைச் செய்ய வேண்டுமோ அதை நன்கறிந்தவளாகையால், அப்பொழுது தன் ஸகியாகிய ஸீதையின் ஹிதத்தைச்செய்ய

விரும்பி 'கறுத்த கண்களையுடையவளே! ஸீதே! எவர்க்குக் தெரியாதிருக்கும்படி நான் ராமனிடம் போய் நீ க்ஷேமமாயிருக்கிறேனென்று மொழிந்த உன் வார்த்தையை அவனுக்குச் சொல்லித் திரும்பி வரவேண்டுமென்றால், இதற்கு நான் வல்லவளே! ஆதாரமில்லாத ஆகாயத்தில் நான் போய்க்கொண்டிருக்கையில் என்னைப் பின்றொடர்ந்து வருவதற்கு வாயுவாயினும் கருடனாயினும் ஸமர்த்தரல்லரே!' என்றனள். ஸரமை இங்ஙனம் சொல்லுகையில் ஸீதை அதைக்கேட்டு முன்னம் துக்கத்தினால் தழதழத்த உரைகளை உரைத்தவள், இப்பொழுது ஸந்தோஷம் விளங்கப்பெற்று இனிதான வசனங்களை அந்த ஸரமையைப் பார்த்துச் சொல்லத் தொடங்கி 'நீ ஆகாயத்திற்காவது பாதாளத்திற்காவது போகவல்லவளே. என் விஷயத்தில் மற்றெவர்க்கும் செய்ய முடியாத கார்யத்தையும் நீ செய்ய வல்லவளென்று நான் அறிவேன். எனக்கு ப்ரியஞ் செய்யவேண்டுமென்று உனக்கிருக்குமாயின், உனக்கு இந்நினைவு திடமாயிருக்குமாயின், ராவணனிடம் போய் அவன் என்ன செய்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டு வருவாயாக. 'அங்ஙனம் தெரிந்துகொண்டு வருவதனால் ப்ரயோஜனம் யாது' என்கிறாயோ? அவன் மாயாபல முடையவன்; கொடியன்; பகைவரை அழப்படுத்துந் தன்மையன்; துஷ்ட ஸ்வபாவன். ஆகையால் தத்க்ஷணத்தில் பருகின மத்யம்போல் அவன் என்னை வஞ்சனை செய்கின்றனன். அவன் என்னைத் தினந்தோறும் காவல் செய்கிற மிக்க பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸ ஸ்த்ரீகளைக்கொண்டு அடிக்கடி வார்த்தைகளால் விரட்டச்செய்கின்றனன். நான் மிகுதியும் பயந்து ஸந்தேஹமுற்றிருக்கின்றனன். என் மனமும்

கவலையற்றதாயில்லை. ராவணனிடத்தினின்று பயத்தி ஞலேயே வருந்தி யிருக்கின்றனன். மற்றும், இந்த அசோகவனிகையில் இருப்பதைப் பற்றியே எனக்கு ஸம்சயம் உண்டாகின்றது. அந்த ராவணனுடைய ஸமாசாரம் என்னவோ, அவன் என்ன செய்ய நிச்சயித் திருக்கிருனே, அதை யெல்லாம் எனக்குச் சொல்வா யாக. அதனுல் எனக்குப் பெரிய உபகாரஞ் செய்த தாகும்' என்றனள். ஸீதை இங்ஙனம் மொழிகையில், இனிய மொழிகளைக் கூறுந்தன்மையளாகிய அந்த ஸரமை கண்ணீர்களால் கலங்கின அப்பெண்மணியின் முகத்தைத் துடைத்துக்கொண்டே, 'ஸீதே! உனக்கு இங்ஙனம் அபிப்ராயம் உளதாயின், இப்பொழுதே போகின்றனன். பகைவனது அபிப்ராயத்தை அறிந்து கொண்டு வந்து சேருகிறேன்; பார்' என்றனள். அந்த ஸரமை இங்ஙனம் சொல்லி உடனே அந்த ராவண னிடம் போய், அவனும் மந்த்ரிகளும் கலந்து பேசும் பேச்சுக்களையெல்லாம் செவியுற்றனள். ஸரமை ஒருவ ருடைய நிச்சயத்தை அறிவதில் வல்லவளாகையால் துர்ப்புத்தியாகிய அந்த ராவணன் செய்த நிச்ச யத்தைக் கேட்டுத் தெரிந்துகொண்டு மீளவும் அப் பொழுதே அசோகவனிகையில் புகுந்து அங்குத் தன் வரவையே எதிர்பார்த்துக்கொண்டு தாமரைமலரைப் பிரிந்த மஹாலக்ஷ்மிபோல் ப்ரகாசிக்கின்ற ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைப் பார்த்தனள். ஸீதை, மதுர வசனங்களைப் பேசுந்தன்மையுள்ள அந்த ஸரமை திரும்பி வந்ததைக்கண்டு ஸந்தோஷம் அடைந்து மிகுதியும் ஸ்னேஹம் விளங்குமாறு அவளை ஆலிங் கனஞ்செய்து தானே ஆஸனம் அளித்தனள். அனந்த ரம் ஸீதை ஸரமையைப் பார்த்து 'நீ இங்கு ஸுகமாக

உட்கார்ந்து கொடியனும் துர்ப்புத்திய னுமாகிய ராவணனது நிச்சயத்தை எனக்கு உள்ளபடி உரைப்பாயாக' என்றனள். ஸீதை 'இவள் என்ன பயங்கர ஸமாசாரஞ் சொல்லுவளோ' என்று நடுக்கமுற்று இங்ஙனம் வினவுகையில், ஸரமை, ராவணனும் அவன் மந்த்ரிகளும் பேசினதையெல்லாம் சொல்லத் தொடங்கி 'ஸீதே! தாயான கைகஸியும் மந்த்ரிகளில் வயது சென்றவனாகிய அவித்தனென்னும் மந்த்ரியும் உன்னை விடுவதைப்பற்றி ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணனுக்குப் பெரிய மொழியை மொழிந்தனர். அவர்கள் அந்த ராவணனை நோக்கி 'நீ ராமனுக்கு ஸத்காரத்துடன் ஸீதையைக் கொண்டுபோய்க் கொடுப்பாயாக. அப்படி செய்யாயாயின், இனி அவன் உன்மேல் நிறைவேற்றப் போகிற பராக்ரமத்திற்கு, ஜனஸ்தானத்தில் அற்புதமாகச் செய்த கராதிகளின் வதமாகிற ஒரு நிதர்ஶனமே போதுமானது. ராமன் அப்படி இருக்கட்டும். ஸமுத்ரந் தாண்டுவதும் ஸீதையைக் காண்பதும் ராக்ஷஸர்களெல்லோரையும் ஒருவனே யுத்தத்தில் கொல்வதும் ஆகிய இந்தச் செயல்களை அவனது ப்ருத்யனாகிய ஹனுமான் செய்தனனே! அங்ஙனம் பூமண்டலத்தில் மற்றை மனுஷ்யனாயிருப்பவன் எவன் செய்வான்?' என்று வெகுதூரம் போதித்தனர். இங்ஙனம் மந்த்ரி வ்ருத்தனாகிய அவித்தனும் (தாயான கைகஸியும்) பலவாறு போதிக்கினும் அந்த ராவணன், தனத்தில் பெரு விருப்பமாகிற லோபமுடையவன் தனத்தை விட விரும்பாததுபோல், உன்னை விடுவதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. ஸீதே! கொடியனாகிய ராவணன் தானும் மந்த்ரிகளும் கலந்து இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டிருக்கிறானாகையால், யுத்தத்தில் மரணமடைந்தா

லல்லது, உன்னை விடுவதற்குப் பொறுக்கவில்லை. அவனுக்கு இங்ஙனம் நிச்சயமான புத்தி மரணம் அடையவேண்டுமென்கிற பேராசையால் ஸம்பவித்ததே யன்றி வேறில்லை. அவன், தனது ராக்ஷஸர்களனை வரும் தானுமாக யுத்தத்தில் வதம் நேரப்பெற்றுத் தரையில் விழுந்தாலல்லது வெறும் பயத்தினால் மாத்ரம் உன்னை விடுவதற்கு வல்லனல்லன். கறுத்து அழகான கண்களையுடையவளே! ராமன் தப்பாமல் யுத்தத்தில் கூரான பாணங்களால் ராவணனைக்கொன்று உன்னை அயோத்யைக்கு அழைத்துக்கொண்டு போகப்போகி ருன். இங்ஙனம் உன் கறுத்தழகிய கண்களின் ஸௌபாக்யமே சொல்லுகின்றது' என்றனள். இங்ஙனம் ஸரமை ஸீதையுடன் சொல்லிக்கொண்டிருக்கையில், இதற்கு உபஸ்ருதியாக பேரிவாத்யத்தின் முழக்கமும் சங்கவாத்யங்களின் த்வனிகளும் நிரம்பிய வானர ஸைன்யங்களின் ஸிம்ஹநாதம் ப்ராணிகளை நடுங்கச் செய்துகொண்டு செவியிற்பட்டது. லங்கையிலுள்ள ராவண ஸைன்யபடர்கள் வானர ஸைன்யங்கள் செய் கிற அந்த ஸிம்ஹநாதத்தைக் கேட்டு, நமது ராஜ ஞகிய ராவணனது தோஷங்களால் நமக்கு பிழைப் பாகிற நன்மை உண்டாகாது; மரணமே கதி' என்று தமது தேஜஸ்ஸை இழந்து தைன்யம் நிரம்பிய சேஷ் டைகளுடையவர்களாகித் தழதழப்புற்றனர். முப்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

மால்யவான், ராமனுக்கு ஸீதையைக் கொடுப்பதே இப்பொழுது நாம் செய்ய வேண்டிய கார்யமென்று ராவணனுக்குப் போதித்தல்.

அப்பொழுது சத்ருபட்டணங்களை ஜயிக்கவல்ல மஹாபாஹுவும் ரகுகுலப்ரகாசகனுமாகிய ராமன் சங்கத்வனிகளும் பேரிவாத்யத்தின் பாங்காரங்களும் 'இன்னது இனியது' என்று தோற்றாமல் ஒரே கோஷமாகக் கிளம்பும்படி செய்துகொண்டு லங்கையின்மேல் எதிர்த்து வந்தனன். அப்பால், ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் அந்த த்வனியைக் கேட்டு சிறிது நேரம் ஆலோசித்து மந்த்ரிகளைப் பார்த்தனன். அப்பால் மிகுந்த பலப்பெருக்கினால் ஜகத்தை யெல்லாம் பரிதபிக்கச்செய்யும் க்ரூரனாகிய ராக்ஷஸேஸ்வரன் ராவணன் மந்த்ரிகளெல்லோரையும் அழைத்து ஸபை முழுவதும் ப்ரதித்வனி எழும்பும்படி நிந்தை அமைந்த வசனத்தைச் சொல்லத்தொடங்கி 'நீங்கள், ராமன் ஸமுத்ரந்தாண்டினதையும் அவனது பராக்ரமத்தையும் ஸைன்யஸமூஹத்தையும் சொன்னீர்கள். அதெல்லாங் கேட்டனன். நீங்கள் பயங்கரமான பராக்ரமமுடையவராயிருந்தும், ராமனது பராக்ரமத்தைக் கேட்டு ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு உத்ஸாஹமற்றிருப்பதையும் அறிவேன்' என்றனன். அனந்தரம் ராவணனுடைய மாதாமஹனோடு கூடப்பிறந்தவனும் மிகுதியும் ப்ராஜ்ஞனுமாகிய மால்யவானென்னும் ராக்ஷஸன், ராவணன் மொழிந்த வார்த்தைகளைக் கேட்டு 'ராஜனே! எந்த மன்னவன் ஆன்வீக்ஷகி த்ரயி வார்த்தை தண்டநீதி என்கிற நான்கு வித்யைகளில் நன்கு பயிற்சியுடையவனாகி நீதிசாஸ்த்ரத்தை அனு

ஸரித்து நடப்பானோ' அவனே வெகுகாலம் ராஜ்யத்தைப் பரிபாலனஞ் செய்துவருவான். அவனே சத்ருக்களை யெல்லாம் அடக்கி வசப்படுத்திக்கொண்டு மேன்மையுற்றிருப்பான். அப்படிப்பட்ட மன்னவன் தன் பலம் க்ஷீணித்திருக்கிற ஸமயத்தில் சத்ருக்களோடு ஸந்தி செய்பவனும், தன்பலம் வளர்ந்திருக்கிற ஸமயத்தில் அவரோடு விரோதத்தை ஏறிட்டுக்கொள்பவனுமாகி இங்ஙனம் ஸமயங்களை அனுஸரித்துத் தன் பலத்தை வளரச்செய்துகொண்டு அதற்குப் பலனாக மிகுதியும் பெரிதான ஐஶ்வர்யத்தை அனுபவிப்பான். ஓரரசன் தன் சத்ருபலத்தைக் காட்டிலும் தன் பலம் குறைந்திருக்கப் பெற்றவனாயினும் தன் சத்ருபலத்தோடு ஸமான பலமுடையவனாயினும் தான் அப்படிப்பட்ட சத்ருவுடன் அவஶ்யம் ஸந்தி செய்துகொள்ள வேண்டும். அவ்வரசன் தன் சத்ருவைக் காட்டிலும் அதிகமான பலமுடையவனாயின், அந்தச் சத்ருவை உபேக்ஷித்திராமல் அவனோடு வைரம் வைத்துக் கொள்ளவேண்டும். ராவணா! நீதிசாஸ்த்ர பத்ததி இப்படி இருக்கின்றமையால் பலம் க்ஷீணிக்கப்பெற்றிருக்கிற நீ பலிஷ்டனாகிய ராமனுடன் ஸந்தி செய்துகொள்வதே எனக்கு ஸம்மதமாயிருக்கின்றது. தானமில்லாமல் பலிஷ்டனோடு ஸந்தி அமையாது. ராமனுக்கும் உனக்கும் எவளைப்பற்றி விரோதம் உண்டாகி, அவனால் எதிர்க்கப்படுகிறோமோ, அந்த ஸீதையை அவனுக்குக்கொடுத்து விடுவது யுக்தம். தேவ ரிஷிகள் கந்தர்வர்கள் முதலிய அனைவரும் அவனுக்கு ஜயம் உண்டாக வேண்டுமென்று விரும்புகின்றனர். அப்படிப்பட்ட தேவ பலமுடைய அந்த ராமன் பலிஷ்டனாகையால் அவனோடு விரோதம் வைத்துக்கொள்ளவேண்டாம். அவ

ஞேடு ஸந்தி செய்துகொள்வதே உனக்கு ருசிக்குமாக (ஸந்தி செய்ய ஒப்புக்கொள்வாயாக.) 'தேவாதிகள் ராமனது ஜயத்தை விரும்புவதற்குக் காரணம் என்' என்கிருயோ? ஸர்வஜ்ஞனுகிய ப்ரஹ்மதேவன் தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் அவலம்பமாக தர்மம் அதர்மம் என்கிற இரண்டையும் ஸ்ருஷ்டித்தனன். ஆகையால் தர்மமும் அதர்மமும் அந்த தேவாஸுரர்களுக்கு அவலம்பமாயிருக்கின்றன. ராவணு! அவ்விரண்டில் நல்லியற்கையுடைய தேவதைகள் கைப்பற்றியிருப்பது தர்மமென்று செவியிற்படுகின்றதல்லவா? துஷ்டஸ்வபாவரான ராக்ஷஸர்களும் அஸுரர்களும் அதர்மத்தை அங்கீகரித்தனர். இங்ஙனம் தேவாதிகள் தர்மபக்ஷத்தை அவலம்பித்திருப்பது பற்றியும், ராமனும் தர்மத்தை அவலம்பித்துத்திருப்பவனுகையாலும், தேவதைகள் அந்த ராமனிடம் பக்ஷபாதிகளாகையால் அவன் பலிஷ்டனுவான். அவன் பலிஷ்டனுயிருப்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. எப்பொழுது தர்மம் அதர்மத்தைப் பாழ் செய்யுமோ, அப்பொழுது ஜனங்களிடத்தில் க்ருதயுகம் பற்றியிருக்கும். எப்பொழுது அதர்மம் தர்மத்தைப் பாழ் செய்யுமோ, அப்பொழுது கலியுகம் நடையாடும். 'ஆனல் என்' என்கிருயோ? நீ திக்விஜயத்தின் பொருட்டு லோகங்களில் முழுவதும் திரியும்பொழுது பரதார பரிக்ரஹம் முதலிய பாபச்செயல்களால் பெரிதான தர்மத்தை அழித்து அதர்மத்தைக் கைப்பற்றினை. அதர்மத்திற்கு விளைநிலமாகிய கலியைக் காட்டிலும் தர்மத்திற்கு விளைநிலமாகிய க்ருதயுகம் பலிஷ்டமாயிருக்கும். அதர்மத்தினல் கலியின் ப்ரவேசமுடைய உன்னைக் காட்டிலும் தர்மத்தினல் க்ருதயுகம் நடையாடப்பெற்ற

ராமன் பலிஷ்டன். ஜயம்முதலிய சுபங்களுக்கு நிமித்தமாகிய தர்மம் ப்ரபலமாயிருக்கப்பெற்ற ராமாதிகளான நம் சத்ருக்கள் அபஜயம் முதலிய அசுபங்களுக்கு நிமித்தமாகிய அதர்மம் மிகுந்திருக்கப்பெற்ற நம்மைக்காட்டிலும் மிகுந்த பலமுடையவர். 'நான் அதர்மத்தை அங்கீகரித்து தர்மத்தைப் பாழ் செய்தேனாயின் தேவதைகள் பலிஷ்டராயிருப்பது எங்ஙனே' என்கிறாயோ? அவ்வதர்மத்தை நீ முன்பின் பாராமல் ஸம்ருத்தமாகச் செய்து வளர்த்திக்கொண்டனை. ஆகையால் அது நம்மை முதலே விழுங்கி நாசஞ்செய்கின்றது. தேவதைகளுக்கோ என்னில், அனுகூலமாகி அவர் பக்ஷத்தை வளரச்செய்கின்றது. இங்ஙனம் அதர்மம் அதைச் செய்த நம்மையே நாசஞ் செய்யுமன்றி தேவதைகளின் பலத்தை அழிக்காது. அதர்மம் ஆச்ரயநாசஞ் செய்வதென்று தெரியாதா? 'நான் செய்த அதர்மம் தேவதைகளின் பக்ஷத்தை வளரச்செய்வது எங்ஙனே' என்னில்—நீ விஷயாந்தரங்களில் மனம் பற்றப்பெற்றுச் சபலனாகி தேவாதிகளின் கன்யகைகளையும் அவரது பத்னிகளையும் பிடித்திழுப்பது முதலிய எதை நினைக்கினும் அதையெல்லாம் செய்துகொண்டிருந்தமையால் அக்னியைப்போன்ற மஹர்ஷிகளுக்கு மிகுதியும் மனவருத்தத்தை விளைவித்தனை. அவரது ப்ரபாவமோ என்றால், வளர்ந்தெரிகின்ற அக்னியைப் போன்றது; அதைப் பரிபவிக்க (அழிக்க) எவருக்கும் தரமன்று. அங்ஙனம் நீ மனவருத்தத்தை விளைவிக்கையால் பரிசுத்த ஸ்வபாவரான அம்மஹர்ஷிகள் தர்மத்தின் அபிவ்ருத்தியிலேயே மிகுதியும் விருப்பமுடையவராகையால் தவங்களை ஆசரித்துப் பரிசுத்தஸ்வபாவர்களாகி அக்னிஷ்டோமம் முதலிய ஶ்ரேஷ்டமான அங்

தந்த யாகங்களை ஓயாமல் செய்வதும் விதியின்படி அக்னிகளில் ஹோமங்களை நடத்துவதும் வேதங்களை உரக்க ஓதுவதுமாயிருக்கின்றனர். அன்றியும் ராக்ஷஸர்களைப் பொருள்செய்யாமல் த்ருணீகாரஞ்செய்து வேதகோஷங்களை உச்சரித்துக்கொண்டேயிருக்கின்றனர். அங்ஙனம் அவர்கள் செய்கின்றமையால் ராக்ஷஸர்களெல்லோரும் க்ரீஷ்மகாலத்தில் மேகங்கள்போல் நான்கு திசைகளிலும் பயந்து ஓடிப்போயினர். அக்னியைப் போன்ற ரிஷிகள் ஹோமஞ்செய்கிற அக்னிகளினின்று கிளம்புந் தூமங்கள் (புகைகள்) பத்துத் திசைகளிலும் வ்யாபித்து ராக்ஷஸர்களின் தேஜஸ்ஸை விழுங்குகின்றன. அந்தந்தப் புண்ய தேசங்களில் ரிஷிகள் திடமான நியமங்களைக் கைப்பற்றி நடத்திக் கொண்டு வருகிற தீவ்ர தபஸ்ஸானது ராக்ஷஸர்களை மிகுதியும் தபிக்கச்செய்கின்றது. இங்ஙனம் நமது அதர்மங்களால் ரிஷிகளுக்குண்டான மனஸ்தாபம் நம்மை நாசஞ்செய்து தேவாதிகளுக்கு பலத்தை வளரச் செய்கின்றது. நீ தேவதைகள் தானவர் யக்ஷர் முதலானவர்களால் மரணம் நேராதிருக்கும்படி வரம் பெற்றனை. இப்பொழுது பலிஷ்டர்களும் மஹாபராக்ரமசாலிகளுமாகிய மனுஷ்யர்களும் வானரர்களும் கரடிகளும் கோண்டை முயல்களும் பெரிய ஸைன்யத்துடன் இவ்விடம் வந்து கர்ஜிக்கின்றனர். உனக்கு இவரிடத்தில் மரணம் விளையாதபடி வரமில்லை. சத்ருக்களின் வரவைப் பற்றியேயன்று, திவ்ய அந்தரிக்ஷ பௌமங்களென்னும் நானுவிதமுடையவைகளும் ஒவ்வொருவிதத்திலும் பலவகையோடு கூடினவைகளும் பயங்கரங்களுமாகிய உத்பாதங்களைப் பார்த்தும் ஸமஸ்த ராக்ஷஸர்களுக்கும் விநாசம் விளையுமென்று ஊஹிக்கின்றனன்.

விகார உருவமுடையவைகளும் பயத்தைவிளைவிப்பவை களுமாகிய மேகங்கள் க்ரூரமான கர்ஜனைகளைச்செய்து கொண்டு லங்கை முழுவதும் உஷ்ணமான ரக்தங்களைப் பெய்கின்றன. குதிரை முதலிய வாஹனங்கள் ரோதனஞ் செய்துகொண்டு கண்ணீர்களைப் பெருக்குகின்றன. த்வ ஜங்களெல்லாம் தூள்படிந்து வர்ணம் மாறி முன்போல் ப்ரகாசியாதிருக்கின்றன. துஷ்டஸ்வபாவமுடைய நரி களும் கழுகுகளும் லங்கையில் புகுந்து எப்பொழுதும் பயங்கரமான சப்தங்களைச் செய்துகொண்டு கூட்டங் கூட்டமாய்க் கூடுகின்றன. கறுத்த பெண்டிர்கள் வெளுத்த பற்கள் துலங்கப்பெற்று விபரீதமான பேச்சுக்களைப் பேசுவதும் க்ருஹங்களிலுள்ள வஸ்துக் களைத் திருடுவதும் இடி இடியென்று சிறிப்பதுமாகி ஸ்வப்னங்களில் புலப்படுகின்றனர். வீடுகளில் பலிகர்மங் களுக்காகச் செய்யப்படும் ஹவிஸ்ஸுக்களை நாய்கள் நுழைந்து தின்று போகின்றன. பசுக்களிடம் கழுதை கள் பிறக்கின்றன. பெருச்சாளிகள் கீரிப்பிள்ளைகளுடன் உலாவுகின்றன. பூனைகள் புலிகளுடனும், பன்றிகள் நாய்களுடனும் கலந்திருக்கின்றன. கின்னரர்கள் ராக்ஷ ஸர்களோடும், ராக்ஷஸர்கள் உத்பாதத்தினுலுண்டா கிற மனிதர்களோடும் கலந்திருக்கின்றனர். வெளுத் திருப்பவைகளும் சிவந்த பாதங்களுடையவைகளுமா கிய புறுக்கள் தெய்வத்தினுல் தூண்டப்பட்டு ராக்ஷ ஸர்க்கு விநாசம் விளையுமென்று தெரிவித்துக்கொண்டு திரிகின்றன. வீடுகளில் இனிமையாகப்பேசும் பொருட்டு வளர்க்கப்பட்டிருக்கின்ற சாரிகையென்னும் பறவைகள் இனிதாகப் பேசுவதைவிட்டு இப்பொழுது வீசீ கூசீ யென்று கொடுமையாகக் கூவுகின்றன. பக்ஷிகளும் ம்ரு கங்களும் ஒன்ருேடொன்று சண்டைசெய்து ஓடிப்

போய் மீளவும் சண்டைசெய்யவிரும்பிக் கூட்டங்கூடித் தமது சத்ருக்களின் மேல் வேகமாக ஓடிவருகின்றன; மற்றும், ஸூர்யனுக்கு எதிர்முகமாக ரோதனஞ் செய்கின்றன. பயங்கரமான உருவமுடையவனும் அங்கங்கள் குறைந்திருக்கப் பெற்றவனும் மொட்டைத் தலையனும் கருமையும் பொன்னிறமும் கலந்திருக்கையால் பார்க்க இனிதாயிராத சரீரத்தின் நிறமுடையவனுமாகிய ம்ருத்யு ராக்ஷஸராது க்ருஹங்களையெல்லாம் காலை மாலை வேளைகளில் நுழைந்து பார்ப்பதுபோல் புலப்படுகின்றனன். இவைகளும் இன்னம் இவற்றைப் போன்ற வேறு துஷ்ட நிமித்தங்கள் பலவும் தோற்றுகின்றன.(இந்த ராமனை மானிட உருவம் பூண்டவிஷ்ணு தேவனென்றே யாம் நினைக்கின்றனம். ஸமுத்ரத்தில் மிகவும் அற்புதமான ஸேதுவைக்கட்டின த்ருடபராக்ரமனாகிய இந்த ராமன் கேவலம் ஓர் மனிதனாயிருப்பவனல்லன். ஆகையால் ராஜனாகிய அந்த ராமனுடன் ராவணா! நீ ஸந்தி செய்துகொள்வாயாக.) ஆகையால் இதை அறிந்து மற்றைக் கார்யங்களை நன்றாக ஆலோசித்து நிச்சயஞ் செய்துகொண்டு இனிமேல் என்ன செய்யத் தகுமோ அதைச் செய்வாயாக' என்றனன். உத்தமர்களெல்லோரினும் உத்தமமான பௌருஷமுடையவனும் மஹாபலிஷ்டனுமாகிய அம்மால்யவான் அவ்வார்த்தையை அந்த ஸபையிலுள்ளவர் அனைவர்க்கும் கேட்பித்து, ராவணனுடைய இங்கித ஆகாராதிகளை (மனோபாவத்தையும் அதை அறிவிக்கிற சரீர சேஷ்டை முதலியவற்றையும்) நன்றாக அறிந்து அவன் மனம் திரும்பாதென்று பரீக்ஷித்துத் தெரிந்து கொண்டு, அப்பால் உபதேசிப்பதை விட்டு மௌனமாயிருந்தனன். முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ராவணன் லங்காநகர ஸம்ரக்ஷணத்திற்காக ஏற்பாடுகள் செய்தல்.

துஷ்டபுத்தியாகிய ராவணன் ம்ருத்யுவின் வசம் அகப்பட்டுமால்யவான் ஹிதமாகச்சொன்ன அவ்வார்த்தையைக் கேட்கப் பொறுதிருந்தனன். அனந்தரம் அவன் கோபத்திற்குட்பட்டு முகத்தில் புருவத்தை நெரித்துக்கொண்டு அவ்வார்த்தையைக் கேட்கப் பொறுமையால் கண்களைச் சுழலத்திருப்பிக்கொண்டு அம்மால்யவானைப் பார்த்து 'நீ சத்ருபக்ஷத்தை அனுஸரித்தே அவர்க்கு அனுகூலமாக, நான் ஹிதமாக நினைப்பேனென்னும் அபிப்ராயத்துடன் ஹிதமல்லாத பருஷவசனத்தைப் பேசினை. ஆயினும், அது என்செவியில் ஏறவில்லை. ராமன் ஒரு மனுஷ்யனேயாகையால் ஜாதியாலேயே துர்ப்பலன்; தீனனாகையால் ஸ்வபாவத்தாலும் பலஹீனன்; ஸஹாயமற்றவன்; குரங்குகளை ஸஹாயமாகப்பற்றியிருப்பவனாகையால் நல்ல பலமில்லாதவன்; தந்தையால் துரத்தப்பட்டு வந்தவனாகையால் ராஜ்யமற்றவன்; ஆனதுபற்றியே அரண்யங்களில் திரிகின்றவன். இப்படிப்பட்ட ராமனை ஸமர்த்தனென்று நினைக்கின்றனையே! அதற்குக் காரணம் யாது? நானோ ராக்ஷஸர்களுக்கு அதிபதி; தேவதைகளுக்கும் பயத்தை விளைவிப்பவன்; ஸமஸ்தவித பராக்ரமங்களாலும் சிறிதும் குறைவற்றிருக்கின்றனன். இப்படிப்பட்ட என்னைக் குறைந்தவனாக மொழிந்தனையே! அது எதனால்? உன் ராக்ஷஸ ஜாதியர்களில் வீரன் ஒருவன் இருக்கிறானென்னும் த்வேஷத்தினாலேயோ? சத்ருக்களிடத்திலுள்ள பக்ஷபாதத்தினாலேயோ? அல்லது சத்ருக்கள் உன்னை உத்ஸாஹப்படுத்துகையாலேயோ? நீ என்னை அங்ஙனம் பருஷவசனங்களைப் பேசிப் பழித்தனையென்று

எனக்குச் சங்கை உண்டாகிறது. சத்ருக்களின் ப்ரோத்ஸாஹனம் (தூண்டுதல்) இல்லையாயின் பண்டிதனும் சாஸ்த்ர தத்வங்களை அறிந்தவனுமாகிய எவன்தான், ப்ரபாவங்கள் அமைந்தவனும் பரிபக்வமான (யுக்தாயுக்தங்களை அறியுந்திறமை நிறையப்பெற்ற) புத்தியுடையவனுமாகிய ஒருவனைக்குறித்து இங்ஙனம் பருஷ வசனங்களைப் பேசுவான்? நீ சொன்னது யதார்த்தமாகவே இருக்குமாக. ஆயினும், நான் தாமரைமலரைத் துறந்திருக்கும் லக்ஷ்மீதேவியைப் போன்ற ஸீதையை வனத்தினின்றுங் கொண்டுவந்து மறுபடியும் ராமனுக்குப் பயந்து ஏன் கொடுப்பேன்? அடையக்கூடாத வஸ்துவைப் பெற்றும் கைவிடுவார் உண்டோ? இனி ராமன் கோடி வானரர்களால் சூழப்பெற்று ஸுக்ரீவனோடும் லக்ஷ்மணனோடும் கூடி இங்கு என்னால் அடிபட்டு முடிவதைச் சில தினங்களுக்குள்ளேயே காண்பாய். எவனோடு தேவதைகளுங்கூட த்வந்த்வ யுத்தத்தில் நிற்க வல்லவரல்லரோ, அப்படிப்பட்ட ராவணன் ராமயுத்தத்தில் ஏன் பயப்படுவான்?' என்று இவ்வளவுஞ் சொல்லி, அப்பால் 'என் ஹிதத்தில் மிக விருப்பமுற்றவனும் வயது சென்றவனுமாகிய மாதாமஹனை இங்ஙனம் என் பருஷம் பேசினேன்' என்னும் பச்சாத்தாபத்துடன் சொல்லத்தொடங்கி 'ராமனே வந்து பயப்படுத்தினும் படுத்தட்டும். பயமே அன்று. என்னை இருதுண்டுகளாகத் துண்டிக்கினும் துண்டிக்கட்டும். நான் ராமனுக்கே அன்று, மற்ற எப்படிப்பட்டவனுக்கும் வணங்கமாட்டேன். 'இது நீதிக்குப் பொருந்தாது' என்கிறாயோ? ஆயினும், இது எனக்கு ஸ்வபாவத்திற் பிறந்த தோஷமே. 'அது தோஷமென்று ஒப்புக்கொள்வாயாயின் அதைத் துறக்கலாகாதா' என்னில்—ஸ்வ

பாவத்தைக் கடக்கமுடியாதல்லவா? வேம்பு தித்திக்குமோ? ராமன் ஸமுத்ரத்தில்ஸேது கட்டுகையாலன்றோ, உனக்கு பயம் விளைந்தது. இந்தச் சிறிய ஸமுத்ரத்தில், எப்படியோ குறைக்ஷாத்தின்படி ஸேதுவைக் கட்டினனாயினும், அதில் என்ன ஆச்சர்யம்? அது ஓர் ஆச்சர்யமோ? அதைப்பற்றி நாம் பயப்படவேண்டியதில்லை. வானர ஸைன்யத்துடன் ஸமுத்ரத்தைத் தாண்டி வந்திருக்கின்ற ராமன் மாத்ரம் ப்ராணனுடன் திரும்பிப் போகிறதில்லை. இது உண்மையே. இங்ஙனம் சபதஞ் செய்கிறேன்' என்றனன். இங்ஙனம் மொழிகின்ற ராவணன் அஹங்காரத்தினால் கோபித்திருக்கிறானென்று மால்யவான் தெரிந்துகொண்டு தான் செய்த உபதேசம் பயன்படாமைக்கு லஜ்ஜை அடைந்து மறுமொழி ஒன்றும் பேசவில்லை. மால்யவான் மர்யாதையின்படி ராவணனுக்கு ஜயம் உண்டாகவேண்டுமென்று ஆசீர்வாதஞ் செய்து விடைபெற்றுக்கொண்டு தன் வீட்டிற்குப் போயினன். அப்பால் ராவணன் மந்த்ரிகளுடன் கூடி மேற் செய்யவேண்டியதை ஆலோசித்து நிச்சயித்துக் கொண்டு லங்கைக்கு நிகரில்லாத காப்பை ஏற்பாடு செய்தனன். அவன் கிழக்கு வாசற்படியில் ப்ரஹஸ்தனையும், தெற்கு வாசற்படியில் மஹாவீர்யமுடைய மஹாபார்ச்வனையும் அத்தகைய மஹோதரனையும், மேற்கு வாசற்படியில் மிகுந்த மாயையுடையவனும் பல ராக்ஷஸர்களால் சூழப்பட்டவனுமாகிய இந்த்ரஜித்தையும் பாதுகாத்திருக்கும்படி ஆஜ்ஞாபித்தனன். அவன் பட்டணத்தின் வடக்கு வாசற்படியில் சுகஸாரணர்களை இருக்கும்படி நியமித்துத் தானும் அங்கேயே இருப்பதாக மந்த்ரிகளோடு மொழிந்தனன். பட்டணத்தின் இடையிலுள்ள குல்மத்தில்

வீர்யமும் பராக்ரமமும் மிகுந்திருக்கப்பெற்ற விரூபாக்ஷனென்னும் ராக்ஷஸனை அனேக ராக்ஷஸர்களுடன் இருக்கும்படி ஏற்பாடு செய்தனன். ராக்ஷஸ ஸ்ரேஷ்டனாகிய ராவணன் இங்ஙனம் லங்காபுரிக்கு ரக்ஷையை ஏற்பாடுசெய்து ம்ருத்யுவால் தூண்டப்பட்டுத் தனக்குள் தான் ப்ரயோஜனம் கைகூடப் பெற்றதாக நினைத்திருந்தனன். அப்பால் அந்த ராவணன் லங்காபுரத்திற்குப் பரிபூர்ணமாக ரக்ஷை செய்யும்படி ஆஜ்ஞாபித்து மந்த்ரிகளுக்கு விடை கொடுக்கையில், அவர்கள் எல்லோரும் அவனை 'ஜய விஜயீபவ' என்னும் ஆசீர்வாதங்களால் பூஜித்துத் தந்தமது பவனங்களுக்குப் போயினர். ராவணனும், ஸமஸ்த ஸம்பத்துக்களும் பெருகப்பெற்று மிகப் பெருமையுடையதான அந்தப்புரத்திற்குப் போயினன்.

முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---


ராமன் வானர ஸைன்யத்திற்கு ரக்ஷை ஏற்பாடுசெய்தல்.


அந்த ராமலக்ஷ்மணர்களும் வானரராஜனாகிய ஸுக்ரீவனும் வாயுகுமாரனான ஹனுமானும் கரடிகளில் தலைவனாகிய ஜாம்பவானும் ராக்ஷஸஸ்ரேஷ்டனாகிய விபீஷணனும் வாலிகுமாரனாகிய அங்கதனும் சரபனும் ஸுஷேணனும் அவனது பந்துக்களும் மைந்தனும் த்விவிதனும் கஜனும் கவாக்ஷனும் குமுதனும் நலனும் பனஸனும் மற்றுமுள்ளவரும் சத்ருவின் தேசமாகிய லங்காத்வீபத்தைச் சேர்ந்து எல்லோரும் கூடி ஆலோசிக்கத் தொடங்கி 'ராவணன் பரிபாலித்து வருவதும் முன்பு ஹனுமான் சொன்னது

மாகிய லங்காபுரி இதோ புலப்படுகின்றது. இந்தப் பட்டணம் தேவாஸுரர்களுக்கும் உரகர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் ஜயிக்கமுடியாதது. இதில் ராக்ஷஸர் தலைவனுகிய ராவணன் எப்பொழுதும் பிரியாதிருக்கின்றனன். ஆகையால் நமக்கு ஜயஸித்தி உண்டாவதையே முக்யமாகக்கொண்டு அதற்காக நாம் செய்யவேண்டிய கார்யங்களை நிச்சயிப்பதற்கு நன்கு ஆலோசனை செய்வீர்கள்' என்று மொழிந்தனர். அங்ஙனம் அவர்கள் சொல்லுகையில், ராவணன் தம்பியாகிய விபீஷணன் அவர்களைப் பார்த்து எல்லோர்க்கும் ஸ்பஷ்டமாகத் தெரியும்பொருட்டு ஸ்வதேசபாஷா பதங்களைவிட்டு அழகிய ஸம்ஸ்க்ருத பதங்களுடன் மிகுந்த பொருளடக்கமுடைய வசனத்தை மொழியத் தொடங்கி, 'என் மந்த்ரிகளான நலன் சரபன் ஸம்பாதி ப்ரகஸன் என்பவர் லங்காபுரிக்குப் போய்த் திரும்பி இவ்விடம் வந்தனர். அவர்களெல்லோரும் பக்ஷிரூபந் தரித்துப் பகைவரது ஸேனையில் புகுந்து, அதில் நகர ரக்ஷணத்திற்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளை யெல்லாம் பார்த்து வந்திருக்கின்றனர். ராமா! அவர்கள் துர்ப்புத்தியாகிய ராவணன் நகர ரக்ஷணத்திற்காக நடத்தியிருக்கும் ஏற்பாடுகளெல்லாவற்றையும் சொல்லினர். அதையெல்லாம் நான் உள்ளபடியே சொல்லுகிறேன்; கேட்பாயாக. ப்ரஹஸ்தன் தனது ஸைன்யத்துடன் கீழ்வாசற்படியில் இருக்கின்றனன். மஹாவீர்யசாலிகளான மஹோதர மஹாபார்ஸ்வர்களிருவரும் தென்வாசற்படியில் இருக்கின்றனர். ராவணனது குமாரனுகிய [1] இந்த்ராஜித்து, பட்டஸங்களையும்

---

1. இவன் மேகநாதனென்பவன்; இந்த்ராஜித்தென்னும் இப்பெயர் இந்த்ரனை ஜயித்தமையாலுண்டான காரணப்பெயர்.

கத்திகளையும் தனுஸ்ஸுக்களையும் சூலங்களையும் இரும்புத்தடிகளையும் மற்றும் பல ஆயுதங்களையும் தரித்தப்ரதான ராக்ஷஸர்கள் பலரோடுங்கூடி மேல் வாசற்படியில் இருக்கின்றனன். ராவணன் [1]மனத்தில் சிறிதும் சலிக்காமல், ஆயுதங்களை ஏந்தின பலவாயிரம் ராக்ஷஸர்களும் பல ப்ரதான ராக்ஷஸர்களும் சூழப் பெற்றுத் தானே லங்கையின் வடக்கு வாசற்படியில் இருக்கின்றனன். விரூபாக்ஷனே என்றால், சூலங்களையும் கத்திகளையும் தனுஸ்ஸுக்களையும் தரித்திருக்கின்ற பெரிய ஸைன்யத்தோடு கூடி ப்ரதானமான பல ராக்ஷஸர்களால் சூழப்பட்டு நடு குல்மத்தில் இருக்கின்றனன். லங்கையில் இவ்விதமாக ஏற்பாடு செய்யப்பெற்ற இந்த ஸைன்யங்களை என் மந்த்ரிகள் எல்லோரும் போய்ப் பார்த்து மீளவும் சீக்ரமாக இவ்விடம் வந்தனர். யானையின்மேல் இருந்து சண்டை செய்பவர் ஆயிரமும், ரதத்தில் இருந்து யுத்தஞ் செய்பவர் பதினாயிரமும், குதிரை வீரர்கள் இருபதினாயிரமும், காலாட்கள் எத்தனையோ கோடிகளுமாக இங்ஙனம் பராக்ரமசாலிகளும் பலிஷ்டர்களும் யுத்தத்தில் க்ரூரருமாகிய இந்த ராக்ஷஸர்கள் ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுக்குப் பணிவிடை செய்துகொண்டு அந்தரங்கமாயிருப்பார்கள். ராஜனே! இந்த ராக்ஷஸர்களில் ஒவ்வொருவனுக்குப் பத்துலக்ஷம் பரிஜனங்கள் இப்பொழுது யுத்தத்திற்காக வருவார்கள்' என்றனன்.

---

1. இங்கு 'ப்ரமஸம் விக்ந:' என்பது மூலம். 'பரம் அஸம் விக்ந:' என்று பதம் பிரித்து 'மனத்தில் சிறிதும் சலிக்காமல்' என்று வ்யாக்யானஞ் செய்திருக்கிறார். 'பரம ஸம்விக்ந: பரமஸம் விக்ந: என்று ஒரேபதமாகக் கொண்டு 'மிகவும் மனக்கலக்கமுற்று' என்றும் சிலர் கூறுவர்.

மஹாபாஹுவாகிய விபீஷணன் தனக்கு மந்த்ரிகள் சொன்ன இந்த லங்கா வ்ருத்தாந்தத்தை யெல்லாம் இங்ஙனம் ராமனுக்குச் சொல்லி, அவனுக்குத் தன் மந்த்ரிகளான அந்த ராக்ஷஸரைக் காண்பித்தனன். அங்ஙனம் காண்பித்த பின்பு லங்கையிலுள்ள வ்ருத்தாந்தத்தைத் தன் மந்த்ரிகள் மூலமாகவும் ராமனுக்குத் தெரிவித்தனன். மஹாபாக்யலக்ஷ்மீ விலாஸம் பொருந்தினவனும் ராவணனுக்குத் தம்பியுமாகிய விபீஷணன் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய அந்த ராமனைப் பார்த்து அவனுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி, 'ராமா! முன்பு ராவணன் குபேரனோடு யுத்தஞ் செய்யப் போனபோது பிறரை அவமதிக்குந் தன்மையாகிற பராக்ரமத்தினாலும் யுத்தத்தில் கலக்கமுறாதிருக்குந் தன்மையாகிற வீர்யத்தினாலும் ப்ரதாபத்தினாலும் தைர்யத்தின் மிகுதியாலும் கொழுப்பினாலும் துர்ப்புத்தியுடைய ராவணனுக் கொப்பான அறுபது லக்ஷம் ராக்ஷஸர் அவனைப் பின்றொடர்ந்து போயினர். இங்ஙனம் சத்ருபலத்தை வர்ணிக்கிறேனென்று என்மேல் கோபங் கொள்ளவேண்டாம். சத்ருக்களை அழிக்கும்பொருட்டு உனக்கு ரோஷத்தைக் கிளப்புகிறேனன்றிச் சத்ருபலத்தை வர்ணித்து உன்னை பயப்படுத்துகிறேனல்லேன். நீ வீர்யத்தினால் தேவதைகளையுங்கூட அடக்கவல்லவன். நீயும் பெரிய ஸைன்யத்தினால் சூழப்பட்டிருப்பவன். அங்ஙனம் ராக்ஷஸர்கள் பிரிந்திருப்பதுபோல், நீயும் உன் வானர ஸைன்யத்தை நான்கு வகையாகப் பிரித்து ராவணனைக்கொல்வாயாக' என்றனன். ராவணனுடைய தம்பியாகிய விபீஷணன் இங்ஙனம் சொல்லுகையில், ராகவன் சத்ருக்களை அழிக்கும்பொருட்டு அவன்

செவியிற் படும்படி 'வானரர் திலகனுகிய நீலன் பல வானரர்களோடு கூடி லங்கையின் கீழ்வாசலில் சென்று ப்ராஹஸ்தனுடன் சண்டை செய்வானுக. வாலியின் குமாரனுகிய அங்கதன் பெரிய வானரஸேனையுடன் தெற்கு வாசற்படியில் இருந்து மஹோதர மஹா பார்ஸ்வர்களை ஹிம்ஸிப்பானுக. ஹனுமான் அளவில் லாத பலம் முதலியவை உடையவனுகையால் இந்த்ர ஜித்துக்கு அவனே தகுந்த எதிராளி. ஆகையால் அவ்வாயுகுமாரன் பல வானரர்களால் சூழப்பட்டு மேற்கு வாசற்படியில் தகைந்து யுத்தஞ் செய்வானுக. தைத்ய தானவ ஸமூஹங்களுக்கும் மஹானுபாவர் களான ரிஷிகளுக்கும் தீங்கை விளைவிப்பதில் மிகுந்த ப்ரீதியுடையவனும் அற்ப புத்தியுடையவனும் ப்ரஹ்ம தேவன் கொடுத்த வரபலத்துடன் கூடி ப்ரஜைகளுக்கு வருத்தம் விளைவித்துக்கொண்டு ஸமஸ்த லோகங்களி லும் திரிகின்றவனும் ராக்ஷஸர் தலைவனுமாகிய ராவணனை நானே நேரில் வதிக்கும்படி நிச்சயித்தனன். ஆகையால் அந்த ராவணன் ஸைன்யங்களோடு கூடி இருக்கிற பட்டணத்து வடக்கு வாசற்படியை நானே லக்ஷமணனுடன்கூடித் தகைந்து யுத்தஞ் செய்கின்ற னன். பலிஷ்டனும் வானர ராஜனுமாகிய ஸுக்ரீவனும் மஹாவீர்யமுடைய ஜாம்பவானும் ராவணன் தம்பி யாகிய விபீஷணனும் ஆகிய இம்மூவரும் ராவண னிருக்கும் வடக்கு வாசலுக்கும் இந்த்ரஜித்திருக்கிற மேற்கு வாசலுக்கும் இடையில் ஹனுமானுக்கும் எனக்கும் ஸஹாயம் செய்யும் ஸேனையாயிருப்பார் களாக. [1] வானரர்கள் இப்பொழுது இருக்குமாறு இனி

1. 'வானரர்கள் காமரூபிகளாகையால் தமக்கு இஷ்டமான உருவங்களை எடுத்து யுத்தஞ்செய்கையில் ராக்ஷஸர்களும் காமரூபிக

யுத்தத்தில் மனுஷ்ய உருவந் தரித்திருக்கலாகாது. யுத்தத்தில் நமது வானரஸைன்யத்தில் இந்த ஸங்கேதம் மாருதிருக்கவேண்டும். அது ஏனென்னில், இந்த நமது ஜனங்களில் நம்முடையவரென்று தெரிவதற்கு வானரர்களாயிருக்கையே நமக்கு அடையாளமாகும். இதோ நானும் மஹாதேஜஸ்வியாகிய என் தம்பி லக்ஷ்மணனும் மந்த்ரிகள் நால்வருடன் கூடித் தான் ஐந்தாமவனும் என் ஸ்னேஹிதனுமாகிய இவ் விபீஷணனும் ஆகிய இவ்வெழுவர் மாத்ரம் மனுஷ்ய உருவங்களோடேயே பகைவருடன் யுத்தஞ் செய்கின்ருேம்' என்றனன். சிறந்த மதியுடைய ராமன் இங்ஙனம் கார்யஸித்தியின் பொருட்டு விபீஷணனுடன் சொல்லி ஸுவேலபர்வதத்தின் தாழ்வரை மிகுதியும் அழகாயிருப்பதைக் கண்டு அதன்மேல் ஏறும் நினைவு மாத்ரமேயன்றி மற்றை நினைவொன்று மில்லாதவனுயினன். அனந்தரம் மஹாபுத்தியுடையவனும் மஹாதீரனுமாகிய ராமன் நிரம்பவும் ஸந்தோஷமுற்று மிகுதியும் பெரிய வானர ஸைன்யத்தினுல் ஸுவேல

---

ளாகையால் நினைத்த உருவங்களை எடுத்து யுத்தஞ்செய்வார்கள். ஆகையால் அப்பொழுது நம்முடையவர் பிறர் என்று பிரித்தறிய முடியாதிருக்கும். வானரரூபம் அற்பமாகையால் அதை ராக்ஷஸர்கள் கைப்பற்றமாட்டார்களாகையால் வானரர்கள் எல்லோரும் தமது வானர உருவத்தோடேயே யுத்தஞ்செய்யவேண்டும். வானரனுயிருத்தலே நம்முடையவனென்பதற்கு அடையாளம்' என்று ராமன் ஸங்கேதஞ் செய்வதாகத் தெரிகின்றது. அப்பொழுது ராமன் மனுஷ்ய உருவத்தை எடுக்கலாகாதென்று நிஷேதிக்கையால் அதற்கு முன்பு வானரர்கள் மனுஷ்யரூபந் தரித்திருந்தார்களென்றுந் தெரிகிறது. விபீஷணுதிகள் மனுஷ்யரைப்போன்ற உருவமுடையவராகையால் மனுஷ்யராக எண்ணப்பட்டமை தோற்றுகிறது.

பர்வதத்தின் தாழ்வரை நிலங்கள் முழுவதையும் மறைத்துக்கொண்டு சத்ருக்களை வதிக்கும் நினைவு மேலெழப்பெற்று லங்கையின் ஓரிடமாகிய ஸுவேலபர்வதத்திற்குப் போயினன். முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸ்ரீராமன் லங்கையைப் பார்க்கும் பொருட்டு ஸுவேல பர்வதத்தின் மேலேறுதல்.

ராமன், லக்ஷ்மணன் பின்றொடர்ந்து வரப்பெற்று, அங்ஙனம் ஸுவேல பர்வதத்தின்மேல் ஏற நினைத்து, தர்மங்களை உணர்ந்தவனும் தன்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனும் மந்த்ராலோசனைகளை அறிந்தவனும் கார்யகதிகள் தெரிந்தவனுமாகிய ஸுக்ரீவனையும் அத்தகைய விபீஷணனையும் பார்த்து இனிமையான உத்தம வசனங்களைச் சொல்லத் தொடங்கி 'நாம் எல்லோரும், பலவகையான கைரிகதாதுக்கள் பலவும் நிறைந்திருக்கிற பர்வதஸ்ரேஷ்டமாகிய இந்த ஸுவேல பர்வதத்தின்மேல் ஆரோஹித்து இன்றிரவெல்லாம் இதன்மேல் வஸித்திருப்போம். மற்றும், துர்ப்புத்தியுடையவனுகி மரணம் பெறுதற்காக என் பார்யையை அபஹரித்தவனும், தர்மம் தெரியாமல் தர்மசாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட தன் குலாசாரத்தைச் சிறிதும் பொருள் செய்யாமல், தன் குலத்தின் பெருமையையும் நினைக்காமல் மனம் போனபடியே திரியுந்தன்மையுடையவனும் ராக்ஷஸத்தன்மையில் முதிர்ந்தவனுமாகிய ராவணனுக்கு வாஸஸ்தானமாகிய லங்காபுரியைக் காண்போம். அந்த ராவணன் கேவல ராக்ஷஸர்க்குள்ள நீசபுத்தியைக்கொண்டு தன் குலாதிகளைப்

பாராமல் பரதாராபஹரண மென்கிற மிகுநிந்தைக் கிடமான இந்தக் கார்யத்தைச் செய்தானல்லவா? ராக்ஷஸாதமனாகிய அந்த ராவணனுடைய பெயரைச் சொன்ன மாத்ரத்திலேயே எனக்கு மிகுதியும் ரோஷம் கிளம்பி வருகின்றது. 'ஆனால் அவனொருவனை மாத்ரம் கொல்வோம்' என்றால், அந்த ஒரு நீசனுடைய அபராதத்தைப் பற்றி இனி ராக்ஷஸர்களெல்லோரையும் கொல்லவேண்டுமென்று தோற்றுகிறது. 'ஒருவனுடைய தோஷத்திற்காக மற்றொருவனை ஏன் கொல்லவேண்டும்' என்றால்—ஒருவன் மாத்ரமே ம்ருத்யுபாசத்திற்குட்பட்டுப் பாபகார்யஞ் செய்வான்; அந்த நீசனுடைய அபராதத்தால் அவனைச் சேர்ந்தவர் அனைவரும் நாசமடைவார்கள்' என்றனன். ராமன் ராவணன்மேல் கோபத்தினால் இங்ஙனஞ் சொல்லிக்கொண்டு அற்புதமான தாழ்வரைகளையுடைய ஸுவேல பர்வதத்தில் அன்றிரவு வஸித்திருக்கும்பொருட்டு ஆரோஹித்தனன். லக்ஷ்மணனும் பராக்ரமத்தை நிறைப்பதில் மனவிருப்பமுற்றவனாகி மிகுதியும் மேலான வில்லையும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு மிகுந்த மனவூக்கத்துடன் ராமனைப் பின்றொடர்ந்து போயினன். அப்பால் ஸுக்ரீவனும் அவன் மந்த்ரிகளும் விபீஷணனும் லக்ஷ்மணனைப் பின்றொடர்ந்து மலையின்மேல் ஏறினர். ஹனுமான் அங்கதன் நீலன் மைந்தன் த்விவிதன் கஜன் கவாக்ஷன் கவயன் சரபன் கந்தமாதனன் பனஸன் குமுதன் ஹரன் யூதபதியாகிய ரம்பன் ஜாம்பவான் ஸுஷேணன் மிகுந்த மதியுடைய ருஷபன் மஹாதேஜஸ்வியாகிய துர்முகன் சதவலி முதலான வீரர்களும் மற்றுமுள்ள பல வானரர்களும் வாயுவேகம் போன்ற வேகமுடையவரும் பர்வதங்களில் எப்பொழு

தும் திரிந்துகொண்டிருப்பவருமாகையால் ராமனேறி யிருக்கிற அந்த ஸுவேல பர்வதத்தின்மேல் கூட்டங் கூட்டமாக ஆரோஹித்தனர். அனந்தரம் அந்த ராமாதிகள் சீக்ரமாகவே அந்த ஸுவேல பர்வதத்தில் நாற்புறத்திலும் ஆரோஹித்து த்ரிகூட பர்வதத்தின் சிகரத்தில் ஆகாயத்தில் தொங்குவதுபோல் புலப்படு கின்ற லங்காபுரத்தைக் கண்டனர். வானரவீரர்கள் அனைவரும் சிறந்த ரமணீயமான த்வாரங்களையுடை யதும் ப்ராகாரங்களால் (கோட்டைகளால்) மிகுதியும் விளக்கமுற்றிருப்பதும் ராக்ஷஸர்களால் நிறைந்தது மாகிய லங்கையைக் கண்டனர். அப்பொழுது கறுத்த ராக்ஷஸர்கள் ப்ராகாரத்தின் குறடுகளைச்சுற்றி நின்று, அப்பொழுது கட்டப்பட்ட மற்றொரு ப்ராகாரம்போல் ப்ரகாசிக்கையில், அதை அவ்வானரோத்தமர்கள் கண்டனர். அங்கு அவ்வானரர்களெல்லோரும் அந்த ராக்ஷஸர்களைக் கண்டு யுத்தஞ் செய்யக் குதூஹல முற்று ராமன் பார்த்துக் கொண்டிருக்கையில் நானா விதமான ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். அனந்தரம் ஸூர்யன் ஸந்த்யையின் ஒளியால் சிவந்தவனாகி அஸ்தமய பர்வதத்தை அடைந்தனன். ராத்ரியும் [1] பூர்ண சந்த்ரனுடைய ப்ரகாசத்தினால் மிகுதியும் விளக்கமுற்றுப் புலப்பட்டது. அப்பால் வானர

---

1. இங்கு 'பூர்ணசந்த்ரப்ரதீப்தாச க்ஷபா ஸமபிவர்த்ததே' என்பது மூலம். இரவில் பூர்ணிமையினன்று ஸுவேல பர்வதத்தில் ஏறுதலும், மற்றைநாள் ப்ரதமையினன்று யுத்தாரம்பமென்றும் சொல்லுவார்கள். 'பூர்ணசந்தீரப்ரதீபாச' என்கிற பாடத்தைக் கொண்டு பூர்ணசந்த்ரன் போன்ற தீபமுடையதென்றும் பொருள் கூறலாகும். வானரஸேனையிலும் வெளிச்சத்திற்காக விளக்கு ஏற்றி யிருக்கக்கூடும். இங்ஙனம் கோவிந்தராஜர்.

ஸேனைக்கு நாதனாகிய அந்த ராகவன் விபீஷணனால் புகழ்ந்து பூஜிக்கப்பட்டவனாகி லக்ஷ்மணனுடன் கூடி வானரயூகபதிகள் சூழ்ந்து பணியப்பெற்று அன்றிரவு ஸுவேல பர்வதத்தின் றனியில் ஸுகமாக இருந்தனன்.
முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஸ்ரீராமன் லங்காபுரத்தைக் காணுதல்.

வீரர்களான அவ்வானரோத்தமர்கள் அங்ஙனம் அன்றிரவெல்லாம் ஸுவேல பர்வதத்தில் இருந்து பொழுது விடிந்தவுடனே லங்கையிலுள்ள கேவல வனங்களையும் உத்யான வனங்களையும் கண்டனர். மேடுபள்ளமில்லாமல் ஸமமாயிருப்பவைகளும் (கொடிய ம்ருகங்களில்லாமல்) நிர்ப்பயமாக ஸஞ்சாரஞ் செய்யும்படி ரமணீயங்களாயிருப்பவைகளும் செழிப்பினால் நிகுநிகுப்புற்றிருப்பவைகளும் விஸ்தாரமும் நீளமும் அமைந்து கண்களை இழுக்கின்றவைகளுமாகிய அந்த லங்கையிலுள்ள அரண்யங்களையும் உத்யான வனங்களையும் கண்டு அவ்வானரர்கள் ஆச்சர்யமுற்றனர். அந்த ஸுவேல பர்வதம் செண்பகச் செடிகளும் அசோக வ்ருக்ஷங்களும் புன்னைமரங்களும் மாமரங்களும் பனைமரங்களும் நிறைந்து, பச்சிலை மரங்களின் காடுகளால் மறைக்கப்பட்டதும் நாககேஸர வ்ருக்ஷங்கள் வரிசை வரிசையாயிருக்கப் பெற்றதுமாயிருந்தது. மற்றும் அவ்விலங்கை நகர், சீதாளமரங்களாலும் மருத மரங்களாலும் கடம்பு மரங்களாலும் பூத்த ஏழிலைப்பாலை மரங்களாலும் மஞ்சாடி மரங்களாலும் கோங்கு மரங்களாலும் பாதிரி மரங்களாலும் நாற்புறங்களிலும் விளக்கமுற்றிருந்தது. மற்றும், அது

நுனிகளில் புஷ்பித்திருப்பவைகளும் கொடிகள் பின்னிக்கொண்டிருக்கப் பெற்றவைகளும் அற்புதமான புஷ்பங்களுடையவைகளும் சிவந்து மிகுதியும் மேன்மை யமைந்த பல்லவங்கள் (தளிர்கள்) நிறைந்தவைகளும் பற்பலவிதங்களுமான: பாரிஜாதம் முதலிய திவ்ய வ்ருக்ஷங்களாலும் தேவேந்த்ரனது நகரமாகிய அமரா வதிபோல் மிகுதியும் அழகுற்றிருந்தது. அன்றியும், அந்த லங்காநகரம் கறுத்த பசும்புல் தரைகளாலும் விசித்ரங்களான உத்யான வனங்களின் வரிசைகளா லும் அழகாயிருந்தது. அந்த வனங்களில் வ்ருக்ஷங்கள், மனிதர்கள் பூஷணங்களை அணிந்திருப்பதுபோல், நல்ல மணம் பொருந்தி அழகாயிருக்கின்ற புஷ்பங்களை யும் பழங்களையும் தரித்திருந்தன. ஸமஸ்த ருது தர்மங் களோடு கூடினதும் மனோஹரமாயிருப்பதும் முழு வதும் வண்டுகள் உலாவப்பெற்றதுமாகிய லங்கையைச் சேர்ந்த அவ்வனம் சைத்ராதமென்கிற குபேரனுடைய உத்யானவனம் போலும் தேவேந்த்ரனுடைய நந்தன வனம்போலும் ரமணீயமாகி ப்ரகாசித்துக்கொண் டிருந்தது. அவ்வானரர்கள் அந்த வனத்தைச் சேர்ந்த அருவியில் நீர்க்கோழிகளும் குருட்டு நாரைகளும் நர்த்தனஞ் செய்கின்ற மயில்களும் குயில்களும் கூவு கின்ற த்வனிகளைச் செவியுற்றனர். அந்த லங்கையி லுள்ள வனங்களும் உபவனங்களும் எப்பொழுதும் மதித்திருக்கின்ற பறவைகளோடு கூடினவைகளும் வண்டுகள் திரியப்பெற்றவைகளும் கோகிலங்களால் சூழப்பட்ட வ்ருக்ஷ ஸமூஹங்களுடையவைகளுமாகி, முழுவதும் பக்ஷிகள் சப்திக்கவும் நாற்புறத்திலும் மேலான வண்டுகள் பாடவும் வண்டுகள் தேன்களைப் பருகி அசையாதிருக்கவும் வலியனென்னும் பறவைகள்

கோஷிக்கவும் அருகாமையிலுள்ள குளங்களில் ஸாரஸப்பறவைகள் ஒலிக்கவும் பெற்றும் மிகுதியும் அழகாயிருந்தன. அவ்வானரர்கள் அந்த வனங்களின் அழகைக் கண்டு மேனிமுழுவதும் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து வீரர்களாகையால் சிறிதும் பயமின்றிக் காமரூபர்களாகையால் அந்தந்த இடங்களில் நுழையும்படி சிறிதும் பெரியதுமான தேஹங்களைத் தரிப்பவராகி அவ்வனங்களிலும் உபவனங்களிலும் ப்ரவேசித்தனர். மஹாதேஜஸ்விகளாகிய அவ்வானரர்கள் அவற்றில் ப்ரவேசித்துக் கொண்டிருக்கையில் புஷ்பங்களில் பட்டு வருகையால் அழகான வாஸனையுடையதும் மோப்பதற்கினிதுமாகிய காற்று வீசிற்று. சில வானர யூதபதிகள் ஸுக்ரீவனால் கட்டளை யிடப்பட்டு வானரவீரர்களின் கூட்டத்தினின்று புறப்பட்டு, கர்ஜிப்பவர்களில் சிறந்தவராகையால் தமது ஸிம்ஹநாதங்களால் பக்ஷிகளை அதட்டுபவரும் ம்ருகங்களையும் யானைகளையும் பயப்படுத்துபவரும் அந்த லங்காபுரம் முழுவதையும் நடுங்கச்செய்பவரும் மிகுந்த வேகமுடையவராகையால் தமது அடிவைப்புகளால் பூமியை வருத்துபவருமாகி த்வஜங்களால்ப்ரகாசிக்கின்றலங்காபுரிக்குப்போயினர். அனந்தரம் அவருடைய காலடிகளால் கிளம்பின தூள் ஒரு நிமிஷத்திற்குள் ஆகாயத்தில் பரவிச் சென்றது. லங்கையின் வனங்களிலுள்ள கரடிகளும் ஸிம்ஹங்களும் பன்றிகளும் எருமைக்கடாக்களும் யானைகளும் மான்களும் அவரது பயங்கரமான உருவங்களைப் பார்த்தவுடன் முதலே பயந்திருப்பவை யாகையால், மற்றும் அவரது ஸிம்ஹநாதங்களைக் கேட்டவுடனே மிகுதியும் பயந்து மூலைக்கு ஒன்றாகப் பத்துத் திசை

களையும் பற்றி ஓடிப்போயின. இங்ஙனம் போய்க் கொண்டிருக்கிற அவ்வானரர்களுக்கு த்ரிகூடபர்வதத்தின் மூன்று சிகரங்களில் ஒன்றாகிய நடுச்சிகரம் புலப்பட்டது. அது அத்தகையதென்று ப்ரஸித்திபெற்றதும் பக்கங்களிலுள்ள மற்ற இரண்டு சிகரங்களைக் காட்டிலும் உயர்ந்ததும் இணையற்றதுமாகி ஆகாயத்தை அளாவிக்கொண்டிருந்தது. அது சுற்றிலும் புஷ்பங்களால் மறைக்கப்பட்டிருப்பதும் [1] பொன் வர்ணமுடையதும் நூறுயோஜனை அகன்றதும் நிர்மலமுமாகிப் பார்க்க மிகவும் அழகாயிருந்தது. மற்றும், அது மழமழப்புற்றதும் ரமணீயமாயிருப்பதும் சோபை விளங்கப்பெற்று மிகப்பெரியதும் பக்ஷிகளுக்குங்கூட ஏற முடியாததுமாயிருந்தது. ஜனங்களுக்கு அதில் ஏற நினைக்கவுங்கூட முடியாதென்றால், இனி அதில் நடந்து ஏற முடியாதென்பதைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? ராவணன் பரிபாலனஞ் செய்து வருகிற லங்கையென்னும் நகரம் அந்தச் சிகரத்தின்மேல் நூறுயோஜனை விஸ்தாரமுடையதும் முப்பது யோஜனை நீளமுடையதுமாக ஏற்பட்டிருந்தது. த்ரிவிக்ரமாவதாரஞ் செய்து மூன்றடிகளால் உலகங்களை அளந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவின் இடை அடிவைப்பாகிய ஆகாயம் வர்ஷருதுவின் ஆரம்ப ஸமயத்தில் மேகங்களால் ப்ரகாசிப்பதுபோல், அந்த லங்காபுரம் வெளுத்த மேகம்போன்ற உயர்ந்த கோபுரங்களாலும் ஸ்வர்ணமயமான ப்ராகாரத்தினாலும் ரஜதமயமான ப்ராகாரத்தினாலும் அலங்கரிக்கப்பட்டு உப்பரிகை

---

1. இங்கு 'மஹாரஜதஸந்நிஹம்' என்று மூலம். புஷ்பங்களால் மறைக்கப்பட்டிருப்பது பற்றிச் சிறந்த வெள்ளி நிறமுடையதென்றும் பொருள் கூறலாமென்று கோவிந்தராஜர்.

களாலும் விமானங்களாலும் மிகுதியும் அழகு திகழப் பெற்றிருந்தது. மற்றும், அந்த நகரத்தில் நாற்சந்தி வீதியின் நடுவில் ஓர் உப்பரிகை உண்டு. அது ஆயிரம் ஸ்தம்பங்களால் மிகுதியும் அலங்கரிக்கப்பட்டு உயர்ந்து கைலாஸத்தை நிகர்த்து ஆகாயத்தில் உறைவது போல் புலப்படுகின்றது. அது ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணனது புரத்திற்கெல்லாம் ஓர் அலங்காரமாகி விளக்கமுற்றிருந்தது. அதை எப்பொழுதும் குறையாமல் நூறு ராக்ஷஸர்கள் பாதுகாத்துக்கொண்டிருப்பர். இங்ஙனம் மனத்திற்கு மிகவும் இனிதாகி நல்ல அடவிகளும் நானாவித கைரிகதாதுக்களால் விசித்ரஞ்செய்த க்ரீடாபர்வதங்களும் உத்யான வனங்களும் அமைந்து விளக்கமுற்றிருப்பதும், பலவகைப் பக்ஷிகளின் கலகல த்வனிகளால் முழக்கமுற்றதும் பலவகை ம்ருகங்கள் திரியப்பெற்றதும் பலவகை வன ஸமூஹங்களுடையதும் பலவகை ராக்ஷஸர்கள் வஸிக்கப்பெற்றதும் மிகவும் உயர்ந்திருப்பதும் ஸமஸ்த பதார்த்தங்களும் நிறைந்து விளங்குவதும் ராவணனது நகரமுமாகிய அந்த லங்கையை லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமன் பார்க்குங் குதூஹலத்தினால் ஒளி விளங்கப்பெற்று வானரர்களுடன் கண்டனன். மிகுந்த வீர்யமுடையவனும் தேவதைகளை நிகர்த்தவனும் லக்ஷ்மணனுக்ரஜனுமாகிய ராமன் பெரிய க்ருஹங்களால் நிறைந்திருக்கிற அந்த லங்கா நகரத்தைக் கண்டு ஆச்சர்யமுற்றனன். மேலான வஸ்துக்களால் நிறைந்து பலவிதமான ரக்ஷைகள் செய்யப்பெற்று உப்பரிகைகளின் வரிசைகளால் அலங்கரிக்கப்பட்டுப் பெரிய யந்த்ரங்களோடும் மேலான கதவுகளோடும் கூடின அந்த லங்காபுரத்தை ராமன் மஹத்தான வானர ஸைன்யத்

துடன் கண்டனன். முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஸுக்ரீவனும் ராவணனும் த்வந்த்வ யுத்தஞ் செய்தல்.

அனந்தரம் ராமன் ஸுக்ரீவனோடு கூடி வானர யூதபதிகள் சூழ்ந்து வரப்பெற்று இரண்டு யோஜனை விஸ்தாரமுடைய இடம் பொருந்தின ஸுவேலபர்வதத்தின் சிகரத்தில் ஆரோஹித்தனன். அவன் அந்த ஸுவேலபர்வத சிகரத்திலேயே சிறிது நேரம் இருந்து பத்துத் திசைகளையும் பார்த்துக்கொண்டே ரமணீயமான த்ரிகூடபர்வதத்தின் சிகரத்தில் விஶ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டு அழகான ஸந்நிவேசங்கள் அமையப்பெற்று அழகான வனங்களால் விளங்குவதுமான லங்காபுரத்தைக் கண்டனன். ராமன் அந்த லங்காபுரியின் கோபுரத்து நுனியில் ஒருவராலும் அணுக முடியாத ராக்ஷஸர் தலைவன் ராவணன் இருக்கக் கண்டனன். அந்த ராவணனது இரண்டு பக்கங்களில் இரண்டு வெண்சாமரங்களும், தலைமேல் ஜயஶீலனென்பதை அறிவிக்கும்படியான வெண்கொற்றக் குடையும் ப்ரகாசித்துக் கொண்டிருந்தன. அவன் செஞ்சந்தனத்தை நன்றாகப் பூசிக்கொண்டு ரத்னாபரணங்களை அணிந்து கறுத்த மேகம்போன்று பொன் சரிகைகளால் சித்ரஞ் செய்யப்பட்ட மேலான வஸ்த்ரந் தரித்து, தேவேந்த்ரனோடு யுத்தஞ்செய்யும்பொழுது ஐராவதமென்னும் சிறந்த யானையின் தந்தங்களால் குத்தப்பட்டுக் காய்ப்பு காய்த்திருக்கிற திடமான மார்புடையவனும் முயலின் ரக்தம்போல் சிவந்த உத்த

ரீயத்தைப் போர்த்துக்கொண்டிருக்கையால் ஆகாயத்தில் ஸந்த்யாகாலத்து வெயில் படப்பெற்ற மேக ஸமூஹம் போன்றவனுமாகி ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். அப்பால் ஸுக்ரீவன் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனைப் பார்த்தவுடனே 'என் ஸ்வாமிக்கெதிரில் துர்ப்புத்தியாகிய இவன் ராஜோபசாரத்துடன் எங்ஙனம் இருக்கலாம்?' என்று கோபத்தின் மிகுதியால் விரைந்து மனோபலமும் தேஹபலமும் மிகப்பெற்று வானரஶ்ரேஷ்டர்களும் ராமனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அந்தப் பர்வத சிகரத்தினின்று எழுந்து ராவணனிருக்கும் கோபுரத்திற்குக் கிளம்பினன். ஸுக்ரீவன் மனத்தில் சிறிதும் பயமின்றி அந்த ராவணனைச் சிறிதுநேரம் பார்த்துக்கொண்டிருந்து அந்த ராக்ஷஸனை த்ருணீகாரஞ் செய்து பருஷ வசனங்களைப் பேசத்தொடங்கி 'அடே! ராக்ஷஸா! நான் லோகநாதனாகிய ராமனது நண்பனும் தாஸனுமாயிருப்பவன். அந்த ராஜஶ்ரேஷ்டனுடைய தேஜோபலத்தினால் இப்பொழுது என்கையில் அகப்பட்டுக்கொண்டு நீ இனி என்னிடத்தினின்று விடுவித்துக்கொள்ளவல்லனல்லை' என்றனன். அந்த ஸுக்ரீவன் இங்ஙனஞ் சொல்லித் திடீலென அவன் மேலுக்குக் கிளம்பி விசித்ரமான அவனது கிரீடத்தைப் பிடித்து இழுத்துத் தரையில் விழத்தள்ளித் தானும் கீழே குதித்தனன். மீளவும் வெகு வேகத்துடன் தன்மேல் வருகின்ற ஸுக்ரீவனைப் பார்த்து, ராவணன் 'அடே! நீ என் கண்களில் படாதவரையிலும் (என் கண்மறைவில்) ஸுக்ரீவனே (அழகிய கழுத்துடையவனே). இனி, என் கண்களில் பட்டாயாகையால் (என் கண்ணெதிரில்) கழுத்து இல்லாதவனாவாய்' என்றனன்.

ராவணன் இங்ஙனம் மொழிந்து மிகுவிரைவுடன் எழுந்து அந்த ஸுக்ரீவனைக் கைகளால் பிடித்துத் தரையில் விழத்தள்ளினன். ஸுக்ரீவனும் பந்துபோல் எழும்பித் தனது இருபுஜங்களாலும் ராவணனை விழும்படி இழுத்துத் தள்ளினன். அவ்விருவரும் ஆரம்பத்தில் ஒருவரை யொருவர் அழுந்தக்கட்டுகை யால் வேர்த்திருப்பதும் ஒருவரை யொருவர் நகங் களால் குத்திப்பிறுகையால் ரக்தம் படிந்ததுமான மேனியுடையவர்களும் ஒருவரை யொருவர் அசைய வொட்டாமல் பின்னிக்கொள்கையால் சேஷ்டையற்ற வருமாகி, அப்பால் ஒருவரை யொருவர் விடுவித்துக் கொண்டு நிற்கும்பொழுது நிரம்பவும் புஷ்பித்த இலவ மரமும் பலாசமரமும்போல் தோற்றினர். மஹாபலிஷ் டர்களான வானரராஜனும் ராக்ஷஸராஜனுமாகிய அவ்விருவரும் முட்டிகளால் குத்துவதும், உள்ளங் கைகளால் அறைவதும், முழங்கைகளால் அடிப்பதும், நகங்களால் பிறுவதுமாகி இங்ஙனம் பலவகைகளில் ஸஹிக்க முடியாத மல்லயுத்தஞ் செய்தனர். அவ்விரு வரும் மிகுதியும் உக்ரமான வேகமுடையவராகையால் அக்கோபுர வேதியின் இடையில் நெடுநேரம் மல்ல யுத்தஞ் செய்து, அப்பால் இருவரும் மேலெழும்பிக் குதிப்பதும், ஒருவரை யொருவர் பிடித்திழுப்பதும் உடம்பை ஒருவிதமாக வணங்குவதும், பின்சென்று மீளவும் மேல்விழ ஸமயம் பார்த்துக்கொண்டே கால் களை விசித்ரமான வகையாகக் கோபுரவேதியில் படிய நிறுத்துவதும், கைகளால் பின்னிக்கொள்வதுமாகி ஒருவர்க்கொருவர் தேஹங்களை அழுந்தக்கட்டிக் கொண்டே மதிலுக்கும் அகழிக்கும் இடையில் வீழ்ந் தனர். அவ்விருவரும் அங்ஙனம் வீழ்ந்தும் மிகுந்த

லாகவத்தினுல் பூமியில் படாமலே மேல்கிளம்பி அவ் விளைப்பினுல் முஹூர்த்தகாலம் பெருமூச்செறிந்து கொண்டு வெறுமனே இருந்து பிறகு தம் கைகளால் தமது உடலைக் கட்டிக்கொண்டு எழும்பி யுத்தஞ்செய்ய முயன்று கயிறு போன்ற தமது புஜங்களால் ஒருவரை யொருவர் தேஹங்களைக் கெட்டியாக பந்தனஞ் செய்தனர். பரபரப்பும் பயிற்சியும் பலமும் நிறைந்து, கொழுத்துச் சிறந்த பெரும்புலிகள் போலவும் அவ் வகைப்பட்ட யானைக்குட்டிகள் போலவும் புலப்படுகின்ற அவ்விருவரும் சாதுர்யமாய் ஒருவரை யொருவர் வெல்லும் வகையுள்ள யுத்தமார்க்கங்களால் ஸஞ்சரித் தனர். அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் உறைந்து, மார்பி ணுல் இடித்துக் கெட்டியாகத் தாக்கிக்கொண்டு ஒரு சேரப்புவியில் வீழ்ந்தனர். மறுபடியும் எழுந்து ஒரு வரையொருவர் பிடித்து மேல்தூக்கித் தரையில் விழத் தள்ளுபவராகி இங்ஙனம் பலவிதமான போர்வகைகளா லும் விசித்ரமாக நெடுநேரம் அமராடினர். மதித்த யானைகள் போன்ற அவ்வீரர்களிருவரும் இளைப்புறுத படி பலவிதமான போர்முறைகளிலும் பழகினவர்களா கையால் யானையின் கட்டுத்தறிபோன்ற தமது மேலான புஜங்களால் ஒருவரை யொருவர் மிகுந்த வேகத்துடன் தடுப்பவராயினும் இளைப்புறுதிருந்தனர். அவர்கள் இப்படி வெகுநேரம் போராடிக்கொண்டிருந்து, அப்பால் மண்டலகதி முதலிய பலவகையான போர்த் துறைகளைப்பற்றி யுத்தஞ் செய்தனர். அவர்கள் ஒருவரோடொருவர் உறைந்து ஒருவரை யொருவர் முடிக்கவேண்டுமென்று முயன்று, இரை பிடிப்பதின் நிமித்தமாக மிகுமனவூக்கத்துடன் அசையாது உற்றிருக்கின்ற பூனைகள்போல் அடிக்கடி

ஒருவரையொருவர் ஸமயம் பார்த்துப் பிடிக்கும் பொருட்டு அசைவற்று நின்றிருந்தனர். அந்த ஸுக்ரீவனும் ராவணனும் யுத்தமார்க்கங்களில் தீர்ந்தவராகையால் விசித்ரமான வகையாக வட்டமாயோடுவதும், பலவாறு நிற்பதும், வளைந்து வளைந்தோடுவதும், முன்செல்வதும், பின்வருவதும், குறுக்கே செல்வதும், இடசாரி வலசாரியாகச் செல்வதும், எதிரியின் அடி தன்மேல் படாதபடி சாதுர்யமாக விலகுவதும், எதிரியின் அடிகளைத் தன்அடிகளால் விலக்குவதும், ஒருவன் நிற்க மற்றொருவன் அவனைச் சுற்றியோடுவதும், ஒருவனை யொருவன் எதிர்த்து விரைந்தோடுவதும் உடம்பை ஒடுக்குவதும் விரிப்பதுமாகி வணங்கிச் செல்வதும், (மெதுவாகச் செல்வதும்,) தவளைபோற் செல்வதும், எதிரியைத் தடுத்துக்கொண்டு அவனுக்கு அஞ்சாது அசைவற்று நிற்பதும், பின்புறமாகத் திரும்பிச் செல்வதும், நேராக நின்றவாறே பின்செல்வதும், எதிரியைப் பற்றவேண்டி உடலை ஒடுக்கி வணங்கிக்கொண்டு செல்வதும், எதிரியைக் காலால் உதைக்க வேண்டிக் கிழ்நோக்கிச் செல்வதும், எதிரியின் கைகளைப் பிடிக்கவேண்டிக் கைகளை விரித்துக்கொண்டு செல்வதும், எதிரியின் பிடியை ஏமாற்றும் பொருட்டுக் கைகளை ஒடுக்கிக்கொண்டு செல்வதுமாகிய பலவகை வழிகளில் சென்று ஒருவரை யொருவர் வெல்ல வழி பார்த்தனர். இப்படி சண்டை செய்துகொண்டிருக்குந் தருணத்தில் ராவணன் இளைப்புற்று எங்குப் பார்க்கிலும் ராவணனுகவே தோற்றுவிக்கும்படியான தன் மாயாபலத்தைக் காண்பிக்கத் தொடங்கினன். ஜயமிலனும் வானராதிபதியுமாகிய ஸுக்ரீவன் அந்த ராவணன் நினைவை அறிந்து சிறிதும் இளைப்படையாது



2721. ஸுக்ரீவன் ராவணனை அவமதித்துக் கிளம்புதல்.

வெற்றிவீரனாகவே திடீரென்று ஆகாயத்திற்குக் கிளம்பினன். [1] ராவணன், ஸுக்ரீவன் மீளவும் வருவானென்று ஏமாறி அங்கேயே நின்றிருந்தனன். [2]அப்பால் வானர நாதனாகிய ஸுக்ரீவன் தானே ராவணனோடு போர் புரிந்தானென்னும் கீர்த்தியைப் பெற்று ராக்ஷஸர்களைப் பொருள் செய்யாமல் அவர்க்குத் தலைவனாகிய ராவணனையே, கபடத்தில் நுழையாமல் தர்மயுத்தத்திலேயே தலைப்பட்டுக் கொல்ல வல்லவனாயினும் அது ராமன் செய்ய நினைத்த கார்யமாகையால் தான் அங்ங

---

1. ராவணன் மாயைக்குத் தொடங்குவதே ஸுக்ரீவன் வெற்றி பெற்றமையை அறிவிக்கின்றது.

2. இங்கு 'அத ஹரிவரநாத: ப்ராப்ய ஸங்க்ராமகீர்த்திம் நிஸிசரபதிமாஜௌ யோஜயித்வா ஸ்ரமேண। கககநமதிவிஸாலம் லங்கயித்வார்க்கஸூநுர் ஹரிவரகணமத்யே ராமபார்ஸ்வம் ஜகாம' என்பது மூலம். (ஹரிவரநாத:) க்ஷணத்தில் ராவணனை முடிக்கவல்ல வானரபரிகாரத்திற்கு நியாமகனாயிருப்பவன். இப்படிப்பட்ட பரிகாரம் இருக்கையில் தானே ராவணன்மேல் எதிர்த்துப் போவதற்கு ராமபக்தியே ஹேதுவென்று கருத்து (ப்ராப்ய ஸங்க்ராம கீர்த்திம்) ராமனுக்கு யுத்தத்தில் வருங்கீர்த்தியைத் தானே பெற்றானென்று கருத்து. (நிஸிசரபதிம்) ராவணனைப் போன்றவர் பலர் இருப்பினும் அவர்களெல்லோரையும் த்ருணீகாரஞ் செய்து அவனோடேயே யுத்தஞ் செய்தானென்று கருத்து. (ஆஜௌ) ராவணனைப்போல் கபட யுத்தஞ் செய்பவனல்லன். (யோஜயித்வா ஸ்ரமேண) இதுவரையில் அவனுக்குத் தெரியாத இளைப்புடன் கூட்டி. ஒருவனுக்கு ஒன்றைக் கைகூடுவிக்கையாவது அவனிடமில்லாத வஸ்துவுக்கே பொருந்தும், ராவணனுக்கு ஸ்ரமம் பலித்தது, தனக்கோ கீர்த்தியென்று கருத்து. (கககந மதிவிஸாலம் லங்கயித்வார்க்கஸூநு:) தான் ஸூர்ய புத்ரனென்பதை அறிவிக்கும் பொருட்டு ஆகாயத்தை அநாயாஸமாகக் கடந்து வந்தனன். (அர்க்கஸூநு:) ஸூர்யனைப் போல் அறிய முடியாத நடைவேகமுடையவன் (ஹரிவரகண

னஞ்செய்ய நேராமல் அவனை வெறுமனே இலைப் புறம்படி மாத்ரஞ்செய்து மிகுதியும் விசாலமான ஆகாயத்தை ஸூர்யன்போல், ஸூர்ய குமாரனுகை யால் அவலீலையாகக் கடந்து வந்து மிடுக்கின்றி வானர வீரர்களின் கூட்டத்தில் தான் கேவலம் ஒரு வானரன் போல் புலப்பட்டுக்கொண்டு 'ராவணன் தலைகளைக் கொள்ளாது வந்தேனே! ராமனுக் கெதிரில் எப்படி நிற்பேன்' என்று அவன் பக்கத்தில் போய் நின்றனன். ஸூர்ய குமாரனுகிய அந்த ஸுக்ரீவன் அங்ஙனம் அவ்வீரச் செயலை நடத்தி மிகுதியும் ஸந்தோஷமுற்று ரகுகுல ராஜகுமாரனுகிய ராமனுக்கு யுத்தோத்ஸா ஹத்தை வளரச் செய்துகொண்டு வானர யூதபதி களால் பூஜிக்கப்பட்டு வாயுவேகம் மனோவேகமாக வானரஸேனையுள் ப்ரவேசித்தனன். நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.



மையே) வணக்கத்துடன் கூடித் தன்பெருமையை வெளிக்காட்டா மல் வானரர்களில் ஒருவன்போல் இருந்தானென்றபடி. (ராம பார்ஶ்வம ஜகாம) 'ராவணன் தலையைக்கொண்டு வராத நான் எப்படி இவன் முன்னே நிற்பது?' என்று பக்கத்தில் வந்து நின்றுன். ராவணனுக்கு ஶ்ரமத்தை விளைத்து வந்தானென்கை யால், ராமன் தானே ராவணனைக் கொல்லவேண்டுமென்ற ப்ரதிஜ் ஞைக்கு ஹானி நேராதிருக்கும்பொருட்டு ராவணனைக் கொல்லா மலே வந்தானென்று தெரிகிறது. ராவணன் மாயைக்குத் தொடங் கினவுடனே தானும் மாயைக்குத் தொடங்கினுல் ராமனுக்குக் கோபம் வருமென்று வந்துவிட்டானென்று கருத்து.

{ ராமன் பயங்கரமான சகுனங்களைக்காண்பதும், அங்கதனை ராவணனிடம் தூதனுப்புதலும், ராமன் வானர ஸைன்யங்களோடு லங்கையைத் தடுப்பதும். }

அனந்தரம் லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமன், ஸுக்ரீவனிடத்தில் யுத்தஞ் செய்த அடையாளங்களைக்கண்டு, அப்பொழுது அவனை அழுந்தக் கட்டியணைத்து 'நீ என்னுடன் ஆலோசிக்காமல் இப்படி பெரிய ஸாஹஸஞ்செய்தனை. ராஜாக்கள் எம்மைப்போன்ற பரிஜனங்கள் இருக்கையில் இப்படி தாமே முயன்று ஸாஹஸ கார்யங்களை எவ்வகையிலுஞ் செய்யார். வீரா! நீ ஸாஹஸங்களில் ப்ரீதியுடையவன். ஆனதுபற்றியே என்னையும் விபீஷணனையும் இந்த வானர ஸைன்யத்தையும் பெரிய ஸந்தேஹத்தில் நிறுத்தி, மிகுதியும் கடினமான இந்த ஸாஹஸ கார்யத்தைச்செய்தனை. நீ ஸாஹஸ கார்யங்களுக்கு முயல்வாயாயின், எம்மைப்போன்றவர்க்குப் பிழைப்பே அரிது. வீரனே! இனி இது முதலாகவாயினும் முன்பின் விசாரிக்காமல் இப்படிப்பட்ட ஸாஹஸ கார்யஞ்செய்யாதிருப்பாயாக. ஏனென்னில்—[1] மிகுந்த பாஹுபலத்தினால் சத்ருக்களை அடக்கவல்ல உனக்கு ஏதேனும்

1. இங்கு 'த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம। ஹாதேந மஹாவாஹோ லக்ஷ்மணேநயவீயஸா। ஶத்ருக்நேந ச ஶத்ருக்ந ஸ்வஶரீரேணவா புந:' என்பது மூலம். (த்வயி கிஞ்சித் ஸமாபந்நே) நீ ஏதேனும் ஒரு கெடுதியைப் பெறுகையில், அதாவது உன்னை எவனேனும் இகழ்ச்சியாக 'வானர' என்றழைக்கையில் என்கை. (மம ஸீதயா கிங் கார்யம்) எனக்கு ஸீதையால் என்ன ப்ரயோஜனம். இதனால் அன்றீன்ற கன்றினிடமுள்ள ப்ரீதியால் முன்னணைக்கன்றையும் கொம்பிலுங் குளம்பிலுங் கொள்ளும் பசுவைப்போல் நித்யானபாயினியான (என்றும் பிரியாத) ஸீதையை

கெடுதி விளையுமாயின், எனக்கு ஸீதையாலாவது பரதனாலாவது பின்தோன்றலாகிய லக்ஷ்மணனாலாவது சத்ருக்னனாலாவது விளையும் ப்ரயோஜனமென்? தேவேந்த்ரனையும் வருணனையும் நிகர்த்த மஹாபலனே! இதற்கு முன்பு நீ வராதிருக்கையில், எனக்கு உன் பராக்ரமம் தெரிந்திருப்பினும் உன்னிடத்திலுள்ள ப்ரீதியின் மிகுதியால் 'உனக்கு அபாயம் விளையுமோ? என்னவோ?' என்று சங்கித்து, அப்படி விளையுமாயின் ப்ரதிஜ்ஞையைத் தீர்க்காதுபோக முடியாதாகையால் ராவணனைப் புதல்வர்களோடும் பந்துக்களோடும் ஸைன்யங்களோடும் கொன்று சரணமடைந்தவனை வீண்செய்யலாகாதாகையால் விபீஷணனுக்கு லங்கையில் பட்டங்கட்டி, குலதர்மம் இடையில் அழிந்து போகாதிருக்கும்படி அயோத்யைக்குப் போய் பரதனை ராஜ்யத்தில் நிறுத்தி, அப்பால் என் தேஹத்தை விட வேண்டுமென்று இங்ஙனம் என் மனத்தில் நிச்சயித்துக் கொண்டிருந்தேன்' என்றனன். ராமன் இவ்வாறு மொழிகையில், ஸுக்ரீவன் அவனைப் பார்த்து 'ரகுகுல வீரனே! ராமா! உனக்குப் பணிசெய்வது என் பௌருஷத்திற்கு ப்ரயோஜனமென்பதை அறிந்தும், உன் பார்யையை அபஹரித்த துர்ப்புத்தியாகிய

யுங்கூட ஆதரிக்காமல் அன்றாச்ரயித்த ஒரு வானரனிடத்தில் மிகுந்த அபிநிவேசத்தையுடைய ராமனுடைய வாத்ஸல்யத்தின் மிகுதி ஏற்பட்டது. (ஸீதயா) 'அர்யோவா ஏஷ ஆத்மநோ யத்பத்நீ' என்று பாதி சரீரமாகச் சொல்லப்பட்ட ஸீதையாலும் எனக்குக் கார்யமில்லை. (ஹாதோ யவீயஸா) 'ஹீ ராதா ஸ்வா மூர்த்திராத்மந:' என்று தன் சரீரமாகவே சொல்லப்பட்ட பரதாதிகளாலும் எனக்கு ப்ரயோஜனமில்லை. (ஸ்வசரீரேணவா) 'ஆத்மாநம் ஸர்வதா ரக்ஷேத் தாரைரபி தனைரபி' என்று எல்லாவற்றிலும் மேலாக ரக்ஷிக்கவேண்டிய சரீரத்தினாலும் ப்ரயோஜனமில்லை.

ராவணனைப் பார்த்து எப்படி பொறுத்துக்கொண் டிருப்பேன்? இது தாஸன் செய்யவேண்டிய கார்யமே யன்றி ஸாஹஸ கார்யமன்றே' என்றனன். இப்படி வீரனாகிய ஸுக்ரீவன் சொல்லுகையில் அதைக்கேட்டு அந்த ராகவன் ஸந்தோஷத்தினால் ஒளி திகழப்பெற்றி ருக்கின்ற லக்ஷ்மணனைப் பார்த்து 'ல்க்ஷ்மணா! நாம் குளிர்ந்த நீருடைய ஜலாதாரங்களையும் பழங்கள் நிறைந்திருக்கிற வனங்களையும் சேர்ந்து இந்த ஸைன்யங்களின் கூட்டத்தை அந்தந்த யூதபதிகளுக்கு வேறுவேறாகப் பங்கிட்டுக் கொடுத்து, கருடவ்யூஹம் முதலிய வ்யூஹங்களால் ஒழுங்குபடுத்திக்கொண்டிருப் போம். கோரமான ஒரு பயகாரணம் இதோ வரப் போகிறதென்று எனக்குத் தோற்றுகின்றது; அது உலகத்துக் கெல்லாம் நாசத்தை அறிவிக்கின்றது. உலகத்திற்கு மாத்ரமே அன்று; ருக்ஷவானரர்களிலும் ராக்ஷஸர்களிலும் எவர் மேலான வீரர்களோ அவர்க் குங்கூட விநாசம் நேருமென்பதை அறிவிக்கின்றது. காற்றுக்கள் பருஷமாய் வீசுகின்றன. பூமி நடுங்கு கின்றது. பர்வத சிகரங்கள் அல்லாடுகின்றன. வ்ருக்ஷங் கள் நிமித்தமில்லாமலே முறிந்து விழுகின்றன. மேகங் கள் பருந்து முதலியவற்றின் உருவம்போன்ற உருவ மும் பருஷமான வேஷமும் பயங்கரமான கர்ஜனைகளும் அமைந்து லோகத்தின் விநாசத்தை அறிவிக்கின்ற மையால் க்ரூரங்களுமாகி ரக்த பிந்துக்களோடு கூடின ஜலத்தைப் பெய்கின்றன. ஸந்த்யை செஞ்சந்தனம் போன்று மிகவும் பயங்கரமாயிருக்கின்றது. இதோ ஸூர்யமண்டலத்தினின்று எரிகின்ற அக்னிபிண்டம் (நெருப்புருண்டை) விழுகின்றது. அமங்களமான குள்ள நரி முதலிய ம்ருகங்களும் கழுகு பருந்து முதலிய பற

வைகளும் தீனவேஷமும் தீனஸ்வரமும் உடையவைக ளும் பயங்கரங்களுமாகி அருகில் வரப்போகிற பெரும் பயத்தை அறிவித்துக்கொண்டு ஸூர்யனுக்கு எதிரில் கோஷமிடுகின்றன. சந்த்ரன் ப்ரளயகாலத்திற்போல் இராக்காலத்தில் காந்தியற்றுச் சுற்றிலும் கறுப்பு நிறமும் அதற்கு அப்புறத்தில் சிவப்பு நிறமும் உடையவ னாகி வெப்பத்தை விளைவிக்கின்றனன். சந்த்ரனுடைய பரிவேஷம் ஒருமார்பளவுடைய தாகையால் குறுகி யதும் பயத்தை விளைவிப்பதும் அமங்களமும் நடுவில் மிகச் சிவப்புடையதுமாகி ப்ரளயகாலத்திற்போல் புலப் படுகின்றது. லக்ஷ்மணா! ஸூர்யமண்டலத்தில் சந்த்ர னிடத்திற்போல் கறுப்பான அடையாளமொன்று புலப்படுகின்றது. லக்ஷ்மணா! நக்ஷத்ரங்கள் எப்பொழு தும் போலன்றி மலினங்களாகி (அழுக்கடைந்தவைக ளாகி)த் தோற்றுகின்றன. நான் சொன்ன இந்த அவ சகுனங்கள் எல்லாம் உலகத்திற்கு நாசத்தை அறிவிக் கின்றவைபோல் இருக்கின்றன; காண்பாய். காக்கைக ளும் பருந்துகளும் கழுகுகளும் திண்ணை முதலிய தாழ்ந்த இடங்களைப் பற்றுகின்றன. நரிகள் பெரிய கோஷத்துடன் அசுபமான சப்தங்களைச் செய்கின்றன. இனி நாம் நாற்புறத்திலும் வானர ஸைன்யங்கள் சூழப்பெற்று இப்பொழுதே புறப்பட்டு ராவணனால் பாதுகாக்கப்படுவதும் எவர்க்கும் எதிர்க்க முடியாதது மாகிய இந்த லங்காபுரத்திற்கு வேகமாகப் போவோம்' என்றனன். வீரனும் மஹாபலனுமாகிய லக்ஷ்மணாக்ரஜன் இங்ஙனம் லக்ஷ்மணனுடன் உரைத்துக்கொண்டே சீக்ரமாக அந்த ஸுவேல பர்வதத்தினின்று இறங்கி னன். தர்மஸ்வபாவனாகிய ராமன் அந்தப் பர்வதத் தினின்று இறங்கிப் பகைவர்க்கு எவ்விதத்திலும்

அணுகமுடியாது விளங்குகின்ற தன் வானரபலத்தைக் கண்டனன். ராமன் அந்தந்த காலங்களில் செய்ய வேண்டிய கார்யங்களை யெல்லாம் அறிந்தவனுகையால் தானும் ஸுக்ரீவனும் மிகவும் பெரிய அந்த வானரவீர ஸைன்யத்தை உத்ஸாஹப்படுத்தி, யுத்தஞ் செய்ய வேண்டிய காலம் வந்திருக்கையால் யுத்தத்தின் பொருட்டு ஆஜ்ஞாபித்தனன். அப்பால் விடியற்காலத்தில் மஹாபாஹுவாகிய ராமன் வில்லைத் தரித்துப் பெரிய ஸைன்யஞ் சூழ்ந்துவரப்பெற்று வானர ஸைன்யத்திற்கு முன்னே லங்காபுரத்தைக் குறித்து ப்ரயாணமாய்ப் போயினன். அப்பொழுது விபீஷணன் ஸுக்ரீவன் ஹநுமான் ஜாம்பவான் நலன் ஸுஷேணன் (தூம்ரன்) நீலன் லக்ஷ்மணன் ஆகிய இவர்கள் ராமனைப் பின்சென்றனர். அதன் பிறகு மிகவும் பெரியதாகிய ருக்ஷவானர ஸைன்யம் மிகவும் விசாலமான பூமண்டலத்தை யெல்லாம் மறைத்துக்கொண்டு ராமனைப் பின்றொடர்ந்தது. யானையை நிகர்த்த தேஹமுடையவரும் பகைவரை அடக்க வல்லவருமாகிய வானரர்கள் பற்பல பர்வத சிகரங்களையும் சாகோபசாகமாகி வளர்ந்த பெருப்பெரிய வ்ருக்ஷங்களையும் பிடித்துக்கொண்டு போயினர். பகைவரை அடக்குந் திறமையுடைய அண்ணனும் தம்பியுமாகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் அங்ஙனம் ஸைன்யங்களோடு சென்று வெகுநேரங் கழித்து ராவணனது நகரமாகிய லங்கையைச் சேர்ந்தனர். அந்நகரம் த்வஜங்களின் வரிசைகளால் அலங்காரமுற்று மனோஹரமாகி மேலான உத்யான வனங்களால் விளக்கமுற்றிருந்தது. கோட்டையினடியில் விசித்ரமாக இயற்றப்பட்ட திண்ணைகளுடையதும் மிகுதியும் உயர்ந்த அரணமைந்ததும் அத்தகையதான

பட்டணத்து வெளிவாசற்படியுடன் விளங்குவதுமாகை யால் பகைவர்க்குச் சிறிதும் எதிர்க்கமுடியாதிருந் தது. இங்ஙனம் வானரர்கள் ராமனது வசனத்தின்படி தேவதைகளுக்கும் எதிர்க்கமுடியாத அந்த லங்கா புரியைத் தகைந்துகொண்டு தந்தமக்குச் சொன்ன இடங்களைக் கடவாமல் விடுதியை ஏற்படுத்திக்கொண்டு இறங்கினர். ராமன் தனுஸ்ஸைக் கையில் ஏந்திக் கொண்டு தம்பியாகிய லக்ஷ்மணனுடன் கூடிப் பர்வத சிகாம்போல் மிகவும் உயர்ந்திருக்கிற லங்கையின் வடக்கு வாசற்படியைத் தன் ஸேனையைப் பிறர் பரிபவிக்காதபடி பாதுகாத்துக்கொண்டு தகைந்தனன். வீரனும் தசரத குமாரனுமாகிய ராமன் லக்ஷ்மணன் பின்றொடர்ந்து வரப்பெற்று ராவணன் பாதுகாத்து வருகின்ற லங்காபுரியில் அந்த ராவணனிருக்கிற வடக்கு வாசற்படியில் சேர்ந்து அதைத் தகைந்து கொண்டு இறங்கினன். ராவணன் நின்றிருக்கிற அந்த த்வாரமானது பயங்கரமாகி வருணன் பாதுகாத்து வருகிற ஸமுத்ரம்போன்று ஆயுதங்களைத் தரித்தவர்க ளும் பயங்கரமான உருவமுடையவர்களுமாகிய ராக்ஷஸர்களாலும் நன்கு பாதுகாக்கப்பெற்று அற்ப பலமுடையவர்க்கு திகில் விளைப்பதாகி, தானவர்கள் பாதுகாத்து வருவதான பாதாளம் போன்றிருந்த தாகையால் அதை பத்ரமாக எதிர்த்துத் தடுப்பதற்கு ராமன் தவிர மற்றெவரும் வல்லரல்லர். ராமன் அந்த த்வாரத்தினுடைய வேதிகையின்மேல் ராக்ஷஸர்கள் வைத்திருக்கிற நானாவிதமான பற்பல ஆயுத ஸமூஹங் களையும் கவசங்களையும் கண்டனன். வீரனும் வானர ஸேனாதிபதியுமாகிய நீலன் கிழக்கு வாசலில் மைந்த னோடும் த்விவிதனோடுங்கூடி நின்றிருந்தனன். மிகுதி

யும் பலிஷ்டனுகிய அங்கதன் ருஷப கவாக்ஷ கஜ கவயர்களோடுகூடித் தெற்கு வாசற்படியைத் தடுத்துக்கொண்டு நின்றனன். பலிஷ்டனுகிய ஹநுமான் ப்ரமாதியோடும் ப்ரகஸனேடும் மற்றும் வீரர்களான இதர வானரர்களோடும் கூடி மேற்கு வாசலில் காத்துக்கொண்டிருந்தனன். ஸுக்ரீவன், கருடனையும் வாயுதேவனையும் நிகர்த்த ஸகல வானரஶ்ரேஷ்டர்களோடுங் கூடி, பலிஷ்டர்களான ராவண இந்த்ரஜித்துக்களோடு யுத்தஞ் செய்கிற ராமன் ஹநுமான் ஆகிய இருவரில் எவர்க்கு வேண்டிலும் அவர்க்கு ஸஹாயஞ் செய்யும்பொருட்டு [1] உத்தர பஶ்சிம த்வாரங்களின் இடையில் நின்றிருக்கிற ஸேனையில் இருந்தனன். மிகுதியும் புகழ்பெற்ற யூதபதிகளின் கீழ்ப்படிந்து நடப்பவரான முப்பத்தாறுகோடி வானரர்கள் லங்காபுரியைத் தகைந்துகொண்டு ஸுக்ரீவனிடம் இருந்தனர். ராமனது ஆஜ்ஞையைப்பற்றி லக்ஷ்மணனும் விபீஷணனும் ஒவ்வொரு த்வாரத்திலும் ஒவ்வொரு கோடி வானரர்களை நிறுத்தினர். ராமனுக்கு மேலண்டையில் ஸமீபத்திலேயே ஸுக்ரீவன் ஜாம்பவானுடன் கூடிப் பற்பல ஸைன்யங்களால் சூழப்பட்டு நடுகுல்மத்தில் இருந்தனன். அவ்வானரஶ்ரேஷ்டர்கள் கோரைப்பற்களோடு கூடின பெரும் புலிகள்போன்று வ்ருக்ஷங்களையும் பர்வதசிகரங்களையும் பெயர்த்துப் பிடித்துக்கொண்டு மனக்களிப்புற்று யுத்தத்திற்குக் காத்துக்கொண்டிருந்தனர். அந்த வானரர்களெல்லோரும் [2] லாங்கூலங்களை மேல்தூக்கிக் கொண்டிருந்தனர். அவர்கள் எல்லோரும் கோரைப்பற்களும் நகங்களுமே ஆயுதமாகப்பெற்றவர். எல்லோர்க்கும் முகமும் கண்க

1. உத்தரம்-வடக்கு. பஶ்சிமம்-மேற்கு. 2. லாங்கூலம்—வால்.

ளும் கோபவிகாரத்தினுல் சிவந்திருக்கையால் அவரது அவயவங்கள் நாணுவர்ணங்களாயிருந்தன. எல்லோரும் முகங்களைக் கோணலாக வளைத்து ராக்ஷஸர்களைப் பரிஹாஸஞ் செய்துகொண்டிருந்தனர். அவர்களில் சிலர் பத்துயானை பலமுடையவர்களும், சிலர் நூறுயானை பலமுடையவர்களும், சிலர் ஆயிரம் யானை பலமுடையவர்களுமாயிருந்தனர். மற்றும் அந்த ஸைன்யத்தில் சிலர் ஓகக்கணக்குடைய யானைகளின் பலமுடையவர்களும், சிலர் அதைக்காட்டிலும் நூறுமடங்கு அதிகமான பலமுடையவர்களும், சிலர் இவ்வளவு அவ்வளவென்று அளவிடமுடியாத பலமுடைவர்களுமாயிருந்தனர். அந்த லங்கையில் அவ்வானர ஸைன்யங்கள் கூட்டங்கூடுகையில் அக்கூட்டம் சரபம்ருகங்களின் கூட்டம்போல் பயங்கரமாகவும், விட்டில்களின் கூட்டம்போல் ஒரே தடவையில் வெளித்தோற்றுகையால் ஆச்சர்யமாகவும், குரங்குகளும் கொண்டை முயல்களும் கரடிகளுமாயிருக்கையால் பலநிறமுடையதுமாயிருந்தது. லங்கையைச் சுற்றிலும் வந்து இறங்கின வானரர்களால் பூமி முழுவதும் மறைக்கப்பட்டது; பூமியில் இடமில்லாமையால் மேன்மேலும் வருகின்ற வானரர்களால் ஆகாயம் முழுவதும் நிறைந்தது. முன்பு வந்தவர்கள் மாத்ரமேயன்றிப் பற்பல கோடிக்கணக்குள்ள வேறு கரடிகளும் வேறு வானரர்களும் ஒவ்வொரு லங்காத்வாரத்திலும் சேர்ந்திருந்தனர். மற்றும் வேறு வானரர்கள் பலர் ஆங்காங்குள்ளவர்களுக்கு ஸஹாயமாயிருந்து யுத்தஞ் செய்யும் பொருட்டு நாற்புறங்களிலும் வந்திருந்தனர். அவ்வானரர்களால் அந்த த்ரிகூடபர்வதமெல்லாம் நாற்புறத்திலும் சூழப்பட்டிருந்தது. இங்ஙனம் த்வாரங்

களைச் சூழ்ந்தபின்பு மற்றும் பல கோடிவானரர்கள் அந்நகரத்தைச் சுற்றிலுஞ் சூழ்ந்திருந்தனர். பலிஷ்டர்களான வானரர்கள் வ்ருக்ஷங்களைக் கைகளில் ஏந்திக்கொண்டு லங்கையைச் சுற்றிலும் தகைந்திருக்கையால் அந்நகரம் வாயுவுக்கும் புகமுடியாதிருந்தது. மேகம்போன்ற தேஹமும் தேவேந்த்ரனைப் போன்ற பராக்ரமமும் பொருந்தித் திகழ்கின்ற அவ் வானரர்கள் மிக விரைவுடன் வந்து அந்நகரத்தைச் சுற்றிலும் தடுத்து நிற்கையில், ராக்ஷஸர்கள் ஆச்சர்யம் அடைந்தனர். ஆங்காங்கு வானர ஸேனாஸமூஹங்கள் மேன்மேலும் வந்துகொண்டிருக்கையில், ஸமுத்ரம் கரையை உடைத்துக்கொண்டு பெருகும்பொழுது உண்டாகிற ஜலப்ரவாஹ சப்தம்போல் பெருந்த்வனி ஒன்று உண்டாயிற்று. அம்மஹாத்வனிக்கு லங்கை முழுவதும் ப்ராகாரங்களோடும் தோரணங்களோடும் பர்வதங்களோடும் உத்யான வனங்களோடும் அரண்யங்களோடும் கூடிப் பெரிய நடுக்கமுற்றது. ராமலக்ஷ்மணர்களால் காக்கப்பட்டு ஸுக்ரீவனோடு கூடின அவ்வானர ஸைன்யம் ஸமஸ்த தேவாஸுரர்களுக்கும் எதிரிடக் கூடாதிருந்தது. ராமன் இவ்வாறு தன் ஸைன்யத்தையெல்லாம் இறக்கி, ராக்ஷஸர்களையும் ராவணனையும் கொல்லும விஷயமாக மேற்செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யவிரும்பி, தூதனை அனுப்ப வேண்டுமென்று மந்த்ரிகளுடன் ஆலோசித்து 'அங்கதனே அங்ஙனம் அனுப்பத் தகுந்தவன்' என்று பலமுறை நிச்சயித்து, ஸாமாதி உபாயங்களின் அவ்வோ பயன்களை உள்ளபடி அறிந்தவனாகையால் ராஜதர்மத்தை நினைத்து விபீஷணனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு வாலிகுமாரனாகிய அங்கதனை அழைத்து 'நல்லியற்கை

யுடையவனே! நீ வானரனாகையால் ஶ்ரமமின்றி லங்கா புரத்தின் ப்ராகாரத்தைக் கடந்து நிர்ப்பயனாகி ராவண னிடஞ்சென்று, நான் சொன்னதாகச் சொல்லத் தொடங்கி 'அடே! ராக்ஷஸா! உன் செல்வமெல்லாம் பெரும்பாலும் தொலைந்து போயிற்று. 'செல்வம் போயினும் ப்ரபுத்வம் இருக்கிறது' என்கிறாயோ? உன்னுடைய ப்ரபுத்வமும் போனாற்போலவே. 'அவ் விரண்டும் இல்லாமற்போயினும் பிழைக்கும் விருப்பம் கெடாதல்லவா' என்பாயாயின், இனிச் சீக்ரத்தில் சாகப்போகிறாயாகையால் அவ்வாசையும் இல்லை. 'எது இல்லாமற்போயினும் அறிவு அழியாதிருக்கும்' என்னில் அதுவும் அழிந்தது. நீ கர்வமுற்று ரிஷிக ளுக்கும் தேவதைகளுக்கும் கந்தர்வர்களுக்கும் அப்ஸர ஸ்த்ரீகளுக்கும் நாகர்களுக்கும் யக்ஷர்களுக்கும் ராஜர்களுக்கும் மதியின்றி எத்தெந்த அபகாரஞ் செய்தனையோ, அதற்கெல்லாம் மூலமான ப்ரஹ்மாவின் வரத்தினாலுண்டான கொழுப்பெல்லாம் இப்பொழுது அழிந்தாற்போலவே. இது நிச்சயம். ஏனென்னில், [1]தண்டதரனாகிய நான், நீ என் பார்யையை அபஹரித்த மையால் வருந்திக் கோபித்தவனாகி உன்னைத் தண்டிக்க முயன்று லங்காத்வாரத்தில் வந்திருக்கிறேனே! தெரிய வில்லையா? ராக்ஷஸனே! 'இப்படி என்னைத் தண்டிக் கையால் உனக்கு என்ன பயன் விளையும்' என்கிறாயோ? தேவதைகளும் மஹர்ஷிகளும் ராஜரிஷிகளும் உன்னால் எந்தப் பரிபவத்தைப் பெற்றார்களோ, அந்தப் பரிபவத்தை நீ என்னால் பெறப்போகின்றனை. (அவர் களை நீ ஹிம்ஸித்தாற்போல் நான் உன்னை ஹிம்ஸிக்கப்

1. தண்டதரன்—பாவஞ் செய்தவர்களைத் தண்டிக்குந் தன்மையனாகிய.

போகின்றனன். மற்றும், நீ என்னால் கொல்லப்பட்ட்
வனாகிப் பாபத்தைத் துறந்து தேவதைகளும் மஹர்ஷி
களும் ராஜர்ஷிகளும் பெறக்கடவ லோகங்களைப்
பெறுவாய். [1] நானும் உன்னைத்தகுந்தபடி தண்டிக்கை
யால் பாபநிவ்ருத்தியைப் பெறுவேன். ஆகையால் விரை
வுடன் வருவாயாக.) ராக்ஷஸாதமா! மாரீசனுடைய
மாயையால் என்னை அப்புறம் போகச்செய்து எந்த
பலத்தைக்கொண்டு ஸீதையை அபஹரித்தனையோ,
அந்த பலத்தை யெல்லாம் இப்பொழுது காட்டுவாயாக.
[2]நீ ஸீதையை ஸமர்ப்பித்து என்னைச் சரணமடையாது
போவாயாயின், கூரான பாணங்களால் இந்தலோகம்
முழுவதிலும் ராக்ஷஸனொருவனும் இல்லாது முடியும்
படி செய்து விடுகின்றேன். தர்மபுத்தியும் ராக்ஷஸ

---

1. 'ராஜபிர் த்ருததண்டாஸ்து க்ருத்வா பாபாநி மாநவா:। நிர்மலா: ஸ்வர்கமாயாந்தி ஸந்தஸ்ஸுக்ருதிநோயதா। ராஜாத்வஶாஸந் பாபஸ்ய ததவாப்நோதி கில்விஷம்' (மனிதர்கள் பாபஞ்செய்வார்களாயின், ராஜனால் தண்டனை விதிக்கப்பெற்றுப் பாபந்தொலைந்து, புண்யசாலிகளான ஸத்புருஷர்களைப்போல் ஸ்வர்க்கலோகம் பெறுவார்கள். அரசன் பாபஞ் செய்தவனைத் தண்டியாது விடுவானாயின் அவன் அந்தப் பாபத்தைப் பெறுவான்) என்று ராஜதண்டனத்தினால் பாபஞ் செய்தவனும் அரசனும் பாபந்தீரப் பெறுவார்களென்று தெரிகிறது.

2. பொன்னைத் திருடினவனுக்கு மீளவும் அந்தப் பொன்னைக் கொடாமல் ப்ராயச்சித்தத்தில் அதிகாரமில்லாதாப்போல் ஸீதையைத் திருடின ராவணனுக்கும் ஸீதையைக்கொடாமல் சரணாகதியில் அதிகாரமில்லை. ராவணன் சரணம் அடைவானாயின், அவனுக்கு லங்கையைக் கொடுத்து விபீஷணனுக்குக் கோஸலராஜ்யங் கொடுக்கிறேனென்று கருத்து. அல்லது லங்கையை விபீஷணனுக்கே கொடுத்து ராவணன் ப்ராணன்களைக் காப்பாற்றிவிடுகிறேனென்று கருத்து.

நாயகனுமாகிய விபீஷணன் என்னைச் சரணம் புகுந்தனனுகையால் எனக்கு அனுகூலனுயிருக்கையையே பெருஞ்செல்வமாகப் பெற்றனன்; இவ்விபீஷணன் நிஷ்கண்டகமான லாங்காதிபத்யத்தை உத்தரக்ஷணத்திலேயே பெறப்போகின்றனன். இதற்கு ஸந்தேஹமே இல்லை. நீயோ தர்மம் சிறிதுமில்லாதவன்; மூர்க்கர்களை ஸஹாயமாக வைத்துக்கொண்டிருப்பவன்; பாபஸ்வபாவன்; மனத்தை ஸ்வாதீனப்படுத்தாமல் போனவழியே விட்டிருப்பவன்; இப்படிப்பட்ட உனக்கு இனி ஒருநொடிப்பொழுதாயினும் ராஜ்யத்தை அனுபவிக்க முடியாது. ராக்ஷஸா! ஸீதையைக் கொண்டுவந்து கொடுத்து என்னைச் சரணமடைவாயாயின் விபீஷணனுக்கு ராஜ்யங்கொடுத்து உன் ப்ராணன்களை ரக்ஷிப்பேன். அப்படி இல்லாமல், தைர்யத்தை ஊன்றி வீர்யத்தையுங் கைப்பற்றி யுத்தஞ் செய்வதாயிருப்பின் செய்வாயாக. நீ யுத்தத்தில் என் பாணங்களால் அடிக்கப்பட்டு மரணம் அடைந்து, அதனுல் பாவங்களைத் துறந்து பரிசுத்தனுவாய். அப்படியில்லாமல் நீ பறவையுருவமெடுத்து மனோவேகத்துடன் மூன்று லோகங்களுக்குப் போயினும், என் கண்களில் பட்ட பின்பு ப்ராணன்களோடு திரும்பிப் போகவல்லனல்லை. உனக்கு ஒரு ஹிதமான வார்த்தை சொல்லுகிறேன். இனி உலகத்தில் ஒரு ராக்ஷஸனையுங்கூடப் பிழைத்திருக்கும்படி விடமாட்டேனுகையால் உனக்கு அபரக்ரியைகளைச் செய்பவன் எவனுமே இருக்கமாட்டான். ஆகையால் இப்பொழுது உனக்கு நீயே அபரக்ரியைகளைச் செய்துகொள்வாயாக. நீ இனிப்பார்க்கப் போகிறதில்லையாகையால் இப்பொழுதே லங்கை முழுவதையும் நன்கு பார்த்துக் கொள்வாயாக. உன் ப்ராணன்கள்

னன் கையில் இருக்கின்றன, காண்' என்பாய்' என்றனன். எப்படிப்பட்ட கார்யங்களையும் அநுயாஸமாகச் செய்துமுடிக்குந் திறமையுடைய ராகவன் இங்ஙனம் சொல்லுகையில், தாரையின் புதல்வனுகிய அவ்வங்கதன் ஆகாயத்திற் கிளம்பிக் கரசாணுதியான உருவத்தையடைந்த அக்னிதேவனோ என்னும்படி போயினன். அவ்வங்கதன் ஸந்தோஷத்தினால் மிகுதியும் ஒளி விளங்கப்பெற்று முஹூர்த்த காலத்தில் ராவணபவனத்தைச் சேர்ந்து அங்கு மந்த்ரிகளுடன் உட்கார்ந்திருக்கின்ற ராவணனை மனவூக்கத்துடன் பார்த்தனன். அப்பால் பொன்தோள்வளைகள் விளங்கப்பெற்ற அவ்வானரபுங்கவன் அங்கதன், அந்த ராவணனது ஸமீபத்தில் இறங்கி எரிகின்ற அக்னிபோல் ப்ரகாசித்துக்கொண்டு நின்றனன். அவ்வங்கதன் முதலில் தன் பெயரையும் ஊரையும் தானே தெரிவித்து, அனந்தரம் ராவணனுக்கும் அவன் மந்தரிகளுக்கும் ராமன் சொல்லியனுப்பின சிறந்த ஹிதவசனங்களையெல்லாம் ஏற்றக்குறையின்றி மொழியத்தொடங்கி 'நான் கோஸல தேசாதிபதியும் கார்யங்கள் அநுயாஸமாகச் செய்துமுடிக்குந் தன்மையனுமாகிய ராமனுடைய தூதன்; வாலியின் குமாரன்; அங்கதனென்னும் பெயருடையவன். என்னை நீ கேட்டிருக்கிறாயோ? ரகுகுலத்தில் பிறந்து கௌஸல்யையின் ஸந்தோஷத்தை வளரச் செய்பவனுகிய ராமன், உனக்கு இங்ஙனம் சொல்லியனுப்பினன். 'கொடியனே! பட்டணத்தினின்று புறப்பட்டு வந்து எதிரே நின்று யுத்தஞ் செய்வாயாக. உனது ஆண்மையை வெளியிடுவாயாக. உன்னையும் உன் புதல்வர்களையும் தாயாதிகளையும் பந்துக்களையும் மந்த்ரிகளெல்லோரையும் நான் வதிக்கப்

போகின்றனன். நீ மடிந்தபின்பு மூன்று லோகங்களும் பயமின்றி ஸுகித்திருக்கப் போகின்றன. தேவதைகளுக்கும் தானவர்களுக்கும் யக்ஷர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் உரகர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் பகைவனும் ரிஷிகளை ஹிம்ஸிப்பவனுமாகிய உன்னை இப்பொழுது வதிக்கப்போகின்றனன். நீ என்னை ஸத்கரித்துப் பணிந்து ஸீதையைக் கொடுக்கமாட்டாயாயின், உன்னைக் கொன்றுவிடுவேன்; அப்பொழுது லங்கா ராஜ்யம் முழுவதும் விபீஷணனுக்கு சேரப்போகிறது; இது நிச்சயம்' என்பாய்' என்றனன். வானரஸ்ரேஷ்டனாகிய அங்கதன் இங்ஙனம் பருஷவசனங்களைப் பேசுகையில், ராக்ஷஸகணாதிபதியான ராவணன் கோபத்தினால் மெய்ம்மறந்தவனாயினன். அப்பால் அந்த ராவணன் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று மந்திரிகளைப் பார்த்து 'இந்த துர்ப்புத்தியைப் பிடித்துக்கொள்ளுங்கள். 'கொல்லுங்கள் கொல்லுங்கள்' என்று பலமுறை ஆஜ்ஞாபித்தனன். ராவணன் அங்ஙனம் கட்டளையிட்டதைக் கேட்டு எரிகின்ற அக்னிபோல் ஜ்வலிப்பவர்களும் பயங்கரமான உருவமுடையவர்களுமான ராக்ஷஸர்கள் நால்வர் அந்த அங்கதனைப் பிடித்துக்கொண்டனர். அப்பொழுது வீரனாகிய அவ்வங்கதன் மிகவும் தீரனாகையால் ராக்ஷஸர் கூட்டத்தினிடையில் தன்பலத்தைக் காண்பிக்கும் பொருட்டுத் தானே அவர்கள் கையில் அகப்பட்டுக் கொண்டனன். அவ்வங்கதன் அந்த ராக்ஷஸர்களைத் தனது இருகரங்களாலும் பக்ஷிகளைப்போல் இறுகப் பிடித்துக்கொண்டு பர்வதம்போன்ற உப்பரிகையின்மேல் கிளம்பினன். அந்த ராக்ஷஸர்களெல்லோரும் ராக்ஷஸேஸ்வரன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவ்வங்கத



2737. அங்கதன் ராவணனிடந் தூதுசென்று ராக்ஷஸர்களை அவமதித்து வருதல்.

னுடைய வேகத்தினல் ஆகாயத்தினின்று உதறப்பட்டு பூமியில் விழுந்தனர். அனந்தரம் ப்ரதாபசாலியும் வாலிகுமாரனுமாகிய அங்கதன் ராவணனுடைய உப்பரிகையின் சிகரம் பர்வத சிகரம்போல் மிகவும் உயர்ந்திருக்கக் கண்டனன். அவன், 'இப்பாபிஷ்டனுக்கு இவ்வழகிய உப்பரிகை தகுமோ' என்னும் கோபத்தினல் அதன் சிகரத்தைக் காலால் உதைத்தனன். அச்சிகரம் அவ்வங்கதனுடைய காலால் உதைக்கப்பட்டு ராவணனுக்கெதிரில் முன்பு இந்த்ரனல் பிளக்கப்பட்ட ஹிமவத்பர்வதத்தின் சிகரம்போல் பல சுக்கல்களாகப் பிளந்தது. அவ்வங்கதன் இங்ஙனம் அந்த ப்ரஸாத சிகரத்தை முறித்துத் தன்பெயரை எல்லோர்க்கும் நன்ருகக் கேட்பித்து, மிகுதியும் த்வனி உண்டாகும்படி ஸிம்ஹநாதமுஞ் செய்து ஆகாயத்திற் கிளம்பினன். அங்ஙனம் அவன் ராக்ஷஸர்களெல்லோர்க்கும் துக்கத்தையும் வானரர்களனைவர்க்கும் ஸந்தோஷத்தையும் விளைவித்துக்கொண்டு வானரர்களின் இடையில் புகுந்து ராமனது பார்ஶ்வத்திற் சேர்ந்தனன். ராவணன் தனது உப்பரிகை அங்ஙனம் முறிந்ததற்கு மிகுதியும் கோபாவேசங்கொண்டு 'இவன் ஒருவனுயினும் நிரம்பிய தான என் பலத்தை யெல்லாம் அவமதித்து நிர்ப்பயமாகப் போகின்றுனே! இப்படிப்பட்டவர் பலர் என்னை நாசஞ்செய்ய முயலுகையில் பிழைப்பது எப்படி?' என்று தனக்கு விநாசம் உண்டாகுமென்று சங்கித்துச் சிந்தையுற்றவனுகி மிகுதியும் பெருமூச்செறிந்தனன். அனந்தரம் அங்கதன் வருவதைக்கண்டு மிகுதியும் ஸந்தோஷமுற்று ஸிம்ஹநாதஞ் செய்கின்ற வானரர் பலர் சூழ்ந்திருக்கப்பெற்று ராமன் பகைவனை வதிக்க விரும்பி யுத்தத்திற்கு முயன்றிருந்தனன். அப்பொழுது

மஹாவீர்யசாலியும் பர்வத சிகரம்போன்ற உருவமுடையவனுமாகிய ஸுஷேணன் காமரூபிகளான பலவானரர்களால் சூழப்பட்டுப் பகைவர்க்கு எதிர்க்க முடியாதவனாகி ஸுக்ரீவனது கட்டளையின்படி சந்த்ரன் நக்ஷத்ரஸமூஹங்களில் திரிவதுபோல், லங்காத்வாரங்கள் நான்கிலும் சுற்றித் திரிந்துகொண்டிருந்தனன். அங்ஙனம் லங்கையில் இறங்கி ஸமுத்ரக்கரையோரம் வரையிலும் நிறைந்திருக்கிற பல நூறு அக்ஷௌஹிணிக்கணக்குடைய அவ்வானர ஸைன்யத்தைக் கண்டு, தீரர்களான சில ராக்ஷஸர்கள் ஆச்சர்யமுற்றனர்; தீரமில்லாத சிலர் பயப்பட்டனர். சூரர்களான சிலர் யுத்தகர்வத்தினால் ஸந்தோஷமே பெற்றனர். மதிலுக்கும் அகழிக்கும் இடையிலுள்ள இடமெல்லாம் வானரர்களால் சூழப்பட்டு மிகுதியும் வானரர்கள் நிறைந்திருக்கையால் அது வானரமயமான மற்றொரு ப்ராகாரம்போல் தீனர்களான ராக்ஷஸர்களுக்குப் புலப்பட்டது. ராக்ஷஸர்களெல்லோரும் பயத்தினால் உடம்பு தெரியாமல் ஹாஹாகாரஞ் செய்தனர். ராக்ஷஸர்களின் ராஜதானியாகிய லங்காபட்டணத்தில் பயங்கரமான அப்படிப்பட்ட கோலாஹலம் உண்டாயிருக்கையில், சூரர்களான ராக்ஷஸர்கள் பெரிய ஆயுதங்களை ஏந்தி ப்ரளயகாலத்தில் வீசுகிற காற்றுக்கள்போல் உலாவிக்கொண்டிருந்தனர். நாற்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் யுத்தாரம்பம்.

அனந்தரம் அங்கிருந்த அந்த ராக்ஷஸர்கள் ராவணனுடைய வீட்டிற்குச் சென்று, ராமன் வானரர்க

ளோடு கூடி லங்காபுரத்தை யெல்லாம் தகைந்தா னென்று அவனுக்குத் தெரிவித்தனர். அந்த ராவணன், லங்காபுரத்தை வானரர்கள் தடுத்ததாகக் கேட்டு மிகுதியும் கோபமுற்று நகரத்திற்கு ரக்ஷையை இரு மடங்கதிகமாகச் செய்து உப்பரிகையின்மேல் ஏறினன். அவன் அங்ஙனம் உப்பரிகையின்மேல் ஏறிக் கணக்கிட முடியாத வானர ஸேனுஸமூஹங்கள் யுத்தத்தை விரும்பி நாற்புறத்திலும் பர்வதங்களோடும் உத்யான வனங்களோடும் கானகங்களோடுங் கூடிய லங்காபுரம் முழுவதும் சூழ்ந்திருக்கக் கண்டனன். அவன் பூமி முழுவதும் வானரர்கள் நிறைந்திருப்பதைக் கண்டு 'இவர்களை எங்ஙனம் முடிக்கலாம்' என்று சிந்தை யுற்றவனுயினன். அந்த ராவணன் அவ்வாறு வெகு நேரம் சிந்தித்து, அப்பால் தைர்யத்தை ஏற்றுக் கொண்டு ஆச்சர்யத்தினுல் கண்களை மலரவிழித்து, ராமனையும் வானர யூதபதிகளையும் கண்டனன். ராமன் ஸந்தோஷம் அடைந்து முன்பிருந்த இடத்தைவிட்டுக் கோட்டையின் அருகாமையிற் சென்று லங்கை முழுவதும் ராக்ஷஸர்களால் சூழப்பட்டு ஸுரக்ஷிதமா யிருக்கக் கண்டனன். ராமன் விசித்ரமான த்வஜங்க ளாலும் பதாகைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிற லங்காபுரத்தைக் கண்டு, உடனே ஸீதையை நினைத் துக்கொண்டு மனவருத்தமுற்று 'இளமான்கண் போன்ற கண்களையுடைய அப்பெண்மணி, அந்த ஜனகராஜன் புதல்வி, ஸீதை, இவ்விடத்தில் ராக்ஷஸர்க ளால் பீடிக்கப்பட்டு என் நிமித்தமாக மிகுதியும் சோகத்தினுல் பரிதபித்து உபவாஸத்தினுல் இளைத்து பூமியே படுக்கையாகப் பெற்று வருந்துகின்றனளே' என்று துக்கித்தனன். அந்த ராமன் தர்மஸ்வபாவ

ஞுகையால் ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டிருக்கிற அந்த ஸீதையை மன இரக்கத்துடன் நினைத்துக் கொண்டு ரோஷம் மிகப்பெற்று வானரர்களை அழைத்து 'சீக்ரமாகச் சத்ருவதஞ் செய்வீர்கள்' என்று ஆஜ்ஞாபித்தனன். எப்படிப்பட்ட கார்யங்களையும் அநாயாஸமாக நிறைவேற்றுந் தன்மையுடைய ராகவன் இங்ஙனம் ஆஜ்ஞாபிக்கையில், வானரர்கள் ஒருவரையொருவர் பொறுமையால் 'நான் முன்னே நான் முன்னே' என்று விரைவுடன் யுத்தத்திற்குத் தலைப்பட்டு ஸிம்ஹநாதங்களைச் செய்து லங்கை முழுவதும் பெருங்கோஷம் உண்டாகச் செய்தனர். வானரோத்தமர்கள் 'இந்த லங்கையைப் பர்வதசிகரங்களைப் பொகட்டாவது பிடிகளால் புடைத்தாவது பாழ்செய்வோம்' என்று எல்லோரும் மனவிருப்பமுற்றிருந்தனர். அம்மேலான வானரர்கள் பர்வத சிகரங்களையும் பெரிய பர்வதகண்டங்களையும் (மலைத்துண்டங்களையும்) கைகளில் ஏந்திக் கொண்டும், நானாவித வ்ருக்ஷங்களைப் பிடுங்கி எடுத்துக் கொண்டும் யுத்தத்திற்கு ஸித்தமாயிருந்தனர். அப்பொழுது ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் பார்த்துக் கொண்டிருக்கையில் அவ்வானர ஸேனைகளெல்லாம் பாகம் பாகமாகப் பிரிந்து ராமனுக்கு ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டு லங்கையின் ப்ராகாரத்தின்மேல் ஏறின. சிவந்த முகமும் பொன் நிறமும் பொருந்தின அவ்வானரர்கள் ராமனுக்காக ப்ராணன்களை விடவும் நிச்சயித்து ஸால வ்ருக்ஷங்களையும் தால வ்ருக்ஷங்களையும் கற்களையும் ஆயுதமாகக்கொண்டு லங்காபுரியின் மேல் எதிர்த்தனர். அவ்வானரர்கள் வ்ருக்ஷங்களாலும் பர்வதசிகரங்களாலும் முட்டிகளாலும் அந்த லங்கையின் ப்ராகார சிகரங்களையும் உத்யான வனங்களையும்

பட்டணத்து வாசற்படிகளையும் முறித்துப் பாழ்செய்த னர். வானரர்கள் மண்புழுதிகளையும் பர்வதசிகரங்களை யும் புற்களையும் கட்டைகளையும் போகட்டுத் தெளிந்த ஜலமுடைய அகழிகளைத் தூர்த்துவிட்டனர். அப்பால் சிலவானரர்கள் ஆயிரம் வானரர்களோடும், சிலர்கோடி வானரர்களோடும் சிலர் நூறுகோடி வானரர்களோடும் கூடி லங்கையினுடைய ப்ராகாரத்தின்மேல் ஆரோ ஹித்தனர். பெரிய யானைகள்போன்ற உருவமுடைய வானரர்கள் பொன்மயமான பட்டணத்து வாசற்படிகளை இடிப்பதும் கைலாஸ சிகரம்போன்ற கோபுரங்களை முறிப்பதும் இங்குமங்கும் கிளம்பிப் போவதும் வருவ தும் கர்ஜனை செய்வதுமாகி அந்த லங்கையின் மேல் எதிர்த்துப் போயினர். காமரூபிகளான வானரர்கள் 'மஹா பலிஷ்டனாகிய ராமனும் லக்ஷ்மணனும் எல்லாரி லும் மேலாகி விளங்குகின்றனர். வானரர் தலைவனாகிய ஸுக்ரீவனும் ராமனால் பாதுகாக்கப்பட்டு எல்லாரிலும் மேன்மையுற்றிருக்கின்றனன்' என்று உரக்க கோஷிப்ப தும் ஸிம்ஹநாதங்களைச் செய்வதுமாகி லங்கா ப்ராகா ரத்தின்மேல் எதிர்த்துப் போயினர். அவர்களில் வீரபாஹு ஸுபாஹு நலன் என்கிற இவ்வானர யூதபதிகள் லங்கையின் ப்ராகாரத்தைத் தகைந்து கொண்டு இறங்கி, இதனிடையில் ஸேனைக்குத் தகுந்த விடுதியை ஏற்படுத்தி ஸேனையை அந்தந்த வ்யூஹங்களால் சீர்திருத்தி நிலைப்படுத்தினர். பலிஷ்ட னாகிய குமுதன் ஜயசீலர்களான பத்துக்கோடி வானரர்களால் சூழப்பட்டு ஈசான்ய மூலையிலிருந்து கிழக்கு வாசற்படியைத் தகைந்து நின்றனன். ப்ரகஸ னும் மஹாபாஹுவாகிய பனஸனும் பல வானரர்க ளுடன் கூடி அந்தக் குமுதனுக்கு ஸஹாயத்தின்

பொருட்டுக் கிழக்கு வாசலில்தானே இருந்தனர். வீரனும் பலிஷ்டனுகிய சதவலி இருபதுகோடி வானரர்களுடன் கூடி ஆக்னேய மூலையில் இருந்து தென்வாசற்படியைத் தகைந்து நின்றனன். மஹாபலனும் தாரையின் தகப்பனுமாகிய ஸுஷேணன் அறுபதுகோடி வானரர்களுடன் நிருதிமூலையில் இருந்து மேற்கு வாசற்படியைத் தகைந்து நின்றனன். பலிஷ்டனுகிய ராமன் லக்ஷ்மணனுடன்கூடி வடக்கு வாசற்படியையே தகைந்து நின்றனன். வானரர் தலைவனுகிய ஸுக்ரீவனும் வாயுமூலையில் இருந்து வடக்கு வாசற்படியைத் தகைந்து நின்றனன். பெருஞ் சரீரமுடையவனும் காண்போர்களுக்கு பயத்தை விளைவிப்பவனும் மிகுந்த வீர்யத்துடன் ப்ரகாசிப்பவனுமாகிய கவாக்ஷனென்னும் கோலாங்கூலன் (கொண்டை முயல்) கோடி கோலாங்கூலர்களால் (கொண்டை முயல்களால்) சூழப்பட்டு ராமனது பக்கத்தில் நின்றிருந்தனன். பகைவரைப் பறக்கச் செய்யவல்ல மஹாவீரனுகிய தூம்ரன் பயங்கரமான வேகமுடைய கோடி பல்லூகர்களோடு (கரடிகளோடு) கூடி ராமனது பக்கத்தில் வந்து நின்றனன். மஹாவீர்யமுடையவனும் பலிஷ்டனுகிய விபீஷணன் கவசம் அணிந்து கதையைக் கையில் ஏந்தி, யுத்தத்திற்கு முயன்றிருக்கிற மந்த்ரிகளுடன் கூடி ராமனது பக்கத்தில் வந்து நின்றனன். கஜன் கவாக்ஷன் கவயன் சரபன் கந்தமாதனன் ஆகிய இவர்கள் சுற்றித் திரிந்துகொண்டு வானர ஸைன்யத்தையெல்லாம் பாதுகாத்துக்கொண்டிருந்தனர். அனந்தரம் ராக்ஷஸ ராஜனுகிய ராவணன் வானர ஸேனைகளின் ஸந்நிவேசாக்ரமத்தை (இறங்கியிருக்குஞ் சீர்திருத்தத்தை) யெல்லாங்கண்டு மிகவும் கோப

முற்றுத் தனது ஸைன்யத்தை யெல்லாம் அப்பொழுதே யுத்தத்திற்குப் புறப்படும்படி ஆஜ்ஞாபித்தனன். ராவணனது முகத்தினின்று அந்தக் கட்டளை வெளிப்படுகையில் கேட்டவுடனே ராக்ஷஸர்களெல்லோரும் பயங்கரமான கோஷம் உண்டாகும்படி ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். அனந்தரம் சந்த்ரன் போல் வெளுத்து நிர்மலமான மேல் பாகங்களையுடைய ராக்ஷஸர்களின் பேரிவாத்யங்கள் பயங்கரமான சப்தம் கிளம்பும்படி ராக்ஷஸர்களது ஸேனையின் முன்பு கொண்டுபோய் பொன்மயமான தண்டங்களால் அடிக்கப்பட்டு நாற்புறத்திலும் ராக்ஷஸர்க்கு யுத்தத்தில் உத்ஸாஹம் உண்டாகும்படி முழங்கின. மிகுதியும் பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸர்கள் லக்ஷம் லக்ஷமாக முகக்காற்றுக்களால் சங்கவாத்யங்களை நிரப்பி ஊதுகையில் அவை பெருங்கோஷத்துடன் ஒலித்தன. ஆபரணங்களின் ஒலிகளால் ப்ரகாசிப்பவர்களும் கறுத்த சரீரமுடையவரும் சங்கவாத்யங்களைத் தரித்திருப்பவருமாகிய அவ்வரக்கர்கள், மின்வட்டங்கள் விளங்கவும் நாரைகள் அருகே பறக்கவும் பெற்ற மேகங்கள்போல் திகழ்ந்தனர். அனந்தரம் ராவணனுடைய கட்டளையின்படி ஸேனையிலுள்ள ராக்ஷஸர்கள் ஸந்தோஷமுற்று ப்ரளயகாலத்தில் பொங்கி வருகின்ற மஹாஸமுத்ர ப்ரவாஹம்போல் வெளிப்புறப்பட்டனர். பிறகு வானரஸேனையிற் சேர்ந்தவர் ப்ரஸித்தமான த்ரிகூடபர்வதத்தின் மலைச்சாரல்கள் தோறுமுள்ள குஹைகளெல்லாம் நிரம்பும்படி நாற்புறத்திலும் பயங்கரமான ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். பலிஷ்டர்களான ராக்ஷஸர்கள் செய்யும் ஸிம்ஹநாதங்கள் சங்கத்வனிகளோடும் யானைகளின் கீங்கா

ரங்களோடும் குதிரைகளின் கனைப்புகளோடும் ரதங்களின் சக்கரக்கட்டுகளுடைய சப்தங்களோடும் மற்ற ராக்ஷஸர்களின் இரைச்சல்களோடும் கூடி, பூமியிலும் ஆகாயத்திலும் ஸமுத்ரம் முழுவதிலும் ப்ரதித்வனி உண்டாகும்படி வ்யாபித்தன. இதற்குள், முன்பு தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் நடந்தாற்போல், ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் பயங்கரமான யுத்தம் நடந்தது. பயங்கரர்களான அந்த ராக்ஷஸர்கள் தமது பராக்ரமங்களைச் சொல்லிக்கொண்டு தளதளவென்று விளங்குகின்ற கதைகளாலும் சக்திகளாலும் சூலங்களாலும் கோடாலிகளாலும் வானரர்களை அடித்தனர். (மஹாவீரர்களான வானரர்களும் யுத்தத்தில் ராக்ஷஸர்களை அடித்தனர். 'மிகுந்த பலமுடைய ராமனும் மஹாபலனான லக்ஷ்மணனும் யாவரிலும் மேலாயிருக்கின்றனர்.) ராஜனாகிய ஸுக்ரீவன் எல்லாரிலும் மேன்மையுற்றிருக்கின்றனன்' என்னும் பெருந்த்வனி வானர ஸைன்யத்தில் ஓயாதிருந்தது. மஹா சரீரர்களான வானரர்கள் 'ராஜனே! ஜய விஜயீபவ' என்று ஜயங்கூறுவதும், தமது பேர்களையும் வ்ருத்தாந்தங்களையும் கோஷமிட்டுச் சொல்வதுமாகி மிகுந்த வேகத்துடன் வ்ருக்ஷங்களையும் பர்வதசிகரங்களையும் வீசியெறிந்தும் நகங்களால் பீறியும் பற்களால் கடித்தும் அந்த ராக்ஷஸர்களை ஹிம்ஸித்தனர். பயங்கரர்களான சில ராக்ஷஸர் ப்ராகாரத்தின்மேல் இருந்து பிண்டிவாலங்களாலும் கத்திகளாலும் சூலங்களாலும் பூமியிலிருக்கிற வானரர்களைத் துண்டித்தனர். கீழ்த்தரைமேல் இருக்கின்ற வானரர்களும் மிகவும் கோபித்து மிகுந்த வேகமுடையவராகையால் ப்ராகாரத்தின் நுனிவரையிலும் மேல் கிளம்பி அங்கி

ருக்கும் ராக்ஷஸர்களைக் கீழ்விழத்தள்ளினர். அப்பொழுது ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் நடந்த அந்தத் துமுலயுத்தம் ரக்தமும் மாம்ஸங்களும் நிரம்பி எங்கும் நிகாற்றதாகி நடந்தது. நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் த்வந்த்வ யுத்தம்.

அனந்தரம் மஹாதீரர்களான அவ்வானரர்கள் அங்ஙனம் எதிரின்றி யுத்தஞ் செய்துகொண்டிருக்கையில், ராக்ஷஸ ஸேனையிற் சேர்ந்தவர் சிறிதும் பொறுக்க முடியாமல் மிகவும் பயங்கரமான கோபாவேசமுற்றனர். பயங்கரமான செயலுடையவர்களும் ராக்ஷஸஸ்ரேஷ்டர்களுமாகிய அந்த ராக்ஷஸர்கள் ராவணனது ஜயத்தை விரும்பிப் பொன்மயமான சிரோ பூஷணங்களால் விளங்கும் குதிரைகளோடும் அக்னிஜ்வாலைபோல் திகழ்கின்ற த்வஜங்களோடும் ஸூர்யமண்டலம்போல் தகதகவென்று ஜ்வலிக்கின்ற ரதங்களோடும் அழகான கவசங்களோடும் கூடிப் பத்து திக்குக்களிலும் ப்ரதித்வனி உண்டாகும்படி ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டனர். மிகவும் பெரிதான வானரஸேனையும் ஜயத்தை விரும்பி, காமரூபிகளான ராக்ஷஸர்களின் ஸைன்யத்தின் மேல் மிகுவேகத்துடன் எதிர்த்தது. இப்படி ராக்ஷஸர்களும் வானரர்களும் ஒருவர்மேல் ஒருவர் எதிர்த்துச் செல்லுகையில், இதற்குள் இருபுறத்தவர்க்கும் த்வந்த்வயுத்தம் நடந்தது. மஹாதேஜஸ்வியாகிய இந்த்ரஜித்து வாலிகுமாரனை அங்கத

னேடு, யமதர்மராஜன் முக்கண்ணனேடு யுத்தஞ் செய்வதுபோல், யுத்தஞ்செய்தனன். யுத்தத்தில் சத்ருக்களுக்கு எப்பொழுதும் ஸஹிக்க முடியாத, விபீஷணனுடைய மந்த்ரி ஸம்பாதி யென்பவன், ப்ரஜங்கனென்னும் ராக்ஷஸனுடன் போர் செய்தனன். ஹனுமான், ஜம்புமாலியைக் கொல்லத்தொடங்கினன். ராவணன் தம்பியாகிய ராக்ஷஸன் விபீஷணன், மிகுதியும் பெருங்கோபம் உண்டாகப்பெற்று மிகவும் தீவ்ர வேகனுகிய மித்ரக்னனென்னும் ராக்ஷஸனுடன் சண்டை செய்தனன். மஹாபலனுகிய கஜன், தபனென்னும் ராக்ஷஸனேடு போர்புரிந்தனன். மஹாதேஜஸ்வியாகிய நீலன், நிகும்பனேடும், வானராதிபதியான ஸுக்ரீவன் ப்ரகஸனேடும், வீர்யலக்ஷ்மீ விலாஸம் பொருந்தின லக்ஷ்மணன் விரூபாக்ஷனேடும், அவமதிக்கமுடியாத அக்னிகேது ரஶ்மிகேது ஸுப்தக்னன் யஜ்ஞகோபன் ஆகிய இவர்கள் ராமனேடும் யுத்தஞ் செய்தனர். வஜ்ரமுஷ்டியென்னும் ராக்ஷஸன் மைந்தனேடும், அசனிப்ரபனென்பவன் த்விவிதனேடுமாகக் கபிமுக்யர்களான அவ்விருவரும் மிகவும் பயங்கரர்களான இரண்டு ராக்ஷஸர்களுடன் போர்புரிந்தனர். வீரனும் பயங்கரனும் யுத்தத்தில் எவர்க்கும் அடக்க முடியாதவனுமாகிய ப்ரதபனென்பவன் யுத்தத்தில் தீக்ஷ்ணப்ரதாபனுகிய நலனுடன் சண்டை செய்தனன். பலிஷ்டனும் யமதர்மராஜனது புதல்வனும் மஹா கபியுமாகிய ஸுஷேணன் வித்யுன்மாலியோடு யுத்தஞ் செய்தனன். மற்றும், பயங்கரமான உருவமுடைய பல வானரர்கள் மற்ற ராக்ஷஸர்கள் பலருடன் நானுவிதமான த்வந்த்வ யுத்தஞ் செய்தனர். அப்பொழுது வீரர்களும் ஒருவரையொருவர் வெல்லவேண்டுமென்று விரும்

புற்றவருமாகிய அவ்வரக்கர்களுக்கும் வானரர்களுக்கும் மயிர்க்கூச்சல் உண்டாகும்படி பெரிய துமுலயுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தில் வானரர்களுடையவும் ராக்ஷஸர்களுடையவும் தேஹங்களினின்று, தலை மயிர்களே வேலம்பாசியாகவும் கைகால் முதலிய அவயவங்களே கட்டைக் குவியல்களாகவும் பெற்ற ரக்த ப்ரவாஹங்களாகிற நதிகள் பெருகின. இந்த்ரஜித்து கோபித்தவனுகி, தேவேந்த்ரன் வஜ்ரா யுதத்தை எடுப்பதுபோல், கதையைக் கையில் ஏந்திக் கொண்டு, சத்ரு ஸைன்யங்களைப் பறந்தோடச் செய்ய வல்ல வீரனுகிய அங்கதனை அடித்தனன். அனந்தரம், வீரலக்ஷ்மியால் விளக்கமுற்றவனும் மஹாவேகனு மாகிய அவ்வங்கதன் பொன்னுல் விசித்ரஞ் செய்யப் பட்ட உருவத்தையுடைய அவ்விந்த்ரஜித்தின் ரதத்தை ஸாரதியோடும் குதிரைகளோடும் முறியும்படி அடித்த னன். ப்ரஜங்கன் ஸம்பாதியை மூன்று பாணங்களால் அடிக்கையில், அவன் யுத்தத்தின் தலையில் நின்று மராமரமென்னும் ஸாலவ்ருக்ஷத்தினுல் ப்ரஜங்கனை அடித்தனன். மஹாபலனுகிய ஜம்புமாலி ரதத்தி லிருந்துகொண்டு யுத்தத்தில் கோபமுற்றவனுகி ரதத்தி லேயே என்றும் இருக்கின்ற சக்தியை எடுத்து எறிந்து ஹனுமானுடைய வக்ஷஸ்தலத்தைப் பிளந்த னன். வாயுகுமாரனுகிய ஹனுமானும் விரைவுடன் அந்த ஜம்புமாலியினுடைய ரதத்தின்மேல் ஏறி அவ் வரக்கனுடன் கூடவே அந்த ரதத்தை உள்ளங்கையால் அறைந்தனன். பயங்கரனுகிய அந்த ப்ரதபனன் கர்ஜித்துக்கொண்டு நலன்மேல் எதிர்த்தனன். ப்ரதப னன் ஹஸ்தலாகவ முடையவனுகையால் கூரான பாணங்களால் நலனுடைய உடம்பு முழுவதும் பொற்று

கையில், அந்த நலன் மிகவும் விரைந்து அவனது கண்களைப் பிடுங்கி யெறிந்தனன். வானரேஸ்வரனுகிய ஸுக்ரீவன் ஸைன்யத்தை யெல்லாம் விழுங்குபவன் போல் வாயைத் திறந்துகொண்டு வருகின்ற ப்ரகஸனை ஒரு ஏழிலைப்பாலை வ்ருக்ஷத்தினுல் அடித்துப் பிளந்து முடித்தனன். எதிர்க்கமுடியாத அக்னிகேது ரஸ்மிகேது ஸுப்தக்னன் யஜ்ஞகோபன் ஆகிய இவர்கள் பலபாணங்களால் ராமனைப் பிளந்தனர். ராமனும் சினந்து, அக்னிஜ்வாலை போன்ற கூருள்ள நான்கு பாணங்களால் அந்த நான்கு ராக்ஷஸர்களுடைய தலைகளையும் அறுத்தனன். மைந்தன் வஜ்ரமுஷ்டியை யுத்தத்தில் முஷ்டியால் அடிக்கையில், அவன் ரதத்தோடும் ரதக் குதிரைகளோடும் கூடி, பட்டணதுக் கோட்டைமேல் இயற்றப்பட்ட உப்பரிகை இடிந்து விழுவதுபோல், தரையில் விழுந்தனன். நிகும்பனென்னும் ராக்ஷஸன், யுத்தத்தில் கூரிய கணைகளை விடுத்து மைக்குவியல் போன்ற நீல நிறமுடைய நீலனை, கதிரவன் கொடிய கிரணங்களால் கார்மேகத்தைப் பிளப்பதுபோல் பிளந்தனன். அந்த நிகும்பன் விரைந்து பாணந் தொடுக்கும்படியான ஹஸ்தலாகவமுடையவனுகையால் மீளவும் நூறுபாணங்களால் நீலனை யுத்தத்தில் பிளந்து சிரித்தனன். நீலன் யுத்தத்தில் விஷ்ணுதேவன்போல் அந்த நிகும்பனுடைய ரதசக்கரத்தையே எடுத்துக்கொண்டு அவனுடைய ஸாரதியின் தலையை அறுத்துத் தள்ளினன். வஜ்ரத்தையும் இடியையும் நிகர்த்த சரீர ஸ்பர்சமுடைய த்விவிதனும், ராக்ஷஸர்கள் எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது அவர்களைப் பொருள் செய்யாமல் யுத்தத்தில் அசனிப்ரபனென்பவனைப்

பர்வதசிகரத்தினால் அடித்தனன். அந்த அசனிப்ரபன், பர்வதங்களைக்கொண்டு சண்டை செய்யுந்தன்மையுள்ள வானரோத்தமனாகிய த்விவிதனை இடிபோன்ற கூரான பாணங்களால் ஹிம்ஸித்தனன். த்விவிதன் சரீரம் முழுவதும் பாணங்கள் பொற்றப்பெற்று வருந்தி மிகுதியும் கோபாவேசமுற்று ஸாலவ்ருக்ஷத்தை எறிந்து அந்த அசனிப்ரபனை ரதத்தோடும் குதிரைகளோடும் கூட அடித்துக் கொன்றனன். வித்யுன்மாலி ரதத்திலிருந்து, பொன் ரேகைகளால் அலங்கரிக்கப்பட்ட பாணங்களால் ஸுஷேணனை அடித்து அடிக்கடி ஸிம்ஹநாதஞ் செய்தனன். அப்பால் வானரோத்தமனாகிய ஸுஷேணன், ஜம்புமாலி ரதத்தின்மேலிருப்பதையும் தான் கீழிருப்பதையும் பார்த்துப் பெரிய பர்வதசிகரத்தை வீசியெறிந்து அவனது ரதத்தை விரைவில் முறித்து விழத்தள்ளினன். ராக்ஷஸனாகிய அந்த வித்யுன்மாலி மிகுதியும் லாகவமுடையவனாகையால், கதையைக் கையில் ஏந்தி விரைவுடன் ரதத்தினின்று இறங்கித் தரையில் வந்து நின்றனன். அனந்தரம் வானரசிரோமணியாகிய ஸுஷேணன் மிகுந்த கோபத்துடன் பெரியதொரு சிலையை எடுத்துக்கொண்டு வித்யுன்மாலியின்மேல் விரைந்து வந்தனன். வானரஶ்ரேஷ்டனாகிய ஸுஷேணன் அங்ஙனம் தன்மேல் எதிர்த்து வருவதைக்கண்டு வித்யுன்மாலி கதையால் அவன் மார்பில் அடித்தனன். அந்த மஹா யுத்தத்தில் வானரோத்தமனாகிய அந்த ஸுஷேணனும் அந்த கதையினடியைப் பொருள் செய்யாமல் வித்யுன்மாலியின் மார்பில் அந்தச் சிலையை எறிந்தனன். ராக்ஷஸனான வித்யுன்மாலி அந்தச் சிலையினால் அடிக்கப்பட்டு மார்பு முறியப்பெற்று ப்ராணன்களை இழந்து

பூமியில் விழுந்தனன். இங்ஙனம் சூரர்களான அவ் வானரர்கள், சூரர்களான அவ்வரக்கர்களை, தேவதைகள் அஸுரர்களைப்போல் த்வந்த்வ யுத்தத்தில் நன்கு மர்த்தனஞ் செய்தனர். (ஹிம்ஸித்தனர்.) அப்பொழுது யுத்தபூமி, ஒடிந்து விழுந்த கட்கங்களும் கதைகளும் சக்திகளும் தோமரங்களும் பட்டிசங்களும் நிரம்பி, முறிந்த தேர்களும் அறுக்கப்பட்ட யுத்தத்திற்குரிய குதிரைகளும் மாண்ட மத்தகஜங்களும் அடியுண்டு வீழ்ந்த வானரர்களும் ராக்ஷஸர்களும் ஒடிந்து விழுந்த தேர்ச்சக்கரங்களும் இருசுகளும் நுகத்தடிகளும் நிறைந்து, நரிகள் கூட்டங் கூட்டமாய் நாற்புறமும் உலாவப் பெற்றுப் பார்க்க பயங்கரமாயிருந்தது. தேவாஸுர யுத்தத்தை நிகர்த்த அந்த த்வந்த்வ யுத்தத்தில், வானரர்களுடையவும் ராக்ஷஸர்களுடையவும் முண்டங்கள் நாற்றிசைகளிலும் உயரக்கிளம்புவதும் விழுவதுமா யிருந்தன. அப்பொழுது ராக்ஷஸர்கள் வானர வீரர்களால் பிளக்கப்பட்டுச் சரீரம் முழுவதும் ரக்தம் பெருகி நிரம்பப் பெற்றுத் தமக்குப் பலத்தைக் கொடுப்பதான ஸூர்ய அஸ்தமயத்தை எதிர்ப்பார்த்துக்கொண்டு மீளவும் பலத்துடன் பெரிய யுத்தஞ் செய்தனர். நாற்பத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராத்ரி யுத்தம்.

அந்த வானரர்களும் ராக்ஷஸர்களும் அங்ஙனம் யுத்தஞ் செய்துகொண்டே யிருக்கையில், ஸூர்யன் அஸ்தமித்தனன்; அப்பால் வானரர்களின் ப்ராணன்களைப் பறிப்பதாகிய ராத்ரியும் வந்தது. அப்பொழுது

ஒருவர்மேல் ஒருவர் [1] பத்தவைரர்களும் பயங்கரமான உருவமுடையவரும் ஒருவரையொருவர் வெல்ல விரும்புகின்றவருமாகிய அந்த வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் ராத்ரி யுத்தம் நடந்தது. பயங்கரமான அந்த அந்தகாரத்தில் வானரர்கள் ராக்ஷஸனென்று வானரனையும், ராக்ஷஸர்கள் வானரனென்று ராக்ஷஸனையும், இங்ஙனம் கண்தெரியாமல் தமக்குள் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டனர். 'கொல்லு; கிழி; இங்கு வா; ஏன் ஓடுகிறாய்' என்று அவ்வந்தகாரத்தில் மிகவும் துமூலமான பெருந்த்வனியொன்று செவியிற்பட்டுக் கொண்டிருந்தது. அந்த இருட்டில் கறுத்த சரீரமுடையவரும் பொன் கவசம் பூண்டிருப்பவருமாகிய ராக்ஷஸர்கள் ராத்ரியில் ஜ்வலிக்கின்ற ஓஷதிகள் நிறைந்த அரண்யங்களோடு கூடின மஹாபர்வதங்கள் போல் புலப்பட்டனர். கரையற்றதாகிய அவ்வந்தகாரத்தில் ராக்ஷஸர் கோபமுற்றவராகி மஹாவேகத்துடன் வானரர்களைப் பக்ஷித்துக்கொண்டு யுத்தபூமியில் ஸஞ்சரித்தனர். அவ்வானரர்களும் பயங்கரமான கோபமுடையவராகி மேற்கிளம்பிக் கூரான தமது பற்களால், பொன்மயமான முடியலங்காரங்களையுடைய குதிரைகளையும் அக்னிஜ்வாலைபோல் ப்ரகாசிக்கின்ற த்வஜங்களையும் கிழித்துப்போகட்டனர். பலிஷ்டர்களான வானரர்கள் கோபத்தினால் மெய்ம்மறந்தவராகி யானைகளையும் யானைமேலிருப்பவர்களையும் பதாகைகளும் த்வஜங்களும் கட்டப்பெற்ற ரதங்களையும் இழுத்துப் போகட்டுப் பற்களால் குத்தி, இங்ஙனம் யுத்தத்தில் ராக்ஷஸ ஸைன்யத்தைப் பலவாறு கலக்கிவிட்டனர். ராமனும்

1. பத்தவைரர்—கட்டப்பட்ட வைரமுடையவர், அதாவது மாறுதலில்லாதநின்ற வைரமுடையவர்.

லக்ஷ்மணனும் அப்பொழுது அதிகமாயிராமல் சிறுச் சிறிதாகவே புலப்படுகின்ற (புலப்படுவதும் புலப்படாமல் மறைவதுமா யிருக்கிற) மேலான ராக்ஷஸர் பலரையும் கொடிய ஸர்ப்பங்கள் போன்ற கூரான பாணங்களால் வதித்தனர். குதிரைகளின் குளப்படிகளால் பொடி செய்யப்பட்டதும் ரத சக்கரங்களின் கட்டுக்களால் பூமியின்மேற் கிளம்பியதுமாகிய தூளானது யுத்தஞ் செய்பவர்களின் கண்களையும் காதுகளையும் மறைத் தது. அங்ஙனம் காண்போர்களுக்கு மயிர்க்கூச்சலை விளைக்கும்படி பயங்கரமாக யுத்தம் நடந்துகொண் டிருக்கையில், அந்த யுத்தபூமியில், மிகுதியும் பயங்கர மாகி ரக்தமே ஜலமாயிருக்கப்பெற்ற நதிகள் ப்ரவஹித் தன. அப்பால் பேரி ம்ருதங்கம் உடுக்கை முதலிய வாத்யங்களின் த்வனிகளும் சங்கம் வேணு முதலிய வாத்யங்களின் த்வனிகளும் கலந்து எங்கும் நிகரற்று அற்புதமாய்ச் செவிப்பட்டன. வானரர்களால் அடிக்கப் பட்டுக் கூச்சலிடுகின்ற ராக்ஷஸர்களுடையவும் ராக்ஷ ஸர்களால் ஹிம்ஸிக்கப்பட்டு இரைச்சலிடுகின்ற வான ரர்களுடையவும் மிடற்றோசைகள் பயங்கரமாய்க் கிளம்பின. அப்பொழுது அந்த யுத்தபூமியில் ராக்ஷஸர் களின் சக்தி சூலம் கோடாலி முதலிய ஆயுதங்களால் அடிக்கப்பட்டு விழ்ந்திருக்கிற வானரவீரர்களும், வானரர்கள் போகட்ட பர்வதசிகரங்களால் அடிக்கப் பட்டு விழ்ந்திருக்கின்ற காமரூபிகளான ராக்ஷஸர் களும் நிறைந்து நானாவித ஆயுதங்கள் புஷ்பங்களை இறைத்தாற்போல் நிரம்பியும் இருக்கையால் அது அறிய அரியதும், ரக்தங்களால் நனைந்து சேறுயிருக் கையால் போர் வீரர்களுக்குப் புகமுடியாததுமாயிருந் தது. பயங்கரமாகி வானரர்களுடையவும் ராக்ஷஸர்க

ளுடையவும் ப்ராணன்களைப் பறிப்பதுமாகிய அந்த ராத்ரி [1] காளராத்ரிபோல் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் கடக்கமுடியாமல் 'இனி எப்படி விடியுமோ?' என்று பயத்தை விளைவித்தது. அனந்தரம் பயங்கரமான அவ்வந்தகாரத்தில் அந்த ராக்ஷஸர்கள் பாணமழைக ளைப்பெய்துகொண்டு ராமனையே எதிர்த்தனர். அவ் வரக்கர்கள் கோபமுற்று கர்ஜனை செய்துகொண்டு ராமன்மேல் எதிர்க்கையில், அந்த த்வனி ப்ரளய காலத்தில் பொங்கி வருகின்ற ஸப்த ஸமுத்ரங்களின் கோஷம்போல் பயங்கரமாய்ச் செவிப்பட்டது. ராமன் ஒரு நொடிப்பொழுதில் அந்த ராக்ஷஸர்களில் ஆறு பேர்களை அக்னி ஜ்வாலைபோல் மிகவும் தீக்ஷ்ணமான ஆறுபாணங்களால் அடித்தனன். வெல்லமுடியாத யமசத்ருவும் மஹாபார்ஸ்வனும் மஹோதரனும் மஹா சரீரனாகிய வஜ்ரதம்ஷ்ட்ரனும் ராவணனால் வடக்கு வாசற்படியில் காவலிருக்கும்படி நியோகிக்கப்பட்ட அந்தச் சுக ஸாரணர்களும் ஆகிய இவ்வரக்கர்கள் அறுவரும், ராமனால் ஸமஸ்த மர்மஸ்தானங்களிலும் பாணங்கள் எய்யப்பட்டு வருந்தினவராகிப் பொறுக்க முடியாமல் யுத்தத்தினின்று தொலைந்து அப்புறஞ் சென்று ஆயுளை மிகுத்திக்கொண்டனர். மஹா பலிஷ்ட னாகிய ராமன், அந்தகாரத்தில், ஸ்வர்ணத்தினால் ஆங் காங்கு விசித்ரஞ்செய்யப்பட்டு அக்னி ஜ்வாலைபோல் விளங்குகின்ற பாணங்களைப் பரப்பித் திசைகளிலும் விதிசைகளிலும் வெளிச்சம் உண்டாகச் செய்தனன்.

---

1. இங்குக் காளராத்ரியாவது-பீமரதி யென்னும் ராத்ரி. 'ராத்ரிர் ஹீமரயிநாம ஸர்வப்ராணிபயாவஹா' என்றிருக்கிறது. அல்லது 'ஸதீச காலராத்ரிஸ்ச ஹைரவீ மணநாயிகா' என்று சொல்லப்பட்ட சக்தியும் ஆகலாம்.

(அந்தயுத்தமண்டலம் ராமனுடைய நாமாக்ஷரங்களால் (பேரெழுத்துக்களால்) அடையாளஞ் செய்யப்பெற்ற பாணங்களால் முழுவதும் நிரம்பியது.) ராக்ஷஸர்களில் பயங்கரமான உருவமுடைய மற்றும் எவரெவர் ஸ்ரீராம பிரானை எதிர்த்து நின்றார்களோ, அவர்களெல்லோரும் அக்னியில் விழும் விட்டில்கள்போல் நாசம் அடைந்தனர். பொற்பிடிகளையுடைய அனேகமாயிரம் பாணங்கள் தொடுக்கையால், அவ்விரவு மின்மினிப் பூச்சிகளோடு கூடின சரத்கால ராத்ரிபோல் விளக்க முற்றிருந்தது. இதற்கே அவ்விரவு பயங்கரமாயிருந்தது. இப்பொழுதோ ராக்ஷஸர்களும் வானரர்களும் செய்கிற ஸிம்ஹநாதங்களால் மிகவும் பயங்கரமாயிற்று. அப்பெருங்கோஷம் மேன்மேலும் வளர்ந்து முழுவதும் நிரம்புகையில், பல குஹைகளையுடைய த்ரிகூடபர்வதம் ப்ரதித்வனிகளை இடுவதாகி மறுமொழி யுரைப்பது போல் புலப்பட்டது. பெருஞ்சரீரமுடையவர்களும் இருள்போல் கருநிறத்தவர்களுமாகிய கொண்டை முயல்கள் ராக்ஷஸர்களை இருகரங்களாலும் அழுந்தக் கட்டிக்கொண்டு பக்ஷித்தன. அங்கதன் யுத்தத்தில் தனக்கு எதிராளியாகிய இந்த்ரஜித்தை வதிக்க முயன்று விரைவுடன் அவனை அடித்து அவனுடைய ஸாரதியையும் குதிரைகளையும் அடித்தனன். அங்ஙனம் பயங்கரமாகவும் மிகப்பயங்கரமாகவும் யுத்தம் நடந்து கொண்டிருக்கும்பொழுது மஹா சரீரமுடைய இந்த்ரஜித்து தன் குதிரைகளையும் ஸாரதியையும் அங்கதன் அடித்து முடிக்கையால் ரதத்தை விட்டு அங்கேயே அந்தர்த்தானம் அடைந்தனன். அங்கதன் யாவரும் புகழும்படி நடத்தின அச்செயலுக்கு தேவதைகளும் ரிஷிகளும் மற்றும் அனைவரும்

அவனைப் புகழ்ந்து அந்த ராமலக்ஷ்மணர்களிருவரையும் புகழ்ந்தனர். இந்த்ரஜித்துக்கு யுத்தத்திலுள்ள ப்ரபாவம் ஸமஸ்த பூதங்களுக்கும் தெரிந்ததே. (அவன் கண்ணுக்குப் புலப்படாதவனுகி ஸமஸ்த பூதங்களுக்கும் யுத்தத்தில் ஜயிக்க முடியாதிருந்தனன்). ஆகையால் அவர்கள், அப்படிப்பட்ட மஹாதீரனுங்கூட அங்கதனுல் அவமதிக்கப்பட்டதைக் கண்டு ஸந்தோஷமுற்றனர். அப்பால் ஸுக்ரீவனும் விபீஷணனும் மற்றுமுள்ள வானரர்களும் பகைவனுகிய இந்த்ரஜித்து அவமதி அடைந்ததைக் கண்டு மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து அங்கதனை 'நல்லது நல்லது' என்று உரக்கக் கொண்டாடினர். அப்பொழுது இந்த்ரஜித்து, அங்ஙனம் பயங்கர பராக்ரமனுகிய அங்கதனுல் யுத்தத்தில் தோல்வியடைந்து மிகுதியும் பயங்காமான கோபங் கொண்டனன். இதனிடையில் ராமன் வானரர்களைப் பார்த்து 'நீங்களெல்லோரும் வானரராஜனுகிய ஸுக்ரீவனுடன்கூடி மனவூக்கமுற்றிருப்பீர்களாக. அவ்விந்த்ரஜித்து ப்ரஹ்மாவினிடம் வரம்பெற்று மூன்று லோகங்களையும் மிகுதியும் பாதிக்கின்றனன். இப்பொழுது இவனுக்கு ம்ருத்யு ஸமீபித்திருக்கையால், இவனைக் கொல்லவேண்டுமென்கிற உங்கள் கார்யம் நிறைவேறும்பொருட்டு அவன் வந்திருக்கின்றனன். இப்பொழுது மாத்ரம் நீங்கள் எனக்காகப் பொறுத்திருப்பீர்களாக. நீங்கள் ஒரு வருத்தமுமின்றி மனக்கவலையற்றிருப்பீர்களாக' என்றனன். பாபிஷ்டனும் யுத்தத்தில் கைதீர்ந்தவனுமாகிய அவ்விந்த்ரஜித்து அந்தர்த்தான வித்யையால் கண்ணுக்குப் புலப்படாதவனுகி, மிகுதியும் கூரான இடிபோன்ற பாணங்களை ப்ரயோகித்தனன். அந்த ராக்ஷஸனுகிய இந்த்ரஜித்து

யுத்தத்தில் கோபமுற்று, ராமனையும் லக்ஷ்மணனையும் ஸர்ப்பங்களின் உருவமுடைய பயங்கரமான பாணங்களால் ஸமஸ்த அவயவங்களிலும் பிளந்தனன். அப்பொழுது அவ்விந்த்ரஜித்து கபடயுத்தஞ் செய்ய முயன்று, மாயையை அவலம்பித்து ஸமஸ்த ப்ராணிகளுக்கும் புலப்படாதவனாகி யுத்தத்தில் ரகுகுலகுமாரர்களான ராம லக்ஷ்மணர்களை மதிமயங்கச்செய்து கொண்டு, அவ்வண்ணன் தம்பிகளை பாணங்களால் பந்தித்தனன். அங்ஙனம் கோபித்திருக்கிற அவ்விந்த்ரஜித்து ஸர்ப்பங்களின் உருவமுடைய (ஸர்ப்ப ஸ்வரூபங்களான) பாணங்களால் திடீலென்று பந்தனஞ் செய்கையால், புருஷஸ்ரேஷ்டர்களும் வீரர்களுமாகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் இருவரும் பராதீனர்களாயிருக்கையில், வானரர்கள் கண்டனர். ராக்ஷஸராஜனாகிய ராவணனுடைய புதல்வன் இந்த்ரஜித்து எதிரில் நின்று ராமலக்ஷ்மணர்களை எதிர்க்க முடியாமல் மிகுதியும் புத்தியுடையவனாகையால் மாயையை உபயோகப் படுத்தி முயன்று அந்த ராஜகுமாரர்களை பந்தித்தனன்.

நாற்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.



இந்த்ரஜித்து நாகபாசங்களால் ராம லக்ஷ்மணர்களை பந்தனஞ்செய்தல்.

மிகுந்த ப்ரதாபமுடையவனும் மஹாபலிஷ்டனுமாகிய அந்த ராஜபுத்ரன் ராமன் அவ்விந்த்ரஜித்து இருக்குமிடந் தெரிய விரும்பி, வானரயூதபதிகள் பதின்மருக்குக் கட்டளையிட்டனன். சத்ருக்களைத் தபிக்கச் செய்யுந் திறமையுடைய ராமன், ஸுஷேணன் புதல்வர்களிருவரும் வானரஸ்ரேஷ்டனாகிய நீலனும் வாலிபுத்ர

னுகிய அங்கதனும் பலிஷ்டனுகிய சரபனும் விநதனும் ஜாம்பவானும் மஹாபலசாலியான ஸானுப்ரஸ்தனும் ருஷபனும் ருஷபஸ்கந்தனும் ஆகிய இந்தப் பதின்மரையும் இந்த்ரஜித்து இருக்குமிடம் அறிந்துவரும்படி ஆஜ்ஞாபித்தனன். அவ்வானரர்கள் அனைவரும் மிகுதியும் ஸந்தோஷமுற்று பயங்கரமான வ்ருக்ஷங்களைப் பிடுங்கி யெடுத்துக்கொண்டு பத்து திக்குக்களிலும் இந்த்ரஜித்தைத் தேடும்பொருட்டு ஆகாயத்திற் கிளம்பினர். இந்த்ரஜித்து, அவ்வானரர்கள் மிகுந்த வேகமுடையவராயினும் தான் அஸ்த்ரங்களெல்லாம் உணர்ந்தவனுகையால் அவர்களைக் காட்டிலும் மிகுந்த வேகமுடைய சிறந்த அஸ்த்ரங்களால் அவரது வேகத்தைத்தடுத்தனன். அவ்வானரர்கள் பயங்கரமான வேகமுடையவராயினும், அவனுடைய பாணங்களால் தமது சரீரங்கள் பிளக்கப்பெற்று மேகங்களால் மறைக்கப்பட்ட ஸூர்யனைப்போல் அந்தகாரத்திலிருக்கிற இந்த்ரஜித்தைக் கண்டிலர். யுத்தங்களில் ஜயஶீலனுகிய அவ்விந்த்ரஜித்து ராமலக்ஷ்மணர்களையே குறிவைத்து ஸமஸ்த அவயவங்களையும் பிளக்கவல்ல கூரானபாணங்களை ப்ரயோகித்தனன். இந்த்ரஜித்து அங்ஙனம் கோபித்து வீரர்களும் அண்ணன் தம்பிகளுமாகிய அந்த ராமலக்ஷ்மணர்களின்மேல் பாண உருவமுடைய ஸர்ப்பங்களை எய்கையில், அவருடைய தேஹங்களில் ஊசி நாட்டவுங்கூட இடமில்லாதிருந்தது. அந்த ராமலக்ஷ்மணர்களின் சரீரங்களில் பாணம்பட்ட இடங்களினின்று மிகுதியும் [1] ரக்தம் பெருகி வந்தது. அப்

1. 'ந ஹி பூதஸம்வஸம்ஸ்தானோ தேஹோஉஸ்ய பரமாத்மந:' 'ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர்மாம்ஸமேதோஸ்திஸம்பவா' (பரமாத்மாவினுடைய தேஹம் ப்ராணிகளின் சரீரம்போல் ப்ராக்ருதியின்

பொழுது அவ்விருவரும் புஷ்பித்த பலாச வ்ருக்ஷங்கள் போல் ப்ரகாசித்தனர். அப்பால் பிளக்கப்பட்ட மைக் குவியல்போல் மிகுதியும் கறுத்திருக்கிற இந்த்ரஜித்து கண்ணுக்குப் புலப்படாது மறைந்து சிறிது கோபத்தினால் கடைக்கண் சிவக்கப்பெற்று, அவ்வண்ணன் தம்பிகளான ராமலக்ஷ்மணர்களைக் கண்டு 'நான் கண்ணுக்குப் புலப்படாமல் யுத்தம் செய்கையில் தேவதைகளில் தலைவனாகிய இந்த்ரனுங்கூட என்னைக் காண்பதற்காவது கிட்டுவதற்காவது வல்லனல்லன். இனி, கேவல மனுஷ்யர்களாகிய உங்களிருவரின் ஸங்கதியைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? ராமலக்ஷ்மணர்களே!

---

பரிணாமமாயிருப்பதன்று.) (மாம்ஸம் கொழுப்பு எலும்பு இவைகளுக்கு இடமான ப்ராக்ருதசரீரமன்று) என்கிறபடியே ராமலக்ஷ்மணர்களின் திவ்யவிக்ரஹம் அப்ராக்ருதமாகையால் ரக்தம் பெருகுவது எப்படியென்னில், வாஸ்தவத்தில் ரக்தமில்லாதிருப்பினும், மனுஷ்யத்தன்மையை நடனஞ்செய்வதற்கு அனுகுணமாக ரக்தத்தைக் காட்டினார்களென்று தெரிகிறது. ஆனால் இப்படி நிர்ப்பந்தத்துடன் மனுஷ்யத்தன்மையை அபிநயிப்பதற்கு ப்ரயோஜனமென்னென்னில்—ஸர்வப்ரகாரத்தாலும் மனுஷ்யத்தனத்தை நடனஞ் செய்யாத பக்ஷத்தில் ஜனங்கள் 'இவன் மனுஷ்யனன்று, தேவன்; ஆகையால் இவனைப்போல் நாம் தர்மத்தை அனுஷ்டிக்க முடியாது' என்று நினைப்பார்கள். எல்லாவிதத்திலும் மனுஷ்ய பாவனையை நடனஞ் செய்துகொண்டு பெரியோர்களின் அனுஷ்டானத்தைச் செய்து காட்டுகையில் உலகத்தார் தாமும் அப்படியே அனுஷ்டிப்பார்களென்று ரஹஸ்யம். ராவணன் மனுஷ்யனொருவனால் மாத்ரமே வதிக்கத் தகுந்தவனாகையால் அங்ஙனம் மனுஷ்யபாவனையென்றுஞ் சொல்லுவர். நாகபாசங்களால் கட்டுண்டிருத்தல், தர்மத்தில் ஊக்கமுடையவர்க்கும் ஆபத்து ஒருகால் உண்டாகி உடனே நீங்கும் என்று லோகத்தார்க்குத் தெரிவிக்கும் பொருட்டே. இப்படியே ராமனுடைய மோஹாதிகளுக்கும் காரணம் உணர்க.

கோபம் நிரம்பப்பெற்ற மனமுடைய நான் கழுகுக ளின் இறகுகள் கட்டின பாணங்களின் ஸமூஹத் தினால் இன்னமும் உங்களிருவரையும் மறைத்து இதோ இப்பொழுதே யம பட்டணத்திற்கு அனுப்பு கிறேன். என் கோபம் வீணாகாது' என்றனன். அண்ணன் தம்பிகளான அந்த ராமலக்ஷ்மணர்களிரு வரும் தர்மஜ்ஞர்களாகையால் சபதத்தைக் குறிவைத் தடிப்பவரல்லர்; ஆகையால் அவ்விந்த்ரஜித்து இங்ங னஞ் சொல்லி அவ்விருவரையும் கூரான பாணங்களால் நன்கு பேதித்து மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து ஸிம்ஹநாதமுஞ் செய்தனன். பிளக்கப்பட்ட மைக் குவியல்போல் கறுத்திருக்கிற அவ்விந்த்ரஜித்து அம் மஹாயுத்தத்தில் விசாலமான தனுஸ்ஸை இழுத்து அடிக்கடி தீக்ஷ்ணமான பாணங்களை ப்ரயோகித்தனன். அப்பால் வீரனாகிய அவ்விந்த்ரஜித்து அந்தந்த மர்ம ஸ்தானங்களை நன்கறிந்தவனாகையால் ராமலக்ஷ்மணர்க ளின் மர்மஸ்தானங்களில் மிகவும் கூரான கணைகளை அழுந்த நாட்டி அடிக்கடி ஸிம்ஹநாதஞ் செய்தனன். அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் யுத்தத்தில் பாணங்க ளால் கட்டுண்டு ஒரு க்ஷணத்திற்குள் கண்ணெடுத்துப் பார்க்கவுங்கூடச் சக்தியற்றவராயினர். அப்பால் பெரிய வில்லாளிகளும் வீரர்களும் லோக நாதர்களுமாகிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் பாணங்களின் நுனி கள் ஸமஸ்த அவயவங்களிலும் நிரம்பப் பாய்ந்து ஸமஸ்த அவயவங்களும் பிளவுண்டு மர்மஸ்தானங்க ளெல்லாம் பேதிக்கப்பட்டிருக்கையால் மிகுதியும் வருந்தி மிகவும் நடுங்கிக் கயிறறுந்து விழுகின்ற இந்த்ர த்வஜங்கள்போல் தரையில் விழுந்தனர். அவ்வீரர்க ளிருவரும் பாணரூபங்களான ஸர்ப்பங்கள் உடம்பு

முழுவதும் பின்னிக்கொள்கையில் கட்டுண்டு ரக்தப்ரவாஹத்தில் நனேந்து வீரர்களின் படுக்கையாகிய யுத்த பூமியில் படுத்து மனவருத்தமுற்றுச் சரீரம் முழுவதும் நோவெடுக்கப்பெற்றிருந்தனர். அவரது அவயவங்களில் நுனிக்கை வரையிலும் பாணம் பொற்றுக்கொள்ளாததும் கிடந்தபடியே கிடந்து அசைவற்றிராததும் பிளக்கப்படாததுமான ஓரங்குல இடங்கூட இல்லே. காமரூபியும் கொடியனுமாகிய அந்த ராக்ஷஸனுல் அங்ஙனம் அடிக்கப்பட்ட ராமலக்ஷ்மணர்களிருவரும் மலேயருவிகள் ஜலம் பெருக்குவதுபோல், மிகுந்த வேகத்துடன் ரக்தத்தை அளவில்லாமல் பெருக்கினர். முன்பு இந்த்ரனே ஜயித்து இந்த்ராஜித்தென்று பெயர் பெற்ற அந்த ராக்ஷஸன் கோபாவேசமுற்று மர்மங்களில் பாணங்களே ப்ரயோகிக்கையில் முன்பு ராமன் தரையில் விழ்ந்தனன். அவன் நாகாஸ்த்ரம் ப்ரயோகித்த பின்பு, பொன்பிடி இடப்பெற்றவைகளும் கீழ் நோக்கிச் செல்பவைகளுமான நாராசம் அர்த்தநாராசம் பல்லம் அஞ்சலிகம் வத்ஸதந்தம் ஸிம்ஹதந்தம் க்ஷுரம் முதலிய கேவலமான பல பாணங்களேயும் பெய்து ஹிம்ஸித்தனன். இங்ஙனம் இப்படிப்பட்ட பாணங்களால் அடியுண்ட ராமபிரான் பிடி தழதழக்கப்பெற்று இடையிலும் பக்கங்களிலும் வளேந்திருப்பதும் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டிருப்பதும் நாண் அறுந்திருப்பதுமாகிய தன் வில்லே ஊன்றிக்கொண்டு வீரர்கள் படுக்கிற போர்க்களத்தில் பள்ளிகொண்டனன். அப்பால் புருஷஸிம்ஹனுகிய ராமன் பாணங்களாகிற படுக்கையின் இடையில் படுத்திருப்பது கண்டு லக்ஷ்மணன் பிழைப்பில் ஆசையற்றவனுயினன். தாமரையிதழ் போன்ற கண்களேயுடைய தன்



2761. நாகபாசபந்தம்.

தமையனாகிய ராமன் அங்ஙனம் பாணங்களால் அடியுண்டு கட்டுண்டு தரையில் விழுந்திருப்பது கண்டு, லக்ஷ்மணன் மிகுதியும் வருத்தமுற்றனன். வானரர்களும், அவன் அங்ஙனம் விழுந்திருப்பதைக் கண்டு மிகுதியும் பரிதாபம் அடைந்தனர். ஹனுமான் முதலிய வானரவீரர்களனைவரும் கூடி அங்ஙனம் நாகபாசங்களால் கட்டுண்டு வீழ்ந்திருக்கிற அவ்வீரர்களைச் சூழ்ந்து நின்று வருந்தி மிகுதியும் துக்கித்தனர். நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவ விபீஷணாதிகள் ராமலக்ஷ்மணர்களைக் கண்டு துக்கித்தலும், இந்த்ரஜித்து ஸுக்ரீவாதிகளை அடித்தலும், விபீஷணன் ஸுக்ரீவனை ஆஶ்வாஸப்படுத்துதலும் இந்த்ரஜித்து ராம லக்ஷ்மணர்களைக் கொன்று வந்தேனென்னு ராவணனுக்கு மொழிதலும்.

அனந்தரம் வானரர்கள் ஆகாயத்தையும் பூமியையும் பார்த்துக்கொண்டு அங்ஙனம் உடம்பு முழுவதும் பாணங்கள் நிறைந்து படுத்திருக்கின்ற அண்ணன் தம்பிகளான அந்த ராமலக்ஷ்மணர்களைக் கண்டனர். மழை பெய்து ஓய்ந்திருக்கிற மேகம்போல், இந்த்ரஜித்து பாணவர்ஷங்களைப் பெய்து ஓய்ந்திருக்கும் ஸமயத்தில் ராமனிருக்கிற அந்த இடத்திற்கு விபீஷணனும் ஸுக்ரீவனும் வந்தனர். அதற்கு முன்னமே ஹனுமான் நீலன் த்விவிதன் மைந்தன் ஸுஷேணன் குமுதன் அங்கதன் ஆகிய இவர்கள் அவ்விடம் வந்து ராமலக்ஷ்மணர்களைக் கண்டு மிகுதியும்

றுக்கித்துக்கொண்டிருந்தனர். அந்த ராமலக்ஷ்மணர்கள் சேஷ்டை அடங்கி இப்படி யப்படி அசையாமல் இடையிடையில் மெதுவாக மூச்சுவிட்டுக்கொண்டு நாற்புறத்திலும் ரக்தப்ரவாஹத்தில் மிதந்துகொண்டிருந்தனர்; மற்றும் பாணஸமூஹங்களால் முழுவதும் நிறைந்து சிறிதும் அசையாதவராகி பாணப்படுக்கையில் படுத்திருந்தனர். அவ்விருவரும் விக்ரமம் குறைந்து அசைவற்றுப் பெருமூச்செறிந்துகொண்டு படுத்திருக்கிற மஹாஸர்ப்பங்கள் போலவும், உடம்பு முழுவதும் உதிரம் படிந்திருக்கையால் பொன்னாற் செய்த த்வஜஸ்தம்பங்கள் போலவும் புலப்பட்டனர். அங்ஙனம் வீரசயனத்தில் படுத்து இடையிடையில் அற்பஞ் சேஷ்டையுடையவர்களும் உடம்பு முழுவதும் பாணஸமூஹங்கள் நிறைந்திருப்பவரும் ஸ்வாதீனந் தப்பி விழுந்திருப்பவருமாகிய அவ்விருவரையும் அந்தந்த வானர யூதபதிகள் அனைவரும் விபீஷணனோடு கூட நாற்புறத்திலும் சூழ்ந்து கண்ணுங்கண்ணீருமாய் மிகுதியும் வருத்தமுற்றவராயினர். அவ்வானரர்கள் யுத்த பூமியில் நின்று ஆகாயத்திலும் ஸமஸ்த திசைகளிலும் எவ்வளவு தேடிப்பார்க்கினும் மாயையால் மறைந்திருக்கிற இவ்விந்த்ரஜித்தைக் கண்டிலர். விபீஷணன் மாயையால் மறைந்திருக்கிற தன் தமையன் குமாரனாகிய இந்த்ரஜித்தைக் கண்டுபிடிக்கத்தொடங்கி நாற்புறத்திலும் உற்றுப்பார்த்துத் தானும் மாயையைக் கைப்பற்றி அவன் ஓரிடத்தில் இருக்கக் கண்டனன். வீர்யகார்யங்களில் எங்கும் நிகரற்று யுத்தத்தில் எதிரின்றி வரம்பெற்ற பலத்தினால் மறைந்து தேஜஸ்ஸிலும் யசஸ்ஸிலும் பராக்ரமத்திலு மிகுந்திருக்கின்ற வீரனாகிய அவ்விந்த்ராஜித்தை

விபீஷணன் மாத்ரம் கண்டனன். இந்த்ரஜித்து, நாகாஸ்த்ரம் ப்ரயோகித்தமையாகிற தான் செய்த கார்யத்தையும் ராமலக்ஷ்மணர்கள் கட்டுண்டு படுத்திருப்பதையும் கண்டு மிகுதியும் ஸந்தோஷமுற்றவனாகி ராக்ஷஸர்களெல்லோரையும் ஸந்தோஷப்படுத்திக்கொண்டு அவர்களை நோக்கி 'தூஷணனையும் கரனையும் கொன்ற மஹாபலிஷ்டர்களும் அண்ணன் தம்பிகளுமான ராமலக்ஷ்மணர்கள் என் பாணங்களால் அடியுண்டு கட்டுண்டு விழுந்து வருந்துவதைக் காண்பீர்களாக. தேவதைகள் அஸுரர்கள் ரிஷிஸமூஹங்கள் ஆகிய எல்லோரும் ஒன்று சேர்ந்துவரினும் இவ்விருவரையும் இந்த நாகபாசங்களின் கட்டினின்று விடுவிக்க முடியாது. எவனுடைய பௌருஷத்திற்கு பயந்து என் தந்தை ராவணன் துக்கத்தினால் பரிதபித்து ராத்ரி மூன்று யாமங்களில் ஒரு யாமமும் தூக்கம் உண்டாகப் பெறாமல் படுக்கையை உடம்பினால் ஸ்பர்சிக்காமலே சிந்தையில் ஆழ்ந்து பொழுதைப் போக்குகின்றானோ; மற்றும், எவன் நிமித்தமாக இவ்விலங்கையிலுள்ள ப்ரஜைகள் அனைத்தும், வர்ஷாகாலத்தில் நதீப்ரவாஹம் கரை புரண்டு கலக்கமுற்றுத் தடுமாறுவதுபோல், தடுமாற்றமுற்றிருக்கின்றனவோ; அப்படிப்பட்டவனை, நம்மெல்லோரையும் வேர்ப்பற்றுடன் நாசஞ்செய்வதான அனர்த்தத்திற்கு முயன்ற ராமனை, நான் இதோ வதித்துவிட்டனன். ராமனும் லக்ஷ்மணனும் ஸமஸ்த வானரர்களும் ஸேதுபந்தம் (அணை கட்டுதல்) முதலியவற்றால் காட்டின பராக்ரமங்களெல்லாம் சரத்காலத்து மேகங்கள்போல் நிஷ்பலமாயின' என்றனன். இந்த்ரஜித்து, தன் சுற்றுப்பக்கங்களிலிருக்கிற ராக்ஷஸர்களெல்லோர்க்கும் இங்ஙனஞ் சொல்லி, அப்பால்

ஸுக்ரீவன் முதலிய அந்த வானர யூதபதிகளனைவரை யுங்கூட அடிக்கத் தொடங்கினன். பகைவரைப் பறந் தோடச்செய்ய வல்லனாகிய அவ்விந்த்ரஜித்து நீலனை ஒன்பது பாணங்களால் அடித்து, மைந்த த்விவிதர்க ளில் ஒவ்வொருவனையும் மேலான மும்மூன்று பாணங்க ளால் பரிதபிக்கச்செய்தனன். அந்தப் பெரிய வில்லாளி யாகிய ராவண குமாரன் ஜாம்பவானை மார்பில் ஒரு பாணத்தினால் அடித்து மிகுந்த வேகமுடைய ஹனுமான்மேல் பத்து பாணங்களை விடுத்தனன். யுத் தத்தில் மஹாவேகனாகிய அந்த ராவணி (ராவண புத்ரன்) அபார தேஜஸ்விகளான கவாக்ஷன் சரபன் இருவரையும் இரண்டிரண்டு பாணங்களால் அடித்து ஹிம்ஸித்தனன். மற்றும், அந்த ராவணபுத்ரன் வேகம் விளங்கப்பெற்று கோலாங்கூலர்களில் (கொண்டை முயல்களில்) தலைவனாகிய கவாக்ஷனையும் வாலியின் புதல்வனாகிய அங்கதனையும் பல பாணங்களால் ஹிம் ஸித்தனன். பலிஷ்டனும் மஹா தைர்யசாலியுமாகிய அவ்விந்த்ரஜித்து அங்ஙனம் அந்த யுத்தத்தில் அவ் வானரஸ்ரேஷ்டர்க ளெல்லோரையும் அக்னிஜ்வாலை போன்ற கூரான பாணங்களால் அடித்து ஸிம்ஹநாதஞ் செய்தனன். அம்மஹாபாஹு அவ்வானரர்களை பாண ஸமூஹங்களால் வருத்தி எல்லோரும் பயப்படும்படி செய்து அட்டஹாஸத்துடன் பக்கத்திலுள்ள ராக்ஷஸர் களைப் பார்த்து 'ஓ ராக்ஷஸர்களே! அதோ ஸேனை யின் முன்பு பயங்கரமான பாணபாசத்தினால் நான் பந்திக்கையில் கட்டுண்டிருக்கிற அண்ணன் தம்பிக ளான அந்த ராமலக்ஷ்மணர்கள் இருவரும் ஓரிடத்தில் வீழ்ந்திருக்கின்றனர், காண்பீர்கள்' என்றனன். இங்ஙனம் அவன் சொல்லுகையில் கபடயுத்தஞ்செய்பவ

ரான அந்த ராக்ஷஸர்களெல்லோரும் அவன் செய்த வீரச்செயலுக்கு ஸந்தோஷம் அடைந்து மிகுதியும் ஆச்சர்யமுற்றனர். மேகம்போன்ற உருவமுடைய அவ்வரக்கர்கள், ராமன் முடிந்தானென்று நினைத்து முழுவதும் பெருங்கோஷம் உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு இந்த்ரஜித்தைப் புகழ்ந்தனர். அப்பொழுது அவ்விந்த்ரஜித்து ராமலக்ஷ்மணர்களிருவரும் இப்படி அப்படி அசையவும் மூச்சுவிடவும் சக்தியற்றுத் தரையில் விழுந்திருப்பதைக் கண்டு ஹதரானார்களென்று நினைத்துக்கொண்டனன். யுத்தத்தில் ஜயசீலனாகிய இந்த்ரஜித்து மிகுதியும் மனக்களிப்புற்று ஸமஸ்த ராக்ஷஸர்களையும் மனக்களிப்புறச் செய்துகொண்டு லங்காபுரத்திற்குள் ப்ரவேசித்தனன். ராமலக்ஷ்மணர்களின் சரீரங்களும் கைகால் முதலிய அங்கங்களும் விரல் முதலிய உபாங்கங்களும் பாணமயமாயிருப்பது கண்டதும் ஸுக்ரீவனுக்கு பயம் உண்டாயிற்று. அங்ஙனம் ஸுக்ரீவன் மிகுதியும் பயந்து மனவருத்தத்தினால் கண்கள் கலங்கி முகம் முழுவதும் கண்ணீர் நிறைந்திருப்பதைக் கண்டு, விபீஷணன் அவனை ஸமாதானப்படுத்த முயன்று, 'ஸுக்ரீவா! பயப்படவேண்டாம்; போதும்; கண்ணீர்களின் வேகத்தை அடக்குவாயாக. யுத்தங்களெல்லாம் பெரும்பாலும் இப்படியே இருக்கும். எப்பொழுதும் ஜயமே உண்டாகுமென்கிற நியதி இல்லை. வீரனே! நமக்கு பாக்யசேஷம் உளதாயின், (இன்னம் பாக்யம் மிகுந்திருக்குமாயின்), மஹானுபாவர்களும் மஹாபலிஷ்டர்களுமாகிய இவ்விருவரும் மூர்ச்சை தெளியக் கூடும். நீ தைர்யத்தை ஏற்றுக்கொள்வாயாக; மற்றும், வேறு கதியில்லாதிருக்கிற எனக்கும் தைர்யத்தை

விளைவிப்பாயாக. தைர்யத்தையும் தர்மத்தையும் அவலம்பித்திருப்பவர்களுக்கு எப்பொழுதும் அபம்ருத்யுவால் வரும் பயம் உண்டாகாது' என்றனன். விபீஷணன் இங்ஙனஞ் சொல்லி, அப்பால் கண்ணீர் பெருக்கின அமங்களம் தீரும்பொருட்டுக் கையில் ஜலத்தைக் கொண்டுவந்து அந்த ஸுக்ரீவனுடைய அழகிய [1] நேத்ரங்களைத் துடைத்தனன். அனந்தரம் தர்மஸ்வபாவனுகிய அந்த விபீஷணன் ராக்ஷஸமாயையைத்தெரிவித்து தைர்யம் உண்டாகும்பொருட்டு மீளவும் ஜலங்கொண்டு வந்து மாயையால் விளையும் மோஹத்தைப் பறக்கடிக்கும்படியான வித்யையால் அபிமந்த்ரித்து அதனுல் அந்த ஸுக்ரீவனுடைய முகத்தைத் துடைத்து, அப்பால் பரபரப்பின்றி அக்காலத்திற்குத் தகுந்த வசனத்தைச் சொல்லத் தொடங்கி 'வானரவீரர்களுக்கெல்லாம் அதிபதி! அதைர்யப்படுவதற்கு இது ஸமயமன்று. 'நான் என் செய்வேன். அதிஸ்னேஹம் இங்ஙனம் செய்விக்கின்றதே' என்கிருயோ? அதிஸ்னேஹத்திற்கும் இது காலமன்று. இப்படிப்பட்ட ஸமயத்தில் அதுவுங்கூட மரணத்திற்குக் காரணமாம். ஆகையால் ஸமஸ்த கார்யங்களையும் நாசஞ் செய்வதான அதைர்யத்தை விட்டு ராமனை முன்னிட்டுக் கொண்டு வந்த வானரஸைன்யங்களுக்கு ஹிதத்தை ஆலோசிப்பாயாக. அப்படி இல்லையாயின், ராமன் மூர்ச்சை தெளியும் வரையில் அவனைப் பாதுகாப்பாயாக. ககுத்ஸ்தகுல அலங்காரனுகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் மூர்ச்சை தெளிந்தவுடனே நமது பயத்தைப் போக்கடிப்பார்கள். 'இப்படி விழுந்திருப்பவர்க்கு மீளவும் ப்ரஜ்ஞை வருவது எப்படி' என்

1. கண்களை.

கிருயோ? இக்கட்டு, ராமனை ஒன்றும் செய்யவல்ல தன்று. ஆகையால் அவன் மரணம் அடைவானென்கிற சங்கையும் வேண்டியதில்லை. 'இது எப்படி' என் கிருயோ? காந்தியின் பெருக்கு ராமனை விடாதிருக் கின்றது; பார். இவ்வழகு ஆயுள் க்ஷீணிக்கப்பெற்று மரணம் அடைபவர்க்கு நேராது. ஆகையால் நான் செய்யவேண்டிய கார்யங்களை யெல்லாம் மீளவும் சீக்கிரச்செய்யும் வரையில், நீ தைர்யத்தை ஏற்றுக் கொண்டு உன் ஸைன்யத்திற்கும் தைர்யத்தை விளை விப்பாயாக. 'இப்பொழுது சீக்கிரச் செய்யவேண்டிய ப்ரஸக்தி என்' என்கிருயோ? வானரோத்தமா! இவ் வானரர்கள் கண்களை மலர விழித்து என்னை இந்த்ரஜித்தென்று ப்ரமித்து பயந்து மயிர்க்கூச்சல் முதலிய பயவிகாரங்கள் உண்டாகப்பெற்று ஓடிப் போகும்பொருட்டு ஒருவர்க்கொருவர் காதோடு ஏகாந்தமாகக் கொசகொசவென்று பேசுகின்றனர்; காண்பாய். இங்ஙனம் என்னைப்பார்த்து ஓடப்பார்க்கிற இந்த ஸைன்யத்தின் பயத்தை மாற்றும்பொருட்டு நான் போகின்றேன். வானரர்களெல்லோரும், சூடி அனுபவித்த பூமாலையை வீசி யெறிவதுபோல், இப் பொழுதுண்டாயிருக்கிற பயத்தை விடுவார்களாக' என்றனன். ராக்ஷஸேந்த்ரனாகிய விபீஷணன் ஸுக்ரீ வனை அங்ஙனம் ஆஶ்வாஸப்படுத்தி, அப்பால் பயந்து ஓடப்பார்க்கிற வானர ஸைன்யத்தைப் பார்த்து 'நான் இந்த்ரஜித்தல்லேன், விபீஷணன்' என்று மொழிந்து ஸமாதானப்படுத்தினன். மஹாமாயனாகிய இந்த்ரஜித்து ஸமஸ்த ஸைன்யங்களும் சூழ்ந்து வரப்பெற்று லங்கா புரத்தில் ப்ரவேசித்து, தந்தையின் ஸம்முகத்திற்குப் போயினன். அவன் அங்ஙனம் போய், அங்கு ஸபையில்

உட்கார்ந்திருக்கின்ற ராவணனுக்குக் கைகளைக் குவித்து நமஸ்காரஞ்செய்து 'ராமலக்ஷ்மணர்களைக் கொன்றுவிட்டேன்' என்று இந்த ப்ரிய ஸமாசாரத்தைச் சொல்லினன். ராவணன் ராக்ஷஸருடைய மத்யத்தில் தன் சத்ருக்களாகிய ராமலக்ஷ்மணர்கள் அடியுண்டு விழுந்தார்கள் என்று கேட்டு ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் ஆஸனத்தினின்று திடீலென்று எழுந்து புதல்வனை அழுந்தக் கட்டியணைத்தனன். ராவணன் மனத்தில் ஸந்தோஷம் உண்டாகப்பெற்றுப் பிள்ளையின் சிரத்தை மோந்து, ராமலக்ஷ்மணர்கள் அடிபட்ட விதத்தை வினவினன். அங்ஙனம் வினவுகின்ற தந்தைக்கு இந்த்ரஜித்து தான் அந்த ராமலக்ஷ்மணர்களை நாகபாசங்களால் பந்தித்து அசையாதிருக்கச்செய்து ஒளிப்பெருக்கை அகற்றின வண்ணத்தை யெல்லாம் நடந்தபடியே தெரிவித்தனன். அந்த ராவணன், மஹாரதனாகிய இந்த்ரஜித்து மொழிந்த வார்த்தையைக் கேட்டு, மனத்தில் ஸந்தோஷாதிசயம் நிரம்பப்பெற்று ராமனிடத்தினின்று தனக்குண்டான பரிதாபத்தைத் துறந்து மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து புதல்வனைப் பலவாறு புகழ்ந்தனன். நாற்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணனது ஆஜ்ஞையால் ராக்ஷஸிகள்
ஸீதையைப் புஷ்பகவிமானத்தில்
ஏற்றி யுத்த பூமிக்குக் கொண்டு
போய் நாகபாசங்களால் கட்டுண்
டிருக்கின்ற ராம லக்ஷ்மணர்க
ளைக் காண்பித்தல்.

ராவணனது குமாரனாகிய இந்த்ரஜித்து அங்ஙனம் கருத்து நிறைவேறப்பெற்றுத் திரும்பி லங்காபுரி

யுள் ப்ரவேசித்த பின்பு, ஹநுமான் அங்கதன் நீலன் ஸுஷேணன் குமுதன் நலன் கஜன் கவாக்ஷன் கவயன் சரபன் கந்தமாதனன் ஜாம்பவான் ருஷபஸ்கந் தன் ரம்பன் சதவலி ப்ருது என்னும் இவ்வானர ஸிம்ஹர்கள் வருந்தி ராமனைச் சுற்றிலும் சூழ்ந்து ரக்ஷித்துக்கொண்டிருந்தனர். மற்றை வானரர்கள் ஸேனைகளை யெல்லாம் வ்யூஹங்களாகப் பிரித்து நாற் புறத்திலும் மனவூக்கத்துடன் வ்ருக்ஷங்களைக் கைகளில் ஏந்தி ஸமஸ்த திசைகளையும் குறுக்கு இடங்க ளையும் மேல்ப்ரதேசங்களையும் பார்த்து, புற்கள் அசையினும் ராக்ஷஸர் வந்தார்களோ என்று நினைத்து மிக்க மனவூக்கத்துடன் பாதுகாத்துக்கொண்டிருந் தனர். அப்பொழுது ராவணன் மிகுந்த ஸந்தோஷத் துடன் இந்த்ரஜித்தை விடை கொடுத்தனுப்பி, அப்பால் ஸீதையைக் காக்கின்ற ராக்ஷஸிகளை வர வழைத்தனன். அனந்தரம் ராக்ஷஸ ஸ்த்ரீகளும் த்ரி ஜடையும் ராஜாஜ்ஞையின்படி வந்தனர். பிறகு ராக்ஷஸ ராஜனாகிய ராவணன் ஸந்தோஷத்துடன் அந்த ராக்ஷ ஸிகளைப் பார்த்து இந்த்ரஜித்தினால் ராமலக்ஷ்மணர்கள் மாண்டார்களென்று ஸீதைக்குச் சொல்வீர்களாக. அவளைப் புஷ்பகத்தின்மேல் ஏற்றிக்கொண்டு போய் அடியுண்டு வீழ்ந்திருக்கிற ராமலக்ஷ்மணர்களைக் காண்பிப்பீர்களாக. எவனுடைய அவலம்பத்தினால் இவள் செருக்குற்று எனக்கு வசப்படாதிருக் கின்றாளோ, அந்த ராமன், இவள் கணவன், தம்பியும் தானுமாக யுத்தத்தின் தலையில் மாண்டனன். இனி, ஸீதை விசாரமற்றுச் சோகத்தையும் துறந்து ராமன் வருவானென்னும் ஆசையையும் இழந்து, ஸமஸ்த ஆபரணங்களையும் அணிந்து என்னை அடையப்

174

போகின்றனள். அகன்ற கண்களையுடைய அம்மடந் தையர்மணி யுத்தத்தில் ராமனும் லக்ஷ்மணனும் இப் பொழுது ஹதரானதைக் கண்டு, என்னைவிட வேறு கதியைக் காணுமையால் ராமனிடத்தினின்று மனத் தைத் திருப்பிக்கொண்டு நான் விரும்பாதிருப்பினும் தானே என்னை அடையப்போகின்றனள்' என்றனன். அந்த ராக்ஷஸஸ்த்ரீகள் துர்ப்புத்தியாகிய ராவண னுடைய கட்டளையைக் கேட்டு 'அப்படியே செய் கிறோம்' என்று மொழிந்து, புஷ்பக விமானமிருக்கிற இடத்திற்குப் போயினர். அனந்தரம் ராக்ஷஸ ஸ்த்ரீகள் ராவணனது கட்டளையின்படி புஷ்பக விமானத்தை எடுத்துக்கொண்டு அசோகவனத்திலிருக்கிற ஸீதையி னிடம் போயினர். அப்பொழுது ராக்ஷஸ ஸ்த்ரீகள் பர்த்தாவின் துக்கத்தினுல் வருந்தி இளைத்திருக்கின்ற ஸீதையை எடுத்து அந்தப் புஷ்பகவிமானத்தில் ஏற்றி னர். அப்பால் அந்த ராக்ஷஸிகள் ஸீதையையும் த்ரிஜடையையும் புஷ்பகத்தில் ஏறச்செய்து அவளுக்கு ராமலக்ஷ்மணர்களைக் காண்பிக்கும்பொருட்டு அழைத் துக்கொண்டு போயினர். மற்றும், அந்த ராக்ஷஸேஸ் வரன் ராவணன் ஸந்தோஷமுற்று லங்கை முழுவதை யும், பதாகைகளும் த்வஜங்களும் வரிசையாக ஏறிடு வித்து அலங்கரிக்கச் செய்து, லங்கையில் முழுவதும் 'ராமனும் லக்ஷ்மணனும் இந்த்ராஜித்தினுல் யுத்தத்தில் ஹதஞ்செய்யப்பட்டார்கள்' என்று எங்கும் விளம்பரஞ் செய்து கோஷிக்கச் செய்தனன். ஸீதை த்ரிஜடை யுடன் புஷ்பகவிமானத்தில் ஏறிக்கொண்டு போய், தரையில் விழுந்திருக்கின்ற அந்த வானர ஸைன்யத்தை யெல்லாம் கண்டனள்; ராக்ஷஸர்கள் மனத்தில் மிகுதி யும் ஸந்தோஷமுற்றிருப்பதையும், வானரர்கள் ராம

லக்ஷ்மணர்களின் பார்ஶ்வத்தில் துக்கித்திருப்பதையும் கண்டனள். அப்பால் ஸீதை, கீழ் பூமியில் வீரர்களான ராமலக்ஷ்மணர்கள் பாணங்களால் பீடிக்கப்பட்டுக் கவசங்கள் முறிந்து தனுஸ்ஸுக்கள் நழுவி பாணங்களால் ஸமஸ்த அவயவங்களும் பிளக்கப்பெற்று பாணப் புதர்போன்று, பாணங்களாகிற படுக்கையில் படுத்திருக்கக் கண்டனள். அந்த ஸீதை அங்கு வீரர்களும் தாமரை யிதழ்போன்ற கண்களுடையவர்களும் அண்ணன் தம்பிகளும் புருஷஶ்ரேஷ்டர்களுமாகிய ராமலக்ஷ்மணர்களிருவரும், முன்பு அக்னியின் குமாரர்களான ஸ்கந்த விசாகர்களைபோல் திகழ்வுற்றவர், அங்ஙனம் பாணப்படுக்கையில் படுத்து அப்படிப்பட்ட துரவஸ்தை அடைந்திருப்பதைக் கண்டு, மிகவும் துக்கத்தினால் பரிதபித்துக்கொண்டு வெகுநேரங் கதறினள். ஒரு தோஷமுமில்லாத ஸமஸ்த அவயவங்களும் அமையப்பெற்றுக் கறுத்த கண்களுடையவளுமாகிய அந்த ஜனகராஜன் புதல்வி ஸீதை, தன் பர்த்தாவான ராமனும் லக்ஷ்மணனும் தரையில் தூள்களில் புரளுவதைக் கண்டு ரோதனஞ் செய்தனள். அந்த ஸீதை கண்ணீர் பெருக்கினாலும் அதற்குக் காரணமான சோகத்தினாலும் மிகவும் அடியுண்டு வருந்தி, தேவதைகளைப்போல் மஹா ப்ரபாவமுடையவரான ராமலக்ஷ்மணர்களைக் கண்டு, மாண்டார்களென்று ஊஹித்து வருத்தம் உள்ளடங்கப் பெறாமல் இவ்வாறு மொழியத் தொடங்கினள். நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை ராமலக்ஷ்மணர்களின் அவஸ்தை
யைக்கண்டு பலவாறு புலம்புதல்.

ஸீதை தன் பர்த்தாவான ராமனும் மஹாபலனான லக்ஷ்மணனும் ஹதரானதைக் கண்டு, சோகத்தினால் வருத்தப்பட்டு, கேட்போர்களுக்கு மன இரக்கம் உண்டாகும்படி இங்ஙனம் பலவாறு புலம்பினள். 'ஸாமுத்ரிக லக்ஷணந் தெரிந்தவர் எவர், முன்பு என்னைப் பதிவ்ரதையென்றும் விதவையாகாளென்றும் மொழிந்தனரோ, அந்த லக்ஷணமறிந்தவர் அனைவரும், இப்பொழுது ராமன் ஹதனானகையால் அபத்தஞ் சொன்னவராயினர். முன்பு எவர், என் பர்த்தா அஶ்வமேதாதி யாகங்களைச் செய்வானென்றும் ஸத்ரங்களை நடத்துவானென்றும் சொன்னார்களே, அப்படிப்பட்ட ஜ்ஞானிகள் அனைவரும், இப்பொழுது ராமன் ஹதனானகையால் அபத்தம் மொழிந்தவராயினர். முன்பு ஜ்யோதிஷமறிந்த ப்ராஹ்மணர் எவர், என் செவியிற்படும்படி என்னெதிரில் என்னை மாங்கல்யவதியென்று சொன்னார்களோ, அந்த ஜ்ஞானிகள் எல்லோரும் இப்பொழுது ராமன் ஹதனானகையால் அபத்தம் மொழிந்தவராயினர். எவர் என்னைப் பார்த்து, 'நீ மஹாவீரனான ராஜனுக்குப் பத்னியாவாய்; பாக்யவதியாயிருப்பாய்' என்று மொழிந்தார்களோ, அந்த அறிஞர்களெல்லோரும் இப்பொழுது ராமன் ஹதனானகையால் அபத்தம் மொழிந்தவராயினர். இதோ என் பாதங்களில் பத்மரேகைகள் ஸ்பஷ்டமாகப் புலப்படுகின்றன. இந்த ரேகையுடைய பெண்மணிகள் மஹா ராஜனுக்குப் பத்னிகளாகி அவருடன் ஸாம்ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பெறுவார்களாம். இவை என்னிடத்தில் ஏன் வீணாயினவோ? தௌர்ப்பாக்யமுடைய பெண்டிர்கள்

எந்த லக்ஷணங்கள் (அடையாளங்கள்) இருப்பின் வைதவ்யம் அடைவார்களோ, அந்த துஷ்டலக்ஷணங்கள் எவ்வளவு தேடிப்பார்க்கிலும் என்னிடத்தில் புலப்படவில்லை. த்வஜம் வஜ்ரம் முதலிய மற்றை ரேகைகளும் பத்மரேகைகளும், லக்ஷ்மீ விலாஸத்தை வளர்ப்பவைகளாகி உண்மையான பெயருடையவைகளாயிருக்குமென்று லக்ஷணசாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது; இப்பொழுது ராமன் ஹதனுகையால் என் விஷயத்தில் மாத்ரம் அவை நிஷ்பலமாயின. என் கேசங்கள் (தலைமயிர்கள்) நுண்ணியவைகளும் ஏற்றக் குறையில்லாதவைகளும் கறுத்தவைகளுமாயிருக்கின்றன. என்புருவங்கள் ஒன்றோடொன்று சேராதிருக்கின்றன. எனது முழந்தாள்கள் உருண்டு ரோமங்கள் (மயிர்கள்) அற்றிருக்கின்றன. என்பற்கள் இடைவெளியின்றி நெருக்கமாயிருக்கின்றன. என் கன்னங்களும் கண்களும் கைகளும் கால்களும் குதிக்கால்களும் துடைகளும் பருத்திருக்கின்றன. என் விரல்கள் வட்டமான நகமுடையவைகளும் நிருநிருப்புற்றவைகளும் கைகளுக்குத்தகுந்த அளவுடையவைகளுமாயிருக்கின்றன. இந்த என் கொங்கைகள் ஒன்றோடொன்றுறைந்து இடைவெளியின்றிப் பருத்து ஆழ்ந்த நுனியுடையவைகளுமாயிருக்கின்றன. என் நாபி உள்ளாழ்ந்து ஓரங்களில் உயர்ந்து அழகு வாய்ந்திருக்கின்றன. எனது பக்கங்களும் மார்பும் அமைந்திருக்கும்படி பருத்திருக்கின்றன. எனது மேனியின் நிறம் மணிநிறமுடையதாகி நிருநிருப்புற்றிருக்கின்றது. என் உடம்பு மயிர்கள் ம்ருதுவாயிருக்கின்றன. சாஸ்த்ரமுணர்ந்தவர், என் பாதங்களின் பத்து விரல்களும் இரண்டு உள்ளங்கால்களும் ஆகிய இப்பன்னிரண்டும் நன்கு நிலத்தில் படிந்திருக்கையால்

என்னைச் சுபலக்ஷணமுடையவளென்று மொழிந்தனர். என்ஹஸ்தங்களும் பாதங்களும் நிறைந்த யவரேகையுடன் கூடி இடையில் வெளியின்றி நிறமுடையவைகளுமாயிருக்கின்றன. கன்யாலக்ஷணமறிந்த ப்ராஹ்மணர் என்னை எப்பொழுதும் புன்னகையுடையவளென்று சொல்லினர். ஜ்யோதிஷ ஸித்தாந்தத்தில் ஸமர்த்தர்களான ப்ராஹ்மணர்கள் எனக்கு பர்த்தாவுடன் ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகம் நடக்குமென்று மொழிந்தனர். இப்பொழுது அவையெல்லாம் வீணாயினவே. அண்ணன் தம்பிகளான ராமலக்ஷ்மணர்கள் ஜனஸ்தானம் முழுவதும் என்னைத் தேடிக் கடைசியில் என் வ்ருத்தாந்தத்தை அறிந்து என்னைக் கைப்பற்றும் பொருட்டு அக்ஷோப்யமாகிய (கலக்கமுடியாத) பேராழமுடைய மஹாஸமுத்ரத்தையும் தாண்டி வந்து குளப்படி போன்ற இந்த்ரஜித்தின் மாயையால் இறந்தார்களே. ராமலக்ஷ்மணர்கள், வாருணாஸ்த்ரம் ஆக்னேயாஸ்த்ரம் ஐந்த்ராஸ்த்ரம் வாயவ்யாஸ்த்ரம் ப்ரஹ்மசிரஸ்ஸென்னும் அஸ்த்ரம் ஆகிய இவ்வஸ்த்ரங்களையெல்லாம் பெற்றிருந்தனரே, அவையெல்லாம் இப்பொழுது எங்குப் போயினவோ. இந்த்ரஜித்து யுத்தத்தில் மாயையால் கண்ணுக்குப் புலப்படாதவனாகிக் கபடஞ் செய்து தேவேந்த்ரனை நிகர்த்தவர்களும் எனக்கு திக்குமாகிய ராமலக்ஷ்மணர்களை வதித்தனன். நான் திக்கற்றவளாயினன். யுத்தத்தில் ராமனது கண்ணில் பட்ட பகைவன், தான் எவ்வளவு மனோவேகமுடையவனாயினும் ப்ராணன்களோடு திரும்பிப்போக வல்லனல்லன். பல பராக்ரமங்கள் மிகுந்திருக்கப்பெற்ற ராமனுங்கூட யுத்தத்தில் தம்பியுந் தானுமாக அடியுண்டு தரையில் படுத்திருக்கின்றானே! ஆகையால் காலத்திற்கு மிகுதியும்

பாரமாயிருப்பது (அஸாத்யமானது) ஒன்றுமே இல்லை. மற்றும் தெய்வத்தை வெல்லுவது எவ்வகையிலும் ஸாத்யமன்று. எனக்கு, மன இரக்கத்திற்கிடமான என் மாமியாரை நினைத்துக்கொண்டால் துக்கம் உண்டாகிருப்போல், ராமனையாவது மஹாபலனான லக்ஷ்மணனையாவது என்னையாவது என் தாயையாவது நினைத்துக்கொள்ளினும் அவ்வளவு துக்கம் உண்டாகாது. அம்மஹானுபாவை கௌஸல்யை, 'பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வனவாஸ வ்ரதத்தை நிறைவேற்றி ஸீதையும் லக்ஷ்மணனும் ராமனுடன் கூடி வருவதை நான் எப்பொழுது காண்பேனோ' என்று எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டிருப்பாளே' என்று புலம்பினள். அங்ஙனம் புலம்புகின்ற அந்த ஸீதையைப் பார்த்து த்ரிஜடை யென்னும் ராக்ஷஸி 'அம்மே, நீ துக்கப்பட வேண்டாம். உன் பர்த்தா இதோ பிழைத்திருக்கின்றனன். அம்மா! இவ்வண்ணன் தம்பிகளான ராமலக்ஷ்மணர்கள் இருவரும் பிழைத்திருக்கிறார்களென்று அறியக்கூடும்படி ஸ்பஷ்டமாக அனுபவஸித்தங்களான காரணங்களுங்கூட எனக்குப் புலப்படுகின்றன. அவற்றைச் சொல்லுகிறேன்; கேள். தங்கள் ப்ரபு இறந்திருப்பானாயின், யுத்தத்தில் போர்வீரர்களின் முகங்கள் இங்ஙனம் கோபாவேசமுடையவைகளாகவும் ஸந்தோஷத்தினால் தெளிவுற்றவைகளாகவும் இருக்கமாட்டா. ஸீதே! மற்றும் இந்தராமலக்ஷ்மணர்கள் ப்ராணன்களை இழந்திருப்பார்களாயின் புஷ்பகமென்கிற இந்த விமானம் திவ்யமாகையால் உன்னை இங்ஙனம் ஏற்றுக்கொண்டிராது. ப்ரதானனான வீரன் கொல்லப்பட்டிருப்பானாயின் அப்படிப்பட்ட ஸைன்யம் உத்ஸாஹமின்றி ப்ரயத்னத்தை

யும் துறந்து ஜலப்ரவாஹத்தில் [1] கர்ணதாரனில்லாத ஓடம்போல், யுத்தங்களை நடத்துபவனில்லாமல் தடுமாற்றமுற்றிருக்கும்; இவ்வானர ஸேனையோ அங்ஙனம் புலப்படவில்லை; இது பரபரப்பின்றி பயமுறுமல் பலம் மிகப்பெற்று, பிழைத்திருக்கிறார்களென்று நான் உனக்கு எவரை ப்ரீதியுடன் அறிவிக்கிறேனே, அந்த ராமலக்ஷ்மணர்களை மனவூக்கத்துடன் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றனது. இங்ஙனம் எளிதில் அறியக் கூடிய இந்த அடையாளங்களாலும் ராமலக்ஷ்மணர்கள் பிழைத்திருக்கிறார்களென்று நல்ல நம்பிக்கை உண்டாகப் பெற்றிருப்பாயாக. ராமலக்ஷ்மணர்கள் மரணமடைந்தவரல்லர்; காண்பாய். உன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் உனக்கு இவ்வளவு தூரம் சொல்லுகின்றேன். நான் இதுவரையில் பொய் சொன்னதில்லை. இனி எப்பொழுதாவது சொல்வதும் இராது. நீ உன் பாதிவ்ரத்யத்தினால் மனத்திற்கு உல்லாஸம் விளைவிக்கும் ஸ்வபாவமுடையவளாகையால் நீ என் மனத்தில் புகுந்திருக்கின்றனை. உன்னிடத்தில் என் மனம் மிகுதியும்பற்றிருக்கின்றது. யுத்தத்தில் தேவேந்த்ரனோடுகூடி தேவாஸுரர்கள் வரினும் இந்த ராமலக்ஷ்மணர்களை வெல்லமுடியாது. பிழைத்திருப்பதை அறிவிக்கக் கூடிய ஸைன்யத்தின் முகத்தெளிவு முதலிய அடையாளங்களைக் கண்டும், முன்பு நான் கண்ட ஸ்வப்னத்தைப்பற்றியும், உனக்குச் சொன்னேன். ஸீதே! இது மிகவும் பெரிய அடையாளம். இதை மெல்லக் காண்பாயாக. இவ்விருவரும் மூர்ச்சித்திருப்பினும் இவருடைய முக காந்தியின் பெருக்கு சிறிதும் மாறுதிருக்கின்றது. ஆயுள் முடிந்து ப்ராணன்களை இழந்தவர்களின்

1. கர்ணதாரன்-ஓடம் நடத்துகிறவன்.

முகத்தைப் பார்க்கின், பெரும்பாலும் அவை மிக்க விகாரமுடையவைகளாயிருக்கும். ஸீதே! நீ ராமலக்ஷ்மணர்களைப்பற்றி இங்ஙனம் சோகத்தினால் முகவிகாரம் பெறுதிருப்பாயாக. அவர்கள் இறந்தார்களென்று ப்ரமிக்கவேண்டாம். அந்த மோஹத்தை விடுவாயாக. மனவருத்தத்தையும் துறப்பாயாக. அவர்கள் இப்பொழுது பிழைக்கக் கூடுமேயன்றி வேறில்லை' என்றனள். தேவகன்யகைபோன்ற ஸீதை, அந்த த்ரிஜடை மொழிந்த வார்த்தையைக்கேட்டு அஞ்ஜலி செய்து, 'நீ சொன்னபடியே இவர்கள் பிழைத்திருப்பார்களாக' என்றனள். த்ரிஜடை மனோவேகமுடைய அந்த புஷ்பக விமானத்தைத் திருப்பி மனவருத்தமுற்று முகம் வாடியிருக்கிற ஸீதையை லங்காபுரிக்குள் அழைத்துக் கொண்டு போயினள். அனந்தரம் ராக்ஷஸஸ்த்ரீகள் ஸீதையையும் த்ரிஜடையையும் புஷ்பக விமானத்தினின்று இறக்கி அசோக வனத்திற் கொண்டுபோய் சேர்த்தனர். ஸீதை பல வ்ருக்ஷஸமூஹங்களோடு கூடி ராக்ஷஸர் தலைவனான ராவணனுடைய அந்தப்புர உத்யானமாகிய அசோக வனிகையில் பிரவேசித்து ராஜகுமாரர்களான ராமலக்ஷ்மணர்களைத் தான் கண்ட விதமாகவே எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டு மிகுதியும் துக்கமுற்றிருந்தனள். நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

—

ராமன் சிறிது மூர்ச்சை தெளிந்து லக்ஷ்மணனைக் குறித்து வருந்துதலும், ஸுக்ரீவனைத் திரும்பிக்கிஷ்கிந்தைக்குப் போவென்பதும், விபீஷணன் வானர ஸைன்யத்தை நிலை நிறுத்தி ராமனிடம் வருதலும்.

ஸுக்ரீவன் முதலிய மஹாபலசாலிகளான அவ்வானரோத்தமர்கள் அனைவரும் பயங்கரமான நாக பாசங்களால் கட்டுண்டு, ஸர்ப்பங்கள்போல் நெடுமூச்செறிந்துகொண்டு ரக்தத்தில் நனைந்து பூமியில் படுத்திருக்கின்ற மஹானுபாவரும் தசரதகுமாரர்களுமான ராமலக்ஷ்மணர்களைச் சுற்றிச் சூழ்ந்து சோகத்தில் ஆழ்ந்திருந்தனர். இவ்வளவில் வீர்யவானாகிய ராமன் பாணபாசங்களால் கட்டுண்டிருப்பினும் தீரனும் பலிஷ்டனுமாகையால் மூர்ச்சை தெளிந்தனன். பாணங்கள் நன்கு பாயப்பெற்று ரக்தத்தில் நனைந்து வருந்தி முகம் வாடப்பெற்றிருக்கிற தம்பியாகிய லக்ஷ்மணனைப் பார்த்து ராமன், துக்கத்தை அடக்க முடியாமல் 'என் தம்பி யுத்தத்தில் ஜயிக்கப்பட்டுத் தரையில் படுத்திருக்க, நான் இப்பொழுது காணலானேனே! இனி எனக்கு ஸீதையால் ப்ரயோஜனம் என்ன? என் ப்ராணனாவது இனி எதுக்கு? பூலோகத்தில் தேடினால் ஸீதைக்கு நிகரான பெண்மணியை ஸம்பாதித்துக் கொள்ளலாம்; அன்றி, ஸஹாயனும் யுத்தத்தில் ஸமர்த்தனுமாகிய லக்ஷ்மணனைப்போன்ற தம்பியை மாத்ரம் பெறமுடியாது. ஸுமித்ரையின் கண்களுக்கு ஆநந்தம்விளைப்பவனாகிய லக்ஷ்மணன் மரணம் அடைவானாயின், நான் இவ்வானரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ப்ராணன்களை விடுகிறேன். நான்

அயோத்யைக்குப் போய், கௌஸல்யைக்கு என்னென்று சொல்வேன்? கைகேயிக்கு என்னென்று சொல்வேன்? லக்ஷ்மணனில்லாமல் நான் மாத்ரம் அவ்விடம் போவேனாயின், பெற்ற பிள்ளையைப் பார்க்க வேண்டுமென்று பரபரப்புற்று, பிள்ளை போனதை அறிந்து கன்றை இழந்த பசுபோல் நடுங்கித் தடுமாற்றமுற்று அழுகுரல் பக்ஷிபோல் அலறுகின்ற தாயான ஸுமித்ரையை எங்ஙனம் ஆஶ்வாஸப்படுத்துவேன்? சத்ருக்னனுக்கும் பெரும்புகழனாகிய பரதனுக்கும் வாய் திறந்து எங்ஙனம் சொல்லுவேன்? என்னோடுகூட அரண்யத்திற்கு வந்த லக்ஷ்மணனை இழந்து நான் மாத்ரம் திரும்பி அயோத்யைக்குப் போகையில், ஸுமித்ரை 'உன்னுடன் அரண்யத்திற்கு லக்ஷ்மணன் வந்தானே! அவனை விட்டு நீ மாத்ரம் எப்படி திரும்பி வந்தாய்?' என்று வெறுப்பாளே! ஐயோ! அதை நான் பொறுக்க வல்லனல்லேன். எனக்குப் பிழைத்திருக்க இஷ்டமேயில்லை; இங்கேயே ப்ராணன்களை விட்டு விடுகிறேன். லக்ஷ்மணனை அரண்யத்திற்கு அழைத்துக்கொண்டு வருகையாகிற துஷ்கார்யத்திற்கு முயன்றேனே! சீ! நான் எவ்வளவு துஷ்டனோ? என் பிழைப்பைச் சுடுக. என்னைப்பற்றியல்லவோ லக்ஷ்மணன் இவ்வாறு தரையில் விழுந்து ப்ராணன்களை இழந்தாற்போல் [1] சாதல்பத்தில் சாய்ந்திருக்கின்றான்' என்று புலம்பி, அனந்தரம் லக்ஷ்மணனைக் குறித்து 'லக்ஷ்மணா! நான் வருத்தமுற்றிருப்பேனாயின் நீ என்னை ஸமாதானப்படுத்திக்கொண்டிருப்பாயே; இப்பொழுது நீ மரணம் அடைந்திருக்கையால் நான் எவ்வளவு துக்கித்திருப்பினும், என்னோடு பேசவுங்கூடமுடியாதிருக்கின்றனை. எவன் இப்பொழுது

1. பாணப்படுக்கையில்.

யுத்தத்தில்ராக்ஷஸர்களைக்கொன்று விழத்தள்ளினனே அவ்வீரனே, அந்த ராக்ஷஸர்களை விழத்தள்ளின பூமியிலேயே பகைவரால் அடியுண்டு விழுந்திருக்கிருனே! என்னென்பேன்? இவன் இப்படி தனது ரக்த ப்ரவாஹத்தில் முழுவதும் நனைந்து மிதந்து பாணங்கள் உடம்பு முழுவதும் பொற்றுக் கொண்டிருக்கப் பெற்று, இந்தச் சரதல்பத்தில் படுத்து அஸ்தமயத்தை அடைகின்ற ஸூர்யன்போல் புலப்படுகின்றனன். மர்மங்களெல்லாவற்றிலும் பாணங்கள் பாய்ந்திருக்கையால் இவன் வாயைத் திறந்து பேசமுடியாதிருக்கின்றன். இவன் பேசாதுபோயினும், இவன் பார்வையிலுள்ள ப்ரேமத்தினுலேயே இவனுடையபாதை ஏற்படுகின்றது. பேரொளி விளங்கப்பெற்ற இந்த லக்ஷ்மணன், நான் அரண்யத்திற்கு வரும்பொழுது என்னை எப்படி பின்ருெடர்ந்து வந்தனனே, அப்படியேநானும், அவன் யம க்ருஹத்திற்குப் போகும்பொழுது இவனைப் பின்ருெடர்ந்து போகின்றனன். இந்த லக்ஷ்மணன் பந்து ஜனங்களிடத்தில் எப்பொழுதும் ப்ரீதியுடையவன்;என்னை எப்பொழுதும் நியமத்துடன் அனுஸரித்திருப்பவன். இப்படிப்பட்டவன் துஷ்டனுகிய என் அக்ரமங்களால் இப்பொழுது இந்த துரவஸ்தையை அடைந்தனன். வீரனுகிய லக்ஷ்மணன் தான் எவ்வளவு கோபமுறுவானுயினும் என்னேடு பருஷமாயாவது அப்ரியமாயாவது மொழிய எப்பொழுதும் கேட்டதில்லை. நான் எவ்வளவு ஆலோசித்துப் பார்க்கினும் அங்ஙனம் சொன்னதாக எனக்கு நினைவுவரவில்லை. ஆகையால் சொன்னதே இல்லை. ஆயிரங்கையுடையவனுகையால் ஒரே தடவையில் ஐந்நூறு பாணங்களைத் தொடுத்து விடவல்ல கார்த்தவீர்யார்ஜுனனைக் காட்டிலும் பாணங்களைத் தொடுத்து

விடுவதில் லக்ஷ்மணன் மேலானவன். எப்படியெனில், லக்ஷ்மணன் இரண்டு கைகளுடையவனாயினும் ஆயிரங் கைகளால் கார்த்தவீர்யார்ஜுனன் ஐந்நூறு பாணங்களை ப்ரயோகிக்குங் காலத்தில் அத்தனை பாணங்களைத் தானும் ப்ரயோகிப்பானாகையால் இஷுக்களிலும் அஸ்த்ரங்களிலும் மேற்பட்டவன். எவன் பாணங்களால் மஹானுபாவனாகிய இந்த்ரனுடைய பாணங்களையும் அடித்துவிட வல்லவனோ, அப்படிப்பட்ட லக்ஷ்மணன் மிகவும் சிறந்த படுக்கையில் படுக்கத் தகுந்தவன் இப்பொழுது அடியுண்டு வெறுந்தரையில் படுத்திருக்கின்றனன். நான் விபீஷணனை ராக்ஷஸ ராஜனாகச் செய்யாதுபோயினன். ஆகையால் அவனை இங்ஙனஞ் செய்கிறேனென்று மொழிந்த பொய் வார்த்தையும் என்னைத் தஹித்துவிடும். வானரராஜனே! ஸுக்ரீவா! நீ இம்முஹூர்த்தத்திலேயே இங்கிருந்து கிஷ்கிந்தைக்குப்போவது யுக்தமாயிருக்கின்றது. நான் இல்லையென்று தெரிந்தால் பலிஷ்டனாகிய ராவணன் உன்னைத் தூரத்தியடிப்பான். ஸுக்ரீவா! நீ அங்கதனை அழைத்துக் கொண்டு ஸைன்யங்களோடும் நண்பர்களோடும் கூடி நீலன் நலன் முதலானவர்களோடு ஸமுத்ரத்தைத் தாண்டுவாயாக. ஹனுமான் யுத்தத்தில் பிறர்க்குச் செய்யமுடியாத கார்யத்தைச் செய்தனன். கரடிகளில் தலைவனாகிய ஜாம்பவானும் கொண்டைமுயல்களுக்கு அதிபதியான கவாக்ஷனும் நன்கு யுத்தம் நடத்தினதற்கு ஸந்தோஷிக்கின்றனன். அங்கதனும் மைந்தனும் த்விவிதனும் மிகுதியும் சிறந்த யுத்தம் செய்தனர். கேஸரியும் ஸம்பாதியும் பயங்கரமாக யுத்தஞ்செய்தனர் கவயன் கவாக்ஷன் சரபன் கஜன் ஆகிய இவர்களும் மற்றுமுள்ள வானரவீரர்களும் என் விஷயமாக ப்ரா

ணன்களையும் பொருள்செய்யாமல் நன்கு யுத்தஞ்செய்த னர். ஸுக்ரீவா! எவர் எவ்வளவு ப்ரயத்னங்கள் செய் தும் என்ன உபயோகம்? கடைசியில் தெய்வத்தை அதி க்ரமிக்க மனிதர்களுக்கு முடியாதல்லவா? சத்ருக்களை வருந்தச்செய்பவனே! ஸுக்ரீவா! நண்பனும் நன்மையை விரும்புவோனுமாகிய ஒருவன், எவ்வளவு செய்யக் கூடுமோ அவ்வளவும், நீ தர்மிஷ்டனாகையால் தர்மத் திற்குக்குறைநேறுமேயென்று பயந்தும் அதர்மஞ்செய் வதற்கு அஞ்சியும் சக்தி வஞ்சனையில்லாமல் செய்தனை' என்று மொழிந்து, உடனே வானரவீரர்களைப் பார்த்து 'வானர ஶ்ரேஷ்டர்களே! நீங்கள் உங்கள் ஸ்னேஹித னுடைய கார்யத்தை இங்ஙனம் செய்தீர்கள். இனி உங் களுக்குப் போகும்படி அனுமதி கொடுத்தனன். இஷ் டப்படி போவீர்களாக' என்றனன். அவ்வானரர்கள் அனைவரும் அங்ஙனம் ராமன் புலம்புவதைக் கேட்டு, துக்கத்தினால் கண்கள் சிவக்கப்பெற்றுக் கண்ணீர்க ளைப் பெருக்கினர். அப்பால் விபீஷணன் கையும் கதை யுமாக வானர ஸைன்யத்தையெல்லாம் நிலைநிறுத்தி, வேகமாக ராமனிருக்குமிடத்திற்கு வந்தனன். அங்ங னம் கதையைக் கையிலேந்தி மைக்குவியல்போன்ற கருந்தேஹத்துடன் விரைந்து வருகின்ற விபீஷணனைக் கண்ட வானரர்களெல்லோரும் இந்த்ரஜித்தென்று நினைத்து பயத்தினால் ஓடிப்போகத் தொடங்கினர். சேஷ்டையின்றி ப்ரஜ்ஞையுமற்று யுத்த பூமியின் தூளி கள் படிந்து சரதல்பத்தில் படுத்திருக்கின்ற ராமலக்ஷ் மணர்களைப் பார்க்க விபீஷணன் வந்தனன். வானரர்கள் அங்ஙனம் அந்த ராஜகுமாரர்கள் தரையில் விழுந்திருப் பதையும் விபீஷணன் வருவதையும் கண்டு இந்த்ரஜித் தென்று ப்ரமித்துக் காற்றினால் கலக்கப்பட்ட மேகங்

கள் போல் மிகுதியும் வருந்தி ஓடத்தொடங்கினர். நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விபீஷணன் ராமலக்ஷ்மணர்களின் அவஸ்தையைக் கண்டு துக்கிக்கையில் ஸுக்ரிவன் ஸமாதானப்படுத்துதலும், கருத்மான் வந்து ராம லக்ஷ்மணர்களுக்கு நாகபாச விமோசனஞ் செய்தலும், வானரர்கள் ராம லக்ஷ்மணர் ஸ்வஸ்தானதைக் கண்டு ஸந்தோஷித்து ஸிம்ஹநாதஞ் செய்தலும்.

அனந்தரம் மஹாதேஜஸ்வியும் மஹாபலிஷ்டனும் வானரராஜனுமாகிய ஸுக்ரீவன், வானரர்கள் அப்பொழுது ஓடுவதற்குக் காரணந் தெரியாமல், 'இந்த நமது வானர ஸேனை, ஜலத்தில் எதிர்காற்றால் அடிக்கப்பட்ட ஓடம்போல் வ்யாகுலமாயிருக்கிறது, ஏன்?' என்று வினவினன். ஸுக்ரீவன் சொன்னதைக் கேட்டு, வாலிகுமாரனாகிய அங்கதன் அவனை நோக்கி 'தசரதகுமாரர்களும் மஹானுபாவர்களும் ராமனும் மஹாபலமுடைய லக்ஷ்மணனுமாகிய இருவரும் தேஹம் முழுவதும் பாணஸமூஹங்கள் நிரம்பப்பெற்று ரக்தப்ரவாகத்தில் மிதந்து கொண்டு சரதல்பத்தில் படுத்திருக்கின்றார்களே! நீ பார்க்கவில்லையா என்ன? ஸேனை கலங்குவதற்கு வேறு காரணமொன்றும் இல்லை' என்றனன். அப்பால் வானராதிபதியான ஸுக்ரீவன், புத்ரனாகிய அங்கதனைக் குறித்து 'இங்ஙனம் ராமலக்ஷ்மணர்கள்விழுந்திருப்பது இதற்குக் காரணமன்றென்று நினைக்கவில்லை. இதுவும் காரணமே. வேறொரு பயமும் இதற்குக் காரணமாயிருக்க வேண்டும். ஏனெனில், இவ்வானரர்கள் முகத்தில் வருத்தம் வழிய பயத்தினால் கண்களை மலரவிழித்துப் பார்த்துக்கொண்டு சிலை முதலிய ஆயுதங்களை வீசி

யெறிந்து ஓடுகின்றனர்; காண்பாய். ஒருவரைப் பார்த்து ஒருவராவது வெட்கமுறுமல், பின் திரும்பிப்பாராமல், சீக்ரமாகப் போகும்பொருட்டு ஒருவரை யொருவர் இழுத்துக்கொண்டு போவதும் கீழ் விழுந்தவனைத் தாண்டிப்போவதுமாய் ஓடுகின்றனர். காண்பாய்' என்றனன். இதற்குள் வீரனுகிய விபீஷணன் கையும் கதையுமாய் வந்து, ஸுக்ரீவனை ஆசீர்வதித்து, ராமனைக் கண்டனன். ஸுக்ரீவன் விபீஷணனைப் பார்த்து, வானரர்கள் அங்ஙனம் பயப்படுகின்றுர்களென்று தெரிந்து கொண்டு தன் பக்கத்திலிருக்கிற பல்லூக ராஜனுகிய ஜாம்பவானைப் பார்த்து 'இதோ விபீஷணன் வந்தனன். வானரோத்தமர்கள் இவனைப் பார்த்தே இந்த்ராஜித் தென்று சங்கித்து பயந்து ஓடுகின்றனர். மிகுதியும் பயந்து பலவாறு ஓடுகின்ற இந்த வானரர்களெல்லோரையும் நீ சீக்ரமாக நிலைநிறுத்தி, 'வந்தவன் விபீஷணனே. இந்த்ராஜித்தன்று' என்று இவர்களுக்குச் சொல்வாயாக' என்றனன். ஸுக்ரீவன் இங்ஙனம் சொல்லுகையில், கரடிகளுக்கு ராஜனுகிய ஜாம்பவான் ஓடிப்போகின்ற வானரர்களைத் தடுத்துத் திருப்பி அவர்களெல்லோரையும் ஆஶ்வாஸப்படுத்தினன். அவ்வானரர்கள் எல்லோரும் பல்லூகராஜனுகிய ஜாம்பவான் சொன்னதைக் கேட்டு, விபீஷணனைப் பார்த்து, பயந் தெளியப்பெற்றுத் திரும்பி வந்தனர். தர்மஸ்வபாவனுகிய விபீஷணன் ராமலக்ஷ்மணர்களின் தேஹம் முழுவதும் பாணங்கள் பொற்றுக்கொண்டிருப்பதைக் கண்டு, இந்த்ரியங்களெல்லாம் வருந்தப் பெற்றனன். அப்பால் விபீஷணன் கையில் ஜலத்தை எடுத்துக் கொண்டுவந்து அந்த ராமலக்ஷ்மணர்களின் கண்களைத் துடைத்துச் சோகத்தினுல் மனம் மிகவும் தடுக்கப்

பெற்று, ரோதனஞ்செய்துகொண்டு 'இவ்விருவரும் பலிஷ்டரும் மிகுந்த பராக்ரமமுடையவரும் யுத்தத்தில் மிகுதியும் ப்ரீதியுடையவருமாயினும், ராக்ஷஸர் கபட யுத்தஞ் செய்பவராகையால் அவர்களால் இப்படிப் பட்ட துரவஸ்தை அடைந்தனர். இந்த ராமலக்ஷ்மணர் களோ கபடமில்லாமல் பராக்ரமத்தை நிறைவேற்று பவர்கள். ஆகையால் என் தமையன் புதல்வனும் கபட யுத்தஞ்செய்து தந்தைக்கு [1]அவத்யத்தை விளைக் கும் துராத்மாவுமாகிய அவ்விந்த்ரஜித்து ராக்ஷஸர்க் குரியதாகிய குடில புத்தியால் இவர்களை வஞ்சித்தனன். இவ்விருவரும் ரக்தத்தினால் நனைந்து உடம்பு முழு வதும் பாணங்கள் பொற்றுக்கொண்டு நிறைந்திருக்கை யால் முள்ளம்பன்றிகள் போன்று தரையில் படுத்து உறங்குகிறுப்போல் புலப்படுகின்றனர். நான் எவருடைய பராக்ரமத்தை அவலம்பித்து பிரதிஷ்டை அடையலா மென்று விரும்பினேனோ, அப்படிப்பட்ட புருஷஶ்ரேஷ் டர்களாகிய ராமலக்ஷ்மணர்களிருவரும் தேஹத்தை விடுவதற்காகப் பெருநித்ரையில் இருக்கின்றனர். எனக்கு ராஜ்யம் பெறவேண்டுமென்கிற விருப்பமும் போயிற்று. இனி பிழைத்திருந்தால் மிகுதியும் விபத்து நேரிடும். என் பகைவனாகிய ராவணன் தன் ப்ரதிஜ்ஞை ஈடேறப் பெற்றான்' என்று புலம்பினன். வானரராஜ னாகிய ஸுக்ரீவன் தைர்யமுடையவனாகையால் இப்படிப் புலம்புகின்ற விபீஷணனை அழுந்தக் கட்டிக்கொண்டு 'தர்மங்களை உணர்ந்தவனே! நீ லங்கா ராஜ்யத்தைப் பெறுவாய். இதற்கு ஸந்தேஹமில்லை. ராவணனுக்கும் அவன் புதல்வனுக்கும் கருத்து நிறைவேறாது. இந்த உபத்ரவத்தினால் இவர்கள் மரணாந்தமான பீடையை

1. அவத்யம்—கெடுதி.

அடையமாட்டார்கள். சிறிது மோஹித்திருக்கிறார்கள்; இவ்வளவேயன்றி வேறொன்றுமில்லை. இவர்கள் மூர்ச்சை தெளிந்து யுத்தத்தில் ராவணனை ராக்ஷஸக் கூட்டங்களோடு வதிக்கப்போகிறார்கள்' என்றனன். ஸுக்ரீவன் அங்ஙனம் குளிர்ந்த உரைகளைப் பேசி விபீஷணனை ஆஶ்வாஸப்படுத்தி, பக்கத்திலிருக்கிற மாமனாகிய ஸுஷேணனைப் பார்த்து 'நீ பகைவரை அடக்குந்திறமையுடைய அண்ணன் தம்பிகளான இந்த ராமலக்ஷ்மணர்கள் மூர்ச்சை தெளிந்த பின்பு, இவர்களை அழைத்துக்கொண்டு சூரர்களான சில வானரர்களோடு கிஷ்கிந்தைக்குப் போவாய். நான், ராவணனையும் அவன் புதல்வர்களையும் பந்துக்களையும் கொன்று காணாதுபோன தன் ராஜ்யலக்ஷ்மியை தேவேந்த்ரன் திருப்பிக்கொண்டு வந்தாற்போல் ஸீதையை அழைத்துக்கொண்டு வருகிறேன்' என்றனன். வானரோத்தமனாகிய ஸுக்ரவன் சொன்ன இவ் வார்த்தையைக் கேட்டு ஸுஷேணன் 'முன்பு தேவா ஸுரர்களுக்கு மிகுதியும் பயங்கரமாக நடந்த மஹா யுத்தமும் எனக்குத் தெரியும். அப்பொழுது பாண ப்ரயோகத்தில் ஸமர்த்தர்களும் ஆயுத வித்யையை அறிந்தவர்களுமாகிய அஸுரர்கள் தேவதைகளை அடிக்கடி மாயையால் மறைந்துகொண்டு அடித்தனர். அப்பொழுது தேவதைகளில் சிலர் பாணங்களால் பீடிக்கப்படுவதும் சிலர் மூர்ச்சை அடைவதும் சிலர் மரணம் அடைவதுமாயிருக்கையில், ப்ருஹஸ்பதி மந்த்ரங்கள் நிறைந்த ம்ருதஸஞ்சீவனி முதலிய வித்யைக ளாலும் மூலிகைகளாலும் அவர்களுக்குச் சிகித்ஸை செய்தனன். அந்த ஓஷதிகளைக் கொண்டுவரும் பொருட்டு ஸம்பாதி பனஸன் முதலிய வானரர்கள்

மிகுந்த வேகத்துடன் க்ஷீர ஸமுத்ரத்திற்குப் போவார்களாக. வானரர்களுக்கு மாத்ரம் பர்வதங்களி லிருப்பவையான அம்மஹௌஷதிகள் தெரியும். தேவதைகளால் நிர்மிக்கப்பட்ட ஸஞ்சீவகரணி விஸல்ய கரணி என்கிற இந்த திவ்யமூலிகைகளைக் கொண்டு வரும்பொருட்டு அவர்கள் போவார்களாக. ஸமுத்ரங் களிற் சிறந்த க்ஷீரஸமுத்ரத்தில் முன்பு தேவதைகள் அம்ருதங் கடைந்த இடத்தில் சந்த்ரமென்றும் த்ரோண மென்றும் இரண்டு பர்வதங்கள் இருக்கின்றன. அப் பர்வதங்களில் அம்மஹௌஷதிகள் இருக்கின்றன. தேவதைகள் மிகுதியும் சிறந்த அம்மூலிகைகளை அப் பர்வதங்களிரண்டிலும் வைத்தனர். ராஜனே! வாயு குமாரனாகிய இந்த ஹனுமான் அவ்விடம் போவானாக' என்றனன். இதற்குள் மின்னல்களோடு கூடின மேகங்க ளைப் பறக்கடிப்பதும் ஸமுத்ர ஜலங்களை உயரக் கிளம்பச் செய்வதுமாகி பூமி முழுவதையும் நடுங்கச் செய்வதுபோன்ற ஓர் பெருங்காற்று வீசிற்று. அது கருத்மானுடைய (கருடனுடைய) சிறைகளின் காற்று. அந்தச் சிறைகளினின்றுண்டான பெருங் காற்றினல், லங்காத்வீபத்திலுள்ள பெரிய வ்ருக்ஷங்களெல்லாம் கிளைகள் முறியப்பெற்று வேர்களுடன் ஸமுத்ரத்தில் விழுந்தன. சிறந்த உடல்களையுடைய அந்த லங்கையி லுள்ள ஸர்ப்பங்களெல்லாம் பயமுற்றன. ஜலஜந்துக்க ளெல்லாம் பயமுற்று விரைந்து ஸமுத்ரத்திற்குள் புகுந்தன. அப்பால் சிறிது நேரங்கழித்தபின் வானரர்க ளெல்லோரும் எரிகிற அக்னிபோல் ஜ்வலிக்கின்ற மஹாபலனாகிய கருத்மான் புலப்படக் கண்டனர். மஹா பலிஷ்டர்களும் புருஷதிலகர்களுமான ராமலக்ஷ்மணர் களை பாண ரூபங்களாகி பந்தித்திருந்த ஸர்ப்பங்க

ளெல்லாம், அந்த கருத்மான் வந்ததைக் கண்டு, பயத்தி ஞல் ஓடிப்போயின. அப்பால் கருத்மான் ராமலக்ஷ்மணர்களைக் கண்டு வானரர்களால் பூஜிக்கப்பட்டுத் தனது இருகரங்களாலும் சந்த்ரபிம்பம்போல் ப்ரகாசிக்கின்ற அவரது முகங்களைத் தடவினன். கருத்மான் ஹஸ்தங்களால் தடவினவுடனே அவ்விருவருடைய தேஹத்திலுள்ள வ்ரணங்களெல்லாம் உலர்ந்து போயின. அவருடைய தேஹங்களும் சீக்ரத்தில் சிறந்த நிறமுடையவையாகி நிருநிருப்புற்றவைகளு மாயின. உடனே அவ்விருவர்க்கும் பிறரைப் பரிபவிக்குந் தேஜஸ்ஸும் வீர்யமும் சரீரபலமும் காந்தியும் லோகோத்தரமான கார்யங்களில் நிலைநின்ற முயற்சியாகிற உத்ஸாஹமென்னும் மஹாகுணமும் [1] ஸூக்ஷ்மார்த்த பரிஜ்ஞானமும் விவேகமும் நினைவும் முன்பைவிட இருமடங்கதிகமாக உண்டாயின. கருத்மான் மஹா பராக்ரமசாலிகளும் தேவேந்த்ரனை நிகர்த்தவரும் மிகுந்த ஸந்தோஷமுற்றவருமாகிய அவ்விருவரையும் அணைத்து ஆலிங்கனஞ் செய்தனன். அனந்தரம் ராமன் கருத்மானைப் பார்த்து 'உனது அனுக்ரஹத்தினல் நாங்களிருவரும் இப்பொழுது இந்த்ரஜித்தினு லுண்டான மஹா வ்யஸனத்தைக் கடந்தினம்; முன்போல் பலிஷ்டர்களுமாயினம். உன்னைப் பார்க்கையில், என் தந்தை தசரதமஹாராஜரையும் என் பாட்டனுகிய அஜமஹாராஜரையும் கண்டாற் போல் என் மனம் மிகுதியும் தெளிவுற்றிருக்கின்றது.

---

1. இங்கு 'ப்ரஜ்ஞாநம் ச ஸம்ருதிஶ்ச ஸ்மருதிஶ்ச த்விகுணம் தயோ:' என்பது மூலம். 'ஸம்ருதிஶ்ச' என்ற இடத்தில் உள்ள (யி) என்னும் அக்ஷரம் காயத்ரியின் பதினேழாவது அக்ஷரமாகையால் பதினேழாயிரம் ச்லோகங்கள் கடந்தனவென்று தெரிகிறது.



2788. கருத்மான் வந்து நாகபாசங்களை விடுவித்தல்.



2789. ராமலக்ஷ்மணர்கள் கருத்மானைப் பார்த்து நீ யாரென்று வினவுதலும், அவன் உங்கள் ஸ்னேஹிதனென்று கூறுதலும்.

மிகுதியும் அழகான உருவமுடையவனுகி திவ்யமான பூமாலைகளை அணிந்து நல்ல சந்தனுதி வாஸனைகளைப் பூசி நிர்மலமான வஸ்த்ரங்களை உடுத்தி திவ்யஆபரணங் களால் அலங்கரித்துக் கொண்டிருக்கிற உன்னைப் பார்க்க ஆச்சர்யமாயிருக்கின்றது. நீ யார்?' என்று வினவினன். மஹாதேஜஸ்வியும் மஹா பலனும் பக்ஷி ராஜனுமாகிய கருத்மான், மனத்தில் மிகுதியும் ஸந்தோஷமுற்று, ஸந்தோஷத்தினுல் கண்களில் நீர் பெருகப்பெற்று, ராமனைப் பார்த்து, 'ராமா! உனக்கு நண்பனும் ப்ரியனும் உனக்கு வெளியில் திரியும் ப்ராணன்போன்றவனுமாயிருப்பவன்; கருத்மானென்னும் பெயருடையவன்; உங்களிருவர்க்கும் ஸஹாயஞ் செய்யும்பொருட்டு இவ்விடம் வந்தனன். கொடுஞ்செயலுடைய இந்த்ரஜித்து ஆஸ்சர்ய சக்தியாகிய மாயாபலத்தினுல் மிகவும் பயங்கரமாக நிர்மித்த இந்த பாணபாச பந்தத்தை விடுவிப்பதற்கு மஹா வீர்யர்களான அஸுரர்களும் மஹாபலிஷ்டர்களான தானவர்களும் தேவேந்த்ரனேடு கூடின தேவதைகளும் கந்தர்வர்களும் வல்லரல்லர். இவை கூரான கோரைப்பற்களுடையவைகளும் விஷத்தினுல் கொடியவைகளும் சத்ருவுக்குப் பிறந்தவைகளுமான ஸர்ப்பங்கள்; இந்த்ரஜித்தின் மாயாப்ரபாவத்தினுல் பாணரூபங்களாகி உன்னை அடைந்தன. ராமா! நீ தர்மங்களை அறிந்தவன்; ஸத்யபராக்ரமன்; உன் தம்பி லக்ஷ்மணனும் யுத்தத்தில் பகைவரை உருமாய்க்கவல்லவன். ஆகையால் நீங்களிருவரும் பாக்யமுடையவர். உங்களுக்கு யாதொரு பயமும் இல்லை. நீங்கள் நாகபாசங்களால் கட்டுண்டிருக்கிற வருத்தாந்தத்தைக் கேட்டவுடனே, நான் உங்களிடத்திலுள்ள ஸ்னேஹத்தினுல்

மித்ர தர்மத்தைப் பரிபாலனஞ் செய்யமுயன்று வேகத்துடன் இவ்விடம் வந்தனன். இங்ஙனம் மஹா பயங்கரமான இந்த நாகபாசக் கட்டினின்று உங்களையும் விடுவித்தனன். நீங்கள் எப்பொழுதும் ஏமாறுதலின்றி அந்தந்த அஸ்த்ரங்களுக்கு ப்ரதி அஸ்த்ரங்களை ப்ரயோகிப்பதில் மிகுதியும் மனவூக்க முற்று நடக்கவேண்டும். ராக்ஷஸர்களெல்லோரும் யுத்தத்தில் கபடமாகப் போராடுந்தன்மையர். இதுவே அவர்க்கு ஸ்வபாவம். சூரர்களும் நிர்மலமான மன முடையவருமாகிய நீங்கள் சிறிதும் கபடமில்லாதவர். அதுவே உங்களுக்கு பலம். ஆகையால் நீங்கள் யுத்த பூமியில் ராக்ஷஸர்களைச் சிறிதும் நம்பலாகாது. இந்த த்ருஷ்டாந்தத்தினாலேயே ராக்ஷஸர்கள் எப்பொழுதும் குடிலராகையால், அவர்களை எப்பொழுதும் நம்பலாகா தென்று தெரிந்துகொள்வீர்கள்' என்றனன். மிகுதியும் பலிஷ்டனாகிய கருத்மான் இங்ஙனஞ் சொல்லி, அப்பால் ராமனை ஸ்னேஹிதனாகையால் ஸ்னேஹம் விளங்க அணைத்துக்கொண்டு போய் வருகிறே னென்று சொல்லத்தொடங்கி 'நண்பனே! ராகவா!' நீ ஸமஸ்த தர்மங்களும் உணர்ந்தவன்; பகைவரது தோஷங்களையும் பாராட்டாமல் ப்ரீதி செய்யுந்தன்மை யன்; எனக்கு அனுமதிகொடுக்கும்படி வேண்டுகிறேன். நான் வந்தபடியே திரும்பிப் போகவேண்டும். வீரனே! ராகவா! எனக்கும் உனக்கும் எப்படி ஸ்னேஹம்?' என்று தெரிந்துகொள்வதற்காக இப்பொழுது குதூஹலப்படவேண்டாம். நீ யுத்தத்தில் கார்யம் நிறைவேறப்பெற்ற பின்பு நமக்கு ஸ்நேஹம் எப்படி உண்டாயிற்றென்று தெரிந்துகொள்வாய். லங்கையின் மேல் அலைமேல் அலையாக பாணஸமூஹங்களை அள

வின்றிப் பரப்பி, பாலரும் வ்ருத்தரும் தவிர அதிலுள்ள மற்றவர்களெல்லோரையும் பகைவனுகிய ராவணனையும் கொன்று ஸீதையைப் பெறுவாயாக' என்றனன். மஹா வீர்யசாலியும் சீக்ரமாக நடக்கும் தன்மையனுமாகிய கருத்மான் இங்ஙனம் இந்த வார்த்தைகளைச் சொல்லி ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் பாண உபத்ரவத்தைப் போக்கி, அப்பால் அவ்வானரர்களினிடையில் அவ்விருவர்க்கும் ப்ரதக்ஷிணஞ் செய்து கட்டியணைத்து வாயுவைப்போல் ஆகாய மார்க்கத்தில் கிளம்பிப் போயினன். அனந்தரம் வானரயூதபதிகள், அப்பொழுது ராமலக்ஷ்மணர்கள் [1] வருத்தம் நீங்கி ஸுகமாக இருப்பதைக் கண்டு ஸந்தோஷத்தினுல்

---

1. இங்கு ஓர் விஷயம் தெரிந்துகொள்ள வேண்டியதாயிருக்கிறது. 'பிஸாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாம் சைவ ராக்ஷஸாந்। அங்குல்யக்ரேண தாந் ஹந்யாமிச்சந் ஹரிகணேஸ்வர' என்று 'பிசாச தானவ யக்ஷ ராக்ஷஸாதிகள் எல்லோரையும் விரல் நுனியாலேயே கொல்லுவேனென்று மொழிந்த நிரவதிக சக்தி ஸம்பன்னனும் ஸர்வஜ்ஞனுமாகிய ராமன் அசக்தன்போலும் அறியாதவன் போலும் இந்த்ரஜித்தினுல் அடிக்கப்பட்டு ரக்தம் பெருகப்பெற்றுப் பூமியில் விழுந்திருப்பதுபோல் நடனஞ்செய்வது ஏன்?' என்னில் உலகத்தில் ஸதாசாரத்தை நிலைநிறுத்தும்பொருட்டு இங்ஙனம் இருந்தானென்று தெரிகிறது. இந்த்ரஜித்தினுல் அடியுண்டு தோல்வியடைவதனுல் தோற்றும் பொருள் யாதெனில்—சுசியாயிருப்பவரும் சுத்த மனமுடையவரும் நிஷ்கபடருமாயிருப்பவர்க்கு ப்ராணஸந்தேஹத்தை விளைவிப்பதான ஆபத்து வரினும் நாசம் உண்டாகாது. அப்படியில்லாத பாபிஷ்டர்களுக்குக் கார்யஸித்தி கைமேலிருப்பினும் தவறிப்போம். ஆகையால் புருஷர்கள் சுசித்வம் நிஷ்காபட்யம் (கபடமில்லாமை) முதலிய குணங்கள் அமைந்திருக்க வேண்டுமென்று ஸத்புருஷர்களின் தர்மநிச்சயம் ஏற்படுகின்றது. 'ராவணனைக் கொல்வதற்கன்றோ தேவதைகளால் வேண்டப்பட்டு

ஸிம்ஹநாதங்களைச் செய்து லாங்கூலங்களை உதற லாயினர். பிறகு வானரர்கள் எப்பொழுதும்போல் ஸந்தோஷமுற்றவராகி, பேரி வாத்யங்களை அடித்தனர்; ம்ருதங்க வாத்யங்களை வாசித்தனர்; சங்கங்களை ஊதினர்; ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். வ்ருக்ஷங்களைக்கொண்டு போர்புரியுந் தன்மையுள்ள வானரர்கள் பராக்ரமத்தினால் செருக்குற்று அடிக்கடி தோள் தட்டி நானாவித வ்ருக்ஷங்களைப் பிடுங்கி அவற்றைக் கைகளில் ஏந்திக்கொண்டு அனேக லக்ஷம் பேர் யுத்தத்திற்கு ஸித்தமாயிருந்தனர். வானரர்கள் பெருந்த்வனி உண்டாகும்படி இரைச்சலிடுவதும் ராக்ஷஸர்களுக்கு பயத்தை விளைவிப்பதுமாகி யுத்தஞ்செய்யத் தொடங்கி லங்கையின் த்வாரங்களைத் தகைந்தனர். அனந்தரம் அர்த்த ராத்ரியில் அவ்வானர யூதபதிகள் ஸிம்ஹநாதங்களைச்

---

விஷ்ணு ராமனாய் அவதரித்தனன். அவனுக்கு அந்தக் கார்யமே வேண்டுமென்றி இந்த நடனங்களெல்லாம் ஏதுக்காக?' என்னில் துஷ்டர்களை நாசஞ் செய்வதுபோலவே தர்மத்தை நிலைநிறுத்துவதும் அவதாரத்திற்கு ப்ரயோஜனம். ராவணனைக் கொல்வது மாத்ரமே ப்ரயோஜனமாயின், இப்பொழுது இவ்வளவு ப்ரயாஸப் பட்டதெல்லாம் வீணாய்விடும். ஆனதுபற்றியே 'சாதுர்வர்ண்யஞ்ச லோகேஸ்மிந் ஸ்வேஸ்வே யர்மே நியோக்ஷ்யதி' என்று சொல்லப் பட்டது. நான்கு வர்ணங்களையும் தந்தமது தர்மங்களில் நிலை நிறுத்துவது, கேவலம் தர்மோபதேசஞ் செய்வது மாத்ரத்தினால் ஸித்திக்காது. அந்த உபதேசம் ஸ்ருதி ஸ்ம்ருதிகளால் ஏற்பட்டேயிருக்கின்றது. தான் அனுஷ்டிக்கிற ஆசாரத்தின் மூலமாய் தர்மத்தை ப்ரவசனஞ் செய்வதற்கல்லவோ மனுஷ்ய பாவனையை ஏற்றுக்கொண்டது. இல்லையாயின் இந்த நடனம் அவஸ்யமன்று. ஆகையால் தான் அனுஷ்டித்துக் காட்டுகிற ஆசாரத்தின் மூலமாய் தர்மத்தை நிலைநிறுத்தும்பொருட்டே ராமன் இந்த வருத்தம் முதலியவற்றைஅபிநயித்தானென்றுதெரிகின்றது. கோவிந்தராஜர்.

செய்கையில் பயங்கரமான அந்தத் துமுலத்வனி வர்ஷருதுவில் மேகங்களின் கர்ஜனைபோல் மிகுதியும் பயங்கரமாயிருந்தது. ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணனது ஆஜ்ஞையால் தூம்ராக்ஷன் சதுரங்க ஸேனையுடன் வந்து வானர ஸைன்யத்தைக் காணுதல்.

அப்பொழுது பலிஷ்டர்களான அவ்வானரர்கள் அங்ஙனம் ஸிம்ஹநாதஞ் செய்கையில் மிகுதியும் கம்பீரமான அந்த த்வனியை ராவணனும் ராக்ஷஸர்களும் செவியுற்றனர். அந்த ராவணன் தழதழப்பின்றி ஸ்னிக்தமாயிருப்பதும் கம்பீரமுமான த்வனியையுடைய அந்த ஸிம்ஹநாதத்தைக் கேட்டு, அந்த மந்த்ரிகளின் நடுவில் அவர்களைப் பார்த்து 'வானரர்கள் பலர் மிகுதியும் ஸந்தோஷமுற்று ஒன்று சேர்ந்து பெரியமேகங்கள் கர்ஜிப்பதுபோல் மிகவும் பெரிய கோஷம் கிளம்பும்படி ஸிம்ஹநாதங்களைச் செய்கின்றனர். ஆகையால் இவர்க்கு மிகுதியும் ஸந்தோஷம் உண்டானாற்போலிருக்கின்றது. இது ஸ்பஷ்டம். இதற்கு ஸந்தேஹமே இல்லை. அது அப்படியே. அம்மஹாத்வனிகளால் ஸமுத்ரமும் கலக்கமுற்றது. அங்கு அண்ணன் தம்பிகளான அந்த ராமலக்ஷ்மணர்கள் கூரான பாணங்களால் கட்டுண்டிருக்கின்றனர். மிகுதியும் பெரிய கோஷம் இதோ செவியிற்படுகின்றது. இவை ஒன்றோடொன்று விருத்தமா யிருக்கின்றன. இந்த பெருங்கோஷத்தால் அவர்க்குச் சரபந்தம் விட்டதோ என்னவோ என்று ஸந்தேஹம் உண்டாகின்றது'

என்றனன். ராக்ஷஸேஸ்வரனுகிய ராவணன் மந்த்ரிக ளேப் பார்த்து இவ்வார்த்தையை மொழிந்து அங்கு அருகே இருக்கின்ற ராக்ஷஸர்களேக் கண்டு, 'இப் பொழுது வானரர்க ளெல்லோர்க்கும் சோகிக்கவேண் டிய காலமாயிருக்க இவர்களெல்லோரும் ஸந்தோஷமா யிருப்பதற்கு விளேந்த காரணம் யாதோ சீக்ரமாகத் தெரிந்து வருவிர்கள்' என்று ஆஜ்ஞாபித்தனன். ராவணன் அங்ஙனம் ஆஜ்ஞாபிக்கையில் அந்த ராக்ஷஸர் பரபரப்புடன் கோட்டையின்மேல் எறி மஹானுபாவனுகிய ஸுக்ரீவன் பாதுகாத்து வருகின்ற வானர ஸேனேயைக் கண்டனர். மற்றும், மிகுதியும் பயங்கரமான நாகபாச பந்தத்தினின்று விடுபட்டு மஹானுபாவர்களான ராமலக்ஷ்மணர்கள் எழுந்து ஸுகமாயிருப்பதை அந்த ராக்ஷஸர்கள் கண்டு வருத்த முற்றனர். பயங்கரர்களான அந்த ராக்ஷஸர் பயத்தினுல் ஹ்ருதயம் நடுங்கப்பெற்று எல்லோரும் கோட்டையி னின்று இறங்கி முகங்கள் விலவிலக்கப்பெற்று ராக்ஷ ஸேந்த்ரனுகிய ராவணனிடம் போயினர். பேசுவதில் வல்லராகிய அவ்வரக்கர் முகம் மழுங்கப் பெற்று ராவணனேப் பார்த்து ராமலக்ஷ்மணர்கள் பாணக்கட்டி னின்று விடுபட்டிருக்கிருர்க ளென்னும் அப்ரிய ஸமாசாரத்தை யெல்லாம் நடந்தபடியே தெரிவிப்பவ ராகி, 'இந்த்ரஜித்து யுத்தத்தில் நாகபாசங்களால் பந்தித்து இப்படி அப்படி கைகளே அசைக்கவொட் டாதபடி செய்த அண்ணன் தம்பிகளும் சிறந்த யானே கள்போல் கம்பீர நடையுடையவர்களுமான அந்த ராம லக்ஷ்மணர்கள் யுத்தரங்கத்தில் நாகபாசங்களினின்று விடுபட்டுக் கட்டுத்தறியை அறுத்துக்கொண்ட மத்த கஜங்கள்போல் புலப்படுகின்ருர்கள்' என்றனர். மிகுதி

யும் பலிஷ்டனாகிய அந்த ராக்ஷஸேஸ்வரன் ராவணன் அவ்வரக்கர் சொன்னதைக் கேட்டுச் சிந்தையும் சோகமும் மிகுதியும் மேலெழப்பெற்று முகம் விலவிலக்கப் பெற்று 'இந்த்ரஜித்து தான் வரபலத்தினால் ஸம்பாதித்தவைகளும் பயங்கரங்களும் தீக்ஷ்ணங்களும் ஸர்ப்பங்களின் உருவமுடையவைகளும் வீணாகாதவைகளும் ஸூர்யனைப் போன்றவைகளுமான பாணங்களால் பலாத்காரஞ்செய்து அந்த ராமலக்ஷ்மணர்களை யுத்தத்தில் பந்தித்தனன். என் பகைவராகிய அவ்விருவரும் அப்படிப்பட்ட பாணங்களால் கட்டுண்டும் விடுபடுவார்களாயின், இனி இந்த ராக்ஷஸ ஸைன்யத்திற்கெல்லாம் ப்ராண ஸந்தேஹம் உண்டானாற்போலவே எனக்குத் தோற்றுகின்றது. முன்பு பல தடவைகளில் யுத்தத்தில் என் சத்ருக்களின் ப்ராணன்களைப் போக்கடித்தவைகளும் வாஸுகியைப்போல் தேஜஸ்ஸினால் திகழ்கின்றவைகளுமான பாணங்கள் கடைசியில் வீணாயினவன்றோ!' என்றனன். ராவணன் இங்ஙனஞ் சொல்லி மிகுதியுங் கோபமுற்று, ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்துகொண்டு ராக்ஷஸர்களினிடையில் தூம்ராக்ஷனென்னும் ராக்ஷஸனைப் பார்த்து 'உன் பராக்ரமம் அதிபயங்கரம். நீ பெரிய ராக்ஷஸ ஸைன்யத்தை அழைத்துக்கொண்டு ராமனையும் வானரர்களையும் வதிக்கும் பொருட்டுப் புறப்படுவாய்' என்று ஆஜ்ஞாபித்தனன். ராக்ஷஸ ராஜனாகிய ராவணன் போர்வீரர்களின் பலாபலங்களை அறியும் புத்தியுடையவனாகையால் இங்ஙனம் ஆஜ்ஞாபிக்கையில் தூம்ராக்ஷன் மிகுதியும் ஸந்தோஷமுற்று அவனுக்கு நமஸ்காரஞ் செய்து ராஜக்ருஹத்தினின்று வெளிப்புறப்பட்டனன். அவன் அந்த ராஜக்ருஹத்தின் த்வாரத்தினின்று வெளிவந்து அங்கிருக்கின்ற

ஸேனாத்யக்ஷனை நோக்கி 'நான் யுத்தஞ் செய்ய விருப்ப முற்றிருக்கின்றனன். என் ஸைன்யத்தை யெல்லாம் சீக்ரத்தில் ஸித்தப்படுத்துவாயாக. தாமதம் என்?' என்றனன். ஸேனையைப் பின்றொடர்ந்திருக்கிற அந்த ஸேனாத்யக்ஷன் ராவணனது ஆஜ்ஞையின்படி தூம்ராக்ஷன் சொன்ன வார்த்தையைக் கேட்டு சீக்ரமாக ஸைன்யத்தை யெல்லாம் ஸித்தப்படுத்தினன். பயங்கரமான உருவமுடையவர்களும் பலிஷ்டர்களுமான அவ்வரக்கர்கள் தந்தமது ஸௌர்யங்களை அறிவிக்கும்படி இடையில் மணிகளைக்கட்டி, சூலம் முத்கரம் முதலிய நானாவித ஆயுதங்களைக் கைகளில் ஏந்தி மிகுதியும் ஸந்தோஷத்தினால் கர்ஜித்துக்கொண்டு தூம்ராக்ஷனைச் சுற்றிக்கொண்டனர். ராக்ஷஸர், கதை பட்டிசம் இரும்புத்தடி உலக்கை பரிகம் பிண்டிவாலம் பல்லம் ஈட்டி கோடாலி முதலிய ஆயுதங்களை ஏராளமாக ஏந்தி மேகம்போல் கர்ஜித்துக்கொண்டு நாற்றிசைகளிலும் புறப்பட்டனர். மற்றுஞ் சில ராக்ஷஸர் கவசங்களைத் தரித்து, த்வஜங்களால் அலங்கரிக்கப்பட்டு நானாவித முகமுடைய கழுதைகள் பூட்டப்பெற்றுப் பொற்சாளரங்களோடு திகழ்கின்ற ரதங்களில் ஏறிக்கொண்டு புறப்பட்டனர். பெரும் புலிகள்போல் அணுகமுடியாத சில ராக்ஷஸஸ்ரேஷ்டர்கள் மிகுந்த வேகமுடைய குதிரைகளின் மேல் ஏறிக்கொண்டும், சிலர் மிகவும் மதித்த யானைகளின்மேல் ஏறிக்கொண்டும் புறப்பட்டனர். பயங்கரமான த்வனியுடைய தூம்ராக்ஷன் பொன்னால் அலங்கரிக்கப்பட்டுச் செந்நாய் முகமுடையவைகளும் ஸிம்ஹத்தின் முகமுடையவைகளுமான கழுதைகள் பூட்டப்பெற்ற திவ்யமான ரதத்தின்மேல் ஏறினன். மஹா வீர்யசாலியாகிய அந்த

தாம்ராக்ஷன் பயங்கரமாய் ஒலிப்பதும் கழுதைகள் பூட்டினதுமான மேலான ரதத்தில் ஏறிக்கொண்டு ராக்ஷஸர்களாற் சூழப்பட்டு அட்டஹாஸத்துடன், யூதபதியான ஹநுமான் இருக்கிற மேற்கு வாசலுக்குப் போயினன். பயங்கர பராக்ரமனும் மிகவும் பயங்கரனுமாகிய அந்த அரக்கன் அங்ஙனம் புறப்பட்டுப் போகையில், ஆகாயத்தில் திரியும் கோரமான பறவைகள் அவனுக்கு பயத்தை அறிவிப்பவையாகிக் குறுக்கிட்டுத் தடுத்தன. ரதத்தின் நுனியில் மிகவும் பயங்கரமான ஓர் பெரிய கழுகு விழுந்தது. பிணங்களைத் தின்னும் பெரிய பக்ஷிகள் கூட்டங் கூட்டமாய் த்வஜத்தின்மேல் விழுந்தன. ரக்தத்தினுல் நனைந்து வெளுத்த ஓர் பெரிய முண்டம் விகாரமான த்வனியுடன் ரோதனஞ் செய்துகொண்டு தாம்ராக்ஷனுக்கருகில் தரையில் விழுந்தது. மேகம் ரக்தமழை பெய்தது. பூமி கிடுகிடுவென்று நடுக்கமுற்றது. எதிர் காற்று இடி விழுந்தாற்போன்ற பெருங்கோஷத்துடன் மிகவேகமாக வீசிற்று. மற்றும், அப்பொழுது, திசைகளெல்லாம் இருள் மூடப்பெற்றிருக்கையால் சிறிதும் வெளிச்சமில்லாதிருந்தன. அந்த தாம்ராக்ஷன் ராக்ஷஸர்களுக்கு பயத்தை அறிவிப்பவைகளும் மஹா கோரங்களுமான அந்த உத்பாதங்கள் உண்டாவதைக் கண்டு துக்கமுற்றனன். தாம்ராக்ஷனுக்கு முன்னே வந்த ராக்ஷஸர்களெல்லோரும் துக்கத்தினுல் ஒன்றுந் தோற்ருதிருந்தனர். அப்பால் அதிபயங்கரனும் மஹா பலிஷ்டனுமாகிய தாம்ராக்ஷன் அந்த உத்பாதங்களைப் பொருள் செய்யாமல் ராக்ஷஸர்கள் பலர் சூழ்ந்து வரப்பெற்று யுத்தோத்ஸாஹத்துடன் பட்டணத்தினின்று வெளிப்பட்டு, ராமனது புஜங்களால் பரி

பாலிக்கப்பட்டதும் பல வானரர்கள் சூழ்ந்திருப்பதும் மஹாஸமுத்ரம் போன்றதுமாகிய அவ்வானர ஸேனையைக் [1] கண்டனன். ஐம்பத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தூம்ராக்ஷன் ஹநுமானால் அடியுண்டுமாளுதல்.

வானரர்களெல்லோரும் யுத்தத்தை விரும்பிக் கொண்டிருக்கையால், பயங்கர பராக்ரமனாகிய தூம்ராக்ஷன் புறப்பட்டு வருவது கண்டு மிகுதியும் ஸந்தோஷமுற்று ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். வானரர்கள் வ்ருக்ஷங்களைக்கொண்டும் ராக்ஷஸர்கள் சூலம் முத்கரம் முதலிய ஆயுதங்களைக்கொண்டும் ஒருவரை யொருவர் பயங்கரமாக அடித்துக்கொள்கையில் அவ்விருவகையார்க்கும் மிகுதியும் தமுலமான யுத்தம் நடந்தது. பயங்கரரான ராக்ஷஸர் ஒன்றுகூடி பயங்கரமான நானாவித பரிகங்களாலும் த்ரிசூலங்களாலும் நாற்புறத்திலும் வானரர்களைக் கண்டங்கண்டமாகச் செய்தனர். வானரர்களும் வ்ருக்ஷங்களைக் கொண்டு ராக்ஷஸர்களைப் பூமியில் சாகும்படி விழத் தள்ளினர். ராக்ஷஸர்களும் அதற்கு மிகுதியும் கோபமுற்று, கோரமான காலாக்னி போன்றவைகளும் கழுகின் இறகு கட்டப்பெற்றவைகளும் கோணலின்றி நேராகப் பாயுந்தன்மை யுடையவைகளும் கூராயிருப்பவைகளுமான பாணங்களை விடுத்து வருந்தச் செய்தனர். ராக்ஷஸர்கள் அங்ஙனம் பயங்கரமான

---

1. ராமலக்ஷ்மணர்கள் நாகபாசக் கட்டுண்ட ராத்ரி ப்ரதமை என்பர்கள். மற்றை நாள் த்விதீயையினன்று தூம்ராக்ஷன் யுத்தத்திற்கு வந்தானென்று தெரிகிறது.

கதைகளையும் பட்டிசங்களையும் கூடமுத்கரங்களையும் சொண்டு வானரர்களை ஓயாது வதித்துக்கொண்டிருக்கையில், அவர்கள் மஹா பலிஷ்டர்களாகையால் ரோஷத்தினால் உத்ஸாஹம் மேலெழப்பெற்றுச் சிறிதும் பின்வாங்காமல் போராடினர். அங்ஙனம் பாணங்களாலும் சூலங்களாலும் சரீரம் பிளக்கப்பெற்ற அந்த வானரவீரர்கள் அப்பொழுது வ்ருக்ஷங்களையும் சிலைகளையும் கையிற் கொண்டனர். அவ்வானர வீரர்கள் அவ்வளவுக்கவ்வளவு பயங்கரமான வேகத்துடன் ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸர்களைப் புடைத்தனர்; தங்கள் பெயர்களை உரக்க மொழிந்தனர். அப்பொழுது வானரர்கள் நானாவிதமான கற்களையும் மரங்களையும் கொண்டும், ராக்ஷஸர் பலவகை ஆயுதங்களைக் கொண்டும் ஒருவர்மேல் ஒருவர் முயன்று யுத்தஞ் செய்கையில், அந்த யுத்தம் ஆச்சர்யத்தை விளைவிப்பதும் பயங்கரமுமாயிருந்தது. சில ராக்ஷஸர் ஜயசாலிகளான வானரர்களால் அடிக்கப்பட்டு முடிந்து போயினர்; சில ராக்ஷஸர் வாயால் ரக்தத்தைக் கக்கினர். வானரர்கள் சில ராக்ஷஸர்களைப் பக்கங்களில் பிடித்துக் கிழித்தனர்; சிலரை வ்ருக்ஷங்களால் அடித்துத் திரள்திரளாகக் குவித்தனர்; சிலரைக் கற்களால் சூர்ணஞ் செய்தனர்; சிலரைப் பற்களால் கடித்துக் கிழித்தனர். வானரர்கள் வீசியெறிந்த பர்வத சிகரங்களால் முறிந்து விழுந்த த்வஜங்களும் மடிந்து விழுந்த கழுதைகளும் த்வம்ஸமடைந்த ரதங்களும் தரையில் விழுந்த ராக்ஷஸ சரீரங்களும் பர்வதம்போன்ற உருவமுடைய மேலான யானைகளும் முறிந்து விழுந்த குதிரைகளும் உயிரையிழந்த குதிரைக்காரர்களும்

ஆகிய இவைகளால் அந்த யுத்தபூமி முழுதும் நிரம்பியிருந்தது. பயங்கர பராக்ரமர்களான வானர வீரர்கள் மிகுந்த வேகத்துடன் கிளம்பிக் கிளம்பிக் கூரான நகங்களால் ராக்ஷஸரது முகங்களைச் சேதிக்கையில், அந்த ராக்ஷஸர் முகம் விலவிலக்கவும், தலைமயிர்கள் அவிழ்ந்தலையவும் பெற்றுக் குருதியின் நாற்றத்தினால் மூர்ச்சை அடைந்து பூமியில் வீழ்ந்தனர். மற்றுஞ் சில ராக்ஷஸர் மிகுதியும் கோபமுற்று பயங்கரமான ஆரவாரத்துடன் வஜ்ரம்போன்ற கடினஸ்பர்ஶத்தையுடைய உள்ளங்கைகளையே ஆயுதங்களாகக் கொண்டு வானரர்மேல் வேகமாக எதிர்த்து வந்தனர். அங்ஙனம் அந்த ராக்ஷஸர் வேகத்துடன் மேன்மேலும் எதிர்த்து வருகையில், வானரர்கள் அவரைக் காட்டிலும் மிகுந்த வேகமுடையவராகையால் அந்த ராக்ஷஸர்களைப் பிடிகளால் குத்தியும் கால்களால் உதைத்தும் பற்களால் கடித்தும் வ்ருக்ஷங்களால் அடித்தும் ஹிம்ஸித்தனர். அங்ஙனம் வானரர்கள் அடித்துக்கொண்டிருக்கையில் நிற்க முடியாமல் அந்த ராக்ஷஸர்கள் ஓடிப்போயினர். ராக்ஷஶ்ரேஷ்டனாகிய தூம்ராக்ஷன் அங்ஙனம் ராக்ஷஸ ஸைன்யமெல்லாம் ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டு, கோபித்து யுத்தஞ் செய்யக் குதூஹலித்துக்கொண்டிருக்கிற வானரர்களை ஹிம்ஸித்தனன். வானரர்கள் சிலர் ராக்ஷஸர்களால் ஈட்டிகளைக்கொண்டு குத்தப்பட்டு ரக்தம் பெருகப்பெற்றுத் தரையில் வீழ்ந்தனர். மற்றுஞ் சிலர் முத்கரங்களால் அடிக்கப்பட்டு பூமியில் படுத்தனர். சில வானரர் பரிகங்களால் அடியுண்டனர். சிலர் பிண்டிவாலங்களால் துண்டந் துண்டமாகக் கண்டிக்கப்பட்டனர். சிலர் பட்டஸங்களால் அடியுண்டு ஸ்வாதீனந்

தவறி ப்ராணன்களை விட்டனர். சிலர் சூலங்களால் அடிக்கப்பட்டு ரக்தம் பெருகப்பெற்றிருந்தனர். சிலர் பலிஷ்டர்களான ராக்ஷஸர்களால் துரத்தப்பட்டு யுத்தத்தில் அவர்களைப் பொறுக்கமுடியாமல் ஓடிக் கண்ணுக்குப் புலப்படாமற் போயினர். சிலர் ஒரு பக்கத்தில் பிளக்கப்பட்டு ஹ்ருதயம் பேதிக்கப்பெற்ற னர். சிலர் த்ரிசூலங்களால் குத்துண்டு குடல்கள் வெளிப்பட்டு வருந்தினர். அங்ஙனம் வானரர்களும் ராக்ஷஸர்களும் ஒருவருக்கொருவர் கலந்து கற்களையும் வ்ருக்ஷங்களையும் ஆயுதங்களையும் போகட்டுப் போரா டிக்கொண்டிருக்கையில், அம்மஹாயுத்தம் பெருங் கோஷம் உண்டாகப்பெற்று மிகுதியும் பயங்கரமா யிருந்தது. தனுஸ்ஸின் நாண் சப்தங்களே வீணையின் மதுரத்வனிகளாகவும் விக்கல்களே தாளங்களாகவும் சக்தியற்று மெதுவாகக் கிளம்பும் சப்தங்களே அழகிய கானமாகவும் பெற்ற அந்த யுத்த ஸங்கீதம் மிகவும் விளங்கிற்று. அப்பொழுது தூம்ராக்ஷன் யுத்தத்தின் தலையில் வில்லைப் பிடித்து வீர்யத்தின் மிகுதியால் பக பகவென்று நகைத்துக்கொண்டு பாணங்களாகிற மழை களைப் பெய்து வானரர்களை மூலைக்கு மூலை ஓடும்படி துரத்தி விட்டனன். இங்ஙனம் தூம்ராக்ஷனால் பீடிக்கப் பட்டு வருத்தமுற்றிருக்கிற வானர ஸைன்யத்தைக் கண்டு, ஹனுமான் மிகுதியும் கோபமுற்று அகன்ற ஓர் சிலையைக் கையில் கொண்டு தூம்ராக்ஷன்மேல் எதிர்த் துப் போயினன். தந்தையைப்போன்ற பராக்ரமமுடைய ஹனுமான் கோபத்தினால் கண்கள் இருமடங்கதிமா கச் சிவக்கப்பெற்று அந்தச் சிலையை தூம்ராக்ஷ னுடைய ரதத்தின்மேல் விழும்படி வீசியெறிந்தனன். அங்ஙனம் தன்மேல் அந்தச் சிலை விழ வருவதைக்

கண்டு தூம்ராக்ஷன் அந்த க்ஷணத்தில் கதையைக் கையில் ஏந்திக்கொண்டு வேகமாக ரதத்தினின்று தரையில் குதித்து நின்றனன். அப்பெருஞ் சிலை தூம்ராக்ஷனுடைய ரதத்தையும் அதன் சக்ரங்களையும் ஏர்க்காலையும் குதிரைகளையும் த்வஜங்களையும் தனுஸ் ஸுக்களையும் பொடி பொடியாகச் செய்து விழுந்தது. வாயுகுமாரனாகிய ஹநுமான் அங்ஙனம் அந்த ராக்ஷஸ னுடைய ரதத்தை முறியச்செய்து, அப்பால் அடிபாகங்களோடும் கிளைகளோடுங் கூடின பெரிய மரங்களைப் பிடுங்கிக்கொண்டு ராக்ஷஸர்களை அடித் தோட்டினன். சில ராக்ஷஸர் அந்த வ்ருக்ஷங்களால் அடிக்கப்பட்டுச் சிரஸ்ஸு முறியப்பெற்று ரக்தத்தினால் நனைந்தவரும், சிலர் மிக வருத்தமுற்றவருமாகித் தரையில் வீழ்ந்தனர். வாயு குமாரனாகிய ஹநுமான் அங்ஙனம் ராக்ஷஸ ஸைன்யத்தை ஓடத்துரத்தி, ஓர் பர்வத சிகரத்தைக்கொண்டு தூம்ராக்ஷன் மேல் எதிர்த்தனன். தூம்ராக்ஷன் மிகுந்த வீர்யமுடையவ னாகையால் அங்ஙனம் தன்மேல் ஹநுமான் எதிர்த்து வருவதைக்கண்டு தானும் கதையைக் கையில் ஏந்தி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு விரைவுடன் ஹநுமான் மேல் எதிர்த்தனன். அனந்தரம் தூம்ராக்ஷன் கோபித்துப் பல ஆணிகளோடு கூடின அந்த கதையை ஹநுமான்மேல் வேகத்துடன் வீசியெறிந்த னன். பயங்கரமான உருவமுடைய அந்த கதையால் ஹநுமான் அடியுண்டனன். ஹநுமான் வாயுதேவனோ டொத்த பலமுடையவனாகையால் அந்த அடியைப் பொருள்செய்யாமல் தூம்ராக்ஷன் தலைமேல் ஒரு பர்வத சிகரத்தைப் போகட்டனன். அந்த தூம்ராக்ஷன் பர்வத சிகரத்தினால் அடிக்கப்பட்டு

ஸமஸ்த அவயவங்களும் விலவிலக்கப்பெற்று, பிளக்கப் பட்ட பர்வதம்போல் திடீரென்று பூமியில் வீழ்ந்தனன். அதன் பிறகு மிகுந்த ராக்ஷஸர் தூம்ராக்ஷன் அடி பட்டதைக் கண்டு வானரர்கள் மற்றும் மேல் விழுந்து அடித்துக்கொண்டிருக்கையில் பொறுக்க முடியாமல் பயந்து லங்கைக்கு ஓடிப்போயினர். மஹானுபாவ னாகிய வாயுகுமாரன் அந்த ஹனுமான் பகைவனைக் கொன்று ரக்த ப்ரவாஹங்களையுடைய நதிகளை நிரம்பவும் பெருகச்செய்து சத்ருவைக் கொன்றமை யால் இளைப்புற்று வானரக்கூட்டங்களால் பூஜிக்கப் பட்டு ஸந்தோஷமுற்றிருந்தனன். ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் வஜ்ரதம்ஷ்ட்ரனை அனுப்பு தலும், அங்கதன் வஜ்ரதம்ஷ்ட்ரனையும் அவன் ஸைன்யத்தையும் கொல்லுதலும்.

ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன், தூம்ராக்ஷன் அடியுண்டு மாண்டதைக் கேட்டு, ஸர்ப்பம்போல் பெரு மூச்செறிந்துகொண்டு மிகுதியும் கோபாவேசமுற்ற னன். அவன் கோபத்தினால் மிகவும் கலங்கி வெப்பம் வீசுகின்ற நெடுமூச்சுக்களை எறிந்து சூரனும் மஹா பலனுமாகிய வஜ்ரதம்ஷ்ட்ரனென்னும் ராக்ஷஸனைப் பார்த்து 'வீரனே! நீ இங்கிருந்து புறப்பட்டுப் போ. ராக்ஷஸர்களால் சூழப்பட்டு இப்பட்டணத்தினின்று வெளிப்பட்டுப் போய், தசரதகுமாரனான ராமனையும் வானரர்களோடு கூட ஸுக்ரீவனையும் வதித்து வருவா யாக' என்றனன். மாயாவியாகிய அந்த வஜ்ரதம்ஷ்ட்

ரன், ராக்ஷஸர் தலைவனான ராவணனைப் பார்த்து 'அப்படியே ஆகட்டும்' என்று மொழிந்து ஸைன்யங்களோடு கூடிப் பல ஸேனாத்யக்ஷர்கள் சூழ்ந்து வரப்பெற்று வெளிப் புறப்பட்டனன். அனந்தரம் அந்த வஜ்ரதம்ஷ்ட்ரன் யானைகளோடும் குதிரைகளோடும் கழுதைகளோடும் ஒட்டைகளோடும் பதாகைகளும் த்வஜங்களும் விளங்கப்பெற்ற அற்புதமான ரதங்களோடுங்கூடி, சந்தனம் புஷ்பம் முதலியவற்றால் அலங்காரஞ் செய்துகொண்டு விசித்ரங்களான தோள்வளைகளையும் க்ரீடத்தையும் அணிந்து கவசங்களையும் பூட்டிக்கொண்டு வில்லையுங் கையில் ஏந்தி விரைந்து புறப்பட்டனன். ஸேனாதிபதியான வஜ்ரதம்ஷ்ட்ரன் பதாகைகளால் அலங்கரிக்கப்பட்டதும் சிறந்த காஞ்சனத்தினால் (பொன்னால்) பூஷிக்கப்பட்டதும் தகதகவென்று ஜ்வலிப்பதுமாகிய ரதத்திற்கு ப்ரதக்ஷிணஞ் செய்து அதன்மேல் ஆரோஹித்தனன். அனந்தரம் காலாட்கள், யஷ்டி தோமரம் சூலம் முஸலம் பிண்டிவாலம் பாசம் சக்தி பட்டிசம் கட்கம் சக்ரம் கதை கோடாலி முதலிய கூரான பலவகை ஆயுதங்களையுந் தரித்துப் புறப்பட்டனர். அந்த ராக்ஷஸோத்தமர்கள் அனைவரும் நல்ல நல்ல வஸ்த்ரங்களை உடுத்து மிகுதியும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனர். யுத்தத்தில் ஸமர்த்தர்களான ராக்ஷஸ வீரர்கள் தோமரங்களையும் மாவெட்டிகளையும் கையிலேந்தி, மித மதமுடையவைகளும் சூரங்களும் திரியும் பர்வதங்கள்போல் ப்ரகாசிப்பவைகளுமான யானைகளின் மேல் ஏறிக்கொண்டு புறப்பட்டனர். மற்றுஞ் சில ராக்ஷஸர், சுபலக்ஷணங்களும் சூரத்தன்மையும் மிகுந்த பலமும் அமைந்த யானைகளின்மேல் ஆரோஹித்துப் புறப்பட்டனர்.

அப்பொழுது கறுத்த தேஹமுடையவரும் ஸ்வர்ண அலங்காரங்களை அணிந்தவர்களுமாகி பயங்கரமான அந்த ராக்ஷஸர் ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு புறப்பட்டு, வர்ஷாகாலத்தில் மின்னல்களோடுகூடி கர்ஜிக்கின்ற கார்மேகங்கள்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் தென்வாசற்படியினின்று யூதபதியான அங்கதன் இருக்கிற இடத்திற்குப்போக வெளிப்பட்டனர். அவர்கள் வெளிப்படும்பொழுதே அசுப சகுனங்கள் புலப்பட்டன. அப்பொழுது மேக மில்லாத ஆகாயத்தினின்று தீவ்ரமான கொள்ளிக் கட்டைகள் விழுந்தன. நரிகள் அக்னிஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு பயங்கரமாக ஊளையிட்டன. அப் பொழுது பயங்கரமான ம்ருகங்கள் ராக்ஷஸர்களின் மரணத்தை அறிவித்தன. ராக்ஷஸபடர்கள் போகும் பொழுது பயத்தினால் மதிமயங்கித் தழதழப்புற்று நடை தடைபடப்பெற்றனர். மஹா தேஜஸ்வியும் பலிஷ்டனுமாகிய வஜ்ரதம்ஷ்ட்ரன் இந்த உத்பாதங் களை யெல்லாம் பார்த்தும், தைர்யத்தை விடாமல் யுத்தத்தில் உத்ஸாஹமுடையவனாகவே புறப்பட்டனன். அங்ஙனம் அந்த ராக்ஷஸர் வருவதைக் கண்டு ஜய சீலர்களான வானரர் பத்துத்திசைகளும் நிரம்பும்படி உரத்த கோஷத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்தனர். அப்பால் பயங்கரர்களும் பயங்கரமான உருவமுடைய வருமாகிய வானரர்கள் ராக்ஷஸர்மேல் எதிர்த்து ஒருவரையொருவர் வதிக்க விரும்பித் துமுலமான யுத்தஞ் செய்தனர். அவ்விருதரத்தவரும் மிகுந்த உத்ஸாஹத்துடன் ஒருவர்மேல் ஒருவர் பாய்கையில் உடலும் கழுத்தும் முறியவும் ஸமஸ்த அவயவங்களும் ரக்தப்பெருக்கினால் நனையவும் பெற்றுத் தரையில்

விழுந்தனர். யுத்தங்களில் பின்வாங்காத சூரர்களான மற்றும் சில ராக்ஷஸர்களும் பரிகங்களைக் கைகளில் ஏந்தி, வானரர்மேல் எதிர்த்து ஒருவர்க்கொருவர் நெருங்கி நாநாவித ஆயுதங்களை ப்ரயோகித்தனர். அப்பொழுது வானரர் மரங்களையும் சிலைகளையும் ராக்ஷஸர் பலவகை ஆயுதங்களையும் ப்ரயோகிக்கையா லுண்டான பேரொலியானது மிகவும் பெரியதும் பயங்கரமும் ஹ்ருதயங்களைப் பிளப்பதுமாகிச் செவிப் பட்டது. அப்பொழுது ரதசக்கரக் கட்டுக்களின் த்வனியும் தநுஸ்ஸுக்களின் சப்தமும் சங்க பேரீ ம்ருதங்க வாத்யங்களின் முழக்கமும் கலந்து பேரொலியாயிருந்தது. சிலர் தம்மிடமிருந்த அஸ்த்ரங்க ளெல்லாவற்றையும் ப்ரயோகித்து மேல் அஸ்த்ரங் களே இல்லாமையால் பாஹுயுத்தஞ் (கைச்சண்டை) செய்தனர். சில வானரர்கள் ராக்ஷஸரை உள்ளங்கைக ளால் அறைந்தும் கால்களால் உதைத்தும் முட்டிக ளால்குத்தியும் வ்ருக்ஷங்களால் அடித்தும் முழங்கால்க ளால் குமுக்கியும் ஹிம்ஸிக்கையில் அவர்கள் தேஹம் பிளக்கப்பெற்று வீழ்ந்தனர். யுத்தத்தில் கொடுங் கொழுப்புற்றிருக்கிற சில வானரர் அரக்கர்களைச் சிலைகளால் சூர்ணஞ் செய்தனர். வஜ்ரதம்ஷ்ட்ரன் யுத்தத்தில் வானரர்களை பாணங்களால் ஹிம்ஸித்து விரட்டிக்கொண்டு ப்ரளயகாலத்தில் பாசாயுதந் தரித்த யமன்போல் பயங்கரமான உருவத்துடன் உலாவிக் கொண்டிருந்தனன். பலிஷ்டர்களும் ஆயுதவித்யையில் பண்டிதருமாகிய ராக்ஷஸர் யுத்தத்தில் கோபத்தினால் உடம்பு தெரியாமல் நாநாவிதமான ஆயுதங்களால் வானரஸைன்யங்களை வதித்தனர். அங்ஙனம் ராக்ஷ ஸர்களெல்லோரும் வானரர்களை வதிக்கக்கண்டு வாலி

புத்ரனுகிய அங்கதன் ப்ரளயகாலாக்னிபோல் கோபம் இருமடங்கதிகமாகப்பெற்று அக்கோபாவேசத்தினல் கண்கள் சிவக்கப்பெற்று மிகுந்த வீர்யமுடையவனுகை யால் ஓர் வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு ஸிம்ஹம் அற்ப ம்ருகங்களை ஹிம்ஸிப்பதுபோல், அந்த ராக்ஷஸக் கூட்டங்களையெல்லாம் ஹிம்ஸித்தனன். அவ்வங்கதன் இந்த்ரனை நிகர்த்த பராக்ரம முடையவனுகையால் பயங்கரமான யுத்தஞ் செய்தனன். அப்பொழுது அங்கதனை எதிர்த்தராக்ஷஸர்கள் பயங்கர பராக்ரமர்க ளாயினும் அவனது அடிகளால் சிரஸ்ஸு முறியப் பெற்று வேர் அறுப்புண்ட வ்ருக்ஷங்கள்போல் தரையில் வீழ்ந்தனர். அப்பொழுது யுத்தபூமியானது முறிந்து விழுந்த ரதங்களாலும் குதிரைகளாலும் நானுவித மான த்வஜங்களாலும் வானரர்களுடையவும் ராக்ஷ ஸர்களுடையவும் தேஹங்களாலும் ரக்தப்ரவாஹத்தி னுலும் நிரம்ப மறைக்கப்பட் டுமிகவும் பயங்கரமாயிருந் தது. மற்றும், அப்பொழுது அந்த யுத்தபூமி, முத்து மாலை தோள்வளை முதலிய பூஷணங்களாலும் வஸ்த்ரங்களாலும் சஸ்த்ரங்களாலும் அலங்கரிக்கப் பட்டு, நக்ஷத்ரங்களாலும் சந்த்ரனுலும் அலங்கார முற்ற சரத்காலத்து ராத்ரிபோல் ப்ரகாசித்தது. மிகவும் பெரிதான அந்த ராக்ஷஸ ஸேனை அப்பொழுது அங்கதனுடைய வேகத்தைப் பொறுத்து நிற்கமுடியா மல், காற்று வேகத்தினல் மேகம் சிதறுவதுபோல் நடுக்கமுற்றது. ஐம்பத்து மூன்ருவது ஸர்க்கம் முற் றிற்று.

---

## வஜ்ரதம்ஷ்ட்ரன் அங்கதனால் அடியுண்டு மாளுதல்.

அனந்தரம் மஹாபலனாகிய அந்த வஜ்ரதம்ஷ்ட்ரன் தன் ஸைன்யமெல்லாம் அடியுண்டு ஓடுவதையும், அங்கதன் வெற்றிகொண்டு வளர்ந்து வருவதையுங் கண்டு மிகுதியுங் கோபாவேசமுற்று பயங்கரமான தநுஸ்ஸை இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போல் த்வனிக்கும்படி பயங்கரமாக இழுத்து வானர ஸைன்யங்களின் மேல் பாணவர்ஷங்களைப் பெய்தனன். அப்பொழுது சூரர்களான அந்த முக்ய ராக்ஷஸர்களும் ரதங்களின் மேல் ஏறிக்கொண்டு நாநாவித ஆயுதங்களைக்கொண்டு நன்கு யுத்தஞ்செய்தனர். வானரர்களுக்குள் சூரர்களான வானரஸ்ரேஷ்டர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கற்களைக் கையில் ஏந்திக்கொண்டு நாற்புறங்களிலும் சண்டை செய்தனர். அப்பொழுது அந்த மஹாயுத்தத்தில் ராக்ஷஸர்கள் வானரஸ்ரேஷ்டர்களின் மேல் அனேகமாயிரம் ஆயுதங்களை ஓயாமற் பெய்தனர். மிகுந்த வீர்யமுடையவர்களும் மதித்த யானைகள் போன்றவருமாகிய வானரர்களும் பர்வதங்களையும் வ்ருக்ஷங்களையும் பெருங் கற்களையும் ராக்ஷஸர்மேல் எறிந்தனர். சூரர்களும் யுத்தத்தில் பின் வாங்காதவர்களுமாகி யுத்தஞ்செய்கின்ற அவ்வானரக் கூட்டங்களுக்கும் ராக்ஷஸக் கூட்டங்களுக்கும் மேன்மேலும் யுத்தம் அதிகமாக நடந்தது. சில வானரர்களும் ராக்ஷஸர்களும் தலை உடைபவும் கை கால் முறியவும் உடம்பில் ஆயுதங்கள் பொற்றவும் பெற்று ரக்தப்ரவாஹத்தில் நனைந்து கங்கபக்ஷிகளும் கழுகுகளும் காக்கைகளும் நரிக்கூட்டங்களும் சூழப்பெற்றுத் தரையில் வீழ்ந்திருந்தனர். தலையறுந்த முண்டங்கள் பயப்படுக்

தன்மையர்க்கு மிகவும் பயத்தை விளைவிப்பவையாகி ஆகாயத்தில் கிளம்பின. அப்பொழுது யுத்தத்தில் வானரர்களும் ராக்ஷஸர்களும் கைகளும் உள்ளங் கைகளும் தலைகளும் அறுப்புண்டும் தேஹங்கள் இடையில் இருபிளவாய் அறுப்புண்டும் தரையில் விழுந்தனர். அனந்தரம் அந்த ராக்ஷஸர்களின் ஸைன்யம் முழுவதும் வானர ஸைன்யத்தினால் ஹிம்ஸிக்கப்பட்டு வஜ்ரதம்ஷ்ட்ரன் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே தோல்வியடைந்து ஓடிப்போயிற்று. மஹாப்ரதாபனாகிய அவ்வஜ்ரதம்ஷ்ட்ரன், ராக்ஷஸர்க ளெல்லோரும் அங்ஙனம் வானரர்களால் வதிக்கப்பட்டு பயந்திருப்பதைக் கண்டு, ப்ரதாபமுடையவனாகையால் ரோஷத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று, வில்லை ஏந்தி வானர ஸைன்யங்களை பயப்படுத்திக்கொண்டு புகுந்து கங்கபக்ஷிகளின் இறகுகள் கட்டப்பெற்றுக் குறி தவறாத பாணங்களை எய்து அவர்களைப் பிளந்தனன். மிகுந்த ப்ரதாபமுடைய அவ்வஜ்ரதம்ஷ்ட்ரன் மிகவும் கோபாவேசமுற்று ஒவ்வொரு அடியிலும் வானரர்களை எழுவரையும் எண்மரையும் ஒன்பதின்மரையும் ஐவரையு மாகப் பிளந்து ஹிம்ஸித்தனன். அங்ஙனம் வானரர் கள் பலர் பாணங்களால் கழுத்துக்கள் அறுப்புண்டு வீழ்கையில், மற்றவர் அனைவரும் பயந்து கூட்டங் கூட்டமாக ப்ரஜைகள் ப்ரஜாபதியை (ப்ரஹ்மாவை) அடைவதுபோல், அங்கதனை அடைந்தனர். அப் பொழுது வாலி குமாரனாகிய அங்கதன் வானரஸேனை கள் பங்கம் அடைவதைக் கண்டு, கோபாவேசமுற்றுக் கண்ணைத் திறந்து பார்க்கின்ற வஜ்ரதம்ஷ்ட்ரனைத் தானும் உற்றுப்பார்த்து எதிர்கொண்டனன். அங்கத னும் வஜ்ரதம்ஷ்ட்ரனும் ஒருவர்மேல் ஒருவர் எதிர்த்து

மிகுதியும் கோபமுற்று ஸிம்ஹமும் மதித்த யானையும் போல் உலாவினர். அப்பால் மஹாபலமுடைய வஜ்ரதம்ஷ்ட்ரன், யானையைத் தோமரங்களால் குத்துவதுபோல், வாலிகுமாரனாகிய அங்கதனை மர்மஸ்தானங்களில் ஆயிரம் பாணங்களை எய்து ஹிம்ஸித்தனன். மஹாபலனும் பயங்கர பராக்ரமனுமாகிய அங்கதன் அங்கங்கள் முழுவதும் ரக்தத்தினால் நனையப்பெற்று, வஜ்ரதம்ஷ்ட்ரன் மேல் ஒரு வ்ருக்ஷத்தை எறிந்தனன். அவ்வஜ்ரதம்ஷ்ட்ரன் தன்மேல் அந்த வ்ருக்ஷம் வருவதைக் கண்டும் பரபரப்பின்றி அதை பாணங்களால் பல துண்டங்களாகக் கண்டித்தனன். அந்த வ்ருக்ஷமும் பலவாறு துண்டிக்கப்பட்டுத் தரையில் விழுந்தது. வானரஶ்ரேஷ்டனாகிய அங்கதன் வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய அப்பராக்ரமத்தைக் கண்டு அகன்ற ஓர் பர்வதத்தைக் கொண்டு அவன்மேல் போகட்டு ஸிம்ஹநாதஞ் செய்தனன். வீர்யசாலியாகிய அவ்வஜ்ரதம்ஷ்ட்ரன் பர்வதம் தன்மேல் வருவதைக் கண்டு தழதழப்பின்றி, கதையைக் கையில் ஏந்தி ரதத்தினின்று குதித்துத் தரையில் வந்து நின்றனன். அங்கதன் யுத்தத்தின் முனையில் வஜ்ரதம்ஷ்ட்ரனருகே சென்று அந்த கதையை இழுத்துப் பிடுங்கிக்கொண்டனன். அப்பொழுது அவ்வங்கதன் போகட்ட பர்வதம் சக்ரங்களோடும் ஏர்க்காலோடும் குதிரைகளோடும் கூடின வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய ரதத்தைப் பொடி செய்தது. அனந்தரம் அவ்வங்கதன் அகன்று வ்ருக்ஷங்களால் விளங்குவதுமான மற்றொரு பர்வதத்தை எடுத்து வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய தலைமேல் போகட்டனன். அவ்வஜ்ரதம்ஷ்ட்ரன் ரக்தத்தைக் கக்கிக்கொண்டு மூர்ச்சை அடைந்து நெடுமூச்செறிபவனாகிக் கையில்

தரித்திருந்த மற்றொருகதையை அணைத்துக்கொண்டு சிறிது நேரம் ப்ராஜ்ஞையில்லாமல் விழுந்திருந்தனன். அவ்வரக்கன் மூர்ச்சை தெளிந்து மிகுதியும் கோப முற்றவனாகி அங்கு நிற்கின்ற வாலிபுத்ரனாகிய அங்கத னுடைய வக்ஷஸ்தலத்தில் கதையால் அடித்தனன். அப்பால் கதையைத் துறந்து அங்கதனுடன் அப் பொழுது முஷ்டியுத்தம் (குத்துச்சண்டை) செய்தனன். அந்த வானர ராக்ஷஸர்களிருவரும் ஒருவரை யொருவர் நன்கு புடைத்துக்கொண்டனர். அவ்விரு வரும் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு அந்த அடிகளால் இளைப்புற்று ரக்தங்களைக் கக்கி உடனே அங்காரகனும் புதனும்போல் பராக்ரமத்துடன் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனர். அப்பால் மஹா தேஜஸ்வியும் வானரஶ்ரேஷ்டனுமாகிய அங்கதன் பல புஷ்பங்களோடும் பழங்களோடுங்கூடின ஓர் வ்ருக்ஷத் தைப் பிடுங்கிக்கொண்டு யுத்தத்திற்கு நின்றனன். வஜ்ரதம்ஷ்ட்ரனும் ஒரு வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக் கொண்டு நிற்க அவ்விருவரும் வ்ருக்ஷங்களால் அடித்துக்கொண்டனர். அப்பால், அவ்வங்கதன் எருதின் தோலால் செய்யப்பட்ட கேடயத்தையும் அகன்று அழகியதும் சிறு சதங்கைகளின் வரிசைக ளால் முழுவதும் மறைக்கப்பட்டதும் தோலால் பரிஷ் காரஞ்செய்யப் பெற்றதுமாகிய கத்தியையும் எடுத்துக் கொண்டு நின்றனன். அது கண்டு வஜ்ரதம்ஷ்ட்ரனும் கத்தி கேடயங்களை ஏந்தி நின்றனன். இங்ஙனம் அவ் வங்கதனும் வஜ்ரதம்ஷ்ட்ரனும் மிகவும் கோபமுற்று ஒருவரை யொருவர் வெல்ல விரும்பி நானாவிதமான மண்டலாதி கதிகளில் யுத்தஞ் செய்துகொண்டு மன இரக்கமின்றி ஒருவரை யொருவர் அடித்துக்கொண்ட

னர். அவ்விருவரும் ரக்தம் பெருகுகின்ற புண்கள் நிறைந்திருக்கையால் நன்கு புஷ்பித்த பலாச வ்ருக்ஷங்கள்போல் விளக்கமுற்று மேன்மேலும் யுத்தஞ்செய்து கொண்டு மிகுதியும் இளைப்படைந்து முழந்தாள்களை ஊன்றித் தரையில் உட்கார்ந்தனர். அனந்தரம் இமைப்பொழுதில் கபிஸ்ரேஷ்டனாகிய அங்கதன் கண்கள் கோபத்தினால் ஜ்வலிக்கப்பெற்றுத் தடியால் அடிக்கப்பட்ட ஸர்ப்பம்போல் எழுந்தனன். மஹாபலனாகிய அங்கதன் நன்கு தீட்டப்பட்டுத் தளதளவென்று விளங்குகின்ற கட்கத்தினால் வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய பெரிய சிரஸ்ஸைத் துண்டித்தனன். தேஹம் முழுவதும் ரக்தம் பெருகப்பெற்ற அந்த வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய சிரஸ்ஸு ரோஷத்தினால் கண்கள் சுழலப் பெற்றிருக்கையில் அங்கதனுடைய கட்கத்தினால் அறுப்புண்டு இரண்டு துண்டங்களாகத் [1] தரையில் விழுந்தது. அங்ஙனம் வஜ்ரதம்ஷ்ட்ரன் அடியுண்டதைக் கண்டு, ராக்ஷஸர் பயத்தினால் மோஹித்து மிகவும் திகிலடைந்து மேலும் வானரர்கள் மேல்விழுந்து புடைத்துக்கொண்டிருக்கையில் துக்கித்து வாய் உலரவும் வெட்கத்தினால் தலை வணங்கவும் பெற்றுத் திரும்பி லங்கைக்கு ஓடிப்போயினர். தேவேந்த்ரனோடொத்த ப்ரபாவமுடையவனும் மஹாபலனுமாகிய அங்கதன் அந்த வஜ்ரதம்ஷ்ட்ரனை வதித்து வானரர்களால் பூஜிக்கப்பட்டு, தேவதைகளின் இடையில் தேவேந்த்ரன்போல், வானரஸைன்யங்களின் இடையில் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து விளக்கமுற்றிருந்தனன். ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

1. த்ருதீயையின்றி வஜ்ரதம்ஷ்ட்ர வதமென்று கோவிந்தராஜர்.

அகம்பனன் ராவணனது ஆஜ்ஞையால் லங்கையின் மேற்குவாசலால் வெளி வந்து அங்கிருக்கின்ற ஹநுமானுடைய ஸைன்யத்தோடு யுத்தஞ்செய்தல்.

வஜ்ரதம்ஷ்ட்ரன் அங்கதனால் அடியுண்டு மாண்டதைக் கேட்டு ராவணன் தன்னெதிரில் கைகூப்பிக் கொண்டு நிற்கின்ற பலாத்யக்ஷனாகிய ப்ரஹஸ்தனைப் பார்த்து 'பயங்கர பராக்ரமர்களும் பகைவரால் எதிர்க்க முடியாதவருமாகிய ராக்ஷஸர்கள் ஸமஸ்த ஆயுதங்களிலும் ஸமர்த்தனாகிய அகம்பனனை முன்னிட்டுக் கொண்டு விரைவில் யுத்தத்திற்குப் புறப்படுவார்களாக. இவ்வகம்பனன் யுத்தத்தில் பகைவரை அடக்குந் தன்மையன்; தன் ஸேனையைக் காப்பவன்; வல்லமையுள்ள ஸேனாநாயகன்; யுத்தங்களில் ப்ரஸித்தன்; மற்றும், எப்பொழுதும் என் மேன்மையை விரும்புபவன்; எப்பொழுதும் யுத்தத்தில் ப்ரீதியுடையவன். பகைவரைத் தபிக்குந் தன்மையுள்ள இவ்வகம்பனன் ராமலக்ஷ்மணர்களையும் மஹாபலனான ஸுக்ரீவனையும் ஜயித்து பயங்கரரான மற்றை வானரர்களையும் வதிப்பான்' என்றனன். மஹாபலனும் சீக்ரபராக்ரமனுமாகிய அந்த ப்ரஹஸ்தன் ராவணனுடைய அவ்வாஜ்ஞையை அங்கீகரித்து, அப்படியே ஸேனையை வேகமாக ஸித்தப்படுத்தினன். அனந்தரம் மேலான ராக்ஷஸர் பலாத்யக்ஷனால் தூண்டப்பட்டு நானாவித ஆயுதங்களைக் கொண்டு பயங்கரமான கண்களோடும் உருவங்களோடும் திகழ்பவராகி யுத்தத்திற்காகப் பட்டணத்தினின்று புறப்பட்டனர். அப்பால் மேகம்போல் பருத்திருப்பவனும் மேகம்போல் கறுத்த உருவமுடையவனும் இடிபோன்ற கண்டத்வனி யுடையவனுமாகிய

அகம்பனன் மேலான பொற்குண்டலங்கள் விளங்கப் பெற்று அகன்ற தேரின்மேல் ஏறி பயங்கரர்களான ராக்ஷஸர்களால் சூழப்பட்டு யுத்தத்திற்குப் புறப்பட்டனன். தேவதைகளுக்கும் எப்படிப்பட்ட மஹாயுத்தத்திலும் அசைக்க முடியாதவனாகையால் அவனுக்கு அகம்பனனென்னும் பெயர் விளைந்தது. அவன் அந்த ராக்ஷஸர்களின் இடையில் ஒளியின் மிகுதியால் ஸூர்யன்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தனன். அங்ஙனம் அவ்வகம்பனன் யுத்தஞ்செய்ய விரும்பிப் பரபரப்புடன் போய்க்கொண்டிருக்கையில், அவன் தேரில் கட்டின குதிரைகளுக்குத் திடீலென்று [1] தைன்யம் உண்டாயிற்று. யுத்தத்தைக் கொண்டாடுந் தன்மையுடைய அவ்வகம்பனனுக்கு இடக்கண் துடித்தது; முகவொளி மழுங்கிற்று; கண்டத்வனியும் தழதழப்புற்றது. அதற்கு முன்பு தெளிவாயிருந்த பகல் அப்பொழுது கொடிதான பெருங்காற்று வீசப்பெற்று மேகங்கள் நிறைந்து துர்த்தினமாயிற்று. ம்ருகங்களும் பக்ஷிகளும் எல்லாம் க்ரூரமாகவும் பயங்கரமாகவும் கூவின. ஸிம்ஹம்போல் உயர்ந்த தோள்களுடையவனும் பெரும்புலிபோல் பராக்ரமத்தினால் ப்ரகாசிப்பவனுமாகிய அவ்வகம்பனன் அந்த உத்பாதங்களைப் பொருள் செய்யாமலே யுத்தபூமிக்குப் போயினன். அவன் ராக்ஷஸர்களோடு அங்ஙனம் யுத்தத்திற்குப் புறப்படுகையில் அவருடைய த்வனி மிகுதியும் பயங்கரமாகி ஸமுத்ரத்தை யெல்லாம் கலக்குவதுபோல் கிளம்பிற்று. வானரர்களின் பெரும் ஸைன்யம் அந்த த்வனிக்கு பயந்து வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் ஆயுதமாகக்கொண்டு யுத்தஞ்செய்ய நின்றிருந்தது.

1. தைன்யம்-சோர்வு.

ராமன் நிமித்தமாகவும் ராவணன் நிமித்தமாகவும் ப்ராணன்களையும் விடமுயன்றிருக்கிற வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் மிகவும் பயங்கரமாக யுத்தம் நடந்தது. அவ்வானரர்களும் ராக்ஷஸர்களும் எல்லோரும் மிகுந்த பலமுடையவர்; எல்லோரும் சூரர்; பர்வதம் போன்ற உருவமுடையவர். ஆகையால் அவர்கள் ஒருவரை யொருவர் கொல்ல விரும்பிப் போராடினர். மிகவும் பலிஷ்டர்களான அவ்விருதரத்தவரும் யுத்தத்தில் செய்கிற ஸிம்ஹநாதத்தினாலும் கோபத்தினால் ஒருவரையொருவர் நோக்கிச் செய்கிற கர்ஜனைகளாலும் உண்டான த்வனி மிகவும் பயங்கரமாகச் செவிப்பட்டது. வானரர்களும் ராக்ஷஸர்களும் பாதங்களைப் பூமியில் உறைத்து உலாவுதலால் பூமியினின்று கிளம்பின சிவப்பு நிறமுடைய தூள் பரம்பி மிகவும் பயங்கரமாகிப் பத்துத்திசைகளையும் மறைத்து விட்டது. மற்றும், ஓரிடத்தில் தோய்த்து அழுக்கில்லாதிருக்குமாறு சுத்தஞ் செய்யப்பட்ட வெண்பட்டு வஸ்த்ரம்போல் வெளுத்திருக்கின்ற பூமியின் தூள் பரந்து மூடிக்கொள்கையால் அந்த யுத்தபூமியில் வானரர்களும் ராக்ஷஸர்களும் அந்தந்த பதார்த்தங்களையும் ஒருவர் மற்றொருவரையும் பார்க்கமுடியாதிருந்தனர். அந்த யுத்தத்தில் அங்ஙனம் தூள் மூடிக்கொள்கையில் த்வஜங்கள் பதாகைகள் கவசம் குதிரை ஆயுதம் ரதம் ஆகிய இவற்றில் ஒன்றும் சிறிதும் புலப்படவில்லை. அந்த த்வந்த்வ யுத்தத்தில், ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு ஒருவர்மேல் ஒருவர் எதிர்க்கின்ற அவ்வானரர்களுடையவும் ராக்ஷஸர்களுடையவும் த்வனிமாத்ரம் மிகவும் பெரிதாகச் செவிப்பட்டுக் கொண்டிருந்ததேயன்றி மற்றை வஸ்துக்கள்

ஒன்றும் புலப்படவில்லை. அங்ஙனம் தூள் நிரம்புகை யால் இருள் மூடுகையில், அப்பொழுது வானரர்கள் தம்முடையவரென்று தெரியாமல் மிகுதியும் கோபா வேசமுற்று வானரர்களையே அடித்தனர். அங்ஙனமே ராக்ஷஸர்களும் ராக்ஷஸர்களையே அடித்துக்கொண்ட னர். அப்பொழுது வானரர்களும் ராக்ஷஸர்களும் இருட்டில் ஒருவரை யொருவர் அறியாமல் பிறரையும் தம்முடையவர்களையும் வதிப்பவராகி யுத்தபூமி முழு வதையும் ரக்தத்தினுல் நனைத்துப் பாதங்களையிட்டு உலாவித் துகைப்பதனுல் சேறு நிறைந்ததாகச் செய்தனர். அனந்தரம் ரக்தப்ரவாஹத்தினுல் தூளெல் லாம் நனைந்து அடங்கிவிட்டது. யுத்தபூமி யெல்லாம் பிணச்சரீரங்களால் நிறைந்தது. வானரர்களும் ராக்ஷ ஸர்களும் வ்ருக்ஷம் சக்தி சிலை ப்ராஸம் கதை பரிகம் தோமரம் ஆகிய இவற்றைக்கொண்டு பராக்ரமத்தி னுல் ஒருவர்க்கொருவர் மேல் விழுந்து யுத்தஞ்செய் தனர். அந்த யுத்தத்தில் பர்வதம்போன்ற உருவமும் பயங்கரமான செயலும் உடையவராகிய வானரர்கள் இரும்புத்தடிபோன்ற தமது புஜங்களால் யுத்தஞ் செய்து ராக்ஷஸர்களை வதித்தனர். ராக்ஷஸர்களும் மிகுந்த கோபாவேசமுற்று ப்ராஸங்களையும் தோமரங்க ளையும் கைகளில் ஏந்தி மிகவும் பயங்கரமான ஆயுதங்க ளால் அந்த யுத்தத்தில் வானரர்களைக் கொன்றனர். ராக்ஷஸ ஸேனுதிபதியான அகம்பனன் மிகவும் கோப முற்று பயங்கர பராக்ரமர்களான ராக்ஷஸர்களெல் லோரும் அந்த வானரர்களை அடித்துக்கொண்டிருக் கக்கண்டு அவர்களை மிகவும் ஸந்தோஷப்படும்படி கௌரவித்தனன். வானரர்களும் ராக்ஷஸர்களை எதிர்த்து அவர் கையிலிருக்கிற ஆயுதங்களை வலிமை

யால் பிடுங்கிப் போகட்டுப் பெரிய வ்ருக்ஷங்களையும் பெரிய கற்களையும் எறிந்து ராக்ஷஸர்களைப் பிளந்தனர். இதற்குள் குமுதன் நலன் மைந்தன் த்விவிதன் என்கிற வானரவீரர்கள் கோபாவேசமுற்று மிகுந்த வேகத்துடன் சிறந்த யுத்தஞ் செய்யத்தொடங்கினர். மஹா வேகர்களாகிய அந்த வானரயூதபதிகள் ராக்ஷஸ ஸேனையின் முன் சென்று வ்ருக்ஷங்களை ஏந்தி அவலீலையாகவே ராக்ஷஸர்களை அழப்படுத்திக்கொண்டு மஹா யுத்தஞ்செய்தனர். அந்த வானரர்கள் நால்வரும் ராக்ஷஸர்களைக் கூட்டங்கூட்டமாக அளவின்றி வதித்தனர். ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.



## அகம்பனன் ஹனுமானால் அடியுண்டு மாளுதல்.

அகம்பனன், அவ்வானரோத்தமர்கள் அங்ஙனம் யுத்தத்தில் மிகவும் பெரிய கார்யஞ் செய்வதைக்கண்டு யுத்தத்தில் தீவ்ரமான கோபத்தை ஏறிட்டுக்கொண்டனன். அவன், கோபத்தினால் உடம்பு தெரியாமல் மேலான வில்லை நாணேற்றிட்டு ஒலிப்பித்துக்கொண்டு சத்ருக்களின் செயலைக்கண்டு ஸாரதியைப் பார்த்து 'ஸாரதீ! இதோ! பல வானரர்கள் சேர்ந்து நமது ராக்ஷஸர் பலரையும் ஹிம்ஸிக்கின்றார்களே, அவ்விடத்திற்கே விரைவில் ரதத்தைக் கொண்டு போவாயாக. இதோ! என்னெதிரில் பலிஷ்டர்களும் பயங்கராகாரர்களுமாகிய வானரர்கள் வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் ஆயுதமாகக் கொண்டிருக்கின்றனர், பார். யுத்தத்தில் ஸமர்த்தர்களென்று புகழ்பெற்றவரும் பராக்ரமத்தின் மிகுதியால் எப்பொழுதும் யுத்தஞ்

செய்ய விரும்பி யுத்தத்தைக் கொண்டாடுந் தன்மையரு மான அவ்வானரர்களை வதிக்க விரும்புகின்றேன். இவர்களே இந்த ராக்ஷஸ ஸைன்யத்தை யெல்லாம் பாழ் செய்ததாகப் புலப்படுகின்றது' என்றனன். அனந்தரம் ரதத்தில் நின்று சண்டை செய்பவர்களில் சிறந்த அந்த அகம்பனன் மிகுந்த வேகமுடைய குதிரைகள் பூட்டின ரதத்தை ஓட்டிக்கொண்டுபோய் மிகுந்த கோபாவேசமுற்று பாணஸமூஹங்களைப் பெய்து அந்த வானரர்களை ஹிம்ஸித்தனன். வானரர் கள் யுத்தத்தில் அவ்வகம்பனனுக்கெதிரில் நிற்கவும் வல்லராகவில்லை யென்றால், இனி யுத்தஞ்செய்ய முடியவில்லை யென்பது சொல்லவேண்டுமோ? வானரர் கள் அவனுடைய பாணங்களால் பங்கம் அடைந்து எல்லோரும் ஓடிப்போயினர். மஹாபலனுகிய ஹனுமான் அங்ஙனம் அகம்பனன் கையில் அகப்பட்டு ம்ருத்யு வின்வசம் அகப்பட்டாற்போலிருக்கிற தன் ஜ்ஞாதிக ளான அவ்வானரர்களைப் பார்த்து, அந்த அகம்பன னைக் கிட்டி வந்தனன். வீரர்களான அவ்வானரயூத பதிகளனைவரும் யுத்தத்தில் அம்மஹாகபி தமக்கு ஸஹாயமாய் வருவதைக்கண்டு மிகுதியும் ஸந்தோஷ முற்றவராகி எல்லோரும் ஒன்று சேர்ந்து அவனைச் சுற்றிக்கொண்டனர். பலிஷ்டர்களான அந்த வானர யூதபதிகள் ஹனுமான் வந்து நிற்பதைக்கண்டு மஹா பலனுகிய அவ்வானரவீரனை அடுத்து பலிஷ்டர்களாய் நின்றனர். அகம்பனன் பர்வதம்போன்ற உருவமுடைய ஹனுமான்மேல், இந்த்ரன் பர்வதத்தின்மேல் வர்ஷ தாரைகளைப் பெய்வதுபோல் பாணங்களைப் பெய்தனன். அந்த ஹனுமான் மஹாபலனுகையால் தன் தேஹத்தில் விழுகின்ற கூரான பாணஸமூஹங்களைப் பொருள்

செய்யாமல் அவ்வகம்பனனைக் கொல்லவேண்டுமென்று மனத்தில் நிச்சயித்தனன். மஹாதேஜஸ்வியும் வாயுகுமாரனுமாகிய அந்த ஹனுமான் பாணவர்ஷங்களைப் பொறுத்துக்கொண்டு வலிமையினால் பூமி அதிரும்படி அடியிட்டுச் சென்று பலாத்காரமாக அந்த ராக்ஷஸன் மேல் எதிர்த்துச் சென்றனன். திசைகள் நிரம்பும்படி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு தேஜஸ்ஸினால் மிகுதியுந் திகழ்கின்ற அந்த ஹனுமானுடைய உருவம் ஜ்வலிக்கின்ற மத்யாஹ்ன ஸூர்யபிம்பம்போல் கண்ணெடுத்துப் பார்க்க முடியாதிருந்தது. வானரஸ்ரேஷ்டனாகிய ஹனுமான் தன் கையில் ஆயுதமில்லாமை தெரிந்து மிகவும் கோபமுற்றவனாகி வேகத்துடன் ஓர் பர்வதத்தைப் பிடுங்கிக் கொண்டனன். வீர்யவானாகிய அந்த ஹனுமான் அம்மஹா பர்வதத்தை ஒற்றைக்கையினால் பிடித்துக்கொண்டு பெருங்கோஷம் உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்து கிருகிருவென்று சுழற்றினன். அனந்தரம் அந்த ஹனுமான், யுத்தத்தில் முன் தேவேந்த்ரன் வஜ்ராயுதத்தைக்கொண்டு நமுசியின் மேல் எதிர்த்தாற்போல், அம்மஹா பர்வதத்தைக் கொண்டு ராக்ஷஸர்களில் ஸ்ரேஷ்டனாகிய அந்த அகம்பனன்மேல் எதிர்த்துப்போயினன். அகம்பனன், பர்வதசிகரத்தை எடுத்துக்கொண்டு அவன் தன்மேல் வருவதைக்கண்டு, தூரத்திலேயே அர்த்தசந்த்ரன் போன்ற மஹாபாணங்களால் அதை இருதுண்டாகப் பிளந்தனன். அந்தப் பர்வதசிகரம் ஆகாயத்திலேயே அந்த ராக்ஷஸனுடைய பாணங்களால் கண்டிக்கப் பட்டுத் துண்டு துண்டாகித் தரையில் விழுவதைக் கண்டு ஹனுமான் கோபாவேசமுற்றனன். அவன் ரோஷமும் பலக்கொழுப்பும் மேலெழப்பெற்று மஹா

பர்வதம்போல் மிகுதியும் உயர்ந்திருக்கிற ஓர் மாரா மரத்தைப் பார்த்துப் பிடுங்கிக் கொண்டனன். மஹா தேஜஸ்வியாகிய ஹனுமான் பருத்த அடிபாகத்தை யுடைய அம்மராமரத்தைக் கொண்டு மிகுந்த ஸந்தோஷத்துடன் அட்டஹாஸஞ் செய்து யுத்தத்தில் அதைக் கிருகிருவென்று சுழற்றினன். ஹனுமான் மிகுதியும் கோபமுற்று வேகமாகப் போகும்பொழுது அவனுடைய துடைவேகத்தினால் வ்ருக்ஷங்கள் முறிந்து விழுந்தன. காலடி உறைதலால் பூமி இருபிளவாகப் பிளந்தது. அப்பொழுது புத்திமானாகிய ஹனுமான், அந்த மராமரத்தைக் கொண்டு யானைகளையும் யானைக் காரர்களையும் தேர்களையும் தேர்வீரர்களையும் காலாட்களையும் பல ராக்ஷஸர்களையும் வதித்தனன். கோபமுற்ற யமன்போல் கொடியனாகி ராக்ஷஸர்களின் ப்ராணன்களைப் பறிக்கின்ற அந்த வீரமுள்ள ஹனுமானைப் பார்த்து ராக்ஷஸர்கள் பயந்து ஓடிப்போயினர். வீரனாகிய அகம்பனன், ஹனுமான் கோபித்து வருவதையும் ராக்ஷஸர்களெல்லோரும் பயந்து ஓடுவதையும் பார்த்துக் கோபாவேசத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்தனன். அவ்வகம்பனன் தீக்ஷ்ணங்களும் தேஹத்தைப் பிளப்பவைகளுமான பதினான்கு பாணங்களால் மஹா வீர்யசாலியாகிய ஹனுமானை ஹிம்ஸித்தனன். வீரத்தன்மையுடைய அந்த ஹனுமான் பாணவர்ஷங்கள் பலவாறு தன் சரீரத்தில் பொறுக்கொள்கையில், வ்ருக்ஷங்கள் முளைக்கப்பெற்ற பர்வதம்போல் புலப்பட்டனன். மஹாசரீரனும் மஹாவீர்யனும் மஹா தைர்யனுமாகிய அந்த ஹனுமான் புஷ்பித்த அசோக வ்ருக்ஷம்போல் சிவந்து, புகையின்றி எரிகின்ற அக்னி போல் ப்ரகாசித்தனன். அப்பால் அந்த ஹனுமான்

மற்றொரு வ்ருக்ஷத்தைப் பிடுங்கி மிகுந்த வேகத்தை ஏற்றுக்கொண்டு விரைந்து ராக்ஷஸோத்தமனாகிய அந்த அகம்பனனைச் சிரஸ்ஸில் அடித்தனன். மஹானுபாவனாகிய அந்த வானரஸ்ரேஷ்டன் ஹநுமான் அங்ஙனம் பெருங்கோபத்துடன் வ்ருக்ஷத்தினால் அடிக்கையில், அவ்வகம்பனன் அடியுண்டு தரையில் விழுந்தனன்; மரணமும் அடைந்தனன். ராக்ஷஸஸ்ரேஷ்டனாகிய அகம்பனன், அங்ஙனம் அடியுண்டு தரையில் விழுந்திருப்பதைக் கண்டு ராக்ஷஸர்களெல்லோரும், பூகம்பம் (பூமி நடுக்கம்) உண்டாகும்பொழுது வ்ருக்ஷங்கள் நடுங்குவதுபோல் மிகுதியும் வருத்தமுற்றனர். அந்த ராக்ஷஸர்களெல்லோரும் அங்ஙனம் தோல்வியடைந்து, அவ்வானரர்கள் பின்றொடர்ந்து துரத்துகையில் திகிலடைந்து ஆயுதங்களை வீசியெறிந்து லங்கைக்கு ஓடிப்போயினர். அந்த ராக்ஷஸர்கள் அங்ஙனம் தோல்வியடைந்து தலைமயிர் அவிழ்ந்து அலையப்பெற்றுத் தழதழப்புற்று மானமுங்கெட்டு தேஹம் முழுவதும் புழுங்கப் பெருமூச்செறிந்துகொண்டு மிகுந்த வேகத்துடன் ஓடிப்போயினர். அவர்கள் அங்ஙனம் அபஜயத்தினால் மிகுதியும் மதிமயங்கப்பெற்று மூடர்களாகி ஒருவரையொருவர் அடிப்பதும் பயத்தினால் அடிக்கடி பின்னே திரும்பிப் பார்ப்பதுமாகி லங்காபுரத்தில் நுழைந்தனர். அந்த ராக்ஷஸர்களெல்லோரும் லங்கைக்குப் போனபின்பு மஹா பலிஷ்டர்களான வானரர்களெல்லோருஞ் சேர்ந்து ஹனுமானைப் பூஜித்தனர். மிகுந்தபலமுடைய அந்த ஹனுமான் ஸந்தோஷமுற்று, 'உங்கள் ஸஹாயத்தினாலேயே எனக்கு ஜயம் உண்டாயிற்றன்றி வேறில்லை' என்று அவ்வானரர்களெல்லோரையும்

அவரவர் கௌரவத்திற்குத் தகுந்தபடி அனுகூலமாக வெகுமானித்தனன். ஜயலக்ஷ்மீ விலாஸம் பொருந்தின அவ்வானரர்கள், ஹனுமான் அகம்பனனைக் கொன்றது எல்லோர்க்குந் தெளிவாய்த் தெரியும்படி தமது பல முள்ளளவும் ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். (அந்த ஸிம்ஹநாதங்கள் பலிஷ்டர்களான ராக்ஷஸர்களையும் ஹிம்ஸித்தன.) ஸந்தோஷத்தினால் உத்ஸாஹம் மிகப் பெற்ற அவ்வானரர்கள் அனைவரும் ஜயகோஷங்களைச் செய்துகொண்டு குற்றுயிராய்த் தபித்துத் துடிக்கின்ற ராக்ஷஸர்களையும் இழுத்து ஹிம்ஸிக்கலாயினர். வாயு குமாரனாகிய அந்த ஹனுமான் அங்ஙனம் ராக்ஷஸர் களை ஸம்ஹரித்து வந்து, சத்ருக்களை அழிப்பவனும் பலிஷ்டனுமாகிய கைடபாஸுரனை வதித்த மஹா விஷ்ணுபோல் ஸேனாமுகத்தில் வீரசோபையுடன் மிகுதியும் ப்ரகாசித்தனன். அப்பொழுது அந்த ஹனுமானை, ஆகாயத்தில் கூட்டங்கூடி யிருக்கின்ற தேவதைகளனைவரும் பூஜித்தனர். அங்ஙனமே ராமனும் மஹாபலசாலியான லக்ஷ்மணனும் ஸுக்ரீவன் முதலிய வானரர்களும் மஹாபலனான விபீஷணனும் ஹனுமானை மிகுதியும் கௌரவித்தனர்.

ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ப்ரஹஸ்தன் யுத்தத்திற்கு வருதல்.

ராக்ஷஸேஶ்வரனான ராவணன், அகம்பனன் மரணம் அடைந்தானென்று கேட்டு, மிகவும் கோபா வேசமுற்று முகத்தில் சிறிது தைன்யமும் தோற்றப் பெற்றுத் தன்னருகிலிருக்கின்ற அம்மந்த்ரிகளின்மேல் கண்வைத்தனன். ராக்ஷஸாதிபதி ராவணன் சிறிது

நேரம் சிந்தையிலாழ்ந்திருந்து, அப்பால் மந்த்ரிகளுடன் ஆலோசித்து, அனந்தரம் பூர்வாஹ்ணத்தில் எழுந்து ஸேனாவ்யூஹங்களை யெல்லாம் பார்க்கும் பொருட்டு லங்கை முழுவதும் திரிந்தனன். அவன் ராக்ஷஸக் கூட்டங்களால் நன்கு ரக்ஷிக்கப்பட்டதும் பல ஸேனாவ்யூஹங்கள் அமைந்ததும் பதாகைகளாலும் த்வஜங்களாலும் ப்ரகாசிப்பதுமாகிய லங்காபுரத்தை யெல்லாம் கண்டனன். அந்த ராக்ஷஸேஸ்வரன் ராவணன், லங்கையைச் சுற்றிலும் வானரர் தடுத்துக்கொண்டிருப்பதைக் கண்டு பொறுக்கமுடியாமல் கட்டளையிடத் தகுந்த ஸமயமாகையால் யுத்தத்தில் ஸமர்த்தனாகிய ப்ராஹஸ்தனைப் பார்த்துக் கட்டளையிட்டனன். 'நீ யுத்தத்தில் ஸமர்த்தன். உனக்குத் தெரியாததில்லை. பகைவருடைய ஸைன்யங்கள் திடீலென்று பட்டணத்தைச் சுற்றித் தகைந்து பீடிக்கையில், அதை விடுவித்துக்கொள்வதற்கு யுத்தத்தைக் காட்டிலும் வேறு உபாயம் எனக்குத் தோற்றவில்லை. இப்படிப்பட்ட கார்யபாரத்தை நானாவது கும்பகர்ணனாவது என் ஸேனாபதியான நீயாவது இந்த்ரஜித்தாவது நிகும்பனாவது நிர்வஹிக்க வேண்டுமேயன்றி மற்றவர் நிர்வஹிக்க வல்லரல்லர். ஆகையால் அப்படிப்பட்ட மஹாபல ஸம்பன்னனாகிய நீ சீக்ரத்தில் ஸைன்யத்தை வரவழைத்து உன் வசத்தில் வைத்துக் கொண்டு வானரர்களெல்லோருமிருக்கிற இடத்திற்குப் போய் ஜயம் பெற்றுவரப் புறப்படுவாயாக. நீ யுத்தஞ் செய்யவும் வேண்டியதில்லை; அதற்காக வெறுமனே புறப்பட்ட மாத்ரத்திலேயே சபல ஸ்வபாவமுடைய வானர ஸைன்யம் ராக்ஷஸோத்தமர்கள் செய்யும் ஸிம்ஹநாதங்களைக் கேட்டு பயந்து ஓடிப்போம்.

வானரர்கள் தைர்யமற்றவர்; யுத்த சிக்ஷை நேரப் பெருதவர்; மற்றும், சஞ்சல ஸ்வபாவமுடையவர். ஆகையால் யானைகள் ஸிம்ஹகர்ஜனத்தைக் கேட்டு நிற்கமாட்டாதாற்போல், ஸிம்ஹநாதத்தைக் கேட்டுப் பொறுத்து நிற்கவல்லரல்லர். ப்ரஹஸ்தனே! அங்ஙனம் அந்த வானரவீரர்களின் ஸைன்யம் முழுவதும் ஓடிப் போனபின்பு ராமனும் லக்ஷ்மணனும் தன் வார்த்தையைக் கேட்பவர் எவருமில்லாமையால் ப்ரபுத்வம் கழிந்து பிடிப்பின்றி உன்கையில் அகப்பட்டுக்கொள்வார்கள். 'யுத்தத்தில் நமக்கும் கெடுதி விளையக்கூடுமாகையால் அதைச் செய்யாதிருத்தலே மேல்' என்கிருயோ? நாம் யுத்தஞ் செய்யாதிருப்பின் சத்ருக்கள் விடமாட்டார்களாகையால் அவரால் நமக்கு மரணம் நேருவது நிச்சயம். யுத்தஞ் செய்தால் மரணமே நேருமோ ஜயமே நேருமோ நிச்சயிக்க முடியாது. ஆகையால் மரணம் விளைவது ஸந்தேஹம். இங்ஙனம் யுத்தஞ் செய்யாத பக்ஷத்தில் ஸந்தேஹமில்லாமல் நேரக்கூடிய மரணத்தைக்காட்டிலும் யுத்தஞ் செய்கையில் ஸந்தேஹமாய் நேரும்படியான மரணமே நன்று. ஆகையால் யுத்தஞ் செய்யாதிருப்பதைக்காட்டிலும் யுத்தஞ்செய்வதே மேல். இதுவே என் அபிப்ராயம். இனி இதற்கு ப்ரதிகூலமாயாவது அனுகூலமாயாவது, நீ நமக்கு எது ஹிதமென்று நினைக்கிருயோ, அதைச் சொல்வாயாக. அதுவே எனக்கும் ஹிதமாம்' என்றனன். ராவணன் இங்ஙனம் மொழிகையில் ஸேனுபதியாகிய ப்ரஹஸ்தன், சுக்ரன் அஸுரராஜனைப் பார்த்துச் சொல்வதுபோல், அந்த ராவணனைப் பார்த்துச் சொல்லத்தொடங்கி, 'ராஜனே! இவ்விஷயம் முன்பு நிபுணர்களான விபீஷணன்

முதலிய மந்த்ரிகளுடன் கலந்து நாம் ஆலோசித்ததே யன்றிப் புதிதன்று. அப்பொழுது ஒருமதமாகாமல் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மதமாக ஆலோசிக்கையில் நமக்கு வாக்குவாதமுங்கூட நடந்தது. அதைப்பற்றி யன்றோ விபீஷணன் வெளிப்பட்டுப் போயினன். ஸீதையைக் கொடுப்பதனால் நன்மை உண்டாகுமென்றும், கொடாத பக்ஷத்தில் யுத்தம் நேருமென்றும் நான் நிச்சயித்திருந்தனன். அப்பொழுது எப்படி நிச்சயித்திருந்தேனோ, அப்படியே இப்பொழுது நேரிட்டதை நாம் கண்டனம். என் மதம் இருக்கட்டும். நீ பூஷணம் முதலியவற்றைக் கொடுப்பதனாலும் ஸம்மானத்துடன் கூடின ப்ரியவசனங்களைப் பேசுவதனாலும் நல் வார்த்தைகளாலும் என்னை எப்பொழுதும் கௌரவித்துக்கொண்டிருக்கின்றனை. இப்படிப்பட்ட நான் ஸமயம் வந்தபொழுது உனக்கு இஷ்டமானதை எதைச் செய்யமாட்டேன்? எதையுஞ் செய்வேன். எனக்கு ப்ராணன்களாவது, பிள்ளை பார்யை தனம் முதலியவையாவது ரக்ஷித்துக்கொள்ள வேண்டியவை அல்ல. இதோ உனக்காக யுத்தமாகிற அக்னியில் என் ப்ராணன்களை ஹோமஞ் செய்கிறேன், காண்பாய்' என்றனன். ஸேனாபதியான ப்ரஹஸ்தன் தன் ப்ரபுவாகிய ராவணனுக்கு இங்ஙனஞ் சொல்லித் தன் எதிரிலிருக்கிற பலாத்யக்ஷர்களைப் பார்த்து 'மிகுதியும் பெரியதாகிய ராக்ஷஸ ஸைன்யத்தைச் சீக்ரமாக வரவழைப்பீர்கள். இப்பொழுது யுத்தபூமியில் வஜ்ராயுதம்போன்ற கூரான என் பாணங்களின் வேகத்தினால் அடியுண்ட வானரர்களின் மாம்ஸங்களை, மாம்ஸந் தின்னுந் தன்மையுடைய பக்ஷிகள் ஆசைதீரத் தின்று த்ருப்தி அடையுமாக' என்றனன். இங்ஙனம்

ப்ராஹஸ்தன் மொழிகையில், அந்த ஸேனாத்யக்ஷர்கள் விரைந்து சென்று அந்த [1] ராக்ஷஸ மந்திரத்தில் ஸேனையை ஸித்தஞ் செய்தனர். அனந்தரம் முஹூர்த்த காலத்தில் அந்த லங்காநகர் முழுவதும் யானைகளால் நிரம்புவதுபோல் தீக்ஷ்ணங்களான நானாவகை ஆயுதங்களைத் தரித்த அந்த ராக்ஷஸ வீரர்களால் நிறைந்தது. அப்பொழுது ராக்ஷஸவீரர்கள் அக்னியில் பலவித சாந்தி ஹோமங்களைச் செய்வதனாலும், ப்ராஹ்மணர்களைப் புஷ்பம் சந்தனம் முதலியவற்றால் பூஜிப்பதனாலும் அங்குக் காற்று நெய்வாஸனையோடும் புஷ்பாதிகளின் மணத்தோடும்கூடி வீசிற்று. அப்பொழுது யுத்த ஸந்நத்தர்களான ராக்ஷஸர் மிகுந்த ஸந்தோஷத்துடன் ஜயத்தைக் கொடுக்கும் மந்த்ரங்களால் மந்த்ரிக்கப்பட்ட நானாவித புஷ்பமாலைகளை தரித்தனர். அந்த ராக்ஷஸர் தனுஸ்ஸுக்களை, ஏந்திக் கவசங்களைத் தரித்து வேகத்துடன் வந்து ராஜனாகிய ராவணனைப் பார்த்து நமஸ்கரித்து ப்ராஹஸ்தனைச் சுற்றிக்கொண்டு நின்றனர். அனந்தரம் ப்ராஹஸ்தன் ராஜனாகிய ராவணனிடம் விடைபெற்றுக்கொண்டு பயங்கரமான பேரி வாத்யத்தை அடித்து முழங்கச் செய்து ஸமஸ்த ஆயுதங்களும் ஸித்தஞ் செய்து வைக்கப்பெற்றதும் திவ்யமாய் விளங்குவதுமாகிய ரதத்தின்மேல் ஏறிக்கொண்டனன். அந்த ரதம் மிகுந்த வேகமுடைய குதிரைகள் பூட்டப் பெற்றதும் ஸமர்த்தனாகிய ஸாரதியால் ஓட்டப்படுவதுமாகிப் பெரிய மேகம்போல் கோஷஞ் செய்துகொண்டு சந்த்ரன்போல் ஸந்தோஷம் விளைப்பதும் ஸூர்யன்

1. ராக்ஷஸ மந்திரமாவது-இங்கு ராவணக்ருஹம். ஸேனையை அவ்விடத்திற்கு வரவழைத்தனனென்று கருத்து.

போல் ஜ்வலிப்பதுமா யிருந்தது. மற்றும், அது ஸர்ப்பத்வஜம் கட்டப்பெற்று அணுகமுடியா திருந்தது. அன்றியும், அது சிறந்த மேல்போர்வை யுடையதாகி நன்கு இயற்றப்பட்ட சக்ரங்களோடும் அழகிய பொற்சாளரங்களோடும் கூடித் தன் காந்தி யால் காந்தியுடைய மற்ற வஸ்துக்களைப் பரிஹஸிப்பது போலிருந்தது. அப்பால் ப்ரஹஸ்தன் ராவணனால் கட்டளை அளிக்கப்பெற்று அந்த ரதத்தின்மேல் ஏறிக் கொண்டு மிகுதியும் பெரிய ஸைன்யம் சூழ்ந்து வரப் பெற்று, சீக்ரமாக லங்கையினின்று வெளிப்பட்டனன். அனந்தரம் ஸேனாதிபதியாகிய ப்ரஹஸ்தன் புறப்பட்ட வுடனே மேகத்வனிகள் போன்ற பேரிவாத்ய கோஷங்களும் பலவகையான மற்ற வாத்யங்களின் கோஷங்களும் சங்கத்வனிகளும் ஸமுத்ரத்தை நிரப்பு வதுபோன்று மிகுதியும் அதிகமாகச் செவிப்பட்டன. பயங்கரமான உருவமுடையவர்களும் மஹாசரீரர்களு மாகிய ராக்ஷஸர் பயங்கரமான கோஷம் உண்டாகும் படி இரைச்சலிட்டுக்கொண்டு ப்ரஹஸ்தனுக்கு முன்னே செல்பவராகி முன்னமே புறப்பட்டுப் போயி னர். நராந்தகன் கும்பஹனு மஹாநாதன் ஸமுந்நதன் என்கிற இந்த ப்ரஹஸ்த மந்த்ரிகள் நால்வரும் அவனைச் சுற்றிக்கொண்டு சென்றனர். ப்ரஹஸ்தன் வ்யூஹங்களாக ஏற்படுத்தப்பட்டு யானைக் கூட்டங்களை நிகர்த்து அதிபயங்கரமா யிருக்கின்ற அம்மஹா ஸைன்யத்துடன் கூடிக் கிழக்கு வாசல் வழியாய் வெளிப்பட்டு வந்தனன். அந்த ப்ரஹஸ்தன் ஸமுத்ர ப்ரவாஹம்போன்ற அம்மஹாஸைன்யம் சூழ்ந்து வரப்பெற்று, ப்ரளய காலத்தில் எல்லாவற்றையும் ஸம்ஹரிக்கின்ற யமன்போல் சீக்ரமாக வெளிப்பட்ட

னன். அந்த ப்ராஹஸ்தனும் அந்த ராக்ஷஸர்களும் ப்ரயாணகாலத்தில் செய்த ஸிம்ஹநாதங்களின் கோஷத்தைக் கேட்டு லங்கையிலுள்ள ஸமஸ்த ஜந்துக்களும் பயந்து விகாரமான சப்தத்துடன் கூச்ச லிட்டன. [1] மாம்ஸங்களையும் ரக்தங்களையும் ஆஹார மாகவுடைய பக்ஷிகள் மேகமில்லாத ஆகாயத்திற் சேர்ந்து ரதத்தை அப்ரதக்ஷிணமாகச் சுற்றின. நரிகள் வாயால் அக்னி ஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு பயங்கரமாக ஊளையிட்டன. ஆகாயத்தினின்று கொள்ளிக்கட்டைகள் விழுந்தன. காற்றும் க்ரூரமாக வீசிற்று. சந்த்ரன் ஸூர்யன் முதலிய க்ரஹங்களும் ஒன்றுக்கொன்று யுத்தஞ் செய்துகொண்டு சிறிதும் விளக்கமுறாதிருந்தன. மேகங்கள் பயங்கரமாக கர்ஜித்துக்கொண்டு அந்த ப்ராஹஸ்தனுடைய தேரின் மேல் ரக்தமழையைப் பெய்து அவனுக்கு முன் நடந்து செல்பவரையும் நனைத்தன. ஓர் கழுகு இந்த ப்ராஹஸ்த னுடைய த்வஜத்தின் நுனியில் தெற்கு முகமாக வந்து உட்கார்ந்து இரண்டு இறகுகளையும் மூக்கினால் கிழிக்கொண்டிருந்தது. அதைப் பார்த்தவுடனே ப்ராஹஸ்தனுடைய முகவொளியெல்லாம் மழுக்க முற்றது. குதிரைகளை ஓட்டுவதில் ஸமர்த்தனாகிய ஸாரதி பலவாறு யுத்தரங்கத்தில் ஸாரத்யஞ் செய்து பயிற்சியுடையவனாயினும் ஸூத குலத்தில் பிறந்தவ

---

1. இங்கு 'வ்யஹீரமாகாஶ மாவிஶ்ய மாംஸஶோணித ஹோஜநா:। மண்டலாந்யபஸவ்யானி வாஶாஶ்சக்ரு ரதம்ப்ரதி' என்பது மூலம். இதற்கு 'கருடப் பறவைகள் ரதத்தின்மேல் ப்ரதக்ஷிணமாக வட்டமிட்டன' என்றும் பொருள் கூறலாம். 'அபஸவ்யந்து தக்ஷி ணம்' என்று அமரன். கருடன் ப்ரதக்ஷிணமாகச் சுற்றுவதும் அப சகுனம்-கோவிந்தராஜர்.

னுகையால் சாட்டையைப் பிடிக்கும் திறமையுடையவ னாயினும், அவன் கையிலிருந்து சாட்டைக்கோல் திடீலென்று தரையில் விழுந்தது. வெளியில் புறப்படும் பொழுது ப்ரஹஸ்தனுக்கு அஷ்டவஸுக்களுக்குங் கிடைக்க அரிதாகித் திகழ்வுற்றிருந்த ஒளிப்பெருக்கானது முஹூர்த்த காலத்திற்குள் நசித்துப்போகையில், அவன் நிறம்மாறி உத்ஸாஹமற்றவனாயினன். மேடுபள்ளமில்லாத ஸமமான பூமியிலேயே அவன் குதிரைகள் தடுக்கி விழுந்தன. பல பௌருஷங்களில் ப்ரக்யாதிபெற்ற ப்ரஹஸ்தன் புறப்பட்டு வருவதைக் கண்டு, வானர ஸைன்யங்கள் நானாவித ஆயுதங்களைத் தரித்து யுத்தத்திற்கு எதிரே வந்து நின்றன. அப்பால் வானரர்கள் ஆயுதங்களுக்காக வ்ருக்ஷங்களைப் பிடுங்குகையாலும் பெரிய கற்களை எடுக்கையாலும் மிகவும் துமுலமான பெருங்கோஷம் உண்டாயிற்று. ராக்ஷஸர்களும் வானரர்களும் அங்ஙனம் பெருங்கோஷத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்கையில் அவ்விரண்டு ஸைன்யங்களும் ஸந்தோஷமுற்றிருந்தன. மிகுந்த வேகமுடையவர்களும் ஸமர்த்தர்களும் ஒருவரை யொருவர் வதிக்க விருப்பமுற்றவரும் ஒருவர்மேலொருவர் பொறாமையுடன் சண்டைக்கு அழைக்கின்றவருமாகிய ராக்ஷஸக்கூட்டமும் வானரக்கூட்டமும் இறைகிற இறைச்சலானது பெருங்கோஷமாகக் கிளம்பிச் செவியிற் பட்டுக்கொண்டிருந்தது. அப்பால் ப்ரஹஸ்தன் துர்ப்புத்தி மேலெழப்பெற்று ஜயிக்க வேணுமென்று எண்ணங்கொண்டு வானர ராஜனாகிய ஸுக்ரீவனது ஸைன்யத்திற்கு எதிரே வந்து, விட்டில்பூச்சி சாகவேண்டி அக்னியில் விழுவது போல், வளர்கின்ற மஹாவேகமுடைய அவ்வானர

ஸைன்யத்தில் ப்ரவேசித்தனன். ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ப்ரஹஸ்தன் நீலனால் அடியுண்டு மாளுதல்.

அப்பால், ராமன் சத்ருக்களை அடக்குந் திறமையுடையவனாகையால் பயங்கர பராக்ரமனாகிய ப்ரஹஸ்தன் புறப்பட்டு வருவதைக்கண்டு, பலிஷ்டனாகிய சத்ருவைக் காண்கையால் புன்னகை விளங்க விபீஷணனைப் பார்த்து 'மஹாபாஹு! மிகுதியும் பெருஞ் சரீரமுடைய இவன் யாவன்? பெரிய ஸைன்யத்துடன் கூடி வருகின்றானே! இவன் மிகுந்த வீர்யமுடையவனென்று தோற்றுகின்றது. இவனைச் சொல்வாயாக' என்று வினவினன். விபீஷணன் ராமன் சொன்னதுகேட்டு, 'இந்த ராக்ஷஸன் அந்த ராவணனுடைய ஸேனாபதி. இவன் ப்ரஹஸ்தனென்னும் பெயருடையவன்; லங்கையில் ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுடைய ஸைன்யத்தில் மூன்றில் ஒரு பாகம் இவனைப் பணிந்திருக்கும். இவன் மிகுந்த வீர்யமுடையவன்; அஸ்த்ரங்களெல்லா மறிந்தவன்; சூரன்; பராக்ரமத்தில் ப்ரஸித்தி பெற்றவன்' என்றனன். மிகுந்த பலமுடையவரும் ரோஷம் மிகுதியும் மேலெழப்பெற்றவரும் ப்ரஹஸ்தனை எதிர்த்து கர்ஜிப்பவருமாகிய வானரர்களின் மஹா ஸைன்யமானது, பயங்கரமான உருவமுடையவனும் பயங்கர பராக்ரமனும் மிகுதியும் பெரிய தேஹமுடையவனுமாகிய அந்த ப்ரஹஸ்தன் ராக்ஷஸர்கள் சூழ்ந்து வரப்பெற்று கர்ஜித்துக் கொண்டு புறப்பட்டு வரக்கண்டது. அப்பொழுது ஜயிக்கவிரும்பி வானரர்மேல் எதிர்த்து வருகின்ற

ராக்ஷஸர் தரித்திருந்த கட்கம் சக்தி அஷ்டி பாணம் சூலம் முஸலம் கதை பரிகம் ப்ராஸம் என்கிற ஆயுதங்களும் பலவகைப்பட்ட பரசுக்களும் (கோடாலிகளும்) விசித்ரங்களான தனுஸ்ஸுக்களும் மற்றும் பலவித ஆயுதங்களும் மிகவும் ப்ரகாசித்தன. வானரோத்தமர்களும் யுத்தஞ் செய்யும்பொருட்டுப் புஷ்பித்த வ்ருக்ஷங்களையும் அகன்று நீண்ட கற்களையும் பிடித்துக்கொண்டு நின்றனர். அங்ஙனம் அவ்வானரர்களும் ராக்ஷஸர்களும் பலர் ஒருவரை யொருவர் எதிர்த்துக் கிட்டி, சிலாவர்ஷங்களையும் (கல் மழைகளையும்) பாணவர்ஷங்களையும் பெய்துகொண்டு சண்டை செய்கையில், அவர்களுக்கு மிகவும் பெரிய யுத்தம் நடந்தது. அப்பொழுது யுத்தத்தில் ராக்ஷஸர் பலர் மேலான பல வானரர்களை வதித்தனர். அங்ஙனமே வானரர்களும் பல ராக்ஷஸர்களை வதித்தனர். ராக்ஷஸர்கள் சில வானரர்களைச் சூலங்களால் அடித்தனர். சிலரைச் சக்ராயுதங்களால் அடித்தனர்; சிலரைப் பரிகங்களால் உருமாய்த்தனர்; சிலரைக் கோடாலிகளால் சேதித்தனர். இங்ஙனம் சூலம் முதலியவற்றால் அடியுண்ட சில வானரர் உயிரை இழந்தனர்; சிலர் தரையில் வீழ்ந்தனர்; சிலர் பாணங்கள் உடம்பு முழுவதும் பொற்றுக்கொள்ளப்பெற்றுக் கயிறுகளால் கட்டுண்டவர் போன்று ஹ்ருதயம் முறிந்து ப்ராணன்களை விட்டனர். சில வானரர்களை ராக்ஷஸர் கத்திகளால் இரண்டு துண்டங்களாகத் துண்டிக்கையில் அவர்கள் துடித்துத் தரையில் விழுந்தனர். சில வானரர்கள் பக்கத்தில் சூலங்களால் பிளக்கப்பட்டு மரணம் அடைந்தனர். அப்பொழுது வானரர்களும் மிகுந்த கோபாவேசத்துடன் நாற்புறத்திலும் ராக்ஷஸர்களைக் கூட்டங் கூட்டமாக வ்ருக்ஷங்க

ளாலும் பர்வத சிகரங்களாலும் அடித்துத் தரையில் விழத்தள்ளிச் சூர்ணஞ் செய்தனர். வானரர்கள் வஜ்ரம்போல் ஆழ்ந்து படும்படியான உள்ளங்கைக ளாலும் முஷ்டிகளாலும் அறைந்து குத்துகையில், சில ராக்ஷஸர் கண்களும் பற்களும் சிதறப்பெற்று வாயால் ரக்தத்தைக் கக்கினர். வானரர்களும் ராக்ஷ ஸர்களும் யுத்தத்தில் அடிபடும்பொழுது ஆர்த்த த்வனி செய்வதும் ஜயம் நேரும்பொழுது ஸிம்ஹ நாதஞ் செய்வதுமாயிருந்தனர். அவ்விரண்டு சப்தமும் பெருங்கோஷமாகக் கிளம்பிற்று. வானரர்களும் ராக்ஷஸர்களும் கோபமுற்று வீரர்களின் மார்க்க மாகிய யுத்த ஸாமர்த்யத்தை அனுஸரித்துக் கண்க ளைக் கிருகிருவென்று சுழற்றிக்கொண்டு கொடியர்க ளாகி நிர்ப்பயமாக நானாவித யுத்தகர்மங்களைச் செய்த னர். நராந்தகன் கும்பஹநு மஹாநாதன் ஸமுந்நதன் என்கிற இந்த ப்ரஹஸ்த மந்த்ரிகள் நால்வரில் ஒருவ னும் வெறுமனே இராமல் எல்லோரும் கிளம்பி வானரர்களை வதித்தனர். அந்நால்வரும் அங்ஙனம் வேகமாக வெளிப்பட்டு வந்து வானரர்களை வதித்துக் கொண்டிருப்பது கண்டு, த்விவிதன் அவர்களில் ஒருவ னாகிய நராந்தகனைப் பர்வதசிகரத்தால் அடித்துக் கொன்றனன். துர்முகன் மிகுதியும் ஹஸ்தலாகவ முடையவனாகையால் பெரிய ஒரு வ்ருக்ஷத்தைப் பிடுங்கி ஸமுந்நதனென்னும் ராக்ஷஸனைக் கொன்ற னன். மிகுதியும் தேஜஸ்வியாகிய ஜாம்பவான் அள விறந்த கோபாவேசமுற்றுப் பெரியதொரு சிலையை எடுத்து மஹாநாதனுடைய மார்பில் போகட்டனன். அனந்தரம் தாரன் வ்ருக்ஷத்தைக்கொண்டு மிகுந்த வீர்யமுடைய கும்பஹநுவின் சிரஸ்ஸில் அடிக்கையில்,

அவன் அந்த யுத்தரங்கத்தில் விழுந்து ப்ராணன்களை இழந்தனன். ப்ரஹஸ்தன் ரதத்தில் இருந்து இங்ஙனம் தன் மந்த்ரிகள் நால்வரும் அடியுண்டு மாண்டதைக் கண்டு பொறுக்கமுடியாமல் வில்லைக்கொண்டு வானரர்களோடு கோரமாக யுத்தஞ்செய்தனன். மிகவும் பயங்கரமாயிருக்கையால் ப்ராளயகாலம் போன்ற அம்மஹாயுத்தத்தில், அளவிறந்ததாகிய ஸமுத்ரம் பொங்கும்பொழுது உண்டாகும் பெருங்கோஷம்போல் அவ்விரண்டு ஸேனையிலும் அப்பொழுது பயங்கரமான கோஷம் உண்டாயிற்று. ப்ரஹஸ்தன் யுத்தத்தில் பண்டிதனுகையால் அம்மஹாயுத்தத்தில் மிகுதியும் கோபமுற்றவனுகி பாணஸமூஹங்களை அபாரமாக ப்ரயோகித்து வானரர்களை ஹிம்ஸித்தனன். வானரர்களுடையவும் ராக்ஷஸர்களுடையவும் பர்வதம்போன்ற சரீரங்கள் விழுந்து யுத்த பூமி முழுவதும் நிரம்பியிருக்கையால், பர்வதங்கள் விழுந்தாற்போல் பயங்கரமாயிருந்தது. அந்த யுத்த பூமியெல்லாம் ரக்தம் நிரம்பியிருக்கையால் வஸந்தருதுவில் புஷ்பித்த பலாச வ்ருக்ஷங்களால் நிறைந்த பூமிபோல் ப்ரகாசித்தது. அந்த யுத்தபூமி ஓர்நதிபோல் புலப்பட்டது. அந்நதிக்கு யுத்தத்தில் அடியுண்ட இருதரத்து வீரக்கூட்டங்களே கரைகள்; முறிந்து விழுந்த ஆயுதங்களே கரையில் முறிந்து வீழ்ந்த வ்ருக்ஷங்கள்; ரக்தப்ரவாஹமே பெரிய நீர்வெள்ளம்; காலகண்டமென்கிற மாம்ஸங்களும் குல்மமேன்கிற மாம்ஸங்களுமே பெருஞ்சேறு; சிதறியிருக்கின்ற குடல்களே ப்ரவாஹத்திலுள்ள வேலம்பாசி; பிளவுண்ட தேஹங்களும் சிரஸ்ஸுக்களுமே அதிலுள்ள மத்ஸ்யங்கள்; கைகால் விரல்களே அதற்குப் பசும்புல் நிறைந்த இடம்; நிறைந்திருக்கின்ற

கழுகுக் கூட்டமே அதற்கு ஹம்ஸப்பறவைகள்; கங்க பக்ஷிகளே ஸாரஸப் பறவைகள்; வபையென்னும் மாம்ஸங்களே நுரைகள்; அடியுண்ட வீரர்களின் ஆர்த்த த்வனிகளே பரவாஹத்திலுண்டாகும் பெருங் கோஷம். அது யமனுகிற ஸமுத்ரத்தைக் குறித்துப் பாயுந்தன்மையுடையது; பயந்தவர்களுக்குத் தாண்ட முடியாதது. இப்படிப்பட்ட யுத்தமாகிற மஹாநதியை அவ்விருதரத்தவரும் ஓயாமல் பெருகிவரச் செய்தனர். ராக்ஷஸர்களும் வானரவீரர்களும், வர்ஷாகாலத்து முடிவில் ஹம்ஸம் முதலிய நீர்ப்பறவைகளால் விளங்குகின்ற நதியை ஸுகமாகத் தாண்டுவதுபோல் தாண்டமுடியாத அந்த யுத்த பூமியாகிற மஹா நதியைத் தாண்டினர். யானைக் கூட்டங்களில் தலைமை யுள்ள யானைகள் தாமரைத் தூள்கள் படிந்து சிவந் திருக்கிற தாமரைக்குளத்தைத் தாண்டி, தேஹம் சிவந்திருக்கப் பெறுவதுபோல், அந்த வானரர்களும் ராக்ஷஸர்களும் அந்த யுத்தபூமியாகிற நதியில் இறங்கிச் சிவந்த தேஹமுடையவராகித் தாண்டினர். அப்பால் ப்ரஹஸ்தன் ரதத்திலிருந்து பாணஸமூஹங் களை ப்ரயோகித்து விரைவுடன் வானரர்களை வதித்துக் கொண்டிருக்கையில் நீலன் கண்டனன். ஸேனுபதி யாகிய ப்ரஹஸ்தன், ஆகாயத்தில் மிகுதியும் வளர்ந்து வீசுகின்ற பெருங்காற்று வளர்ந்திருக்கின்ற மேக ஸமூஹத்தின்மேல் பலாத்காரமாக எதிர்ப்பதுபோல், தன்மேல் எதிர்த்து வருகின்ற நீலனைப் பார்த்து, ஸூர்யன்போல் பளபளவென்று விளங்குகின்ற ரதத்தை ஓட்டிக்கொண்டு போய் அந்த நீலனையே எதிர்த்தனன். வில்லாளிகளில் சிறந்த அந்த ப்ரஹஸ்த னென்னும் ஸேனுபதி மஹாயுத்தத்தில் திடமான

தனுஸ்ஸைக் காதுவரையிலும் இழுத்து நீலன்மேல் பாணங்களை ப்ரயோகித்தனன். குறிதவருது நேராகப் பாய்கின்றவைகளும் சினந்த ஸர்ப்பங்கள்போன்றவைகளும் மிகுந்த வேகமுடையவைகளுமாகிய அந்த பாணங்கள் குறிதவருமல் நீலனுடைய தேஹத்தைப் பிளந்துகொண்டு போய் பூமியில் ப்ரவேசித்தன. வீர்யசாலியும் மஹாகபியுமாகிய நீலன் அங்ஙனம் அக்னிபோல் பெருவெப்பத்துடன் ஜ்வலிக்கின்ற கூரிய பாணங்களால் அடியுண்டு கோபாவேசமுற்று ஒரு வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு, தடுக்கமுடியாதவனும் தன்மேல் எதிர்த்து வருகின்றவனுமாகிய அந்த ப்ரஹஸ்தனை அடித்தனன். ராக்ஷஸஸ்ரேஷ்டனுகிய அந்த ப்ரஹஸ்தன் அங்ஙனம் வ்ருக்ஷத்தினுல் அடிக்கப்பட்டுப் பெருங் கோபாவேசத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு வானர ஸேனுபதியான நீலன்மேல் பாணவர்ஷங்களைப் பெய்தனன். மஹாபலனுன நீலன் பயங்கரமான அந்த ப்ரஹஸ்தனுடைய பாணங்களைத் தடுக்கமுடியாதவனுகிக் கண்களை மூடிக்கொண்டு எல்லாவற்றையும் பொறுத்திருந்தனன். காளையெருது, சரத்ருதுவில் சீக்ரமாக வந்த மழையைச் சிறிதும் பொருள்செய்யாமல் பொறுத்திருப்பதுபோல், நீலனும், அணுகமுடியாமல் அதிபயங்கரமாகவும் அதிவேகமாகவும் ப்ரஹஸ்தன் ப்ரயோகிக்கிற பாணவர்ஷங்களைச் சிறிதும் பொருள் செய்யாமல் கண்களை மூடிக்கொண்டு பொறுத்திருந்தனன். நீலன் கேவலனுகாமல் மிகவும் பெரிய வீரனுகையால், அந்த பாணவர்ஷத்தைக் கண்டு ரோஷாவேசம் உண்டாகப்பெற்று ஓர் பெரிய ஸாலவ்ருக்ஷத்தினுல் மனுேவேகமுடைய ப்ரஹஸ்தனது குதிரைகளைக் கொன்றனன். அனந்தரம்

மஹாபலனுன நீலன் திடீலென்று அந்த ப்ரஹஸ்தன் கையிலுள்ள தனுஸ்ஸைப் பிடுங்கி எடுத்துப் போகட்டனன்; அடிக்கடி ஸிம்ஹநாதமுஞ் செய்தனன். ராக்ஷஸ ஸேனுதிபதியான ப்ரஹஸ்தன் அங்ஙனம் நீலனுல் குதிரைகள் மாளவும் தனுஸ்ஸு ஒடியவும் பெற்று, பயங்கரமான ஓர் முஸலத்தை (உலக்கையை)க் கையில் ஏந்திக்கொண்டு ரதத்தினின்று தரையில் குதித்தனன். வேகமுடையவர்களும் பலத்தில் ஸிம்ஹத்தையும் புலியையும் நிகர்த்தவர்களும், ஸிம்ஹ சார்த்தூலங்களைப்போல் வீரச்செயல்களை ஆசரிப்பவர்களும் எங்கும் ஜயம் பெற்றவர்களும் யுத்தங்களில் என்றும் பின்வாங்காதவர்களும் வ்ருத்ராஸுரனையும் தேவேந்த்ரனையும் நிகர்த்தவர்களும் வீரர்களுமான அந்த ஸேனுபதிகளிருவரும் ஒருவர்மேலொருவர் அழியாத வைரமுடையவராகி ஸமஸ்த அவயவங்களிலும் ரக்தம் பெருகப்பெற்று மத்தகஜங்கள்போல் ஒருவரை யொருவர் தடுப்பதும் மிகவும் கூரான கோரைப்பற்களால் ஒருவரை யொருவர் கிழிப்பிதுவதுமாகி ஒருவரை யொருவர் ஜயித்துப் புகழ்பெறுவதற்குப் பாபரப்புற்றிருந்தனர். அப்பொழுது ப்ரஹஸ்தன் மிகுந்த முயற்சியுடையவனுகி முஸலத்தைக்கொண்டு நீலனை நெற்றியில் அடிக்கையில், அவனுக்கு ரக்தம் பெருகிற்று. அப்பால் தேஹம் முழுவதும் ரக்தத்தினுல் நனையப்பெற்ற மஹாகபியான நீலன் கோபமுற்று மிகுதியும் பெரிதாகிய ஓர் வ்ருக்ஷத்தைப் பிடுங்கி ப்ரஹஸ்தனுடைய மார்பில் போகட்டனன். ப்ரஹஸ்தன் அந்த அடியைப் பொருள்செய்யாமல் அந்தப்பெரு முஸலத்தைக்கொண்டு பலிஷ்டனுகிய நீலன்மேல் மிகுந்த வலிமையுடன் எதிர்த்தோடினன். அனந்தரம்

மஹாவேகனும் வானரோத்தமனுமாகிய நீலன், உக்ரவேகனாகிய ப்ரஹஸ்தன் பரபரப்புடன் தன்மேல் எதிர்த்து வருவதுகண்டு, ஓர் பெரிய சிலையை எடுத்துக் கொண்டனன். ப்ரஹஸ்தன் யுத்தத்தில் விருப்பமுற்று முஸலத்தை எடுத்துக்கொண்டு யுத்தஞ்செய்ய முயன்று தன்மேல் எதிர்த்து வருகையில், நீலன் சீக்ரமாக அந்தச் சிலையை அவன் தலைமேல் போகட்டனன். அப்பொழுது வானர முக்யனாகிய நீலன் எறிந்த பயங்கரமான அந்தப் பெருஞ்சிலை பட்டு ப்ரஹஸ்த னுடைய தலை பலசுக்கலாகப் பிளந்தது. அந்த ப்ரஹஸ்தன் கார்ந்தியும் பலமும் இந்த்ரியங்களும் பாழாகி ப்ராணன்களும் தொலையப்பெற்று வேரறுந்த வ்ருக்ஷம்போல் திடீலென்று கீழே விழுந்தனன். அங்ஙனம் பிளவுண்ட அந்த ப்ரஹஸ்தனுடைய சிரஸ்ஸி னின்றும் சரீரத்தினின்றும், பர்வதத்தினின்று அருவி கள் பெருகுவதுபோல், அபாரமாக ரக்தம் பெருகிற்று. நீலன் ப்ரஹஸ்தனைக் கொன்றபின்பு, அதுவரையில் அசைக்க முடியாதிருந்த அந்த ராக்ஷஸ மஹாஸைன்ய மெல்லாம் மனக்களிப்பற்று வருத்தத்துடன் லங்கைக் குத் திரும்பிச் சென்றது. ஸேனாபதியாகிய ப்ரஹஸ்தன் அடியுண்டு மாண்டு போகையில், ஜலப்ரவாஹம் அணைக்கட்டில் தடைபட்டு நிற்கமுடியாமல் சிதறித் திரும்பிப் பாய்வதுபோல், அந்த ராக்ஷஸர் யுத்தத்தில் நிற்கமுடியாமல் திரும்பிப் போயினர். ஸேனாபதியான ராக்ஷஸன் ஹதனாகையால், அவனைப் பின் சென்று வந்த ராக்ஷஸர்கள் ஏதுஞ்செய்ய முடியாமல் ராக்ஷ ஸாதிபதியான ராவணக்ருஹம் போய்ச் சிந்தையின் வசப்பட்டு ஊமையர்போல் ஏதும் பேசமுடியாமல் தீவ்ரமான துக்கஸமுத்ரத்தில் மூழ்கி மூர்ச்சையடைக்

தவர் போலிருந்தனர். அனந்தரம் ஜயசீலனும் பலசாலியுமாகிய வானரஸேனாபதி நீலன் தான்செய்த வீரச்செயலுக்கு எல்லோரும் புகழ்கையில் ராமலக்ஷ்மணர்களினருகே சென்று மிகுதியும் ஸந்தோஷமுற்றிருந்தனன்.[1] ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் தானே யுத்தத்திற்கு வருதலும் ஸுக்ரீவாதிகள் ராவணனால் பங்கப்படுதலும், ராவணன் அமோகமான சக்தி ஆயுதத்தினால் லக்ஷ்மணனை மூர்ச்சிக்கச் செய்தலும், ராம ராவணயுத்தமும், ராமன் ராவணனது க்ரீடத்தைப் பேதித்தலும்.

வானரஸ்ரேஷ்டனாகிய நீலனால் ராக்ஷஸஸேனாபதியான ப்ரஹஸ்தன் யுத்தத்தில் மாண்டுபோகையில், பயங்கரமான ஆயுதங்களைத் தரித்து ஸமுத்ரம்போல் மஹாவேகத்துடன் விரைந்துகொண்டிருந்த ராவணனது ஸைன்யம் லங்கைக்கு ஓடிப்போயிற்று. ராக்ஷஸர்கள் அங்ஙனம் போய், ராவணனுக்கு ஸேனாபதியான ப்ரஹஸ்தன், அக்னியின் குமாரனாகிய நீலனால் அடியுண்டு மாண்டதை விண்ணப்பஞ் செய்கையில், அதைக் கேட்டும் ராக்ஷஸாதிபதி, 'இனி சத்ருக்கள் பலாதிகர்' என்று தெரிந்துகொண்டு அவர்களை ஆஸ்ரயிக்கவேண்டியது நீதியாயிருக்க, அந்தவழியைத் துறந்து தகாத இடத்தில் கோபத்தையுங் கொண்டனன். அந்த ராவணன் யுத்தத்தில் ப்ரஹஸ்தன் அடியுண்டதைக் கேட்டுச் சோகத்தினால் வருந்திக் கோபத்தினால்

---

1. பஞ்சமியினன்று ப்ரஹஸ்தவதம்.

மனம் நிறையப்பெற்று, அருகிலிருக்கின்ற [1] ராக்ஷஸ படஸ்ரேஷ்டர்களைப் பார்த்து, போர்வீரர்களில் சிறந்த தேவதைகளைப் பார்த்து தேவேந்த்ரன் சொல்லுவதுபோல் சொல்லத் தொடங்கி, 'நம் பகைவனாகிய ராமன் விஷயத்தில் உபேக்ஷித்திருக்கலாகாது. மற்றும், இந்த்ரனுடைய பலத்தையும் பாழ்செய்யுந்திறமையுடைய என் ஸேனாபதி ப்ரஹஸ்தனை அனுசரர்களோடும் யானை குதிரைகளோடும் வதித்தனராகையால் மற்ற சத்ருக்களையுங்கூட வானரர்களென்று நினைத்து உபேக்ஷிக்கலாகாது. நான் இனி முன்பின் பார்க்கமாட்டேன். நானே பகைவரை நாசஞ்செய்து வெற்றி பெறும்பொருட்டு யுத்த முகத்திற்குப் போகின்றேன். அதில் துர்ப்பலர்களால் ப்ரபலர் அடியுண்கிறார்களாகையால் அது மிகவும் அற்புதமாயிருக்கின்றது. ஜ்வலிக்கின்ற அக்னிகளால் அடவியை தஹிப்பதுபோல் பாண ஸமூஹங்களால் அந்த வானர ஸைன்யத்தையும் ராமலக்ஷ்மணர்களையும் தஹித்து விடுகிறேன். (இன்று பூமிக்கு வானரர்களின் ரக்தங்களால் த்ருப்தி செய்விக்கிறேன்)' என்றனன். தேவேந்த்ரனுக்குச் சத்ருவாகிய அந்த ராவணன் இங்ஙனஞ் சொல்லி, அக்னிபோல் தகதகவென்று ஜ்வலிப்பதும் மேலான குதிரைகள் பூட்டப்பெற்றதும் அலங்காரங்களால் விளங்குவதும் நன்கு நிர்மிக்கப்பட்டிருக்கையால் இயற்கையாகவே ப்ரகாசிப்பதுமாகிய ரதத்தின்மேல் ஆரோஹித்தனன். அப்பொழுது ராக்ஷஸ ராஜமுக்யனாகிய அந்த ராவணன் சங்கம் பேரி உடுக்கை முதலிய வாத்யங்களின் த்வனிகளாலும் தோள் தட்டுகிற சப்தங்களாலும் ஸிம்ஹநாத கோஷங்க

1. போர்வீரர்களில் சிறந்த ராக்ஷஸர்களை.

ளாலும் அழகான வந்தி மாகதாதிகளின் ஸ்தோத்ர சப்தங்களாலும் நாற்புறத்திலும் பூஜிக்கப்பட்டு யுத்தத்திற்குப் போயினன். ராக்ஷஸ ஶ்ரேஷ்டர்களில் தலைவனாகிய அந்த ராவணன் பர்வதம்போல் பெருத்து ஊறத்திருப்பவைகளும் மேகங்கள்போல் பருத்துக் கறுத்திருப்பவைகளுமான உருவங்கள் அமைந்து நெருப்புப்போல் ஜ்வலிக்கின்ற கண்களையுடைய ராக்ஷஸர்கள் சூழ்ந்து வரப்பெற்று, பூதங்கள் சூழ்ந்த [1] அஸுராதிபதியான ருத்ரன்போல் ப்ரகாசித்தனன். அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய அந்த ராவணன் சீக்ரமாக நகரத்தினின்று புறப்பட்டு பயங்கரமாயிருப்பதும் மஹாஸமுத்ரம்போலும் மேகம்போலும் பெருங்கோஷமுண்டாகப் பெற்றதும் வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் கையில் ஏந்தி யுத்தத்திற்கு ஸித்தமாயிருப்பதுமான அவ்வானர ஸைன்யத்தைக் கண்டனன். யுத்த உத்ஸாஹத்தினால் ஸர்ப்பராஜன் போல் வளர்ந்து விளங்குகின்ற புஜமுடையவனும் யுத்த ஸந்தோஷத்தினால் மிகுந்த ஒளிப்பெருக்குடையவனும் அங்கரக்ஷணத்தின் பொருட்டு நாற்புறத்திலும் ஸேனை சூழ்ந்திருக்கப்பெற்றவனுமாகிய ராமன், மிகவும் ப்ரசண்டமாய் வருகின்ற ராக்ஷஸ ஸைன்யத்தைக் கண்டு ஆயுதம் பிடித்தவர்களில் சிறந்தவனாகையால் மேலான வீரபடர்களின் தாரதம்யங்களை அறிந்த விபீஷணனைப் பார்த்து, 'பலவகைப் பதாகைகளோடும் த்வஜங்களோடும் ஆயுதங்களோடும் கூடி ப்ராஸம் கட்கம் சூலம் முதலிய வேறு ஆயுதங்களையும் தரித்து

1. ருத்ரனை அஸுராதிபதி யென்பது, அவன் தாமஸனாயிருப்பதுபற்றி; மைத்ராயணீயோபநிஷத்தில் 'யோஹவா அஸ்ய தாமஸோம்ஶ: ஸோஸௌ ருத்ர:' என்று கூறப்பட்டது.

ஐராவதம் போன்ற மத்தகஜங்கள் நிறைந்து கலக்கமுடியாததும் சூரர்கள் நிரம்பியதுமாகிய இந்த ஸைன்யம் எவனுடையது?'' என்று வினவினன். அனந்தரம் இந்த்ரனைப்போன்ற பராக்ரமமுடைய விபீஷணன், ராமன் மொழிந்த வார்த்தையைக்கேட்டு, மஹாதைர்யசாலிகளான அந்த ராக்ஷஸஶ்ரேஷ்டர்களின் மேலான பலத்தை மொழியமுயன்று 'ராஜனே! இதோ பாலஸூர்யன்போல் சிவந்த முகம் பொருந்தி யானையின் தோளில் உட்கார்ந்து தன் தேஹபாரத்தினுல் யானையின் சிரஸ்ஸு அதிரப் பெரிய சரீரத்துடன் வருகின்றுனே, இவன் ராவணனது புதல்வன்; இவனை அகம்பனனென்று அறிவாயாக. இதோ! ரதத்தின் மேல் ஏறி ஸிம்ஹத்வஜம் விளங்கப்பெற்று இந்த்ர தனுஸ்ஸுபோல் விளங்குகின்ற தனுஸ்ஸை நாணேற்றி ஒலிக்கச்செய்துகொண்டு பயங்கரமாய் வெளித்தோற்றுகின்ற கோரைப்பற்களால் யானை போல் திகழ்கின்றுனே, அவன் ப்ரஹ்மதேவனுல் கொடுக்கப்பட்ட அந்தர்த்தான வரத்தை முக்யமாகவுமுடைய இந்த்ரஜித்து, விந்த்ய பர்வதம்போல் உயர்ந்தவனும் அஸ்தபர்வதம்போல் பிறருடைய தேஜஸ்ஸை மழுங்கச்செய்பவனும் மஹேந்த்ர பர்வதம்போல் அசையாதிருப்பவனும் அதிரதனும் மஹாவீரனுமாகிய ஒருவன் ரதத்தின்மேல் ஏறிச் சிறந்த வில்லைத் தரித்து மிகுதியும் பெரிதான அவ்வில்லை ஒலிப்பித்துக் கொண்டு வருகின்றுனே! மிகவும் பெருஞ்சரீரமுடைய இவனை அதிகாயனென்பர்கள். இதோ! புதிதாக உதித்த ஸூர்யன்போல் சிவந்த கண்கள் விளங்கப் பெற்று, மணியின் ஓசையால் பேருந் த்வனியுடைய கஜத்தின்மேல் ஏறி மிகவும் தீவ்ரமாக கர்ஜித்துக்

கொண்டு வருகின்றானே, வீரனாகிய இம்மஹாதீரனே மஹோதரனெனப் பெயர்பெற்றவன். இதோ, பல வகைப் பொன்னாபரணங்களால் அலங்காரஞ் செய்யப் பெற்று ஸந்த்யாகால மேகங்கள் நிறைந்த மலைபோல் திகழ்கின்ற துரகத்தின் (குதிரையின்) மேலேறிக் கிரணங்கள் நிறைந்து பளபளவென்று விளங்குகின்ற ப்ராஸாயுதத்தை ஏந்தி வருகின்றானே! இவன் பிசாசனென்பவன்; வஜ்ராயுதத்தோடொத்த வேகமுடையவன். இதோ பர்வதம்போல் திகழ்வதும் வஜ்ராயுதத்தின்வேகம் தனக்குப் பணிவிடை செய்வதாகும்படி பின் வாங்கப்பெற்றதுமாகிய பெரிய வ்ருஷபத்தின்மேலேறி, மின்னல்போல் ப்ரகாசிக்கின்ற கூரான சூலத்தை ஏந்தி வருகின்றானே, இவன் பெரும்புகழுடைய த்ரிசிரன். இதோ! மேகம்போன்ற உருவமும் பருத்து அகன்று அழகியதான வக்ஷஸ்தலமும் அமைந்து ஸர்ப்பராஜ த்வஜம் விளங்கப்பெற்று யுத்தஸங்காஹமுடையவனாகி, தனுஸ்ஸின் நாணைக் காதளவும் இழுத்து, மற்றும் விளையாடலுற்று அதை அசைத்துக் கொண்டு வருகின்றானே, இவன் கும்பனென்னும் ராக்ஷஸன். இதோ, பொன்னாலும் வஜ்ரமணிகளாலும் அலங்கரிக்கப்பெற்றுத் தகதகவென்று ஜ்வலிப்பதும் புகையோடு கூடினதுபோல் புலப்படுவதுமாகிய பரிகத்தை ஏந்திக்கொண்டு வருகின்றானே, இவன் நிகும்பனென்பவன்; ராக்ஷஸ பலத்திற்கு ப்ரதானன்; மிகவும் ஆச்சர்யமான கொடுஞ்செயலுடையவன். இதோ, தனுஸ்ஸு பாணம் கட்கம் இவற்றோடு கூடிப் பதாகைகளால் அலங்கரிக்கப்பெற்று அக்னிபோல் தகதகவென்று ஜ்வலிக்கின்ற ரதத்தின்மேல் ஏறி பயங்கரமான உருவத்துடன் ப்ரகாசிக்கின்றானே,

இவன் நராந்தகனென்பவன்; பர்வத சிகரங்களைக் கொண்டு யுத்தஞ் செய்பவன்; (தன்னோடு நிகராக யுத்தஞ் செய்பவரில்லாமையால் புஜங்களின் தினவு தீரும்படி பர்வத சிகரங்களோடு சண்டை செய்யுந் தன்மையன்.) பலவகைப்பட்டு பயங்கரமான உருவ முடையவைகளும் புலி ஒட்டை யானை ம்ருகம் குதிரை இவற்றின் முகமுடையவைகளும் கண்களைச் சுழற்று கின்றவைகளுமான பூதங்கள் சூழப்பெற்று இதோ வருகின்றானே, இவனே தேவதைகளின் கொழுப்பை யும் அடக்குந்திறமையுடைய ராவணன், நுண்ணிய கம்பிகளிடப்பெற்றுப் பூர்ண சந்த்ரன்போல் திகழ்வ தும் சிறந்ததுமான வெண்கொற்றக்குடை இதோ ரதத்தில் ப்ரகாசிக்கின்றதே, இவனே மஹானுபாவ னாகிய ராக்ஷஸராஜன்; ராக்ஷஸர்கள் சூழப்பெற்று, பூதங்கள் சூழ்ந்த ருத்ரன்போல் ப்ரகாசிக்கின்றனன். இவன் கிரீடந் தரித்துக் குண்டலங்கள் அசையப்பெற்ற முகத்துடன் கூடி ஹிமகிரியும் விந்த்யமலையும் போல் உயர்ந்து பருத்து பயங்கரமான உருவமுடையவன். இந்த ராக்ஷஸாதிபதி, இந்த்ரன் யமன் இவர்களுடைய கர்வத்தையும் அடக்கினவன்; ஸூர்யன்போல் விளங்கு கின்றனன், காண்பாய்' என்றனன், அப்பால் ராமன் பகைவரை அடக்குந் திறமையுடைய விபீஷணனைப் பார்த்து 'ராக்ஷஸாதிபதியான ராவணன், ஆ! என்ன தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்றனன்! எவ்வளவு ப்ரதாப சாலி! ஸூர்யன் கிரணங்களால் கண்ணெடுத்துப் பார்க்க முடியாதிருப்பதுபோல், ராவணன் காந்தியால் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாமல் திகழ்கின்றனன். மிகுதியும் ஒளி விளங்கப்பெற்ற இவனுடைய உருவம் ஸ்பஷ்டமாகத் தோற்றுகின்றது. ராக்ஷஸேந்த்ரனாகிய

இந்த ராவணனுடைய தேஹம் காந்தியுடன் விளங்குவதுபோல், தேவ தானவ வீரர்களில் எவருடைய தேஹமும் இப்படிப்பட்ட காந்தியுடன் விளங்காது. இவனுடைய போர்வீரர்களனைவரும் மஹாதேஜஸ்விகளாயிருக்கின்றனர்; எல்லோரும் பர்வதம்போன்ற உருவமுடையவர்; எல்லோரும் பர்வதங்களையே கொண்டு யுத்தஞ்செய்யத் தகுந்த சக்தியுடையவராகத் தோற்றுகின்றனர்; எல்லோரும் ஜ்வலிக்கின்ற ஆயுதங்களைத் தரித்திருக்கின்றனர். இந்த ராக்ஷஸராஜன் மிக விளக்கமுற்ற பயங்கர பராக்ரமர்களால் சூழப்பட்டு, சிறந்த தேஹம் பொருந்தின கொடிய பூதங்கள் சூழப்பெற்ற யமன்போல் ப்ரகாசிக்கின்றனன். தெய்வாதீனமாய் இந்தப் பாபிஷ்டன் என் கண்ணில்பட்டனன். இப்பொழுது ஸீதையை அபஹரித்து எனக்கு விளைவித்த கோபத்தை இவன்மேல்விட்டு ஆற்றிவிடுகிறேன்' என்றனன். வீர்யம் மிகுந்த ராமன் இங்ஙனஞ் சொல்லி, உடனே லக்ஷ்மணன் பின்றொடரப்பெற்று தனுஸ்ஸை ஏந்திக்கொண்டு மேலானதொரு பாணத்தை அம்பறாத்தூணியினின்று எடுத்து யுத்த ஸந்நாஹத்துடன்நின்றனன். அனந்தரம் மஹாதீரனும் ராக்ஷஸ ராஜனுமாகிய அந்த ராவணன் பலிஷ்டர்களான அந்த ராக்ஷஸர்களைப் பார்த்து 'நீங்கள் சங்கையின்றி உள்வாசற்களிலும் பட்டணத்து வாசற்களிலும் அவற்றின் பக்கங்களிலும் போர்வீரர் வஸிக்கும் பொருட்டு நிர்மிக்கப்பட்ட சாயாக்ருஹங்களிலும் மிகவும் ஸுகமாய்க் காத்துக்கொண்டிருப்பீர்களாக. ஏனென்றால் உங்களுடன் நான் இவ்விடம் வந்திருப்பதைக் கண்டு பட்டணத்தில் போர்வீரர் ஒருவருமில்லாத இந்த ரந்த்ரத்தை ஆலோசித்து, உடனே நமது

பட்டணம் வெல்ல முடியாததாயினும் ஒருவருமில்லாமல் சூன்யமாயிருக்கையால் வானரர்கள் எல்லோரும் சேர்ந்து நிடீலென்று நுழைந்து த்வம்ஸஞ்செய்து நம்மை அவமதிப்பார்கள். (ஆகையால் நீங்கள் பட்டணத்துக்கு உள்ளும் புறமும் பாதுகாத்திருப்பீர்களாக. இங்கு என்னபடுவேனோ என்று நீங்கள் சிறிதும் விசாரப்படவேண்டாம். சங்கையின்றி நீங்கள் போய்ப் பட்டணத்தைக் காப்பீர்களாக)' என்றனன். இங்ஙனம் கூடவந்தவர்களெல்லோரையும் விடைகொடுத்தனுப்புகையில், அந்த ராக்ஷஸர்கள் ராவணனது ஆஜ்ஞையின்படி புறப்பட்டுப் போயினர். அப்பால் ராவணன், மஹாமத்ஸ்யம் பூர்ணமான ஸமுத்ர ப்ரவாஹத்தைக் கலக்குவதுபோல், வானர ஸைன்யமாகிற ஸமுத்ரப்ரவாஹத்தைப் பிளந்தனன். அந்த ராக்ஷஸாதிபதியாகிய ராவணன் ஜ்வலிக்கின்ற தனுஸ்ஸையும் பாணத்தையும் கொண்டு யுத்தத்திற்காக மேல்விழுந்து வருவதைக் கண்டு வானரேச்வரனான ஸுக்ரீவன் பெரியதொரு பர்வத சிகரத்தைப் பிடுங்கி எடுத்துக்கொண்டு அவன்மேல் எதிர்த்தோடினன். ஸுக்ரீவன் பல வ்ருக்ஷங்கள் நிறைந்த தாழ்வரைகளோடு கூடின அந்தப் பர்வத சிகரத்தை எடுத்து ராக்ஷஸாதிபதியின்மேல் வீசியெறிந்தனன். ராவணன், அது தன்மேல் வருவதைக் கண்டு, உடனே பொற்பூணிடப்பெற்ற பாணங்களால் அதைத் துண்டு துண்டாகத் துண்டித்தனன். மிகவும் பெரிய வ்ருக்ஷங்களோடு கூடின தாழ்வரைகள் அமைந்த அந்தப் பர்வதசிகரம் துண்டு துண்டாகித் தரையில் விழுகையில், ராக்ஷஸாதிபதியான ராவணன், ம்ருத்யுவைப்போன்றதும் மஹாஸர்ப்பத்தை நிகர்த்ததுமான

ஓர் பாணத்தை தனுஸ்ஸில் தொடுத்தனன். அந்த ராவணன் கோபாவேசமுற்று, வாயுவைப்போன்ற வேகமுடையதும் பொறிகள் நிறைந்த அக்னிபோல் ப்ரகாசிப்பதும் மஹேந்த்ரனுடைய வஜ்ராயுதம்போல் விரைந்து செல்வதுமாகிய அந்த பாணத்தை எடுத்து ஸுக்ரீவனைக் கொல்லும்பொருட்டு அவன்மேல் எய்தனன். இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போன்ற உருவமுடையதும் கூரிய நுனியுடையதுமாகிய அந்த பாணம் ராவணனால் விடப்பெற்று வேகத்துடன், குமாரன் ப்ரயோகித்த கொடிய சக்தியானது க்ரௌஞ்சபர்வதத்தைப் பிளந்தாற்போல், ஸுக்ரீவனைக் கிட்டி அவனைப் பிளந்தது. வீரனாகிய அந்த ஸுக்ரீவன் பாணத்தினால் பீடிக்கப்பட்டு மதிமயக்கமுற்றுக் கூச்சலிட்டுக் கொண்டு தரையில் வீழ்ந்தனன். அங்ஙனம் ஸுக்ரீவன் யுத்தத்தில் மூர்ச்சித்து பூமியில் விழுந்ததைக் கண்டு, ராக்ஷஸர்களெல்லோரும் ஸிம்ஹநாதஞ் செய்தனர். அதன்பிறகு, சிறந்த கோரைப் பற்களையுடைய கவாக்ஷன் கவயன் ருஷபன் ஜ்யோதிர்முகன் நபன் ஆகிய இவர்கள் சரீரத்தை வளரச்செய்து, பர்வதங்களை எடுத்துக்கொண்டு அந்த ராக்ஷஸராஜன்மேல் எதிர்த்து வந்தனர். அந்த ராக்ஷஸாதிபதியான ராவணன் அவ்வானரர்கள் எறிந்த பர்வதங்களைக் கூரான முனையுடைய பாணஸமூஹங்களால் உடைத்து வீண்செய்து அவ்வளவோடு போகாமல் அவ்வானரோத்தமர்களையும் பொன்னால் இயற்றப்பெற்ற விசித்ரமான பிடியுடைய பாணங்களை நாட்டிப் பிளந்தனன். பயங்கரமான தேஹமுடைய அவ்வானரோத்தமர்கள் ராவண பாணங்களால் பிளக்கப்பட்டு பூமியில் விழுந்தனர். அப்பால் அந்த ராவணன் பயங்கரமான அந்த

வானர ஸைன்யத்தை யெல்லாம் பாணஸமூஹங்களால் மறைத்துவிட்டனன். மஹாவீரர்களும் ப்ரஸித்தி பெற்றவர்களுமாகிய அவ்வானரர்கள் அங்ஙனம் ஹிம்ஸிக்கப்பட்டு ராவணனுடைய வேகத்தைப் பொறுக்க முடியாமல் தரையில் விழுந்து அப்பொழுது தம்மைக் காக்குந் திக்கு மற்றொன்றையும் அருகில் காணாமை யால் மிகுதியும் உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டு மனத்தில் சல்யம் பொற்றினாற்போல் பயத்தினால் ஹிம்ஸிக்கப் பெற்று ராவண பாணங்களால்[1] வருந்தி ரக்ஷிப்பதில் ஸமர்த்தனாகிய ராமனைச் சரணம் அடைந்தனர். [2] அப்பால் மஹானுபாவனும் சிறந்த வில்லாளியுமாகிய அந்த ராமன் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு சீக்ரமாக வானரர்களை ரக்ஷிக்கும்பொருட்டுப் போயினன். அப்பொழுது லக்ஷ்மணன் ராமனிடம்போய்க் கைகளைக் குவித்துக்கொண்டு பரமார்த்தம் அமைந்த வசனத்தை மொழியத்தொடங்கி, 'ப்ரபூ! பூஜ்யனாகிய நீ பரதாரங்களை அபஹரித்த இந்த துர்ப்புத்தியை வதிக்க மிகவும் போதுமானவனே. ஆயினும் இப்படிப்பட்ட

1. இதனால் ஆர்த்தியே சரணாகதிக்கு முக்யமன்றி தேசகால நியதியாவது அதிகாரி நியதியாவது பல நியதியாவது இல்லை யென்று தெரிகிறது.

2. சரணாகதனுடைய கார்யத்தைச் சொல்லி, இங்கு சரண்யனுடைய கார்யத்தைச் சொல்லுகிறார்— 'ததோ மஹாத்மா ஸ தனுர் தனுஷ்மா நாதாய ராமஸ் ஸஹஸா ஜகாம। தம் லக்ஷ்மண: ப்ராஞ்ஜலிரப்யுபேத்ய உவாச வாக்யம் பரமார்த்தயுக்தம்' என்பது மூலம். இங்குச் சொல்லுகிற ப்ரபத்தி ஆர்த்தப்ரபத்தியாகையால் உடனே பலித்தமையை அறிவிக்கும்பொருட்டு (தத:) என்கிறார். ப்ரபத்திபண்ணின உத்தரக்ஷணத்திலேயே யென்கை. (மஹாத்மா) சரணாகதியின் தாரதம்யத்தை அறிந்தவன். (தனுஷ்மாந்) தனுர் யுத்தங்களில் ஸமர்த்தன். (ஸஹஸா) லக்ஷ்மணன் நான் போகிறே

நீசனோடு யுத்தஞ்செய்வது உனக்குத் தகுந்ததன்று. நான் உருமாய்த்து விடுகிறேன். நானும் இவனை வதிக்கப் போதுமானவனே. நானே உன் அனுமதியில்லாமல் போகலாகாதாகையால் ஸ்வாமியாகிய நீ உன் கிங்கரனை எனக்கு அனுமதி கொடுப்பாயாக. உன் அனுமதியில்லாமல், நான் கார்யஞ் செய்வது எனக்கு ஸ்வரூபமாகாது' என்றனன். இப்படி வணக்கத்துடன் மொழிந்த அந்த லக்ஷ்மணனைப் பார்த்து, உண்மையான பராக்ரமமுடைய ராமன் அப்பொழுது ஸந்தோஷத்தின் மிகுதியால் மிகவும் ஒளி விளங்கப் பெற்று (சொன்னபடி நடக்கும் விதேயனொருவன் கார்யத்திற்கு முயற்சி கொள்கையில் தான் பராக்ரமம் வெளியிடுவதை நிறுத்தி) அந்த லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! நீ போவாயாக. அற்பனென்று மனவூக்கமற்றிராமல் யுத்தத்தில் யத்னத்துடனிருப்பாயாக. ஏனெனில், ராவணன் ஓரஸ்த்ரத்தை எடுப்பது போல் அபிநயித்து மற்றோரஸ்த்ரத்தைத் தொடுப்

---

னென்று வருவதற்கு முன்னமே ஆஸ்ரிதாக்ஷணத்திலுள்ள விரைவினால் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு போனனென்கை. அப்படி போயும் லக்ஷ்மணன் தடுத்தானென்கிறபடி. (தம்) ஆர்த்தாக்ஷணத்திலுள்ள த்வரையினால் போகின்ற ராமனை, (லக்ஷ்மண:) ராம கைங்கர்யமாகிற லக்ஷ்மீ விலாஸம் அமைந்த லக்ஷ்மணன், (ப்ராஞ்ஜலி:) தன்னைக் கடந்து போகாதிருக்கும்படி அஞ்ஜலி செய்து விலங்கிட்டாற்போல் தடுக்கிறான். (அப்யுபேத்ய) நாற்புறத்திலும் வந்து. இதனால்—லக்ஷ்மணனுடைய வரவை அறியாதவன்போல் ராமன் நாற்புறத்திலும் பலவாறு சென்றானென்று தெரிகிறது. (பரமார்த்யுக்தம்) வீணபசாரத்தோடு கூடினதன்று. (பரமார்த்யுக்தம்) ஶேஷிவிஷயமான கைங்கர்யம் ஶேஷபூதனுக்குப் பரம ப்ரயோஜனமாகையால் இங்ஙனம் மொழிந்தானென்று தெரிகிறது. கோவிந்தராஜர்.

பதும் ஓரஸ்த்ரத்தைத் தொடுப்பதுபோல் அபிநயித்து மற்றோரஸ்த்ரத்தை விடுவதுமாகி இங்ஙனம் மஹாவீர்யனாகையால் யுத்தத்தில் அற்புதமான பராக்ரமத்தைக் காட்டுவான். இவன் கோபமுற்றவனாயின், மூன்று லோகங்களும் ஒன்றாக எதிர்த்துவரினும், இவனெதிரில் நிற்கமுடியாது. இதற்கு ஸந்தேஹமில்லை. ஆகையால் கண் நோக்கத்துடன் இவன் மனவூக்கமற்றிருப்பது முதலிய ரந்த்ரங்களை (சந்துகளை) ஊக்கத்துடன் பார்த்துக்கொண்டிருக்க வேண்டும். உன்னிடத்திலும் சித்ரங்கள் (ரந்த்ரங்கள்) எவையும் உண்டாகாதபடி பார்த்துக்கொள்வாயாக. சித்ரங்கள் உண்டானால் அவற்றை மறைத்துக்கொள்வாயாக. இங்ஙனம் மனவூக்கத்துடன் தனுஸ்ஸினால் உன்னைப் பாதுகாத்துக்கொள்வாயாக' என்றனன். ராமன் சொன்னது கேட்டு லக்ஷ்மணன் அவனைக் கட்டியணைத்து ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து உடனே யுத்தத்திற்குப் போயினன். யானையின் துதிக்கைகள் போன்ற புஜங்களையுடைய அந்த லக்ஷ்மணன் ஜ்வாலைகள் எழும்பெற்று பயங்கரமாகப் புலப்படுகின்ற தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு, பிளவுண்டு தரையில் வீழ்கின்ற அவ்வானரர்கள் மேல் பாணவர்ஷங்களை அளவில்லாமல் பெய்து உருத்தெரியாதபடி மறைக்கின்ற ராவணனைக் கண்டனன். மஹாதேஜஸ்வியும் வாயுகுமாரனாகிய ஹநுமான் அங்ஙனம் லக்ஷ்மணன் யுத்தத்திற்கு வருவதைக்கண்டு 'ப்ருத்யன் (ஊழியஞ் செய்பவன்) நானிருக்க, அவனுக்கு என் கஷ்டம்?' என்று ராவணனது பாணங்களைத் தடுத்துக்கொண்டு அவன்மேல் எதிர்த்தனன். புத்திமானாகிய ஹநுமான் ராவணனுடைய ரதத்தைக் கிட்டி, தன் வல புஜத்தைத்

தூக்கி ராவணனை பயமுறும்படி அதட்டிக்கொண்டு 'நீ, தேவதைகளாலும் தானவர்களாலும் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் ராக்ஷஸர்களாலும் வதிக்க முடியாதிருக்கும்படி வரம் பெற்றிருக்கிறாயென்பது வாஸ்தவமே; வானரர்களிடத்தில் மாத்ரம் உனக்கு அங்ஙனம் ஆகாமல் பயமே ப்ராப்தமாயிருக்கின்றது. இதோ ஐந்து விரல்களையுடையதும் உன்மேல் தூக்கப் பட்டிருப்பதுமாகிய இந்த என் வலபுஜம் இப்பொழுது உன்னைக் கொன்று உன் தேஹத்தில் வெகுகாலமாயிருக்கின்ற ஜீவனை வெளிப்படுத்தப் போகின்றது; பார்' என்றனன். பயங்கர பராக்ரமனாகிய ராவணன் ஹனுமான் மொழிந்ததைக் கேட்டுக் கோபத்தினால் கண்கள் சிவக்க அவனைப் பார்த்து, 'அடே! வானரா! சங்கையில்லாமல் சீக்ரம் அடிப்பாயாக. ஹனுமான் ராவணனைக் கிட்டி அடித்தானென்கிற நிலைநின்ற கீர்த்தியைப் பெறுவாயாக. அப்பால் நான் உன் பராக்ரமத்தை அறிந்து உன்னை நாசஞ் செய்கிறேன்' என்றனன். வாயு குமாரனாகிய ஹனுமான் ராவணன் மொழிந்ததைக் கேட்டு 'நான் முன்னமே அடி கொடுத்திருக்கின்றனன்; உன் புதல்வனாகிய அக்ஷகுமாரனை நினைத்துக்கொள்வாயாக' என்றனன். ஹனுமான் எடுத்தெறிந்தாற்போல் உரைக்கையில், மஹாதேஜஸ்வியும் மஹா பராக்ரமசாலியும் ராக்ஷஸேஸ்வரனுமாகிய ராவணன் ரோஷமுற்று அவனை மார்பில் உள்ளங்கையால் அறைந்தனன். ஹனுமான் ராவணனுடைய உள்ளங்கையறைக்கு அடிக்கடி நடுக்கமுற்றானன்றி, மிகுந்த தேஜஸ்ஸும் மஹாபுத்தியும் உடையவனாகையால் சிறிதுநேரம் அங்ஙனம் இருந்து, உடனே திடம் உண்டாகப் பெற்று மிகுதியும் கோபாவேசமுற்று,

அந்த ராவணனை உள்ளங்கையால் அறைந்தனன். அப்பால், ராவணன் யுத்தத்தில் ஹநுமானுடைய உள்ளங்கையறையால் பூகம்பத்தில் பர்வதம் நடுங்கு வதுபோல் மிகவும் நடுக்கமுற்றனன். அங்ஙனம் ராவணன் யுத்தத்தில் ஹநுமானுடைய உள்ளங்கை யால் அடிக்கப்பெற்று நடுங்குவதைக் கண்டு, வானரர்க ளும் ரிஷிகளும் ஸித்தர்களும் தேவதைகளும் அஸு ரர்களும் மிகுந்த ஸந்தோஷத்துடன் கோலாஹலஞ் செய்தனர். அனந்தரம் மஹா தேஜஸ்வியாகிய ராவணன் தெளிவுபெற்று ஆஶ்வாஸப்படுத்திக் கொண்டு ஹநுமானைப் பார்த்து, 'வானரா! நல்லது; எனக்கு நீ வீர்யத்தினால் புகழத்தகுந்த சத்ருவாயிருக் கின்றனை, நீ எனக்குத் தகுந்த சத்ருவே. நீ சத்ருவா யினும் உன் வீர்யத்திற்கு நான் ஸந்தோஷித்தேன்' என்றனன். அப்பால் ஹநுமான் 'சீ! என் வீர்யம் பாழாக; எரிந்து போமாக; இதுவும் ஒரு வீர்யமோ? ராவணா! என்னால் அடிக்கப்பட்டும் நீ சாகாமல் உயிருட னிருக்கின்றாயே! இப்படிப்பட்ட என்வீர்யம்சீ! எரிந்து போமாக. துர்ப்புத்தீ! இன்னம் ஒரு தடவை மரத்தாம் இப்பொழுது என்னை அடிப்பாயாக; வெறுமனே உன்னை நீயே புகழ்ந்துகொள்கின்றாயென்? அதன்பிறகு என் முட்டி உன்னை யமலோகத்திற்கு அனுப்பிவிடும்' என்றனன். அப்பால் ஹநுமானுடைய வார்த்தையைக் கேட்டுக் கோபத்தினால் மிகுதியும்ஜ்வலித்தனன். அனந் தரம் வீர்யவானாகிய அந்த ராவணன் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று வலக்கையைக் கெட்டியாக மடக்கிப் பிடிபிடித்துக்கொண்டு வேகத்துடன் ஹநுமா னுடைய மார்பில் அறைந்தனன். அங்ஙனம் அகன்ற தன் மார்பில் அடிக்கப்பெற்ற ஹநுமான் மீளவும் மிக

நடுக்கமுற்றனன். அதிரதனுகிய ராவணன், அப்பொழுது மஹாபலசாலியாகிய ஹனுமான் மூர்ச்சை அடைந்து, மஹாபலனுகையால் அப்பொழுதும் பிறரால் பரிபவிக்க முடியாதிருப்பதைக் கண்டு, அவன் தெளிவு பெறுவானுயின் வருத்தமாமென்று சீக்ரமாக ரதத்தில் ஏறிக்கொண்டு நீலன்மேல் எதிர்த்துப் போயினன். ராக்ஷஸாதிபதியும் பத்துத் தலையனுமான ராவணன் மிகுதியும் ப்ரதாபமுடையவனுகையால் ஸர்ப்பங்கள் போன்று பயங்கரமாகிப் பகைவரது மர்மஸ்தானங்களை மிகவும் பேதிக்கவல்ல பாணங்களைத் தொடுத்து வானர ஸேனுபதியான நீலனை நாற்புறத்திலும் பரிதபிக்கச்செய்தனன். வானர ஸேனுதிபதியான நீலன் அங்ஙனம் பாணஸமூஹங்களால் இளைப்புற்று, ஒருகையால் அவற்றைத் தடுத்துக்கொண்டு மற்றொரு கையால் ஒரு பர்வத சிகரத்தை எடுத்து ராக்ஷஸேஸ்வரன்மேல் போகட்டனன். மஹாதேஜஸ்வியாகிய ஹனுமான் மூர்ச்சை தெளிந்து யுத்த விருப்பத்தினுல் நாற்புறமும் பார்த்து நீலனேடு யுத்தஞ் செய்கின்ற ராவணனைக் கண்டு தன்னிடத்தினின்று தப்பித்துக்கொண்டு போனுனென்னும் ரோஷத்துடன் அந்த ராக்ஷஸேஸ்வரனைப் பார்த்துப் பெரிய மனமுடையவனுகையால் 'மற்றொருவனேடு யுத்தஞ் செய்பவன்மேல் எதிர்ப்பது யுக்தமன்று. ஆகையால் உன்னை விட்டேன்' என்றனன். மஹா தேஜஸ்வியாகிய ராவணனும் நீலன் போகட்ட அந்தப்பர்வதசிகரத்தை மிகவும் கூரான நுனியுடைய ஏழு பாணங்களால் கண்டிக்கையில், அது தூள்தூளாகித் தரையில் விழுந்தது. வீரர்களான பகைவரை வதிக்குந் திறமையுடைய அந்த வானரஸேனுபதி நீலன் தான் போகட்ட அந்தப்

பர்வத சிகரம் துண்டிக்கப்பட்டது கண்டு கோபத்தி னல் ப்ரளயகாலாக்னிபோல் ஜ்வலித்தனன். அப்பொ ழுது அந்த நீலன் யுத்தத்தில், அஶ்வகர்ணம் தவம் ஸாலம் சூதம் ஆகிய நன்கு புஷ்பித்திருக்கிற இந்த வ்ருக்ஷங்களையும் மற்றும் பலவகையான வேறு வ்ருக்ஷங்களையும் ராவணன்மேல் போகட்டனன். ராவணன் அந்த வ்ருக்ஷங்களை யெல்லாம் பாணங்க ளால் கண்டித்து நீலன்மேல் மிகுதியும் பயங்கரமான பாணவர்ஷங்களைப் பெய்தனன். அங்ஙனம், மேகம் மஹா பர்வதத்தின்மேல் மழை பெய்வதுபோல், ராவணன் தன்மேல் பாணவர்ஷங்களைப் பெய்கையில், அந்நீலன் தனது உருவத்தைச் சுருக்கிக்கொண்டு ராவணனது த்வஜத்தின் நுனிமேல் தபீலென்று குதித் தனன். அங்ஙனம் நீலன் தன் த்வஜத்தின் நுனியில் குதித்திருப்பது கண்டு ராவணன் கோபாவேசத்தினல் ஜ்வலித்தனன். நீலனும், ராவணன் ஒன்றும் செய்ய முடியாமல் கோபித்திருப்பது கண்டு த்வஜாக்ரத்தி லிருந்து ஸிம்ஹநாதஞ் செய்தனன். அப்பால் ராவண னுக்குக் குறி ஏற்படாதபடி த்வஜாக்ரத்திலும் (த்வஜத் தின் நுனியிலும்) தனுஸ்ஸின் நுனியிலும் கிரீடத்தின் நுனியிலும் ஸஞ்சரிக்கின்ற நீலனைப் பார்த்து லக்ஷ்மணனும் வேகத்தில் ப்ரஸித்திபெற்ற ஹனுமா னும் ராமனும் வியப்புற்றனர். மஹா தேஜஸ்வியாகிய ராவணனும் நீலனுடைய லாகவத்திற்கு வியப்புற்று அற்புதமாய் விளங்குவதான ஆக்னேயாஸ்த்ரத்தை எடுத்துக்கொண்டனன். அப்பொழுது அந்த வானரர்க ளெல்லோரும் ராவணன் யுத்தத்தில் நீலனுடைய லாகவதத்தினல் தடுமாற்றமுற்றிருப்பதைக் கண்டு ஸந்தோஷிக்க வேண்டிய ஸமயம் நேரிடப்பெற்று,

நீலனைப் பார்த்து இரைச்சலிட்டனர். அப்பொழுது நீலனது லாகவத்தினால் தடுமாற்றமுற்று ஆக்னேயாஸ்த்ரம் ப்ரயோகிக்க வேண்டுமென்று மனத்தில் பரபரப்புற்றிருக்கின்ற ராவணன் வானரர்களும் நீலனும் செய்கிற கோலாஹலத்தினால் சிறிதுநேரம் ஏதுஞ்செய்யத் தோற்றாதிருந்தனன். அப்பால் ராவணன் பாணத்தை எடுத்து ஆக்னேய மந்த்ரத்தால் அபிமந்த்ரித்து த்வஜத்தின் நுனியிலிருக்கின்ற நீலனை உயர உற்றுப்பார்த்தனன். அனந்தரம் மஹா தேஜஸ்வியும் ராக்ஷஸர்களுக்கு ப்ரபுவுமாகிய ராவணன் நீலனைக்குறித்து 'சஞ்சல ஸ்வபாவனே! வானரா! நீ இந்தப் பெரிய மாயையால் மிகுதியும் லாகவம் உண்டாகப்பெற்றிருக்கின்றனை. உனக்கு இப்பொழுது சக்தி உளதாயின் உன் ப்ராணனை ரக்ஷித்துக்கொள்வாயாக. நீ பலவகைப்பட்ட அந்தந்த உருவங்களை லாகவத்தின் மிகுதியால் படைக்கின்றனை. ஆயினும், நான் இப்பொழுது அஸ்த்ர மந்த்ரத்தினால் அபிமந்த்ரித்து ப்ரயோகிக்கின்ற பாணம் நீ ப்ராணன்களைப் பாதுகாக்கும்பொருட்டு இப்படி செய்யினும், உன் ப்ராணன்களை எடுத்துக்கொண்டு போம்' என்றனன். மஹா பாஹுவாகிய ராக்ஷஸேஸ்வரன் ராவணன் இங்ஙனஞ் சொல்லி ஆக்னேயாஸ்த்ர மந்த்ரத்தினால் பாணத்தை அபிமந்த்ரித்து வில்லில் தொடுத்து வானரஸேனாபதியான நீலன் மேல் ப்ரயோகித்தனன். ஆக்னேயாஸ்த்ர மந்த்ரத்தினால் மந்திரிக்கப்பட்ட அந்த பாணம் மார்பில் படப்பெற்ற நீலன் அதன் ஜ்வாலைகளால் கொளுத்தப்பட்டுத் திடீலென்று த்வஜாக்ரத்தினின்று தரையில் வீழ்ந்தனன். அந்த நீலன், தந்தையாகிய அக்னிக்குத் தன்னிடத்திலுள்ள தயையின் பெருமையாலும், தன்னுடைய

தேஜஸ்வியாலும், முழந்தாள்களை ஊன்றிக்கொண்டு தரையில் விழுந்தானன்றி ப்ராணன்களை இழக்கவில்லை. ராவணன், நீலன் மூர்ச்சித்ததைக் கண்டு, மேலும் யுத்தத்தில் உத்ஸாஹமுற்று மேகம்போல் சப்திக்கின்ற ரதத்திலேறிக்கொண்டே சென்று லக்ஷ்மணனை எதிர்த்தனன். அந்த ராவணன் லக்ஷ்மணனைக் கிட்டி இடையில் தடுக்கவந்த ஸுக்ரீவாதிகளைத் தடுத்து யுத்த பூமியினிடையில் விளக்கமுற்று பூமி அதிரும்படி தனுஸ்ஸின் நாணை இழுத்துப் பெருங்கோஷம் உண்டாகச் செய்தனன். மஹாபலனான லக்ஷ்மணன், அங்ஙனம் பேரளவுடைய தனுஸ்ஸை இழுத்து த்வனிக்கச்செய்கின்ற ராவணனைக்கண்டு 'ராக்ஷஸேந்த்ரனே! நீ வானரர்களோடு யுத்தஞ் செய்யத் தகுந்தவனல்லை. என்மேல் வருவாயாக' என்றனன். ராக்ஷஸராஜனான ராவணன் மிகுந்த வீரத்வனியுடைய லக்ஷ்மண வசனத்தையும் பயங்கரமான அவனது நாண் சப்தத்தையும் கேட்டு, அங்ஙனம் யுத்த ஸந்நாஹத்துடனிருக்கின்ற லக்ஷ்மணனைக் கிட்டிக் கோபத்துடன் 'லக்ஷ்மணா! நீ நாசம் அடைய விரும்புகிறாயாகையால் விபரீதபுத்தி உண்டாகப்பெற்று என் பாக்யவசத்தினால் என் கண்களில் பட்டனை. நீ என் பாணஸமூஹங்களால் பீடிக்கப்பட்டு இந்த க்ஷணமே யமபுரிக்குப் போவாய்' என்றனன். அங்ஙனம் கர்ஜித்துக்கொண்டு உயர்ந்து வெளுத்த கோரைப்பற்களின் நுனிகளையுடைய ராவணனை அலக்ஷ்யஞ் செய்து, லக்ஷ்மணன், 'ராக்ஷஸராஜனே! மிகுந்த ப்ரபாவமுடையவர் உன்னைப்போல் கர்ஜிக்கமாட்டார்கள். நீ மஹா பாபிஷ்டனாகையால் இங்ஙனம் உன்னை நீயே புகழ்கின்றனை. ராக்ஷஸேந்த்ரனே! ஜனஸஞ்சாரமில்லாத ப்ரதேசத்தில் யதிவேஷத்

துடன் வந்து ஸீதையை அபஹரித்துக்கொண்டுவந்த உன் பலத்தையும் பகைவரை பயப்படுத்துவதான உன் ப்ரதாபத்தையும் உன் பராக்ரமத்தையும் நான் நன்ருக அறிவேன். நான் தநுஸ்ஸையும் பாணத்தையும் ஏந்தி வந்திருக்கின்றனன். யுத்தத்திற்கு வருவாயாக. வீணுக ஆத்மஸ்துதி செய்வதனுல் பயன் யாது?' என்றனன். லக்ஷ்மணன் இங்ஙனம் சொல்லுகையில், ராவணன் கோபித்து, அவன்மேல் திடமான பிடியுடைய ஏழு பாணங்களை ப்ரயோகித்தனன். லக்ஷ்மணன் பொற்பிடியுடையவைகளும் நுனி கூராயிருக்கப்பெற்றவைகளுமான பாணங்களால் அந்த பாணங்களேழையுங் கண்டித்தனன். அந்த பாணங்கள் உடல் பிளப்புண்ட ஸர்ப்பங்கள்போல், விரைவில் பிளக்கப்பட்டுத் தரையில் விழுவதைக் கண்டு லங்கேஶ்வரனுன ராவணன் கோபத்திற்காளாகி மற்றும் கூரான வேறு பாணங்களை ப்ரயோகித்தனன். லக்ஷ்மணனும் பாணஸமூஹங்களை வில்லில் தொடுத்துக் கொடிய பாணவர்ஷத்தைப் பெய்தனன். மற்றும் அம்பட்டன் கத்திபோன்ற உருவம் பொருந்தின பாணங்களையும் அர்த்த சந்த்ராகாரமுடைய பாணங்களையும் மேலான கர்ணி பாணங்களையும் இரண்டு பக்கத்திலுங் கூருடைய பல்லபாணங்களையும் ப்ரயோகித்து ராவணன் எய்த பாணங்களைக் கண்டித்துக் கொண்டிருந்தானன்றி அவற்றிற்குச் சிறிதும் கலங்கவில்லை. ராக்ஷஸ ராஜனுகிய அந்த ராவணன், தான் ப்ரயோகித்த அந்த பாணங்களெல்லாவற்றையும் லக்ஷ்மணன் கண்டித்து வீணுக்குவதைக் கண்டு லக்ஷ்மணனுடைய பாணப்ரயோக லாகவத்திற்கு வியப்புற்று மீளவும் தீக்ஷ்ணமான பாணங்களை ப்ரயோகித்தனன். அந்த லக்ஷ்மணன் ராக்ஷஸராஜனை

வதிக்கும்பொருட்டுச் சீக்ரமாகப் பாயுந்தன்மையுடைய வைகளும் கூரிய நுனியுடையவைகளும் இந்த்ரனுடைய வஜ்ராயுதத்தையும் இடியையும் ஜிகர்த்த வேகமுடைய வைகளும் அக்னிபோல் ப்ரகாசிப்பவைகளுமான பாணங்களை வேகமாக தனுஸ்ஸில் தொடுத்து விட்டனன். ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணன் அந்த பாணங்களை யெல்லாங் கண்டித்தனன். அங்ஙனம் அவற்றைக் கண்டித்து, அப்பால் தனக்கு ப்ரஹ்மதேவன் கொடுத்ததும் ப்ரளய காலாக்னிபோல் ப்ரகாசிப்பதுமாகிய ஓர் பாணத்தை லக்ஷ்மணனுடைய நெற்றியில் ப்ரயோகித்தனன். அந்த லக்ஷ்மணன் ராவண பாணத்தினால் பீடிக்கப்பட்டு தனுஸ்ஸைத் தளர்ச்சியாகப் பிடித்துக் கொண்டு நடுங்கி மூர்ச்சித்து மீளவும் மிக வருத்தத்துடன் ப்ரஜ்ஞை தெளியப்பெற்று ராவணனுடைய சரபத்தைக் கண்டித்தனன். அப்பொழுது லக்ஷ்மணன், அங்ஙனம் தனுஸ்ஸு துண்டிக்கப்பெற்ற ராவணனைக் கூரான நுனியுடைய மூன்று பாணங்களால் அடித்தனன். அந்த ராக்ஷஸ ராஜன் அந்த பாணங்களால் பீடிக்கப்பட்டு நடுக்கமுற்று மூர்ச்சித்து மிகவருத்தத்துடன் மீளவும் ப்ரஜ்ஞை தெளியப்பெற்றனன். மிக வல்லவனும் தேவ சத்ருவுமாகிய அந்த ராவணன் யுத்தரங்கத்தில் தனுஸ்ஸு ஒடிந்து பாணங்களால் அடிக்கப்பட்டு மேதஸ்ஸுக்களால் உடம்பு நனையப்பெற்று ரக்தங்களால் நிரம்பவும் அபிஷேகஞ் செய்யப்பெற்றவன்போல் ஈரமாகி, முன்பு தனக்கு ப்ரஹ்மதேவன் கொடுத்த சக்தியை எடுத்துக்கொண்டனன். ராக்ஷஸ லோகத்திற்கு நாதனாகிய அந்த ராவணன் புகையில்லாத அக்னிபோல் ஜ்வலிப்பதும் வானர ஸைன்யங்களுக்கு பயம் விளைப்பதுமாகிய அந்த

சக்தியை லக்ஷ்மணன்மேல் விரைவாக ப்ரயோகித்த னன். லக்ஷ்மணன் அந்த சக்தி தன்மேல் விழ வரு வதைக் கண்டு, நெய்யால் ஹோமஞ் செய்யப்பட்டு வளர்ந்து எரிகின்ற அக்னியை நிகர்த்த உக்ரமான பாணங்களால் அதை அடித்தனன். அந்த சக்தி அங்ஙனம் அடிக்கப்பட்டும் வேகம் குறையாமல் லக்ஷ் மணனது விசாலமான வக்ஷஸ்தலத்தில் வந்து விழுந் தது. மஹா சக்தியுடையவனும் ரகுகுல வீரனுமாகிய அந்த லக்ஷ்மணன் அந்த சக்தியால் அடிக்கப்பட்டு அடிக்கடி பரிதபித்தனன். பிறகு லக்ஷ்மணன் மூர்ச்சித் திருப்பதுகண்டு ராவணன் திடீலென்று வந்து புஜங்க ளால் வலிமையுடன் அவனை எடுத்துக்கொண்டு போகப் பார்த்தனன். [1] ஹிமவத் பர்வதத்தையாவது மந்த்ர பர்வதத்தையாவது மேருபர்வதத்தையாவது தேவ

---

[1] இங்கு 'ஹிமவாந் மந்த்ரோ மேருஸ் த்ரைலோக்யம்வா ஸஹா மரை:। ஸக்யம் புஜாப்யா முத்தர்த்தும் ந ஸங்க்யே பரதாநுஜ:' என்பது மூலம். லக்ஷ்மணனை புஜங்களால் எடுக்க முயன்ற ராவ ணனை ருஷி பரிஹஸிக்கிறார். (ஹிமவாந்) 'தைர்யேண ஹிமவாநிவ' என்று ஸமஸ்த தீரர்களுக்கும் உபமானமாகிய ஹிமவத்பர்வதத்தை யுங்கூட புஜங்களால் எடுக்க ராவணனுக்கு ஸாத்யமாம். அதன் ஏகதேசமாகிய கைலாஸத்தை முன் அசைக்கினனல்லவா. (மந்த்ர:) ஸமஸ்த ஸமுத்ரங்களிலும் ப்ரதானமாகி மிகுதியும் ஆழ்ந்திருக்கும் க்ஷீரஸமுத்ரத்தையும் கலக்கின மந்த்ர பர்வதத்தையும் புஜங்களால் எடுக்க ஸாத்யமாம். ஏனென்னில்—அது, தான் ஜயித்த தேவதைகளாலேயே அம்ருதங்கடைந்த ஸமயத்தில் சிதிலஞ் செய்யப்பெற்றதல்லவா? தன்னிடம் தோல்வியடைந்த தேவர்க ளில் ஒருவனாகிய வாயுவினால் பறிக்கப்பட்ட சிகரத்தையுடைய தாகையால் ஸகல குலபர்வதங்களிலும் சிறந்த மேருபர்வதத்தையும் இவன் அங்ஙனஞ் செய்ய ஸாத்யமே. ஐம்பது கோடி விஸ்தீர்ண முடைய மூன்று லோகங்களையும் அங்ஙனஞ் செய்ய ஸாத்யமே.



2858. லக்ஷ்மணன் சக்தியாலடியுண்டு மூர்ச்சித்தல்.

தைகளோடு கூடின மூன்று லோகங்களையுமாவது கைகளால் எடுக்க முடியுமேயன்றி, யுத்தத்தில் பரதனுக்குத் தம்பியாகிய லக்ஷ்மணனை மாத்ரம் எடுக்க முடியாது. [1] லக்ஷ்மணன், ப்ரஹ்மாவினுடைய தான அந்த சக்தி மார்பில் பட்டவுடனே சிந்திக்க முடியாததான விஷ்ணு தேவனுடைய அம்சமாய்

---

அதில் ஒரு பாகமான பூமியை ஹிரண்யாக்ஷன் கக்ஷத்தில் அடக்கிக் கொண்டானுகையால் இதுவும் அவனுக்கு ஒரு பொருளன்று. (ஸஹாமரா:) அவற்றிற்கு நிர்வாஹகரான தேவதைகளோடுங் கூட அவற்றை அங்ஙனஞ் செய்ய ஸாத்யமே; அந்த தேவதைக ளுக்கு அதிபதியான இந்த்ரன் தன் புதல்வனுல் தோல்வியடைந்தவ னல்லவா? (ஹாதாநுஜ:) (ராமாநுஜ அநுஜ:) ராமனுடைய நான்கில் ஒரு பாகமென்கை. ராமனுடைய நான்கிலொரு பாகத்தையே எடுக்க வல்லமையற்றவன், ராமனேடு யுத்தஞ்செய்ய எங்ஙனம் வல்லவனுவானென்கை. (ஹிமவாஞ் யாம்) ஹிமவத் பர்வதாதிகளை இரண்டு கைகளாலேயே எடுக்கமுடியும். இவனை இருபது கைகளா லுங்கூட எடுக்க ஸாத்யமன்றென்று தோற்றுகிறது. 'ஶத்ருணாம ப்ரகம்ப்யோऽபி' என்று மேலிற் சொல்லுகையால் பரிவாரங்க ளோடு கூடின ராவணனுக்குங்கூட அசைக்க முடியாதென்பது ஸித்தம். மேலில் ஹநுமான் எடுத்ததாகச் சொல்லியிருக்கிறதே, அதெப்படி? என்னில்— (ஸங்யே) யுத்தத்தில் முடியாதென்கை. துஷ்டமனமுடையவனுக்கு முடியாதென்று பொருள். ஆகையால் ஹநுமான் எடுத்துக்கொண்டதற்குக் காரணம் 'ஸௌஹ்ருத்த்வேந' என்று நன்மனமுடையவனுயிருக்கையே யென்று மேலில் சொல்லப்பட்டிருக்கிறது. இதனுல்—யுத்தத்தில் விழுந்த லக்ஷ்மண னுடைய மேனி ஹிமவத்பர்வதாதிகளைக் காட்டிலும் பளுவுடைய தென்று சொல்லப்பட்டது.

1. இங்ஙனம் பளுவாயிருக்கைக்குக் காரணம் யாதெனில்— விஷ்ணுவின் அம்ஶமாகையேயென்று தெரிகிறது. விஷ்ணுவின் அம்சமாகிய தன் ஸ்வரூபம் இயற்கையாகவே பளுவாயிற்றென்று கருத்து. அப்படிப்பட்ட தன் ஸ்வரூபத்தை நினைப்பது தவிர வேறு

விளங்குந் தன் ஸ்வரூபத்தை நினைத்துக்கொண்டனன். அனந்தரம் [1] தேவசத்ருவாகிய ராவணன், மானிட

---

வ்யாபாரமொன்றுஞ் செய்யாமையால் தன் குருத்வம் ஸ்வாபாவிகமென்றே தெரிகிறது. வெறும் நினைவினால் புதிதான குருத்வம் உண்டாகாதல்லவா? தன்னுடைய அம்சத்தை நினைப்பதனால் லக்ஷ்மணன் தன் சரீரத்திற்குப் பளுவை விளைத்துக்கொண்டானென்னில்—பதத்தினாலாவது வாக்யத்தினாலாவது அத்தகைய பொருள் ஏற்படாமையால் அங்ஙனஞ் சொல்லலாகாது. தன் ஸ்வரூபத்தை நினைப்பது பளுவுக்குக் காரணமென்பதற்கு ப்ராமாணமும் இல்லை. அன்றியும், ஆபத்தை நீக்கும்பொருட்டுத் தன் மூல காரணமான விஷ்ணு பகவானை நினைத்தானென்னில்—தான் விஷ்ணு ஸ்வரூபனாகையால் தன்னைத் தவிர ஆபத்தைப் போக்குகிறவன் மற்றொருவன் இல்லையாகையால் இதுவும் பொருந்தாது. ஆகையால் நிரூபிக்க முடியாத வஸ்துவின் இயற்கையாலேயே பக்தர்களுக்கு எடுக்கமுடியும்படி லகுவாயிருத்தலும் அபக்தர்களுக்கு எடுக்க முடியாதபடி குருவாயிருத்தலும் உண்டாகின்றன. இதைப்பற்றியே 'அசிந்த்யம்' (சிந்திக்க முடியாதது) என்று சொல்லப்பட்டது.

1. இங்கும் வஸ்து ஸ்வபாவத்தைப்பற்றியே அசைக்கமுடியாமை உண்டாயிற்றென்று தெரிகிறது. விஷ்ணு ஸ்வரூபம் அவயவமில்லாமல் அகண்டமாயிருப்பதாகையால் அதில் அம்சம் உண்டாவதெப்படி என்னில்—இங்கு ஸ்வரூபத்தினால் அம்சமென்று சொல்லுகிறதன்று. குணங்களின் தோற்றத்திலுள்ள தாரதம்யத்தைப்பற்றி அம்சமென்கிறது. 'ப்ராணேஷ் தைவ் ஸிஸ்ருக்ஷு தேவதை: ப்ரயமதாமூர்த்திஸ்தவ ஸமேஹ ததஸ் திஸ்ரஸ் தேஷாம்த்ரியுகயுகலேர்ஹி த்ரிவிதா: வ்யவஸ்யா யாசைஷா நநுவாத ஸாவிஷ்கரு திவஸாத் ஹவாந் ஸர்வத்ரைவத் வமணிதமஹா மங்கலகுணா:' என்று பெரியோர்களின் வசனத்தின்படி குணங்களின் தோற்றத்திலுள்ள ஏற்றக்குறைவுகளைப் பற்றியே அம்சமென்கிறதென்று தெரிகிறது. இங்கு மனுஷ்ய ரூபமாவது மனுஷ்யனுடைய உருவம் போன்ற உருவம்.

உருவந்தரித்து தானவர்களின் கர்வத்தை அடக்குவ தான விஷ்ணுவின் அம்சமாகிய லக்ஷ்மணனை இரண்டு கைகளாலும் பிடித்து இருக்கியும் அவனை எடுத்துக் கொண்டு போக வல்லனாகவில்லை. அனந்தரம் வாயு குமாரனாகிய ஹனுமான் கோபாவேசமுற்று ராவணன் மேல் எதிர்த்து வஜ்ரம்போன்ற முட்டியால் அவ னுடைய மார்பில் அடித்தனன். அந்த முட்டியின் அடிக்கு, ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் முழந்தாள் களை ஊன்றிக்கொண்டு ரதத்தின் இடையில் வீழ்ந்து மிகுதியும் நடுக்கமுற்று மற்றும் படுத்தனன்; மற்றும் அவன் வாய் கண் காது ஆகிய இவற்றினின்று அள வின்றி ரக்தத்தைக் கக்கினன். அவன் பலவாறு புரண்டு சேஷ்டைகள் குறைந்து ரக்தத்தினிடையில் ப்ரஜ்ஞையின்றி மூர்ச்சித்து நிலைநிற்காமல் தடுமாற்ற முற்றிருந்தனன். பயங்கர பராக்ரமனாகிய ராவணன் யுத்தத்தில் மூர்ச்சித்திருப்பது கண்டு, வானரர்களும் ரிஷிகளும் தேவேந்த்ரன் முதலிய தேவதைகளும் ஸந்தோஷத்தினால் பேராரவாரஞ் செய்தனர். மஹா தேஜஸ்வியாகிய ஹனுமானும், ராவணனால் அடிக்கப் பட்டு மூர்ச்சித்திருக்கிற அந்த லக்ஷ்மணனைக் கைக ளால் எடுத்துக்கொண்டு ராமனது ஸமீபத்திற்குக் கொண்டு வந்தனன். [1] அந்த லக்ஷ்மணன் ராவணன்

---

1. முன்பு ஹிமவத் பர்வதம் முதலியவற்றைக் காட்டிலும் பளுவாகையால் லக்ஷ்மணன் அசைக்க முடியாதவனென்று சொல் லிற்று, இப்பொழுது, லக்ஷ்மணனை ஒரு குரங்கு ராமனிடம் கொண்டுபோனது எப்படி? என்னில் சொல்லுகிறார்— 'வாயுஸூ நோஸ்ஸுஹ்ருத்த்வேந பக்த்யா பரமயாச ஸ: ஶத்ரூணாமப்ரகம் ப்யோஉபிலகு:த்வமகமத்கபே:'. லக்ஷ்மணன் எடுக்கும்படி லேசா யிருந்து அனுக்ரஹஞ் செய்தற்கு நன்மனமுடைத்தாயிருக்கையே

முதலிய சத்ருக்களுக்கு அசைக்கவுங்கூட முடியாதவ னாயினும், ஹநுமான் அநுகூலமான ஹ்ருதயமுடைய வனும் மிகுந்த பக்தனுமாகையால் அவனுக்கு லேசா யிருந்தனன். அப்பால் அந்த சக்தியானது யுத்தத்தில் ஜயிக்கமுடியாத அந்த லக்ஷ்மணனை விட்டுத் திரும்பி அந்த ராவணனுடைய ரதத்தில் தனக்கு எப்பொழுது முள்ள இடத்திற்குப் போய்ச் சேர்ந்தது. பகைவரை உருமாய்க்கவல்ல [1] லக்ஷ்மணனும் விரோதிகளுக்கு எதிர்த்தட்டாயிருக்கிற ஸ்வபாவத்தையுடைய விஷ்ணு வின் அம்சமாகி நினைக்க முடியாததுமான தன் ஸ்வ

---

போதம், மிகுந்த பக்தியும் உளதாயின் சொல்லவேண்டுமோ? அது மிகையே. அந்த லக்ஷ்மணன் ராவணனுக்கும் அவனுடைய பரிவாரங்களுக்கும் அசைக்க முடியாதவனாயினும் ஹநுமானுக்கு லேசாயிருந்தானென்கையால், இந்த லகுத்வம் (லேசாயிருக்கை) புத்திபூர்வமாக உண்டாயிற்றென்று சொல்லப்பட்டது. சத்ருக்க ளுக்கு அணுகமுடியாதிருத்தலும் மித்ரர்களுக்கு அணுகும்படி யிருத்தலும் லக்ஷ்மணனுக்கு ஸ்வரூபஸித்தங்களேயென்றுக்ருத்து. லக்ஷ்மணன் மூர்ச்சை யடைந்திருப்பினும் மித்ரனுக்கு லேசா யிருக்கவேண்டுமென்னும் தெளிவும் சத்ருக்களுக்கு பளுவா யிருக்குஞ் சக்தியும் மாறாதிருக்கையால் ஆங்காங்கு ராமலக்ஷ்மணர் கள் அஜ்ஞானத்தையும் அசக்தியையும் தோற்றுவிக்கிற வசனங்க ளைப் பேசுவது மனுஷ்யபாவனையை நிர்வஹிக்கும்பொருட்டென் றுணர்க.

1. இங்கு ராவணன் ப்ரயோகித்த சக்தி விட்டுப்போன தற்கும் வ்ரணங்கள் ஆறுவதற்கும் காரணம்—'விஷ்ணோர்ஹா மமீமாம்ஸ்ய மாத்மாநம் ப்ரத்யநுஸ்மரந்' என்ற மூலத்தின்படி விரோதிப்ரத்யனீக ஸ்வபாவனான விஷ்ணுவின் அம்சமா யிருக்கையே. 'அநுஸ்மரந்' என்கையால் வெறுமனே நினைத்தா னன்றி வேறுஸாதனுனுஷ்டானமொன்றும் செய்யவில்லையென்று சொல்லப்பட்டது.

ரூபத்தை நினைத்தமையால் மூர்ச்சை தெளிந்து வ்ரணங்களெல்லாம் ஆறப்பெற்றனன். பிறகு மஹா தேஜஸ்வியாகிய ராவணன் மூர்ச்சை தெளிந்து கூரான பாணங்களையும் பெரிய தனுஸ்ஸையும் எடுத்துக் கொண்டனன். ராமன், யுத்தத்தில் மஹா வீரர்களான பலரும் அடியுண்டு பயந்து ஓடிப்போக முயன்றாற் போலிருக்கிற வானர ஸைன்யத்தைக் கண்டு, தான் ராவணன்மேல் எதிர்த்துப் போயினன். அப்பால் ஹநுமான் ராமனிடம் வந்து 'விஷ்ணுதேவன் பலிஷ்டனாகிய கருத்மான்மேல் ஆரோஹிப்பதுபோல், நீயும் என்மேல் ஆரோஹித்து மனவூக்கமுற்று ராக்ஷஸனைத் தண்டிக்கத் தகும்' என்றனன். ராமனும், ஹநுமான் மொழிந்த வார்த்தையைக் கேட்டு, விஷ்ணு மஹா பலமுடைய கருத்மான்மேல் ஆரோஹிப்பதுபோல் மனவூக்கத்துடன் பலிஷ்டனும் மஹாசூரனும் மஹாகபியுமாகிய ஹநுமான்மேல் ஆரோஹித்தனன். ராமன் அங்ஙனம் ஆரோஹித்து யுத்தபூமியில் ரதத்தில் உட்கார்ந்திருக்கின்ற ராவணனைக் கண்டனன். மஹா தேஜஸ்வியாகிய ராமன், அந்த ராவணனைப் பார்த்துக் கோபாவேசமுற்று தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு, விஷ்ணு பலியின்மேல் எதிர்ப்பதுபோல் ஆக்ரஹத்துடன் அவ்வரக்கன்மேல் எதிர்த்தனன். மற்றும், வஜ்ர த்வனிபோல் பேரொலி யுண்டாகும்படி வில்நாணை ஒலிப்பித்தனன். அப்பால் அந்த ராகவன், கம்பீரமான வாக்யத்துடன் ராக்ஷஸேஸ்வரனான ராவணனைக் கண்டு, 'நில் நில், அடா! ராக்ஷஸப்புலியே! எனக்கு இவ்வளவு அப்ரியத்தைச் செய்து எங்குப்போய் என்னிடத்தினின்று தப்பித்துக்கொள்ளப் போகின்றனை! நீ, தேவேந்த்ரன் யமன் ஸூர்யன் ப்ரஹ்ம

தேவன் அக்னி சங்கரன் ஆகிய இவர்களில் எவரிடம் போயினும், அல்லது பத்துத் திசைகளைப்பற்றி ஓடினும், இப்பொழுது என் கண்முன் புலப்பட்ட பின்பு, இனித் தப்பித்துக்கொள்ள வல்லனல்லை. ரக்ஷோகணாதிபதி! நீ இப்பொழுது எவனைச் சக்தியால் அடித்தனையோ; எவன் அந்த அடிக்கு வருத்தமுற்றாற்போல் நடனஞ் செய்ய விரும்பி விரைவில் வருத்த முற்றனனோ; அவனே, இப்பொழுது உனக்கு வருத்தம் விளைக்க விரும்பி உனக்கும் உன் புத்ர கலத்ராதிக ளுக்கும் ம்ருத்யுவாகி இதோ சீக்ரத்திலேயே வரப் போகின்றனன். லக்ஷ்மணனை அடித்தோமென்று கர்வப்படாதே. இதோ உன்னெதிரில் இருக்கிற இவன், தெரியுமா! அற்புதமான உருவமுடையவர்களும் ஜனஸ்தானவாஸிகளும் சிறந்த ஆயுதங்களை எந்தின வர்களுமான பதினாலாயிரம் ராக்ஷஸர்களை ஒருவனே உருமாய்த்தவனல்லவா!' என்றனன். ராமன் சொன்ன தைக்கேட்டு, ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணன், முன்பு தன்னை அடித்தது மாத்ரமேயன்றி யுத்தத்தில் ராம னுக்கு வாஹனமாயிருப்பவனும் மஹாவீர்யனும் வாயுபுத்ரனுமாகிய ஹனுமானிடத்தில் மிகுதியும் கோபாவேசமுற்று ப்ரளயகாலாக்னி ஜ்வாலைகள் போன்ற கூரிய பாணங்களை அவன்மேல் ப்ரயோகித் தனன். ஹனுமான் யுத்தத்தில் ராவணனால் அடிக்கப் பட்டும் அவன் இயற்கையாகவே மிகுந்த தேஜஸ் ஸுடையவனாகையால் அவன் தேஜஸ்ஸு இன்னம் அதிகமாயிற்றேயன்றிச் சிறிதும் குறையவில்லை. அப்பால் மஹா தேஜஸ்வியாகிய ராமன், வானரஸிம்ஹ னாகிய ஹனுமான் ராவணனால் புண்படுத்தப்பட்டது கண்டு கோபாவேசமுற்றனன். அதன்பிறகு ராகவன்

அந்த ராவணனுடைய ரதத்தை அடிக்கடி அனுகிச் சக்ரங்களோடும் குதிரைகளோடும் த்வஜங்களோடும் குடையோடும் பெரிய பதாகைகளோடும் ஸாரதியோடும் வஜ்ரம் சூலம் கட்கம் முதலிய ஆயுதங்களோடும் கூட, அழகான பிடியுடைய பாணங்களை விடுத்துக் கண்டித்தனன். அனந்தரம் மிகுந்த வீர்யமுடைய தேவேந்த்ரன் வஜ்ராயுதத்தினுல் மேருபர்வதத்தை அடிப்பதுபோல், ராமன், வஜ்ரத்தையும் இடியையும் நிகர்த்த பாணத்தினுல் அகன்று பருத்து அழகிய உருவத்துடன் விளங்குகின்ற ராவணனுடைய வக்ஷஸ்தலத்தில் பலமுள்ளவளவும் அடித்தனன். எவன் முன்பு வஜ்ராயுதத்தின் அடிபடினும் இடிவிழினும் கலக்கமுறுதிருந்தனனே, மற்றும், சலிக்கவுமில்லையோ, அன்றியும் ராஜத்தனம் சிறிதுங் குறையப் பெருதிருந்தனனே; அப்படிப்பட்ட ராவணன் ராமபாணத்தினுல் அடியுண்டு அந்த ஹிம்ஸையைப் பொறுக்க முடியாமல் மிகுதியும் வருந்தி நடுநடுக்கமுற்றனன். வீரனுயிருந்தும் கையிலிருக்கின்ற தனுஸ்ஸையும் விட்டனன். கம்பீர மனமுடையவனுகையால் தயாநிதியாகிய ராமன், அந்த ராவணன் மூர்ச்சித்திருப்பது கண்டு உடனே விளங்குகின்ற ஓர் அர்த்த சந்த்ரபாணத்தை எடுத்து அதனுல் ஸூர்யன்போல் ஜ்வலிப்பதாகிய அந்த ராக்ஷஸாதிபதியின் கிரீட ஜாலத்தைக் கண்டித்து மானபங்கஞ் செய்தனன். யுத்தத்தில் அங்ஙனம் தனுஸ்ஸைக் கீழே போகட்டுக் கிரீடவரிசைகளும் கண்டிக்கப்பெற்று விஷமில்லாத ஸர்ப்பம்போலவும் ஜ்வாலையில்லாத அக்னிபோலவும் ஒளியில்லாத ஸூர்யன் போலவும் ஒளியற்றிருக்கிற

[1] ராக்ஷஸ ராஜனைப் பார்த்து 'நீ மிகவும் பயங்கரமான கார்யத்தைச் செய்தனை. மற்றும் என் பக்கத்திலுள்ள மேலான பல வீரர்களையும் அடித்தனை. ஆகையால் மிகவும் இளைப்புற்றிருக்கிறுயென்று நிச்சயித்து இப்பொழுது பாணங்களால் அடித்து உன்னை ம்ருத்யுவினிடம் அனுப்பாமல் விட்டேன். ராக்ஷஸ ராஜனே! நீ யுத்தஞ் செய்து வருத்தமுற்றிருக்கின்றனை. நான் அனுமதி கொடுக்கிறேன்; போவாயாக. லங்கைக்குப் போய்ச் சிறிது இளைப்பாறி மீளவும் ரதத்தின்மேல் ஏறி வில்லை ஏந்திப் புறப்பட்டு வருவாயாக. நீ மறுபடியும் ரதத்திலிருந்து தனுஸ்ஸை ஏந்தியிருக்கும்பொழுது என் பலத்தைக் காட்டுகிறேன்; காண்பாய்' என்றனன். அங்ஙனம் விரைவில் வில்லுமுறிந்து ஸாரதியும் குதிரைகளும் பாழாகித் தானும் பாணங்களால் அடியுண்டு வருந்திப் பெரிய கிரீடமும் கண்டிக்கப்பெறுகையால் ராவணன் கர்வம் தொலையப் பெற்று ஸந்தோஷத்தை இழந்து, ராமன் சொன்னதைக் கேட்டு வெட்கமுற்று விரைவாக லங்காபுரியுள் ப்ரவேசித்தனன். மஹாபலனும் தேவதானவ சத்ருவும் ராக்ஷஸேந்த்ரனுமாகிய ராவணன் லங்கைக்குப் போனபின்பு, ராமன் தானும் லக்ஷ்மணனும் சேர்ந்து

---

1 ராவணன் வில்லைப் பிடித்துத் தனக்குத தானே ரக்ஷகனுயிருந்தான். பின்பு வில்லைத் துறந்து தன்னைத் தானே ரக்ஷித்துக் கொள்ளும் ப்ரயத்னத்தைத் துறந்தாலுகையால் ராமனுக்கே ரக்ஷிக்கத் தகுந்தவனுயினன். இங்ஙனம் ராமன் வேறு ரக்ஷகனில்லாத ராவணனைப் பார்த்து, தயை உண்டாகப்பெற்று ப்ராணன்களைப் போக்காமல் கேவலம் மானபங்கம் மாத்ரஞ் செய்தனன். இதனுல் பகவான் ரக்ஷிப்பதற்குக் காரணம் தான் தன்னைக் காப்பதில் ப்ரயத்னஞ் செய்யாதிருத்தலே என்று தெரிகிறது.



2866. ராவணன் யுத்தத்தில் இளைப்புற்றிருப்பது கண்டு போய் வருவாயென்று அனுமதி கொடுத்தனுப்புதல்.

பயங்கரமான அந்த மஹாயுத்தத்தின் முனையில் விழுந்திருக்கிற வானர தேஹங்களிலுள்ள பாணங்களைப் பிடுங்கி அவனுடைய ஹிம்ஸையைத் தீர்த்தனன். தேவேந்த்ரனுக்குச் சத்ருவாகிய அந்த ராவணன் தோல்வி அடைந்ததைக் கண்டு, தேவதைகளும் அஸுரர்களும் திசைகளும் ஸமஸ்த பூதங்களும் ஸமுத்ரவாஸிகளான ப்ராணிகளும் ரிஷிகளும் மஹா உரகர்களும் ஜலத்தில் திரியும் ப்ராணிகளும் பூமியில் திரியும் ப்ராணிகளும் ஆகிய அனைவரும் ஸந்தோஷம் அடைந்தனர். ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராவணன் கும்பகர்ணனை எழுப்பி யுத்தத்திற்கனுப்புதல்.

அப்பொழுது ராக்ஷஸராஜனாகிய ராவணன் லங்காபுரத்தில் ப்ரவேசித்து ராமபாணங்களுக்கு பயந்து வருந்தி கர்வத்தை இழந்து இந்த்ரியங்கள் கலங்கப் பெற்றனன். ஸிம்ஹத்தினால் யானைபோலவும், கருடனால் ஸர்ப்பம்போலவும், மஹாபலமுடைய ராகவனால் ராஜாவான ராவணன் பரிபவம் நேரப்பெற்றவனாயினன். ப்ரஹ்மதண்டம் போன்றவைகளும் மின்னல்போன்ற ஒளியுடையவைகளுமாகிய ராகவனுடைய பாணங்களை நினைத்து நினைத்து ராக்ஷஸேஸ்வரனான ராவணன் வருத்தமுற்றனன். அந்த ராவணன் ஸ்வர்ணமயமான சிறந்த திவ்ய ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து ராக்ஷஸர்களைப் பார்த்து 'மஹேந்த்ரனைப் போன்ற நான் கேவலம் ஒரு மனுஷ்யமாத்ரனால் தோல்வி அடைந்தேனே! நான் செய்த மஹத்தான தவமெல்லாம் வீணேயல்லவா! 'மனிதர்களால் உனக்கு பயமென்றறி

வாய்' என்று முன்பு ப்ரஹ்மதேவன் மொழிந்த பயங்கர மான வாக்யமானது இப்பொழுது எனக்குப் பலித்தது. அந்த ப்ரஹ்மதேவனுடைய வசனம் அப்படியே ஆகுமன்றி வீணாகாது. தேவதைகளாலாவது தான வர்களாலாவது கந்தர்வர்களாலாவது யக்ஷர்களா லாவது ராக்ஷஸர்களாலாவது உரகர்களாலாவது சாவில்லாதிருக்கும்படி வரம் வேண்டிப் பெற்றேனன்றி மனுஷ்யர்களால் சாவில்லாதிருக்கும்படி வரம் வேண் டாமற்போயினன். தெரிந்தது; முன்பு இக்ஷ்வாகு குலநாதனாகிய அனரண்யனை நான் வதிக்கும்பொழுது 'ராக்ஷஸாதமா! குலாதமா! துர்ப்புத்தி! உன்னை யுத்தத்தில் மந்த்ரிகளோடும் ஸைன்யங்களோடும் குதிரைகளோடும் ஸாரதியோடுங்கூட வதிக்கும்படி மஹாபுருஷனொருவன் என் வம்சத்தில் பிறக்கப் போகின்றனன். இது நிச்சயம்' என்று ப்ரதிஜ்ஞை செய்தனன். ஆகையால் அதன்படியே மனுஷ்யனாகிய ராமன் அந்த அனரண்யனுடைய வம்சத்திற் பிறந்த தசரதனுக்குக் குமாரனாக ஜன்மித்தானென்று நினைக் கிறேன். முன்பு நான் வேதவதியை பலாத்காரமாகப் பிடித்து அவமதிக்கையில் அவள் என்னைச் சபித்தனள். மஹாபாக்யவதியாகிய அந்த வேதவதியே தன் சாபத்தை நிறைவேற்றும்பொருட்டு ஜனகனது புதல்வியாகிய ஸீதையாகப் பிறந்தனள். பார்வதியும் நந்திகேச்வரனும் ரம்பையும் வருணகன்யகையான புஞ்ஜிகஸ்தலையும் தவமஹிமையால் தாம் முன்பு எப்படி மொழிந்தனரோ, அப்படியே ஆயிற்று. ரிஷிக ளின் வசனம் ஒன்றும் பொய்யாகாது. ராக்ஷஸர்களே! நீங்கள் அந்த சாபஸ்வரூபத்தை யெல்லாம் அறிந்து இப்பொழுது பகைவரை வெல்லும் விஷயத்தில் மன

லூக்கமுற்றிருக்க வேண்டும். மற்றும், ராக்ஷஸர்கள் கோபுரத்தின் பக்கங்களில் போர்வீரர் ஸஞ்சரிக்கும் படியான சர்யாக்ருஹங்களிலும் கோபுர சிகரங்களிலும் காத்திருப்பீர்களாக. கம்பீரத்தன்மையில் நிகரில்லாதவனும் தேவதானவர்களின் கர்வத்தை அடக்குந் தன்மையனுமாகிய கும்பகர்ணன் ப்ரஹ்மஶாபத்தினால் பரிபவிக்கப்பட்டு நித்ரைக்குட் பட்டிருக்கின்றனன். அவனை எழுப்புவீர்களாக' என்றனன். மஹாபலனாகிய அந்த ராவணன், அங்ஙனம் ப்ரஹஸ்தன் மாண்டதையும் தான் தோல்வி அடைந்ததையும் நினைத்தும் கும்பகர்ணனுடைய பலம் பயங்கரமாயிருப்பதென்பதை அறிந்தும் கும்பகர்ணனை எழுப்பும்படி பயங்கர பராக்ரமமுடைய ராக்ஷஸ ஸைன்யத்திற்கு ஆஜ்ஞை இடத்தொடங்கி 'அவாந்தர வாசற்படிகளில் (இடை வாசற்படிகளில்) யத்னஞ் செய்ய வேண்டும். வானரர்கள் ஏறுகிருக்கும்படி ப்ராகாரத்தின்மேல் ஏறிக் காவலிருப்பீர்களாக. நித்ரையில் ஆழ்ந்திருக்கிற கும்பகர்ணனை எழுப்புங்கள். நான் துக்கித்துச் சிந்தையால் கலங்கிக் கருத்து நிறைவேறப் பெறுமல் தூக்கமற்று விழித்துக்கொண்டிருக்கையில், கும்பகர்ணன் காலத்தினால் தெளிவுமாறப்பெற்று ஒரு சிந்தையுமின்றித் தான் ஸுகமாக நித்ரை செய்கின்றனன். இப்பொழுதே அன்று; [1] இங்ஙனம் ஒரு ஸமயத்தில் ஒன்பது மாதங்களும் ஒரு ஸமயத்தில் ஆறு

1. இங்கு 'நவ ஷட் ஸப்தசாஷ்டௌ ச மாஸாந்ஸ்வபிதி ராக்ஷஸ:' என்பது மூலம். இங்ஙனம் நியதியில்லாமல் நித்ரை செய்வது பற்றியே மேல் உத்தரகாண்டத்திலும் கும்பகர்ணன் ப்ரஹ்மாவைப் பார்த்து 'ஸ்வப்தும் வர்ஷாண்யநேகாநி தேவதேவ மமேப்ஸிதம் (தேவதைகளுக்குத் தேவனே! அநேக ஸம்வத்ஸரங்கள் உறங்குவது

மாதங்களும் ஒரு ஸமயத்தில் ஏழு மாதங்களும் ஒரு ஸமயத்தில் எட்டு மாதங்களும் ஆக இப்படி எப்பொழுதும் ஒரு நியதியின்றி நித்ரை செய்வான். [1] இவன்

எனக்கு இஷ்டமாயிருக்கிறது) என்று காலநியதியில்லாமல் வரங் கேட்டதாகச் சொல்லப்பட்டது. இந்தக் காண்டத்திலும் மேல் ராமனுக்கு விபீஷணன் 'ஶயிதா ஹ்யேஷ ஷண்மாஸாநேகாஹம் ஜாக்ரிஷ்யதி' (இவன் ஆறுமாதங்கள் நித்ரை செய்வதும், பிறகு ஒருநாள் கண் விழித்துக்கொள்வது மாயிருப்பான்) என்று மொழிந்தது மற்றைப் பக்ஷங்களுக்கும் உபலக்ஷணமென்று தெரிகிறது. அல்லது—ஆறு மாதங்களுக்குக் குறைவில்லாமல் நித்ரை செய்வானென்றும், அதற்குக் குறைவாக நித்ரை செய்கிறதில்லையென்றும் தெரிவிக்கவேண்டுமென்னும் அபிப்ராயத்தினால் அங்ஙனஞ் சொல்லியிருப்பான். அல்லது—'நவ ஸப்த தஶாஷ்டௌ ச மாஸாந் ஸ்வபிதி ராக்ஷஸ:' என்றும் பாடம் உண்டு. அப்பொழுது 'தஶாஷ்டௌ' என்கிற இடத்தில் அஷ்டியாவது அஶநம், அதாவது நாசம். (தஶாஷ்டௌ) பத்து மாதங்கள் நசிக்கையில் மிகுந்த (நவ ஸப்தமாஸாந்) பதினாறு மாதங்கள். அதாவது பதினாறு மாதங்களில் பத்து மாதங்கள் கழிந்தால் மிகுந்த ஆறுமாதங்கள் நித்ரை செய்கிறானென்று விபீஷண வசனத்தோடு விரோதமில்லாமல் பொருள் கொள்க. அல்லது—'ஷஷ்டிர்மாஸாந்த் ஸம்பாதீயா ஹ்ருத்ஸூஜந்தி. ஷஷ்டிர்ஹி மாஸாந்த் ஸம்பஶ்யந்தி' இது முதலான மாஸவிகல்பங்களில் 'ஷஷ்டி:' என்று ஆறுதினங்களையுங் கூட மாஸமாகக் கொள்ளுகையால் அதன்படி 'நவஷட் ஸப்தசாஷ்டௌச மாஸாந்' (9+6+7+8) என்ற இம்மாதங்களைக் கூட்டுகையில் முப்பது மாதங்களாகின்றன. மாதம் ஒன்றுக்கு ஆறுநாள் வீதம் முப்பது மாதங்களுக்கு நூற்றெண்பது நாட்களாகையில் அமாவாஸ்யை முதல் அமாவாஸ்யை வரையிலுமாவது பௌர்ணமாஸி முதல் பௌர்ணமாஸி வரையிலுமாவது கணிக்கப்படுகிற முப்பது தினங்களையுடைய மாதங்கள் ஆறு ஆகின்றனவாகையால் விபீஷணன் சொன்ன ஆறு மாதங்களுக்கு விரோதமில்லையென்று சிலர் கருத்து.

1. இங்கு 'மந்த்ரயித்வா ப்ரஸுப்தோ஽யமிதஸ்து நவமே஽ஹநி' என்பது மூலம். இங்குச் சிலர்— 'ஏகாஹம் ஜாக்ரிஷ்யதி

இன்றைக்கு முன் தினத்திற்கு ஒன்பதாவது நாளன்று அதற்கு முதனாள்ஸபையில் ஆலோசனைசெய்து நித்ரை

என்று கும்பகர்ணன் தூங்கியெழுந்த பின்பு ஒரு தினமே விழித்துக்கொண்டிருப்பானென்று விபீஷணன் நியதி சொன்னமையால் மந்த்ராலோசனை நடத்தின மற்றை நாளே கும்பகர்ணன் தூங்க ஆரம்பித்தானென்றும், 'ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராமஸ் ஸலக்ஷ்மண:' என்று விபீஷணன் ராவணனுடைய ஸபையினின்று முஹூர்த்தகாலத்தில் ராமனிருக்கு மிடத்திற்கு வந்தானென்கையால், மந்த்ராலோசனை நடந்த அன்றையதினமே விபீஷணன் ராமனிடம் வந்தானென்றும், 'விபீஷணேநாஸு ஜகாம ஸங்கமம்' என்று ராமன் விபீஷணனோடு சீக்ரம் கலந்தானென்கையால் விபீஷணன் வந்தவுடனே ராமன் அங்கீகரித்தானென்றும் தெரிகிறது. ஆகையால், ராவணஸபையில் மந்த்ராலோசனையும், விபீஷணன் வரவும், விபீஷணஸ்வீகாரமும் ஒரே தினத்தில் நடந்தன. இந்த தினம் முதல் மூன்று தினங்கள் ஸமுத்ரப்ரார்த்தனைக்காக ராமன் தர்ப்பசயனத்தில் பள்ளிகொண்டிருந்ததும், பின்பு ஐந்து நாட்களில் ஸேதுபந்தனமும், ஸேது கட்டி முடிந்தவன்றைய தினம் ஸாயங்காலமே ஸுவேல பர்வதத்தில் ஏறுதலும், அன்றையதினம் ராத்ரியே ஸுக்ரீவ ராவணர்களுக்கு த்வந்த்வயுத்தமும், மற்றை நாள் துமுல யுத்தமும், அன்றையதினம் ராத்ரி நாகாஸ்த்ர பந்தமோக்ஷங்களும் தூம்ராக்ஷ வஜ்ரதம்ஷ்ட்ர அகம்பனவதங்களும், மற்றை நாள் ப்ரஹஸ்தவதமும் ராவணமகுடபங்கமும் நடந்தன. இங்ஙனம் ராவணனுக்கு மகுடபங்கம் நடந்த நாள் ஒன்று, துமுலயுத்தம் நடந்த முதனாள் ஒன்று, ஸேதுகட்டத் தொடங்கின தினம் முதல் ஸுவேலபர்வதத்தில் ஏறினது வரையிலுள்ள தினங்கள் ஐந்து, மந்த்ராலோசனை நடந்தபின் விபீஷணன் வந்த நாள்முதல் தர்ப்பசயனத்திலிருந்த மூன்று நாட்களில் இரண்டாவது நாள் கும்பகர்ண நித்ராரம்பமாகையால் அதில் இரண்டு தினங்கள், ஆக மகுடபங்கம் நடந்த தினத்தோடு சேர்ந்து ஒன்பதாவது நாள் கும்பகர்ணன் நித்ரித்தானென்று சொல்லுவர். இது ஸரியன்று. எப்படி என்னில்— ஸுவேலபர்வதத்தில் ஏறின அன்றையதினம் ராத்ரி பூர்ணசந்த்

ரோதயத்தை வர்ணிக்கையால் ஸுவேலமேறினதினம் பூர்ணிமை யென்பது ஸித்தம். ராவணன் மாணமடைந்த நாள் அமாவாஸ்யை யென்பதும் ஸ்பஷ்டமே. இப்படியிருக்க, பிறர் சொன்னப்ரகாரம் ஸுவேல பர்வதத்திலேறின இரண்டாவது நாள் அதாவது த்வி தீயையினன்றே மகுடபங்கம் நடக்கையில் ராவணன் அமா வாஸ்யை வரையிலும் தாமதித்திருந்து யுத்தஞ்செய்வது அவ்வளவு பொருந்தாது. வாஸ்தவத்தில்—இந்த ஸ்லோகத்தில் 'இத:' என்ப தற்கு இந்த யுத்தம் ஆரம்பித்த தினத்தினின்று—என்று பொருள், அந்த தினத்தைவிட்டு அதற்கு முதனாள் முதல் ஒன்பது நாள் தூங்கினன், அதற்கு முதனாள் மந்த்ராலோசனை செய்தனன். இப்படி பூர்ணிமையினன்று ஸுவேலத்தில் ஏறுதல்; ப்ரதமையி னன்று யுத்தாரம்பம்; இதற்கு முன் ஒன்பதாவது நாள் ஸப்தமி. ஸப்தமியினன்று கும்பகர்ணன் தூங்க ஆரம்பித்தனன். அன் றைக்கே தர்ப்பசயனத்திற்கு ஆரம்பம். ஷஷ்டியினன்று கும்பகர் ணாதிகளோடு மந்த்ராலோசனை, அன்றே விபீஷணன் புறப்பட்டுப் போனதாகச் சொல்லுவார்கள். மற்றுஞ் சிலர் 'ஸீதையை ராவணன் அபஹரிப்பதற்கு முன்பு பதின்மூன்று ஸம்வத்ஸரங்கள் கடந்தன. பம்பாதீரத்தில் வஸந்த ருதுவை வர்ணிக்கையால் பதினான்காவது ஸம்வத்ஸர ஆரம்பத்தில் ஸீதை அபஹரிக்கப் பட்டனள். பம்பைக்கரையில் வஸந்தருதுவை வர்ணிக்கையால் ஆடிமாதத்தில் வாலிவதம். அதன் பிறகு வர்ஷருதுவை வர்ணிக்கை யால் ஐப்பசி மாதத்தில் ஸீதையைத் தேட முயற்சி செய்தார்க ளென்பது ஸ்பஷ்டம். ஸ்வயம்ப்ரபையின் குஹையில் வெகுகாலம் சென்றது 'புஷ்பிதாக்ராந் வஸந்தாஷௌ த்ஷர்ஸ விவியாந் த்ருமாந்' என்று ஸ்வயம்ப்ரபையின் குஹையினின்று வெளிவந்தவுடனே வஸந்தருதுவுக்கு முன் மாதமாகிய பங்குனி மாதத்திற்கு ஸூசக மாக வ்ருக்ஷங்களின் நுனியில் புஷ்பித்திருந்தமை சொல்லப்பட் டது. ஆகையால் பங்குனி மாதம் சுக்லபக்ஷ த்ரயோதசியினன்று ஹனுமான் லங்கா ப்ரவேசஞ் செய்தனன். 'ஸ்யித: ககுதி மாநிவ தீக்ஷ்ண ஶ்ருங்க:' என்கிற ஸ்லோகத்தில் 'ப்ரதிபூர்ணஶ்ருங்க:' என்று நுனி நிறைந்த சந்த்ரனை வர்ணிக்கையால் த்ரயோதசியென் பது ஸித்தம். அத்தன்மை அன்றுதான் ஸம்பவிக்கக்கூடியது. என்

றையதினம் ராத்ரி லங்கையில் ஹனுமான் ஸீதையைத் தேடி ஞனே அன்றைக்கு மற்றை நாள் காலையிலேயே லங்காதஹனம். ஏனென்னில் 'அவஶ்யமேவ த்ரஷ்டவ்யா மயா லங்கா நிஶாக்ஷயே' (நான் உதயமான பின்பு லங்கையை அவஶ்யம் பாரக்கவேண்டும்) என்று ஹனுமான் வாலில் நெருப்போடு ராக்ஷஸர்களால் திருப்பப் படும்பொழுது மொழிந்தனன். அன்றையதினமே திரும்பினன். உடனே தாமதஞ் செய்யாமல் திரும்புவது எப்படி என்னில்— ஸீதை 'யதிவா மந்யஸே வீர வஸைகாஹமரிந்தம' என்று ஒருநாள் நிற்கும்படி வேண்டுகையில், 'ஏவமாஶ்வாஸ்ய வைதேஹீம் ஹனுமான் மாருதாத்மஜ:। கமநாயமதிஞ் சக்ரே' என்று ஹனுமான் உடனே புறப்பட நினைத்தானென்றிருக்கிறது. அன்றையதினம் உதயமாகையில் லங்கையைக் கொளுத்தினபின்பு அன்று மத்யாஹ்னத்திற்கு முன்னமே அங்கதாதிகள் மதுவனத்தை அழித்து ராமனிடம் சேர்ந்தார்கள். எப்படி என்னில்—ஹனுமான் மீளவும் ஸமுத்ரத்தைத் தாண்டும்பொழுது அரிஷ்ட பர்வதத்தில் ஏறுந் தருணத்தில் அதை வர்ணிக்கும் வ்யாஜத்தினுல் 'வோயீயமானமிவ ப்ரீத்யா திவாகரகரைஶ்ஶுபை:' 'ஸூர்ய கிரணங்களால் விழித்துக்கொள்வது போலிருப்பது' என்று ஸூர்யோதய ஸமயத்தைச் சொல்லி, பின்பு அஸ்தமயத்தைச் சொல்லவில்லை. அன்றையதினமே சதுர்த்தசியின் மிச்சத்தோடு கூடின பூர்ணிமையினன்று மத்யாஹ்னத்தில் யுத்தயாத்ரையென்று 'அஸ்மிந் முஹூர்த்தே ஸுக்ரீவ ப்ரயாணமபிரோசயே। யுக்தோ முஹூர்த்தோ விஜய: ப்ராப்தோ மத்யம் திவாகர:' என்று அன்று மத்யாஹ்னம் யுத்தத்திற்குப் புறப்படவேண்டுமென்று ராமன் சொல்லுகையால் தெரிகின்றது. என்றையதினம் மத்யாஹ்னம் அபிஜித்தில் யுத்தயாத்ரையோ, அதற்கு மற்றைநாளே ஸமுத்ரக்கரையில் ஸேனையை இறக்குதல். எப்படியென்னில்—'ஸாஸ்மயாதி திவாராத்ரம் மஹதீ ஹரிவாஹினீ' (வானரஸேனை இரவும் பகலும் வழி நடந்தது) என்று சொல்லி, 'முஹூர்த்தம் க்வாபி நாஸத' (சிறிது நேரமாயினும் ஓரிடத்திலும் நிற்கவில்லை) என்கையால் மற்றைநாளே ஸமுத்ரக்கரை சேர்ந்து இறங்கிற்று. இது இப்படியிருக்க, லங்கையைக் கொளுத்தினவன்றே ராவணன் ஸபையில் மந்த்ரிகளோடு சிறிது ஆலோசித்ததாகச் சொல்லி

'விஸர்ஜயித்வா தாந்ஸர்வாந் ப்ரவிவேஸ ஸ்வகம் க்ருஹம்' (அவர்களெல்லோரையும் விடைகொடுத்தனுப்பி ராவணன் தன் க்ருஹத்திற்குப் போனான்) என்று லங்கையைக் கொளுத்தின அன்றைய தினத்து வ்ருத்தாந்தத்தை முடித்து, 'ததః ப்ரத்யுஷஸி ப்ராப்தே' (அப்பால் பொழுது விடிகையில்) என்று தொடங்கி மற்றை நாள் காலையில் விபீஷணன் இரண்டாவது உபதேசஞ் செய்ததைச் சொல்லி, அப்பால் மந்த்ராலோசனைக்காக ராவணன் கும்பகர்ண விபீஷணாதிகளோடு ஸபையில் ப்ரவேசிக்கையில் விபீஷணன் செய்த மூன்றாம் உபதேசத்தைச் சொல்லி, 'இத்யுக்த்வா பருஷம் வாக்யம் ராவணம் ராவணாநுஜः। ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராமஸ்ஸலக்ஷ்மணः' என்று லங்கையைக் கொளுத்தின மற்றை நாளே ஸமுத்ரக்கரையில் விபீஷணன் ராமனிடம் வருவதைச் சொல்லுகையாலும் இரண்டாவது நாள் ராமன் ஸமுத்ரஞ்சேர்ந்தானென்று தெரிகிறது. ஸமுத்ரக்கரை சேர்ந்த நாள் பங்குனிமாதத்தின் புச்சபூர்ணிமை. ஆனதுபற்றியே 'உத்தரா பல்குநீ ஹ்யத்ய' என்று நான்காம் ஸர்க்கத்தில் யுத்தப்ரயாணதினம் பூர்ணிமையோடு கூடினதென்று சொல்வது பொருந்துகின்றது. ஸமுத்ரக்கரை சேர்ந்தநாள் பூர்ணிமையோடு கூடினதென்பது 'சண்டநக்ராக்ரஹம் கோரம் க்ஷபாதௌ திவஸக்ஷயே। சந்த்ரோதய ஸமுத்தூதம் ப்ரதிசந்த்ர ஸமாகுலம்' என்று பகல் முடிந்து ராத்ரி தொடங்கினவுடனே—அதாவது ஸந்த்யாகாலத்திலேயே சந்த்ரோதயத்தைச் சொல்லுகையால் ஏற்படுகின்றது. ஸேனை இறங்கினதும் விபீஷணன் வந்ததும் ஒரே தினத்தில் நடந்ததேயாயினும், வாக்கு முறையே வருவதாகையால் முறையே சொல்லப்பட்டன. ப்ரதமையினன்று ராமன் தர்ப்பசயனத்தில் படுக்கத் தொடங்கினதும் கும்பகர்ண நித்ராரம்பமும். மூன்று நாள் ராமன் தர்ப்பசயனத்திலிருந்தனன். ஆகையால் சதுர்த்தி பஞ்சமி ஷஷ்டி ஸப்தமி அஷ்டமி திதிகளில் ஸேதுபந்தனம். அஷ்டமியினன்று ராத்ரி ஸுவேல பர்வதத்தில் ஏறினது. 'ஸுவேல பர்வதத்தில் 'பூர்ணசந்த்ர ப்ரதீபாச நிசா ஸமபிவர்த்ததே' என்பதற்கு பூர்ணசந்த்ரன் போன்ற தீபங்களையுடைய ராத்ரியென்று பொருளேயன்றி, பூர்ணசந்த்ரனை விளக்காக உடையதென்று பொருளன்று. ஸுக்ரீவனுடைய ஸேனையில் பேரிவாத்யம் முதலியவைபோல்

நீபம் முதலியவையும் இருக்கக்கூடும். ஸுவேலத்திலேறின மற்றைநாள் பகலில் லங்கையைத் தடுத்தது. ஏனென்னில் 'தாம் ராத்ரி முஷிதாஸ் தத்ர ஸுவேலே ஹரிபுங்கவா:| லங்காயா ஦த்ருஶுர்வீரா வநாந்யுபவநாநிச' (அன்று ராத்ரி வானரர்கள் ஸுவேல பர்வதத்தில் இருந்து அதிலுள்ள வனங்களையும் உப வனங்களையும் கண்டார்கள்) என்று சொல்லி அப்பால் யுத்தம் வர்ணிக்கப்பட்டதாகையால் தெரிகிறது. அதிலும் முதலுள் யுத்தத்தில் ராத்ரி நாகாஸ்த்ர பந்த மோக்ஷாதிகள் நடந்தன. 'யுத்⁴யதாமேவ தேஷாம்து ததா வானரரக்ஷஸாம்| ரவிரஸ்தம்கதோ ராத்ரி: ப்ரவ்ருத்தா ப்ராணஹாரிணீ' என்று ராத்ரியானதைச் சொல்லி 'ஸாவஹுவ நிஶா கோரா ஹரிராக்ஷஸ ஹாரிணீ| ததஸ்தே ராக்ஷஸாஸ் தத்ர தஸ்மிம்ஸ்தமஸி தாருணே| ராம மேவாப்⁴யவர்த்தந்த' 'தம்ஸீமவேக்ஷ ஹரயோ நாராசை: க்ஷதவிக்³ரஹா: அந்தகாரே ந த³த்³ருஶு:' என்று அன்றிரவு இருள் மூடின மையைச் சொல்லி, 'ஶரந்தாஶ்ரௌ தௌ ஹ்ராதரௌ ராமலக்ஷ்மணௌ|க்ருத்³தே⁴ந்த்³ரஜிதா வீரௌ பந்நகை: ஶரதாம் ஹ்ருதை:' இத்யாதிகளலால் நாகாஸ்த்ரபந்தாதிகள் கூறப்பட்டன. அந்த அர்த்தராத்ரியிலேயே வானரர்களின் ஸந்தோஷத்வனிக்கு ராவணன் கோபித்து அனுப்பின தூம்ராக்ஷ வஜ்ரதம்ஷ்ட்ரர்களின் யுத்தமும் அவர்களுடைய வதமும் நடந்தன. ஏனென்னில்—அவர்களுடைய யுத்தத்தில் பகலென்பதை அறிவிக்கும்படியான அடையாளம் ஒன்றும் புலப்படவில்லை. வானரர்களுடைய ஸந்தோஷத்திற்குப் பின்பு நடந்ததாகையாலும் ராத்ரியே அவர்கள் வதிக்கப்பட்டார்களென்று தெரிகிறது. மிகுந்தராத்ரியில் அவ்விருவரும் மாண்டு போகையில் இரண்டாவது நாள் அகம்பன யுத்தம். எப்படி யென்னில், அகம்பனன் புறப்படும்பொழுது 'அஹவத் ஸுதிநேசாபி து³ர்தி³நம் ருக்ஷமாருதம்' என்று தினம் தெளிவாயிருப்பினும் திடீலென்று மேகங்களால் சூழப்பட்டதென்று சொல்லுகையால் பகலென்பதற்கு அடையாளம் உண்டு. அகம்பனன் மாண்டவுடனே ராவணன் முன் பகலிலேயே ஊரைச்சுற்றித் திரிந்தனன். அகம்பனவதத்திற்குப் பின்பு உடனே ப்ரஹஸ்த யுத்தம் அன்றையதினம் மத்யாஹ்னமே நடந்தது. ஆனால் 'அந்யோந்யமபி⁴ஸம்ரப்³தா⁴ ஹ்ர

ஹாஸீச நசகாஶிரே' என்று க்ரஹங்கள் விளக்கமற்றிருந்தனவென்கையால் ப்ரஹஸ்தயுத்தம் ராத்ரியில் நடந்ததென்னில், மேல் பகல் யுத்தங்களில் பகலில் தெரியாத பதார்த்தங்களும் புலப்பட்டமை சொல்லப்பட்டிருக்கின்றது. ராவண யுத்தத்தில் 'ப்ராஜாபத்யம் ச நக்ஷத்ரம் ரோஹிணீம் ஶஶிந: ப்ரியாம்। ஸமாக்ரம்ய வு⁴யஸ்தஸ்யௌ ப்ரஜாநாம ஶுஹாவஹ:' இத்யாதிகள் பகலில் சொல்லப்பட்டனவாகையால் இதைப்பற்றி ராத்ரியென்று கொள்ளலாகாது. அந்த இரண்டாவது நாளே ராவணனுடைய தோல்வியும் கும்பகர்ணனை எழுப்புவதும் கும்பகர்ணனுடைய யுத்தமும் நடந்தன. ஏனென்னில்— காலவிசேஷத்தைக் குறிக்காமல் பின்பு இடைவீடின்றி அந்தந்த ஸந்தர்ப்பங்களைச் சொல்லிக்கொண்டு முக்ய கார்யமான ப்ரஹ்மாஸ்த்ர பந்தனமோக்ஷத்தில் காலவிசேஷத்தைச் சொல்லியிருக்கையால் அம்மூன்றும் ஒரே தினத்தில் நடந்தனவென்று நிச்சயிக்கத்தகும். மற்றும், 'ஸப்தஷஷ்டிர்ஹதா: கோட்யோ வாநராணாம் தரஸ்விநாம்। அஹ்ந: பஞ்சமஶேஷேண வல்லபே⁴ந ஸ்வயம்பு⁴வ:' என்ற இடத்தில் 'அஹ்ந: பஞ்சமஶேஷேண' (பகலின் ஐந்தாவது சேஷம்) என்றிருக்கிறது. 'ப்ராதஸ் ஸங்க³வ மத்⁴யாஹ்நாபராஹ்ணா: ஸாயமித்யமீ। ஏகஸ்யாஹ்ந: பஞ்சஶாகா² விஹிதா: காலசிந்தகை:' என்று ப்ராதக் காலம் ஸங்கவம், மத்யாஹ்னம், அபராஹ்ணம், ஸாயங்காலம் என்று ஒரு பகலுக்கு ஐந்துபாகங்கள் உண்டு; அதில் ஐந்தாவது பாகம் ஸாயங்காலமாகையால் பஞ்சமசேஷமாவது ஸாயங்காலமே. அந்த த்விதீயையின்று ராத்ரி ப்ரஹ்மாஸ்த்ரபந்தம் விட்டபின்பு மீளவும் லங்கையைத் தடுப்பதும் அதைக் கொளுத்துவதும் கும்ப நிகும்ப யூபாக்ஷ ஶோணிதாக்ஷ ப்ரஜங்க அகம்பன மகராக்ஷவதங்களும் நடந்தன. 'ததோऽஸ்தங்க³த ஆத்யே ராத்ரௌ தஸ்மிந்நிஶாமுகே²। லங்காமபி⁴முகா²ஸ்ஸோல்கா ஜக்³முஸ்தே ப்லவக³ர்ஷபா⁴:' என்று ராத்ரியில் குறைக்கொள்ளிகளை எடுத்துக்கொண்டு வானரர்கள் போனார்களென்கையால் இவையெல்லாம் அன்றிரவே நடந்தனவென்பது ஸித்தம். இங்ஙனம் பூர்ணமான இரண்டு தினங்களில் மூலபலமும் இந்த்ரஜித்தும் ராவணனும் தவிர, மற்றை ப்ரமுகர்களான ராக்ஷஸர்கள் மாண்டுபோகையில், மூன்றாவது நாள்:முதல் மூன்று

போயினன். ஆகையால் அவன் படுத்து அதிககாளாகா மையால் அவனை ஸுகமாகவே எழுப்பக்கூடும். மஹா பலனுகிய அந்தக் கும்பகர்ணனைச் சீக்ரமாக எழுப்புங் கள். மஹாபாஹுவும் ஸமஸ்த ராக்ஷஸர்களிலும்

---

நாள் இந்த்ரஜித்தின் யுத்தம். ஏனென்னில்— 'அஹோராத்ரைஸ் த்ரிபிர் வீர: கதஞ்சித் விநிபாதித:' என்று மூன்று நாள் கழிந்த பின் இந்த்ரஜித்து முடிக்கப்பட்டா னென்றிருக்கிறது. பின்பு ஆருவது நாள் மூலபலத்தை அழித்தல். அன்றையதினம் ஸாயங் காலம்முதல் இரவும் பகலும் ராவணயுத்தம்; ஏழாவது நாள் ராவண வதம். அல்லது—'அத்ய யுத்யாநம் த்வமத்யைவ க்ருஷ்ணபக்ஷசதுர்த ஸீம்। க்ருத்வா நிர்யாஹ்யமாவாஸ்யாம் விஜயாய வ்ருதோ பலைர்வ்ருத:' என்பது முதலிய ஸந்தர்ப்பங்கள் இரண்டு விதமாகவும் பொருந்து மாகையால் ஏழாவது நாள் ராவணயுத்தமென்றும் எட்டாவதுநாள் காலையில் ராவணவதமென்றும் கொள்ளலாம். புச்ச அமாவாஸ்யை யினன்று ராவண வதமாகையால் அமாவாஸ்யையினன்று ராவண வதமென்று ப்ரஸித்தி. இப்படியிருக்க 'ராமராவணயோர் யுத்தம் ஸப்தராத்ரமவர்த்தத' என்று ராமராவண யுத்தம் ஏழுநாள் நடந்த தென்பது கேவலம் ராமராவணர்களுக்கு மாத்ரமன்றி ராமனுக்கும் அவனுடைய ஸைன்யங்களுக்கும் ராவணனுக்கும் அவனுடைய ஸைன்யங்களுக்கும் நடந்ததென்று பொருள் கொண்டால் பொருந்துகின்றது. இதனுல் 'மந்த்ரயித்வா ப்ரஸுப்தோऽயமிதஸ்து நவமேऽஹநி' என்பதும் பொருந்துகின்றது. (இத:) இன்றைய தினத்தினின்று (நவமேऽஹநி) இன்றைய தினத்தை விட்டு முன்னுள் முதல் ஒன்பதாவது நாள், (மந்த்ரயித்வா ப்ரஸுப்த:) முதனுள் மந்த்ராலோசனை செய்து அன்றையதினம் நித்ரித்தானென்று பொருள். ஆகையால் இந்த யுத்தமெல்லாம் பதினன்காவது ஸம்வத்ஸரத்தின் கடைசிமாதத்தில் நடக்க வேண்டியதாயிருக்கிறது. ஆனுல் ஸீதையைப் பார்த்து ராவணன் 'த்வௌ மாஸௌ ரக்ஷிதவ்யௌ மே யோऽவதிஸ்தே மயா க்ருத:' என்று இரண்டு மாதங்கள் கெடு கொடுத்திருக்கையால் ஹநுமான் லங்கையில் புகுந்தது பத்தாவது மாஸமென்று ஏற்படு கின்றது. ஹநுமானைப் பார்த்து ஸீதையும் 'த்வௌமாஸௌ

முக்யனுமாகிய அந்தக் கும்பகர்ணன் என்னைப்போல் ஶாபமுற்றவனன்றாகையால் யுத்தத்தில் சீக்ரமாகவே வானரர்களையும் ராமலக்ஷ்மணர்களையும் வதிப்பான். யுத்தத்தில் மஹாத்வஜம்போல் ஸமஸ்த ராக்ஷஸமுக்யனாகிய இந்தக் கும்பகர்ணன் மதிமயங்கி க்ராம்யஸுகத்தில் மனந்தாழப்பெற்று எப்பொழுதும் நித்ரைசெய்கின்றனன். பயங்கரமான இந்த யுத்தத்தில் ராமனால் தோல்வி அடைந்திருக்கிற எனக்கு, கும்பகர்ணனை எழுப்பினால் சிறிதும் சோகம் உண்டாகாது. 'அஸமயத்தில் எழுப்பக்கூடுமா' என்னில் இப்படிப்பட்ட ஆபத்து நேர்ந்திருக்கும்பொழுது ஸஹாயஞ்செய்ய உபயோகப்படானாயின், அந்தக் கும்பகர்ணன் தேவேந்த்ரனோடொத்த பராக்ரம முடையவனாயிருந்தும் எனக்கு என்ன ப்ரயோஜனம்?' என்றனன். ராக்ஷஸேந்த்ரன்

---

தேந மே காலோ ஜீவிதாநுக்ரஹஃ க்ருதஃ। வர்த்ததே ஃஸமோ மாஸோ த்ரிவௌது ஶேஷௌ ப்லவங்கம' இது முதலியவற்றைச் சொல்லுகையாலும் பத்தாவது மாதமென்று தெரிகின்றது. ஆகையால் இது எப்படி முன் சொன்னதோடு பொருந்துமென்னில் இப்படி அன்று. ஸீதை இரண்டு மாதங்களென்றது, 'ஊர்த்வம் மாஸாந் நஜீவேயம்' (மாதத்திற்குமேல் பிழைக்கமாட்டேன்) என்றும் 'மாஸாதூர்த்வம் நஜீவிஷ்யே த்வயா ஹீநா ந்ருபாத்மஜ' (ராஜகுமாரா! இனி உன்னை விட்டு மாதத்திற்கு மேல் பிழைக்க மாட்டேன்) என்றும் தானே மொழிந்த வாக்யங்களோடு விரோதிக்கையால், இரண்டு மாதமென்பது ராவணனுடைய அபிப்ராயத்தைப்பற்றிச் சொன்னதேயன்றி வேறன்று. ராவணன் ஸீதையை ஸமாதானப்படுத்துவதற்காக இங்ஙனஞ் சொன்னான். ஸீதையோ நடக்கிற மாதத்தோடேயே பதினான்காவது ஸம்வத்ஸரம் பூர்ணமாவதை அறிந்து மாதத்திற்குமேல் பிழைத்திருக்க மாட்டேனென்று ராமனுக்குச் சொல்லியனுப்பினாளாகையால் எல்லாம் பொருந்துகின்றது. இங்ஙனம் கோவிந்தராஜர்.

சொன்ன அவ்வசனத்தைக் கேட்டு ராக்ஷஸர்கள் அகாலத்தில் எப்படி எழுப்பலாமென்று மிகவும் வ்யாகுலத்துடன் கும்பகர்ணனது க்ருஹத்திற்குப் போயினர். அந்த ராக்ஷஸர்கள் ராவணனது ஆஜ்ஞையைக் கொண்டு கும்பகர்ணனை எழுப்பும்பொருட்டுத் தமது சக்தி அதிகமாகும்படி மாம்ஸங்களைப் புசித்து ரக்தங்களைப் பருகிக் கும்பகர்ணன் விழித்துக்கொண்டெழுந்திருக்கும்பொழுது அவனுக்குப் பசியாலுண்டான தாபம் முதலியவை தீரும்பொருட்டு கந்தபுஷ்பங்களையும் பக்ஷ்யங்களையும் எடுத்துக்கொண்டு சீக்ரமாகப் போயினர். மஹாபலரான அந்த ராக்ஷஸர்கள், பெரிய வாசற்படியுடையதும் நாற்புறத்திலும் ஒன்றரை யோஜனை விஸ்தாரமுடையதும் அழகாயிருப்பதும், கும்பகர்ணன் பூசிக்கொண்டிருக்கிற சந்தனம் முதலிய ஸமஸ்த வாஸனைகள் அபாரமாக வீசப்பெற்றதும் குஹைபோன்றதுமாகிய கும்பகர்ண க்ருஹத்திற்குப் போய் அவனுடைய மூச்சுக்காற்று வேகத்தினால் பின் வாங்கும்படி தடுக்கப்பட்டு மிக வருத்தத்துடன் எதிர்கொண்டுபோய் மஹாப்ரயத்னத்தினால் அதனுள் ப்ரவேசித்தனர். அந்த ராக்ஷஸர்கள் அங்ஙனம் அழகியதும் மங்கல த்ரவ்யங்கள் அமைந்ததும் பொன்னால் இயற்றப்பட்ட தரைகள் விளங்கப்பெற்றதுமாகிய அந்த குஹையுள் ப்ரவேசித்து, அங்கு பயங்கரமான உருவத்துடன் படுத்திருக்கின்ற ராக்ஷஸ ச்ரேஷ்டனாகிய கும்பகர்ணனைக் கண்டனர். நித்ரிக்கும் பொழுதுள்ள விகாரங்கள் நிறைந்து நித்ரை செய்கின்றவனும் தரையில் விழுந்த பர்வதம்போல் கம்பீரமாகப் புலப்படுகின்றவனும் எழுப்ப முடியாதபடி கடுநித்ரையில் ஆழ்ந்திருப்பவனுமாகிய கும்பகர்ணனை அவர்கள்

எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து எழுப்பத் தொடங்கி னர். அந்த ராக்ஷஸர், தேஹம் முழுவதும் மேல் முகமான மயிர்கள் நிறைந்து நெடுமூச்சு விடுகின்ற ஸர்ப்பம்போல் பயங்கரமான மூச்சுக்காற்றுக்களால் இகில் விளைப்பவனாகி, படுத்திருப்பினும் தனது காட்சி யினால் பயமுறுத்துகின்றவனும், பயங்கரமான மூக்கின் த்வாரங்களுடையவனும் பாதாளம்போல் அகன்று ஆழ்ந்த முகமுடையவனும் படுக்கையில் ஸமஸ்த அவயவங்களும் படிந்து விழும்படி படுத்திருப்பவனும் மாம்ஸ ரக்தங்களின் நாற்றம் வீசப்பெற்றவனும் பொன்தோள்வளை அணிந்த அங்கமுடையவனும் கிரீடந்தரித்தவனும் பகைவரை அழிக்கவல்ல பாக்ரம சாலியும் மஹாபலிஷ்டனும் ராக்ஷஸப்புலியுமாகிய கும்பகர்ணனை ஆச்சர்யத்துடன் சிறிதுநேரம் பார்த் துக்கொண்டிருந்தனர். அனந்தரம் மஹாபலரான அந்த ராக்ஷஸர்கள் கும்பகர்ணனுக்கெதிரில் மிகவும் த்ருப்தியை விளைக்கவல்ல மாம்ஸங்களை மேருபர்வதம் போன்ற ராசியாக நிறைத்தனர். அந்த ராக்ஷஸ ஸ்ரேஷ்டர்கள் கும்பகர்ணனுக்கெதிரில், மான் கடா பன்றி ஆகிய இவற்றின் மாம்ஸங்களையும் பலவகை அன்னங்களையும் அற்புதமான ராசிகளாகக் குவித்து வைத்தனர். அப்பால் தேவசத்ருக்களான அந்த ராக்ஷஸர் கும்பகர்ணனுக்கெதிரில் ரக்தம் நிறைந்த குடங்களையும் பலவகை மத்யக்குடங்களையும் வைத்த னர். அந்தப் பரந்தபனுடைய தேஹம் முழுவதும் மிகவும் மேலான சந்தனத்தைப் பூசினர். மேலான வாஸனை வீசப்பெற்ற திவ்யமான பூமாலைகளாலும் நானாவித கந்தங்களாலும் கும்பகர்ணனுடைய தேஹம் முழுவதும் மறைத்துவிட்டனர். அனந்தரம் அந்த



2881. கும்பகர்ணனை எழுப்புதல்.

ராக்ஷஸர் நல்ல வாஸனையுடைய தூபங்களை இட்டுப் பார்த்தபனுகிய அந்தக் கும்பகர்ணனைப் புகழ்ந்தனர். அப்பால் அந்த ராக்ஷஸர் அடிக்கடி மேகங்கள்போல் கர்ஜித்தனர்; சந்த்ரபிம்பம்போல் வெளுத்த சங்க வாத்யங்களை ஊதினர்; எல்லோருஞ் சேர்ந்து ஓரிடத்தில் உரக்கக் கூச்சலிட்டனர். இவை இத்தனைக்கும் அவன் விழித்துக்கொள்ளாமல் தூங்கிக்கொண்டிருக்கையில் அவர்கள் கோபமுற்று உரக்க இரைச்சலிட்டனர். கும்பகர்ணனை அடித்து இப்படியும் அப்படியும் பிடித்து அசைக்கினர். இங்ஙனம் அந்த ராக்ஷஸர்கள் கும்பகர்ணனை எழுப்பும்பொருட்டுப் பெருங்கோஷஞ் செய்தனர். பக்ஷிகள், சங்க பேரீத்வனிகளையும் [1] பணவ சப்தங்களையும் தோள்தட்டுவதாலுண்டான கோஷங்களையும் கர்ஜன சப்தங்களையும் ஸிம்ஹ நாதங்களையுங் கேட்டு பயந்து திசைகளைப்பற்றி ஓடி, அங்கும் பயம் தீராமையால் ஆகாயத்திற் கிளம்பி, அங்கும் நிகில் மாறுமையால் கபீலென்று தரையில் விழுந்தன. மிகவும் வருந்திச் செய்த சப்தங்களாலும் கடுநித்ரையில் ஆழ்ந்த அம்மஹாகாயனுகிய கும்பகர்ணன் விழித்துக்கொள்ளாதிருப்பதைக் கண்டு, அப்பால் அந்த ராக்ஷஸர் கூட்டங்கூடி எல்லோரும் இரும்புத்தடிகளையும் உலக்கைகளையும் கதைகளையும் எடுத்துக்கொண்டனர். அப்பொழுது ராக்ஷஸர் கொடுந்தன்மையராகிப் பர்வத சிகரங்களாலும் உலக்கைகளாலும் கதைகளாலும் வ்ருக்ஷங்களாலும் உள்ளங்கைகளாலும் இரும்புத்தடிகளாலும் முட்டிகளாலும், தரையில் படுத்து ஸுகமாகத் தூங்கிக்கொண்டிருக்கிற கும்பகர்ணனை அடித்தனர். அந்த ராக்ஷஸர்

1. ஓர்வகை வாத்யம்; உடுக்கையென்பர்.

பலிஷ்டராயினும் கும்பகர்ணனுடைய மூச்சுக்காற்றால் அவன் முன்னே நிற்கவல்லராகவில்லை. அப்பால் பயங்கர பராக்ர்மர்களாகிய அந்த ராக்ஷஸர் அப்பொழுதும் கும்பகர்ணன் எழுந்திராமையைக் கண்டு, மேலும் அதைப்பற்றி திடமாக ப்ரயத்னஞ் செய்தனர். அப்பொழுது அந்த ராக்ஷஸர் பதினாயிரம்பேர் தம்மைப் பரிவாரமாகச் சூழ்ந்திருக்கப் பெற்றுக் கும்பகர்ணனைச் சுற்றி ம்ருதங்கங்களையும் பணவங்களையும் பேரிகளையும் சங்கங்களையும் கும்பங்களையும் வெகுநேரம் வாதித்தனர். கறுத்த மைக்குவியல்போன்ற உருவமுடைய அந்த ராக்ஷஸர் அங்ஙனம் கும்பகர்ணனை அடிப்பதும் கர்ஜிப்பதுமாகி எவ்வளவு எழுப்பினும் அவன் எழுந்திருக்கவில்லை. அவர்கள் அதுவரையில் தாம் எவ்வளவு ப்ரயத்னங்கள் செய்தும் அவனை எழுப்ப வல்லமையற்றிருப்பதைக் கண்டு, அப்பால் மிகவும் தாருணமாயிருப்பதும் மிக்க அதிகமுமான யத்தனஞ் செய்யத் தொடங்கினர். அனந்தரம் அவர்கள் குதிரைகளையும் ஒட்டைகளையும் கழுதைகளையும் யானைகளையும் தடி கொரடா மாவெட்டி இவைகளால் அடித்துக் கும்பகர்ணன் மேல் ஓட்டினர்; பேரிகளையும் சங்கங்களையும் ம்ருதங்கங்களையும் தமது பலம் உள்ளளவும் வாதித்தனர். மற்றும், அவர் தமது பலம் உள்ளவளவுங்காட்டிப் பெரியகட்டைகளின் நுனிக்கசைகளாலும் (எட்டுக்கையளவுடைய ஸ்தம்பங்களாலும்) இரும்புத் தடிகளாலும் உலக்கைகளாலும் கும்பகர்ணனது காத்ரங்களை (சரீரங்களை) அடித்தனர். அந்தப் பெருங்கோஷமானது லங்கையிலுள்ள பர்வதங்கள் அரண்யங்கள் முதலிய ஸமஸ்த ப்ரதேசங்களிலும் பட்டணம் முழுவதிலும் நிறைந்துவிட்டது. அப்பொழுதும் கும்பகர்

ணன் எழுந்திருக்கவில்லை. அப்பால் அவனைச் சுற்றி எல்லோரும் ஒன்றுசேர்ந்து ஒரேகாலத்தில் ஆயிரம் பேரி வாத்யங்களை மேலான பொன்தடிகளால் அடித்த னர். இப்படி எவ்வளவு தூரஞ் செய்யினும், ப்ரஹ்மா வின் சாபத்திற்குட்பட்டுக் கடுநித்ரையில் ஆழ்ந்திருக் கையால் கும்பகர்ணன் எழுந்திராமையைக்கண்டு,பயங் கரபராக்ரமர்களாகிய ராக்ஷஸர்களெல்லோரும் முன் னமே கோபாவேசமுற்றிருந்தவர், அப்பொழுது மற்றும் அதிகமான கோபாவேசமுற்றனர். சிலர் அந்த ராக்ஷ ஸனை எழுப்பும்பொருட்டு முட்டிகளால் குத்துவது முதலியவற்றால் பராக்ரமத்தைக் காண்பித்தனர். சிலர் பேரிவாத்யங்களை வாதித்தனர். சிலர் பெருங்கோஷம் உண்டாகும்படி இறைச்சலிட்டனர். சிலர் கும்பகர்ண னுடைய தலைமயிர்களைப் பிடுங்கினர். சிலர் அவனு டைய காதைக் கடித்தனர். மற்றுஞ் சிலர் அவன் காது களில் பல நூறு குடநீர்களைக் கொட்டினர். அப்பொழு தும் பெரு நித்ரையில் ஆழ்ந்து ஸ்வாதீனமற்றிருக்கிற கும்பகர்ணன் சிறிதும் அசையவேயில்லை. பலிஷ்டர்க ளான மற்றுஞ் சில ராக்ஷஸர் சம்மட்டிகளையும் இரும் புத்தடிகளையும் கையில் ஏந்திக்கொண்டு கும்பகர்ண னுடைய தலையிலும் மார்பிலும் மற்றை அவயவங்களி லும் அந்தச் சம்மட்டிகளாலும் இரும்புத்தடிகளா லும் அடித்தனர். மஹாதேஹமுடைய அந்த ராக்ஷ ஸன், கயிறுகளாலும் தோல்முதலியவற்றாலும் இறுக் கிக்கட்டின சதக்னியென்கிற ஓர்வகைப்பட்ட கதைக ளாலும் உடம்பில் ஓரிடமும் விடாமல் நாற்புறங்களி லும் அடித்துக்கொண்டிருப்பினும் எழுந்திருக்க வில்லை. அப்பால் ஆயிரம் யானைகளை அந்தக் கும்ப கர்ணனுடைய தேஹத்தின்மேல் ஓட்டித் துவைத்த

னர். அப்பால் கும்பகர்ணன் விழித்துக்கொண்டனன். அவனுக்கு அந்த ஆயிரம் யானைகள் ஏறித்துவைப்பது எறும்பு முதலியன உடம்பில் ஊர்வதுபோல் ஸ்பர்சமாத்ரமாயிருந்ததேயன்றி மற்றொரு வருத்தத்தையும் விளைக்கவில்லை. அவன் விழித்துக்கொண்ட பின்பும், எழுந்திருக்கும்பொருட்டு ராக்ஷஸர் போகடுகிற பர்வத சிகரங்களாலும் வ்ருக்ஷங்களாலும் விளைகிற பெரும் ப்ரஹாரங்களை (அடித்தல்களைப்) பொருள் செய்யாமல் நித்ரை நீங்கப்பெற்றுப் பசியினாலும் அகாலத்தில் எழுப்புகிறார்களே என்னும் பயத்தினாலும் பீடிக்கப்பட்டு உடம்பை முறித்துக்கொண்டு திடீலென்று எழுந்திருந்தனன். அந்தக் கும்பகர்ணன் மஹாஸர்ப்பம் போல் நீண்டு பர்வத சிகரம்போல் பருத்து அவற்றைப் போல் பலமும் அமைந்து விளங்குகின்ற புஜங்களை நீட்டி படபாக்னியின் முகம்போல் ஜ்வலிக்கின்ற வாயைத் திறந்து விகாரமாகத் திமிர் விட்டனன். அங்ஙனம் அடிக்கடி சோம்பல்முறித்துக் கொட்டாவிவிடும் பொழுது பாதாளம்போன்ற அவனது வாய், ஸாவர்ணி மேருபர்வதசிகரத்தின் நுனியில் புலப்படுகின்ற ஸூர்ய பிம்பம்போல் ப்ரகாசித்தது. பலிஷ்டனாகிய அந்தக் கும்பகர்ணன் சோம்பல் முறிப்பதும் கொட்டாவி விடுவதுமாய் விழித்துக்கொண்டனன். இவன் கொட்டாவி விடும்பொழுது, பர்வதத்தினின்று காற்று வீசுவது போல், மூச்சுக்காற்று உண்டாயிற்று. அந்தக் கும்பகர்ணன் எழுந்திருக்கும்பொழுது, கறுத்து ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்ற அவனது சரீரம், வர்ஷருதுவில் மழைபெய்கின்றமையால் கறுத்திருப்பதும் நாரைகள் அருகே உலாவப்பெற்றதுமான மேகம்போல் ப்ரகாசித்தது. க்ரூரங்களாயிருக்கையால் ஜ்வலிக்கின்ற

அக்னிபோன்றவைகளும் தூக்கக்குறைவினல் கூச்சமுற்றிருப்பதுபற்றி மின்னல்போன்ற ஒளியுடையவைகளுமாகிய அந்தக் கும்பகர்ணனுடைய பெரிய நேத்ரங்கள் (கண்கள்) பிறர்க்குப் பீடையை விளைக்கின்றமையால் சனி அங்காரகன் ஆகிய இம்மஹா க்ரஹங்கள்போல் புலப்பட்டன. அனந்தரம் அந்த ராக்ஷஸர், அளவற்றநானாவகையான ஸமஸ்த பக்ஷணங்களையும் பன்றி மாம்ஸங்களையும் கடாமாம்ஸங்களேம் காட்டினர். மஹாபலனை அந்தக் கும்பகர்ணன் அவற்றையெல்லாம் பக்ஷித்தனன். தேவேந்த்ரனுக்கு பகைவனாகிய அந்தக் கும்பகர்ணன் பசியினல் வருந்தி மாம்ஸங்களை பக்ஷிப்பதும், தண்ணீர் தாஹத்தினல் வருந்தி ரக்தங்களைப்பருகுவதுமாகி, மற்றும் குடங்குடமாக வைத்திருக்கிற மேதஸ்ஸையும் மத்யத்தையும் பானஞ்செய்தனன். அப்பால், கும்பகர்ணன் எழுந்ததைக் கண்டு மறைந்திருந்த ராக்ஷஸர் அவன் திருப்தி அடைந்தானென்பதை அறிந்து அருகே வந்து தலைகளை வணக்கி நமஸ்கரித்து அவனைச்சுற்றிக்கொண்டு நின்றனர். அனந்தரம் கும்பகர்ணன் தூக்க மயக்கத்தினல் கொஞ்சம் திறந்ததும் கொஞ்சம் திறவாததுமாயிருக்கையால் கலக்கமுற்றிருக்கிறகண்களுடன் நாற்புறத்திலும் உற்றுப் பார்த்து அந்த ராக்ஷஸர்களெல்லோரையும் கண்டனன். ரக்ஷஸஸிம்ஹனாகிய அந்தக் கும்பகர்ணன் ராக்ஷஸர்களெல்லோரையும் ஆஶ்வாஸப்படுத்திக் தன்னை அங்ஙனம் எழுப்பினதற்கு ஆச்சர்யமுற்று அவர்களை நோக்கி 'நீங்கள் எதுக்காக இவ்வளவு ஆதரவுடன் என்னை எழுப்பினீர்கள்? ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுக்கு க்ஷேமமேயல்லவா? அவனுக்கு பயம் ஏதும் இல்லையல்லவா? அப்படி இல்லையாயின், பிறரால் பெரும்பயம் உண்டா

யிருக்கவேண்டும். இது நிச்சயம். அந்த பயம் நீங்கும் பொருட்டே நீங்கள் இவ்வளவு வேகத்துடன் என்னை எழுப்பினீர்கள். நான் இப்பொழுது ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுடைய பயத்தை நிர்மூலஞ் செய்கிறேன். தேவேந்த்ரனையினும் விழத்தள்ளுகிறேன்; அக்னிதேவனையும் சேதித்து விடுகிறேன். எனது அண்ணனாகிய ராவணன் ஸ்வல்பகாரணத்தைப்பற்றி, நித்ரித்துக்கொண்டிருக்கிற என்னை எழுப்பமாட்டான். ஆகையால் என்னை எழுப்புவதற்குள்ள காரணத்தை உள்ளபடியே சொல்வீர்களாக' என்றனன். இங்ஙனம் மஹாபலனாகிய கும்பகர்ணன் பரபரப்புடன் சொல்லிக்கொண்டிருக்கையில், ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுடைய மந்த்ரி யூபாக்ஷனென்பவன் அஞ்சலி செய்து கொண்டு அவனைப் பார்த்து 'ராஜனே! நமக்கு எப்பொழுதாயினும் தேவதைகளால் பயம் சிறிதும் உண்டாகாது. மனுஷ்யர்களால்தான் நமக்கு இப்பொழுது மிகுதியும் பயம் உண்டாகி நம்மை மிகவும் வருத்துகின்றது. ராஜனே! நமக்கு இப்பொழுது மனுஷ்யர்களால் உண்டான அவ்வளவு பயம் தைத்யர்களாலும் தானவர்களாலும் தேவதைகளாலும் எப்பொழுதும் உண்டானதில்லை. பர்வதம்போன்ற உருவமுடைய வானரர்கள் லங்கையைச் சுற்றிலும் தடுத்துக்கொண்டிருக்கிறார்கள். ராவணன் ஸீதையைப் பறித்துக்கொண்டு வந்தமையால் வருத்தமுற்றிருக்கின்ற ராமனிடத்தினின்று நமக்கு இவ்வளவு தாருணமான பயம் உண்டாயிருக்கின்றது. முன்பு ஒரு வானரன் மஹத்தான இந்த லங்காபுரமெல்லாம் கொளுத்திப் போயினன்; அக்ஷகுமாரனையும் சதுரங்கபலங்களோடு வதித்துவிட்டனன். தேவதைகளுக்குச் சத்ருவும் ராக்ஷஸாதிபதியும்

புலஸ்த்ய வம்சத்திற் பிறந்தவனுமாகிய ராவணனும் யுத்தத்தில் ஸூர்யனைப்போன்ற தேஜஸ்ஸையுடைய ராமனால் 'இவன் மிகுதியும் இளைப்புற்றிருக்கையால் மரணம் அடைந்தாற்போல் யுத்தஞ் செய்ய வல்லமை யற்றிருக்கின்றனன். இவன் போய் இளைப்பை ஆற்றிக் கொண்டு ஸுகமாக வரட்டும்' என்னும் புத்தியுடன் 'போய் வருவாய்' என்று விடுக்கப்பட்டனன். ராக்ஷஸ ராஜனாகிய ராவணனுக்கு தேவதைகளாவது தைத்யர் களாவது தானவர்களாவது எதைச் செய்ய வல்லமை யற்றிருந்தனரோ, அப்படிப்பட்ட கார்யத்தை ராமன் இப்பொழுது இவ்விடத்தில் செய்தனன். 'இனி இவ னோடு யுத்தஞ் செய்தால் இவன் பொறுக்கமாட்டான். இவனது ப்ராணன்கள் இனித் தக்குவது ஸந்தேஹம்' என்று ப்ராணஸந்தேஹத்தினால் யுத்தத்தில் ராவணனை ராமன் விடுத்தனுப்பினான்' என்றனன். அந்தக் கும்ப கர்ணன், தனது அண்ணனாகிய ராவணன் யுத்தத்தில் தோல்வி அடைந்தானென்று யூபாக்ஷன் சொல்லக் கேட்டுக் கோபத்தினால் கண்கள் சுழலப்பெற்று யூபா க்ஷனைப் பார்த்து இங்ஙனஞ் சொல்லத் தொடங்கி 'யூபாக்ஷ! நான் இப்பொழுதே ஸமஸ்த வானர ஸைன் யத்தையும் லக்ஷ்மணனையும் ராமனையும் யுத்தத்தில் கொன்று அப்பால் ராவணனைப் பார்க்கிறேன். வானர மாம்ஸங்களாலும் அவரது ரக்தங்களாலும் ராக்ஷஸர் களுக்கு த்ருப்தி உண்டாகச் செய்கிறேன். நானே ராம லக்ஷ்மணர்களின் குருதியைப் பருகுவதுஞ் செய் கிறேன்' என்றனன். அங்ஙனம் கர்வித்து ரோஷத்தி னால் அபநீதியாகிற தோஷம் நிறைந்திருக்கும்படி மொழிகின்ற அந்தக் கும்பகர்ணனுடைய வார்த்தை யைக்கேட்டு, ராக்ஷஸயோதர்களில் முக்யனாகிய

மஹோதரன் கைகளைக் குவித்து 'மஹாபாஹுவே! நீ ராவணனிடம் வந்து அவன் சொல்வதைக் கேட்டு, குணதோஷங்களை ஆலோசித்து, அதன்பிறகு யுத்தத்தில் சத்ருக்களை ஜயிக்கலாம்' என்றனன். மஹாதேஜஸ்வியும் மஹாபலனுமாகிய கும்பகர்ணன் மஹோதரனுடைய வார்த்தையைக்கேட்டு, ராக்ஷஸர்கள் சூழ்ந்து பின்றொடர்ந்து வரப்பெற்று, ராவண க்ருஹத்திற்கு ப்ரயாணமாய்ப் போக விரும்பினன். அனந்தரம் ராக்ஷஸர், பயங்கரமான கண்களும் உருவமும் பராக்ரமும் அமைந்த கும்பகர்ணனை எழுப்பிவிட்டு வேகமாக ராவண க்ருஹத்திற்குப் போயினர். அதன்பிறகு அந்த ராக்ஷஸர்களெல்லோரும் போய்,ஸிம்ஹாஸனத்தில்உட்கார்ந்திருக்கின்ற ராவணனைக்கண்டு கைகளைக்குவித்து, 'ராக்ஷஸச்ரேஷ்டனே! உன் தம்பி கும்பகர்ணன் தூக்கந்தெளிந்து விழித்துக்கொண்டனன். அவன் அங்கிருந்தே யுத்தத்திற்கு புறப்பட்டுப் போகட்டுமா? அல்லது, அவனை இங்கு வரச் சொல்லிப் பார்க்கிறாயா? எப்படி செய்கின்றாய்' என்று வினவினர். கும்பகர்ணன் விழித்துக்கொண்டிருப்பதைக் கேட்டு ராவணன் ஸந்தோஷமுற்று, வந்திருக்கின்ற அந்த ராக்ஷஸர்களைப் பார்த்து 'நான் கும்பகர்ணனை இங்குப் பார்க்க விரும்புகிறேன். ஆகையால் அவனை க்ரமப்படி பூஜித்து இவ்விடம் அழைத்துக்கொண்டு வருவீர்கள்' என்றனன். அந்த ராக்ஷஸர் 'அப்படியே ஆகட்டும்' என்று எல்லோரும் திரும்பி வந்து ராவணனது ஆஜ்ஞையின்படி கும்பகர்ணனைப் பார்த்து 'ஸமஸ்த ராக்ஷஸமுக்யனாகிய ராவணன் உன்னைப் பார்க்க விரும்புகின்றனன். ஆகையால் அவனிடம்போக நினைவு கொள்வாயாக. அண்ணனுக்கு ஸந்தோஷம் விளைப்பாயாக' என்றனர். மஹா

பாஹுபலவும் எதிர்க்கமுடியாதவனுமாகிய கும்பகர்ணன் அண்ணனுடைய ஆஜ்ஞையைக் கேட்டு அப்படியே யென்று படுக்கையினின்று எழுந்தனன். அவன் ஸந்தோஷமுற்று முகத்தை அலம்பி ஸ்நானஞ் செய்து மிகவும் அலங்கரித்துக்கொண்டு தாஹம் உண்டாகப் பெற்று பலவ்ருத்தியை விளைக்கவல்ல மத்யத்தைச் சீக்ரமாகக் கொண்டு வாருங்களென்று த்வரைப்படுத்தினன். அனந்தரம் கும்பகர்ணனைச் சீக்கிரம் அழைத்துக்கொண்டு வாருங்களென்று ராவணனிட்ட ஆஜ்ஞையால் விரைகின்ற அந்த ராக்ஷஸர் மிகுந்த வேகத்துடன் சென்று நானாவகையான மத்யக் குடங்களைக் கொண்டு வந்து அந்தக் கும்பகர்ணனுக்குச் சீக்ரமாகக் கொடுத்தனர். அவன் இரண்டாயிரங் குடத்தைப் பருகி ராவணனிடம் போகத்தொடங்கினன். இயற்கையாகவே மதித்திருக்கிற அவன் மத்ய பானத்தினால் சிறிது மதம் அதிகமாகப் பெற்றுத் தேஜஸ்ஸும் பலமும் நிறைந்து ஸந்தோஷமுற்று ப்ரளயகால யமன் போல் ப்ரகாசித்தனன். அந்தக் கும்பகர்ணன் ராக்ஷஸக்கூட்டங்களோடு கூடி அண்ணனாகிய ராவண க்ருஹத்திற்குப் போகும்பொழுது அடிவைப்புக்களால் பூமியை நடுங்கச் செய்தனன். ஸூர்யன் கிரணங்களால் பூமியை விளங்கச் செய்வதுபோல், தன்தேஹ காந்தியால் ராஜமார்க்கத்தை விளங்கச் செய்துகொண்டு, அங்கு நாற்புறத்திலுமுள்ள பட்டணத்து ஜனங்கள் வரிசையாகக் கைகூப்பி வணங்கப்பெற்று, தேவேந்த்ரன் ப்ரஹ்மதேவனது க்ருஹத்திற்குப் போவதுபோல் ராவண க்ருஹத்திற்குப் போயினன். லங்கைக்கு வெளியிலுள்ள வானரர்கள், அளவிடமுடியாத உருவமுடையவனும் பர்வத சிகரம் போன்றவனும் சத்ருக்களை

அழிப்பவனும் ராஜமார்க்கத்தில் போகின்றவனுமாகிய அந்தக் கும்பகர்ணனைத் திடீலென்று கண்டு, பூதபதிகளாயினும் மிகவும் பயந்தனர். சில வானரர் பயத்தினால் பீடிக்கப்பட்டுச் சரண்யனாகிய ராமனைச் சரணமடைந்தனர். சிலர் வருந்தித் தரையில் விழுந்தனர். சிலர் பயத்தினால் பீடிக்கப்பட்டுத் திசைகளைக் குறித்து ஓடிப்போயினர். சிலர் தரையில் படுத்தனர். பர்வத சிகரம் போன்று கிரீடம் அணிந்து தேஹகாந்தியால் ஸூர்யனை ஸ்பர்சிக்கிறவன்போல் விளக்கமுற்று வளர்ந்து அற்புதமான உருவத்துடன் புலப்படுகின்ற அந்தக் கும்பகர்ணனைக் கண்டு வானரர்கள் பயத்தினால் வருந்தி ஆங்காங்கு ஓடிப்போயினர். அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விபீஷணன் கும்பகர்ண வ்ருத்தாந்தத்தை ராமனுக்குக் கூறுதல்.

அப்பால் மஹாதேஜஸ்வியும் மஹாவீரனுமாகிய ராமன், கிரீடந்தரித்துப் பெருந்தேஹத்துடன் போகின்ற கும்பகர்ணனைக் கண்டனன். மற்றும், பர்வதம் போல் பருத்த உருவமுடையவனும், முன்பு ஆகாயத்தை அளக்க முயன்ற வல்லமை அமைந்த நாராயணனைப்போல் புலப்படுகின்றவனும் நீர்கொண்ட மேகம் போல்கறுத்துப் பொன்தோள்வளைகளை அணிந்தவனும் ராக்ஷஸ ஶ்ரேஷ்டனுமாகிய கும்பகர்ணனை, வில்லைப் பிடித்து நிற்கின்ற ராமன் மீளவும் நன்றாக உற்றுப் பார்த்தனன். அந்தக் கும்பகர்ணனைக் கண்டு மீளவும் அவ்வானர மஹாஸைன்யம் முழுவதும் ஓடிற்று. ராமன் வானரஸைன்யம் ஓடுவதையும், ராக்ஷஸனாகிய

கும்பகர்ணன் உத்ஸாஹத்துடன் வளர்வதையும் கண்டு ஆச்சர்யத்துடன் விபீஷணனை நோக்கி 'லங்கையில் பர்வதம்போன்ற உருவம் அமைந்து கிரீடந் தரித்துக் கண்கள் பொன்னிறமாயிருக்கப்பெற்ற ஓர் வீரன் மின்னலோடு கூடின மேகம்போல் புலப்படுகின்றானே! இவன் யாவன்? பூமிக்கெல்லாம் த்வஜம்போல் இதோ ஒருவன் மிகுதியும் உயர்ந்து புலப்படுகின்றனன். இவனைப் பார்த்து வானரர்களெல்லோரும் ஆங்காங்கு ஓடுகின்றனர். இந்தப் பெருந்தேஹமுடையவன் யாவன்? ராக்ஷஸனா? அஸுரனா? எனக்கு விவரித்து மொழிவாயாக. நான் இதுவரையில் இப்படிப்பட்ட மஹாபூதத்தை என்றும் பார்த்ததில்லை' என்றனன். எப்படிப் பட்ட கார்யத்தையும் நன்கு நிறைவேற்றவல்ல ராஜகுமாரனாகிய ராமன் இங்ஙனம் வினவுகையில், மஹாப்ராஜ்ஞனாகிய அந்த விபீஷணன் அவனைப் பார்த்து இவன் விஶ்ரவஸ்ஸின் புதல்வனாகிய கும்பகர்ணன்; யுத்தத்தில் யமனையும் தேவேந்த்ரனையும் ஜயித்தவன்; ப்ரதாபசாலி. உருவத்தின் உயர்த்தியும் பருமனுமாகிய அளவில் இவனைப்போன்ற ராக்ஷஸன் மற்றொருவனும் இல்லை. ராமா! யுத்தத்தில் தேவதைகளும் தானவர்களும் யக்ஷர்களும் பன்னகர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் வித்யாதரர்களும் கின்னரர்களும் ஆயிரமாயிரமாக நிறைந்து வந்தும், இவனால் தோல்வியடைந்தனர். மஹாபலனாகிய கும்பகர்ணன் கையில் சூலத்தை ஏந்தி அகன்ற கண்களுடன் யுத்தத்தின் முனையில் வந்து நிற்கையில், தேவதைகளும் இவனை அடிக்க முடியாமல் 'இவன் த்ரிலோக ஸம்ஹாரியான காலனே' என்று ப்ரமித்தனர். மஹாபலனாகிய இந்தக் கும்பகர்ணன் வரம் பெற்றமையால் மாத்ரமே அன்று;

இயற்கையாகவும் மிகுந்த பலமுடையவன். ராவணன் முதலிய மற்றை ராக்ஷஸோத்தமர்களுக் கெல்லாம் பலம்வரபஹிமையால் விளைந்ததேயாகும். இவன்பிறந்த வுடனே மஹாபலனுகிப் பசியினுல் வருந்திப் பலவாயிரம் ப்ராணிகளை பக்ஷித்தனன். அங்ஙனம் இவன் ப்ரஜை களையெல்லாம் பக்ஷித்துக்கொண்டிருக்கையில், அவர் கள் பயத்தினுல் பீடிக்கப்பட்டு, தேவேந்த்ரனைச் சரணம் அடைந்து அந்த ஸங்கதியை அவனுக்குச் சொல்லினர். அந்த தேவேந்த்ரன் கோபித்துக் கூரான வஜ்ராயுதத்தினுல் கும்பகர்ணனை அடித்தனன். மஹா பலனுகிய கும்பகர்ணன் அங்ஙனம் வஜ்ராயுதத்தினுல் அடிக்கப்பட்டுச் சிறிது நேரம் நடுக்கமுற்றிருந்து, உடனே கோபத்தினுல் உரக்க இறைச்சலிட்டனன். முன்னமே பயந்திருந்த ப்ரஜைகளெல்லோரும் புத்தி யிற் சிறந்த அந்தக் கும்பகர்ணன் அங்ஙனம் உரக்க இறைச்சலிடுவதைக் கண்டு மற்றும் பயமுற்றனர். அப்பொழுது மஹாபலனுகிய கும்பகர்ணன் கோபத்தி னுல் ஐராவதத்தினுடைய தந்தத்தைப் பிடுங்கி இந்த்ர னுடைய மார்பில் அடித்தனன். அவ்விந்த்ரனும் கும்ப கர்ணனுடைய அடியால் மிகுதியும் வருந்திக்கோபத்தி னுல் ஜ்வலித்தனன். அப்பால் தேவதைகளும் ப்ரஹ்ம ரிஷிகளும் தானவர்களும் உடனே ஒரே காலத்தில் விஷாதம் (வருத்தம்) அடைந்தனர். தேவேந்த்ரன் ப்ரஜைகளுடன் ப்ரஹ்மதேவனிடஞ் சென்றனன். அங் ஙனஞ் சென்ற ப்ரஜைகளும் இந்த்ரனும் கும்பகர்ண னுடைய துஷ்கார்யத்தை அந்தப்ரஹ்மதேவனுக்குத் தெரிவித்தனர்; ப்ரஜைகளை பக்ஷிப்பதும் தேவதை களை அவமதிப்பதும் ரிஷிகளின் ஆஶ்ரமங்களை த்வம்

ஸஞ்செய்வதும் பரஸ்த்ரீகளை அபஹரிப்பதும் ஆகிய இவை முதலிய கும்பகர்ணனுடைய துஷ்டகார்யங்களை யெல்லாஞ் சொல்லினர். அவர்கள் அந்த ப்ரஹ்மதேவனைப் பார்த்து 'இந்தக் கும்பகர்ணன் இப்படியே தினந்தோறும் ப்ரஜைகளை பக்ஷித்துக்கொண்டிருப்பானாயின், இனி ஸ்வல்ப காலத்திற்குள்ளேயே உலகமெல்லாம் சூன்யமாய்விடும்' என்றனர். இந்த்ரன் தேவதைகள் முன் நின்று மொழிந்த வார்த்தையைக் கேட்டு, ப்ரஹ்மதேவன் ராக்ஷஸர்களை வரவழைத்து அவர்களில் கும்பகர்ணனைக் கண்டனன். ப்ரஹ்மதேவனும் கும்பகர்ணனைக் கண்டவுடன் மிகவும் பயமுற்றனன். அங்ஙனம் அந்த ப்ரஹ்மதேவன் இந்த ராக்ஷஸனைப் பார்த்து நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தி ஸமீபத்தில் வைத்துக்கொண்டு 'விச்ரவஸ்ஸு லோக விநாசத்திற்காக உன்னைப் பிறப்பித்தனன். இது வாஸ்தவமே. ஆகையால்[1] நீ இதுமுதல் செத்தாற்போல் படுத்து நித்ரித்துக்கொண்டிருப்பாயாக' என்றனன். அனந்தரம் அந்தக் கும்பகர்ணன் ப்ரஹ்ம சாபத்தினால் பரிபவப்பட்டு ப்ரபுவாகிய ராவணனுக்கெதிரில் போய் விழுந்தனன். அப்பால் ராவணனும் மிகுதியும் பரபரப்புற்று ப்ரஹ்மதேவனைப் பார்த்து 'ப்ரஹ்மதேவனே! நன்கு வளர்ந்து ஸ்வர்ணம்போல் ரமணீயமாகிய ஓர் வ்ருக்ஷத்தை, அது பலிக்குங் காலத்தில் வெட்டிப் போகடுவதுபோலிருக்கிறது. ப்ரஜைகளுக்கெல்லாம் நாதனே! உனது பேரனாகிய

---

1. இதுவே ப்ரஹ்மசாபம். இது கும்பகர்ணன் 'தவஞ்செய்த பின்பு உண்டாயிற்று. முதலிலேயே உண்டாயிற்றென்னில்—செத்தாற்போல் படுத்து நித்ரிப்பவனுக்குத் தவஞ்செய்வது நேராதாகையால் தவத்திற்குப் பின்பே உண்டாயிற்றென்றுணர்க.

இவனை இங்ஙனம் சபிப்பது யுக்தமன்று. உன் வார்த்தையும் அபத்தமாக நேராது. ஆகையால் இவன் நித்ரித்துக்கொண்டே இருப்பான்; ஸந்தேஹமில்லை. ஆயினும் இவன் நித்ரிப்பதற்கும் விழித்துக்கொள்வதற்கும் ஒரு காலநியதியையாவது ஏற்பாடு செய்ய வேண்டும்' என்றனன். ப்ரஹ்மா ராவணன் சொன்னதைக் கேட்டு, 'இந்தக் கும்பகர்ணன்[1] ஆறு மாதங்களுக்குக் குறையாமல் தூங்குவதும் ஆறு மாதங்களுக்கொருநாள் விழித்துக்கொள்வதுமாயிருப்பான். இவ்வீரன் ஆறுமாதத்திற்கொருநாள் தூங்கி யெழுந்து பசித்து வாயைத் திறந்துகொண்டு பூமியில் திரிபவனுகிச் சினந்த அக்னிபோல் உலகங்களைப் பக்ஷிப்பான்' என்றனன். ராக்ஷஸராஜனுகிய ராவணன் உன் பாக்ரமத்திற்கு பயந்து வ்யஸனம் அடைந்து இப்பொழுது தூங்கிக்கொண்டிருந்த கும்பகர்ணனை எழுப்பினன். பயங்கர பராக்ரமனுகிய அவ்வீரன் தன் க்ருஹத்தினின்று புறப்பட்டு மிகுதியும் கோபித்தவனுகி வானர்களைப் பக்ஷிக்க ஓடிவருவான். வானரர்கள் இப்பொழுது கும்பகர்ணனைப் பார்த்தவுடனே பயந்தோடுகின்றனர்களே! இனி யுத்தத்தில் இவன் கோபித்தவனுகி எதிர்ப்பானுயின் இவ்வானரர்கள் எப்படி தடுப்பார்கள்? 'இது ராக்ஷஸர்களால் மிக உன்னதமாக நிர்மிக்கப்பட்ட அற்புதமான ஒரு யந்த்ரமேயல்லது வேறென்று

---

1. இங்கு 'ஶயிதா ஹ்யேஷ ஷண்மாஸாநேகாஹஞ் ஜாக்ரிஷ்யதி' என்று மூலம். இங்கு ஆறுமாதங்களென்று சொல்லினும், 'நவஷட்ஸப்தசாஷ்டௌச மாஸாந்' என்று முன்பு ஒன்பது ஆறு ஏழு எட்டு மாதங்கள் நியதியில்லாமல் தூங்குவதாகச் சொல்லியிருக்கையால், ஆறுமாதங்களுக்குக் குறையாதிருக்குமென்று பொருள் கொள்க.

மன்று' என்று வானரர்களெல்லோர்க்கும் சொல்ல வேண்டும். அவர்கள் அங்ஙனம் அறிந்து இவ்விஷயத்தில் நிர்ப்பயமாயிருப்பார்கள்' என்றனன். விபீஷணன் யுக்தி அமைந்திருக்கும்படி ஸமூகமாகச் சொன்ன வசனத்தைக் கேட்டு ராமன் அப்பொழுது ஸேனுபதியான நீலனைப் பார்த்து 'அக்னிகுமாரனே. நீலா! நீ போய் ஸமஸ்த ஸைன்யங்களையும் வ்யூஹங்களாக ஏற்படுத்தி லங்கையிலுள்ள வாசற்படிகளையும் சர்யாஸ்தானங்களையும் சாரங்களையும் ஆக்ரமித்து நிற்பாயாக; யுத்தத்திற்கு வேண்டிய பர்வத சிகரங்களையும் வ்ருக்ஷங்களையும் சிலைகளையும் இப்பொழுதே குவியல் குவியலாக ஸித்தப்படுத்தி வைப்பாயாக. வானரர்களெல்லோரும் பர்வதங்களை ஏந்திக் கத்தி முதலிய ஆயுதங்களைத் தரித்திருப்பார்களாக' என்றனன். வானரஸேனுபதியும் கபிஸ்ரேஷ்டனுமாகிய அந்த நீலன் ராமனது ஆஜ்ஞையைச் சிரஸ்ஸில் வஹித்து அப்படியே வானரஸேனைக்கு ஆஜ்ஞை செய்தனன். அனந்தரம் பர்வதாகாரர்களான கவாக்ஷன் சரபன் ஹனுமான் அங்கதன் ஆகிய வானரோத்தமர்கள் பர்வத சிகரங்களை ஏந்தி லாங்காத்வாரத்திற்குப் போய்த் தகைந்தனர். ராமன் மொழிந்தது கேட்டு ஜயசீலர்களும் வீரர்களுமாகிய வானரர்கள் வ்ருக்ஷங்களைக்கொண்டு நகர ரக்ஷணத்தின்பொருட்டு வெளியில் திரிகின்ற சத்ருஸைன்யங்களை மர்த்தித்துவிட்டனர். அப்பால் நானுவித பர்வதங்களை ஏந்தின கைகளுடன் திகழ்வுற்று லங்கையின் ப்ராகாரத்திற்கருகில் இருக்கின்ற உக்ரமான அவ்வானரஸைன்யம் பர்வதத்தின் ஸமீபத்தில் பயங்கரமாக மூடிக்கொண்டிருக்கிற மஹா

மேகஸமூஹம்போல் ப்ரகாசித்தது. அறுபத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் தன்னிடம்வந்த கும்பகர்ணனை நல்வார்த்தை சொல்லி ராமனால் விளைந்த ஆபத்தை அறிவித்து அதைத் தீர்க்கும்படி வேண்டிக்கொள்ளல்.

மஹாபராக்ரமனும் எப்படிப்பட்டவர்க்கும் ஜயிக்க முடியாத ராக்ஷஸஸ்ரேஷ்டனுமாகிய அந்தக் கும்பகர்ணன் அகாலத்தில் எழுந்தமையால் தூக்கமயக்கத்தினாலும் மத்யபானஞ்செய்த மயக்கத்தினாலும் தழுதழுப்புற்று அனேகமாயிரம் ராக்ஷஸர்களால் சூழப்பட்டு, அழகுடன் விளங்குகின்ற ராஜமார்க்கத்தை அடைந்து, பட்டணத்து ஜனங்கள் தமது மாளிகையினின்று புஷ்பவர்ஷங்களை இறைக்கப்பெற்று நடந்தனன். அவன் பொற்சாளரங்கள் நிறைந்து ஸூர்யமண்டலம்போல் திகழ்வதும் அகன்றதும் ரமணீயமுமாகிய ராவணபவனத்தைக் கண்டனன். அவன் அப்பொழுது ஸூர்யன் மேகமண்டலத்தில் ப்ரவேசிப்பதுபோல் ராவண க்ருஹத்தில் ப்ரவேசித்து, தூரத்தில் மற்றொரு கட்டில் ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்திருக்கின்ற தமையனாகிய ராவணனை, தேவேந்த்ரன் ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கிற ப்ரஹ்மதேவனைக் காண்பதுபோல் கண்டனன். அவன் ராக்ஷஸக் கூட்டங்கள் நிறைந்த தன் தமையனது க்ருஹத்தில் ப்ரவேசிக்கும்பொழுது அடிவைப்புக்களால் பூமியை நடுங்கச்செய்தனன். அக்கும்பகர்ணன் தன் தமையனது பவனத்தில் ப்ரவேசித்து வாசற்படியைத் தாண்டி உள்ளே புஷ்பக

விமானத்தில் மனவருத்தத்துடன் உட்கார்ந்திருக்கிற அண்ணனைக் கண்டனன். அப்பால் ராவணன், கும்பகர்ணன் வந்ததைக் கண்டு மிகுதியும் ஸந்தோஷமுற்று ஆஸனத்தினின்று திடீலென எழுந்து ஆஸனத்தின் அருகே அழைத்துக்கொண்டு போயினன். பிறகு ராவணன் மீளவும் ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்தபின்பு, மஹாபலனாகிய கும்பகர்ணன் அண்ணனது பாதங்களில் வந்தனஞ் செய்து 'நான் செய்யவேண்டியதென' என்று வினவினன். ராவணன் அதற்கு ஸந்தோஷமுற்று எழுந்து அவனை அணைத்துக்கொண்டனன். தமையனாகிய ராவணன் அங்ஙனம் அவனைக் கட்டியணைத்துத் தகுந்தபடி கௌரவிக்கையில் கும்பகர்ணன் அழகியதான திவ்ய ஸிம்ஹாஸனத்தில் ஆரோஹித்தனன். அப்பொழுது மஹாபலனாகிய கும்பகர்ணன் அங்ஙனம் ஆஸனத்தில் உட்கார்ந்து கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று ராவணனைப் பார்த்து 'ராஜனே! நீ நித்ரைபோகின்ற என்னை இவ்வளவு ஆதரவுடன் ஏன் எழுப்பினை? உனக்கு எவனிடத்தினின்று பயம் உண்டாயிருக்கின்றது? எவன் இப்பொழுது மரணம் அடைய விரும்புகின்றனன்? சொல்வாய்' என்று வினவினன். ராவணன், கோபத்துடன் உட்கார்ந்திருக்கிற தம்பியாகிய கும்பகர்ணனைப் பார்த்துச் சிறிது கோபத்தினால் கண்கள் சுழலப்பெற்று 'மஹாபலனே! நீ படுத்துக்கொண்டு இப்பொழுதைக்கு வெகுகாலம் ஆயிற்று. இங்ஙனம் ஸுகமாக நித்ரித்துக்கொண்டிருக்கையால், நீ எனக்கு ராமனாலுண்டான பயத்தை அறியாதிருக்கின்றனை. இதோ பலிஷ்டனும் தசரதகுமாரனுமாகிய ராமன் ஸுக்ரீவனோடும் வானரஸேனையோடுங்கூடி

ஸமுத்ரத்தைத் தாண்டி இவ்விடம் வந்து நம்மை வேரோடு கண்டிக்கின்றனன்; மூலபலத்தைப் பாழ்செய்கின்றன். ராமன் ஸமுத்ரத்தில் தான்கட்டின ஸேது மார்க்கத்தினுல் ஸுகமாக வந்து, எனது லங்கையிலுள்ள வனங்களையும் உபவனங்களையுமெல்லாம் ஸமுத்ரம்போல் கரையில்லாத வானரஸைன்யத்தினுல் முழுவதும் நிறைத்து ஒரே வானரமயமாகச் செய்திருக்கின்றனன்; காண்பாய். அப்பா! இந்த துக்கத்தை என்னவென்று சொல்லுவேன்! நமது ராக்ஷஸர்களில் மிகவும் மேன்மையுற்றவர் பலரும் வானரர்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டனர். நான் ஒரு பொழுதாயினும் யுத்தத்தில், வானர வீரர்களில் ஒருவனுவது செத்து வானரஸேனை க்ஷீணித்ததாகக் காணவேயில்லை. இதுவே அன்று, வானரர்கள் இதற்கு முன்பும் எப்பொழுதாயினும் தோல்வி அடைந்ததே இல்லை. நீ மஹாபலமுடையவன். இப்பொழுது இப்படிப்பட்ட பயம் உண்டாயிருக்கின்றது நீ இப்பொழுது இவ்வானரர்களை யெல்லாம் நாசஞ்செய்து இந்த லங்காபுரத்தைக் காப்பாயாக. அதற்காக உன்னைத் தூக்கத்தினின்று எழுப்பினேம். எனது ஐச்வர்யமெல்லாம் பாழாய்விட்டது. லங்கையிலுள்ள மேலான ராக்ஷஸர்களெல்லோரும் மாண்டு இப்பொழுது பாலர்களும் வ்ருத்தர்களுமே மிகுந்திருக்கின்றனர். நானும் இந்தப் பட்டணமும் இங்ஙனம் இருப்பதை அறிந்து இந்த லங்கையை இப்பொழுது ரக்ஷிப்பாயாக. மஹாபாஹு! நீ உனது அண்ணனுக்காகப்பிறர்க்குச் செய்ய முடியாத இந்தக் கார்யத்தை நிறைவேற்றுவாயாக. பரந்தபனே! இதுவரையில் எப்பொழுதாயினும் நான் உன்னுடன் இங்ஙனம் மொழிந்ததேயில்லை. மற்ற

எவனையும் நான் இப்படிச் சொன்னதில்லை. உன்னிடத்தில் மாத்ரம் எனக்கு எப்பொழுதும் மிகுந்த ஸ்னேஹமும் கௌரவமும் உண்டு. ராக்ஷஸதிலகனே! தேவாஸுரயுத்தங்களில் நீ பலதடவைகளில் தேவதைகளைத் தனித்தனியே ஜயித்திருக்கின்றனை. அஸுரர்களையுங்கூட யுத்தத்தில் ஜயித்திருக்கின்றனை. உன் பராக்ரமம் பயங்கரமாயிருப்பதல்லவா? ஆகையால் உன்வீர்யத்தையெல்லாம் இப்பொழுது கைப்பற்றுவாயாக: ஸமஸ்த ப்ராணிகளிலும் உனக்கு நிகரான பலமுடையவன் எவனுமே புலப்படான். உனக்கு யுத்தமென்றால் மிகவும் ப்ரியமல்லவா? பந்துக்களிடத்திலும் நீ மிகுந்த ப்ரீதியுடையவன். ஆகையால் எனக்கு ப்ரியமும் ஹிதமுமாகிய இவ்வுத்தம கார்யத்தை, நம்மிருவர்க்கும் உள்ள ப்ரீதிக்குப் பொருந்துமாறு நிறைவேற்றுவாயாக. பெருங்காற்று கிளம்பிச் சரத்காலமேகத்தை த்வம்ஸஞ் செய்வதுபோல் நீ உன் தேஜஸ்ஸினால் சத்ரு ஸைன்யங்களை அழிப்பாயாக' என்றனன். அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கும்பகர்ணன் முன்னமே தான்சொன்னதைக் கேளாமைக்கு வெறுக்கராவணன் கோபித்தலும், கும்பகர்ணன் அவனிஷ்டப்படி சத்ருக்களை ஜயிப்பதாக ப்ரதிஜ்ஞை செய்தலும்.

ராக்ஷஸாதிபதியாகிய ராவணன் புலம்பினாற்போல் மொழிந்த வார்த்தையைக் கேட்டுக் கும்பகர்ணன் சிரித்து இவ்வனஞ் சொல்லத்தொடங்கி, 'முன்பு நாம் ஆலோசனை செய்த ஸமயத்தில் எந்த தோஷம் ஸம்ப

விக்குமென்று நிச்சயித்தோமோ, அந்த தோஷம் இப்பொழுது ஹிதத்தை விரும்புவோர்களாகிய அவாது வார்த்தையைக் கேளாமையால் உனக்கு நேரிட்டது. சத்ருவால் பயம் நேருமென்று முன்பு நாம் ஆலோசித்த விபத்தே ஸமீபித்தது. மஹாபாதகிகளுக்கு நாகத்தில் விழுவது தவருமல் ஸம்பவிக்குமாபோல்; ஸீதையை அபஹரித்தமையாகிற நீ செய்த பாபகார்யத்தின் பலன் சீக்ரமாகவே உனக்கு நேரிட்டது. மஹாராஜனே! நீ கேவலம் வீர்ய கர்வத்தினுல் ஸீதையை அபஹரித்த இந்தக் கார்யத்தை, அபஹரிப்பதற்கு முன்னமே 'நல்லதா? அன்ரு?' என்று ஆலோசிக்காமற் போயினை. அதனுல் தோஷம் விளையுமென்பதையும் விசாரிக்கவில்லை. ப்ரஜைகளைப் பாதுகாத்து வருபவனுகிய எந்த மன்னவன் கார்யத்தைத் தொடங்குவதற்கு முன்னமே விசாரிக்கவேண்டிய ஆலோசனுதிகளைப் பின்பும், பின்னுல் செய்யவேண்டிய கார்யத்தை முன்பும் செய்வானே, அவன் நீதியும் அநீதியும் தெரியாதவன். தகாத தேசத்திலும் தகாத காலத்திலும் செய்யப்பட்ட கார்யங்கள் தேசகாலங்களின் குறைவினுல் விபரீதமாகி, மந்த்ரங்களை அத்யயனஞ்செய்வது முதலியவை இல்லாமையால் ஹோமஞ்செய்தற்குத் தகாத மூடர்களால் ஹோமஞ்செய்யப்பட்ட ஹவிஸ்ஸுக்கள்போல் பயனற்றவையேயாகும். எவன் மந்த்ரிகளோடு நன்கு ஆலோசித்து ஸித்தாந்தஞ் செய்துகொண்டு [1] உத்தம மத்யம அதமங்களென்று

1. தான் பலிஷ்டனுகிப் பிறன் துர்ப்பலனு யிருக்கும்பொழுது செய்யவேண்டிய யுத்தம் உத்தமகார்யம். தானும் பிறனும் ஸமான பலர்களாயிருக்கும்பொழுது செய்யவேண்டிய ஸந்தி, மத்யம கார்யம். தான் துர்ப்பலனுய்ப் பிறன் பலிஷ்டனுயிருக்கும்பொழுது

மூன்றுவகைப்பட்ட கார்யங்களை, அவற்றை ஆரம்பிப்ப தற்கு வேண்டிய உபாயம், அவற்றிற்கு வேண்டிய த்ரவ்யஸம்பத்தி, அவற்றைச் செய்யத்தகுந்ததேசகால விசேஷங்கள் அவற்றிற்கு நேரக்கூடிய இடையூறுக ளைத் தடுத்தல், அவற்றின் ஸித்தி ஆகிய இவ்வைந் துடன் கலந்து நடத்துவதில் மிகவும் கண்வைத்திருப் பானே, அவனே நீதிமார்க்கத்தை அநுஸரிப்பவன்; அவனே நீதியின் பயனைப்பெறுவான். எவன் தன் புத்தியை நல்லவழியில் உபயோகப்படுத்தி மந்த்ரிக ளுடன் கலந்து ஆலோசித்து ஸ்னேஹிதர்களோடுகூடி விசாரித்து நீதிநெறிவழுவாமல் கார்யத்தை நிச்சயிப் பானோ, அம்மன்னவன் நீதிமார்க்கத்தை அநுஸரிப்பவ னுவான். ராக்ஷஸேஶ்வரா! புருஷன் ஶாஸ்த்ரத்தில் விதித்தபடி விடியற்காலத்தில் தர்மத்தையும் மத்யாஹ் னத்தில் அர்த்தத்தையும் ஸாயங்காலத்தில் காமத்தை யும் பணிந்து வரவேண்டும். அல்லது விடியற்காலத்தில் தர்ம அர்த்தங்களையும், மத்யாஹ்னத்தில் அர்த்த தர்மங்களையும், ஸாயங்காலத்தில் காமதர்மங்களையும் ஆக இப்படி ஒவ்வொரு காலத்திலும் இரண்டிரண் டாக நடத்திக்கொண்டு வரவேண்டும். அல்லது ஸாயங்காலத்தில் காமத்தையும் தர்ம அர்த்தங்களை

---

செய்யுந் தானம் அதமகார்யம். இம்மூன்றுகார்யங்களையுங் குறித்து மந்த்ரிகளுடன் ஆலோசித்து அவற்றை ஆரம்பிக்கவேண்டிய உபா யம் இன்னதென்றும் அதற்கு வேண்டிய த்ரவ்யஸம்பத்தி இவ்வள வென்றும், நடத்தவேண்டிய தேசகாலங்கள் இவையென்றும், அதில் வரக்கூடிய விக்னங்களுக்குத் தடை இப்படிப்பட்டதென் றும்; அது ஸித்திக்கும் விதம் இதுவென்றும் நிஷ்கர்ஷித்துக் கொண்டு செய்பவனே நீதிமார்க்கத்தை அறிந்தவனுவானென்ற ருத்து.

யும் ஆக மூன்றையும் பணியலாம். இதுவன்றி இவற்றை அகாலத்தில் பணியலாகாது. ஸர்வகாலத்திலும் கேவல காமத்தையே அநுஸரிப்பவன் புருஷாதமனே யாவான். இம்மூன்றிலும் சிறந்திருப்பதாகிய தர்மத்தைக் கேட்டு எந்த ராஜனாவது ராஜனைப் போன்ற மற்றவனாவது அதை அறியானோ, அவன் கற்ற கல்வியெல்லாம் நடத்தையில் வந்து முடியாமையால் வீணேயாகும். ராக்ஷஸோத்தமா! எவன் மனத்தை வசப்படுத்தி அதற்குத் தகுந்தகாலத்தில் சத்ருவினிடம் போய்ப் பணங்கொடுக்கையாகிற தானம், நல்வார்த்தை சொல்லுகையாகிற ஸாமம், அவர்க்கும் அவரது புத்ராதிகளுக்கும் பகையை விளைக்கையாகிற பேதம், பராக்ரமித்து யுத்தஞ் செய்கையாகிற தண்டம் ஆகிய இந்நான்கில் ஒவ்வொன்றையாவது எல்லாவற்றையுமாவது, அவற்றை நிறைவேற்றும் ப்ரகாரமாகிய நயத்தையும் நிறைவேற்றுமையாகிற அநயத்தையும் தர்ம அர்த்த காமங்களையும் மந்த்ரிகளுடன் நன்கு ஆலோசித்து அந்தந்த காலங்களில் அநுஸரித்து வருவானோ, அவன் உலகத்தில் வ்யஸனத்தை அடையமாட்டான். எந்த மன்னவன் வஸ்துக்களின் உண்மையை நன்றாக அறிந்து மந்த்ரிகளுடன் கூடித் தனக்கு ஹிதம் உண்டாகும்படி செய்யவேண்டியது எதுவோ, எது செய்யத்தகாததோ, அதையெல்லாம் ஆலோசித்து நிச்சயித்துக் கொண்டு செய்யக்கூடியதை மாத்ரஞ் செய்வானோ, அவன் இவ்வுலகத்தில் ஸுகமாக ஜீவிப்பான். ராஜ விஷயம் அப்படியிருக்க, மந்த்ரிகளோ என்றால் நீதி சாஸ்த்ரங்களை குருமுகமாகக் கேட்டறியாமல் வேஷத்தினால் மாத்ரம் புருஷர்களாகத் தோன்றிப் பசுக்கள்

போல் ஆஹார நித்ராதிகளைமாத்ரமே அறிந்திருப்பவருமாகி மன்னவன் ப்ரமித்து ராஜகார்ய விசாரங்களில் தம்மை ஆலோசனை சொல்லும் பொருட்டுச் சேர்த்துக் கொள்கையில் ஊஹ அபோஹங்களில்லாமலே வெறுந் [1] தார்ஷ்ட்யத்தினால் ஏதோ ஒன்றைப் பிதற்ற விரும்புகிறார்கள். சாஸ்த்ரங்களைச் சிறிதும் அறியாத அம்மந்த்ரிகளின் அஹிதவசனங்களை, அர்த்த சாஸ்த்ரமறியாதவராயினும் அழியாத ஸம்பத்தை ஆசைப்படுகிற அரசர்கள் எள்ளளவும் ஏற்றுக்கொள்ளலாகாது. எவர் தமக்கு ஶாஸ்த்ரஜ்ஞானமில்லாமல் வெறுந் தைர்யத்தினால் வாஸ்தவத்தில் ஹிதமாகாததாயினும் மேலுக்கு ஹிதம்போல் தோற்றுகிற பொருள்களை அக்ரமமாகச் சொல்வார்களோ, அவர்கள் கார்யத்தைக் கெடுப்பவராகையால் முன்னமே பரீக்ஷித்துத் தெரிந்துகொண்டு அவர்களது வார்த்தையைக் கேளாதிருப்பது மாத்ரமேயன்றி அவர்களை மந்த்ராலோசனையில் சேர்த்துக்கொள்ளாமல் வெளிப்படுத்தவேண்டும். இப்படிப்பட்ட துர்மந்த்ரிகளாயிருப்பவர் அஹிதஞ்சொல்வது மாத்ரமே அன்று; உபாயங்களை அறிந்த சத்ருக்களால் தூண்டப்பட்டு அரசனை நாசஞ் செய்ய முயன்று அவனுக்கு ப்ரயோஜனமான விஷயத்தில் விபரீத பலன்களை விளைக்கின்ற கார்யங்களை அவனைக்கொண்டு செய்விப்பார்கள். அரசன், அன்னம் லஞ்சம் வாங்கிக்கொள்கை முதலியவற்றால் சத்ருக்களுக்கு வசப்பட்டுத் தன்னிடத்தினின்று பிரிந்து நண்பர்கள்போல் நடனஞ்செய்து கார்யங்களில் சத்ருக்களாயிருக்கின்ற அம்மந்த்ரிகளை மந்த்ராலோசனை காலங்களில் பலவாறு பேசி அடையா

1. தார்ஷ்ட்யம்-பயமறியாமல் தீரமாயிருத்தல்.

ளங்களால் பரிசோதித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். 'அஸமர்த்தர்களான மந்த்ரிகள் விபரீத புத்தியுடையவராயினும் என்ன செய்யப் போகிறார்கள்' என்கிறாயோ? நிபுணர்களான சத்ருக்களால் லஞ்சங் கொடுப்பது முதலியவற்றால் ஸ்வாதீனப்படுத்தப்பட்ட மந்திரிகள், ஒரு கார்யஞ் செய்யவேண்டியதாயிருக்க அதற்கு விபரீதமான வேறு கார்யங்களில் தூண்டும் பொழுது முன் பின் பாராமல் அவர்கள் சொல்லுங் கார்யங்களை அங்கீகரித்து மனஞ் சபலமாகப் பெற்று அவற்றை அரசன் நடத்துவானாயின், க்ரௌஞ்ச பர்வதத்தில் ஸுப்ரஹ்மண்யன் செய்த ரந்த்ரத்தின் வழியாகப் பக்ஷிகள் நுழைவதுபோல், சத்ருக்கள் தாம் ராஜாவினிடத்தில் அந்த துர்மந்த்ரிகள் மூலமாய் நடத்தின ரந்த்ரத்தைக்கொண்டு உள்ளே நுழைந்து அவனை ஆக்ரமிப்பார்கள். எந்த மன்னவன், மந்த்ரவ்யவஹாரதிகளால் தன்னை வஞ்சனஞ்செய்ய முயன்றவனை அறியாமல் துர்மந்த்ரிகளைத் தொலைப்பது முதலியவற்றால் தன் ஸ்திதியைப் பாதுகாத்துக் கொள்ள நேராதிருப்பானோ, அவன் அனர்த்தங்களைப் பெறுவது மாத்ரமேயன்றி ஸிம்ஹாஸனத்தினின்றும் நழுவப்பெறுவான். இவ்விஷயத்தில் நம் தம்பியாகிய விபீஷணன் யாது மொழிந்தானோ, அதைச்செய்வாயாக. அதுவே நமக்கு இப்பொழுது ஹிதமாயிருப்பது. இனி உனக்கு எது செய்யவேண்டுமென்று விருப்பமுளதோ அதைச் செய்வாயாக' என்றனன். கும்பகர்ணன் சொன்னதைக் கேட்டு ராவணன் கோபித்துப் புருவத்தை நெரித்துக்கொண்டு இங்ஙனம் சொல்லத்தொடங்கி 'கும்பகர்ண! என்னைக் காட்டிலுஞ் சிறியனாகிய நீ பூஜிக்கத்தகுந்தவனும்

ஆசாரத்தை நடத்துபவனும் பெரியவனுமாகிய என்னை சிக்ஷிக்கின்றனை யென்ன? நீதி காலம் கடந்து போயிற்றுகையால் அந்த வார்த்தைகளால் வீண்ப்ரயாஸமேயன்றி வேறு பயனில்லை. ஆகையால் இதைச் சொல்லி உபயோகமென்ன? நீதியைக்கடந்த ஸமயத்திற்குத் தகுந்திருக்கிற பராக்ரமத்தை உபயோகப் படுத்துவாயாக. அநீதியைநீதியாக ப்ரமித்தோ, மனத்தில் தெளிவு பிறவாமையாலோ. பலவீர்யங்களால் விளைந்த கர்வத்தினாலோ, செய்ய வேண்டியதைச் செய்யாமற் போயினன்: இப்பொழுது நீதியைப் பாராட்டுங் காலங் கடந்துபோயிற்றுகையால் அப்படி செய்யவில்லையேயென்று அடிக்கடி சொல்லுவது வீணே. இந்த ஸமயத்திற்கு எது யுக்தமோ, அதையே இப்பொழுது செய்வாயாக. போனதைப்பற்றி புத்திசாலிகள் வருந்தப்படமாட்டார்கள். போனது போனதேயொழியத் திரும்பி வராது. உனக்கு என்னிடத்தில் ஸ்னேஹம் உளதாயின், உன் பராக்ரமம் உனக்குத் தெரிந்திருக்குமாயின், இப்பொழுது இந்த யுத்தம் அவஸ்யம் செய்ய வேண்டியதே யென்று உனக்கும் தோற்றுமாயின், என் அபநீதியால் விளைந்த தோஷத்தை உன் பராக்ரமத்தினால் ஸரிப்படுத்துவாயாக. தான் முயன்ற கார்யத்திற்கு அபாயம் நேருமென்று தோற்றுகையால் மனங் கலங்கி வருத்தமுற்றிருப்பவனை எப்பொழுதும் அருகே இருந்து தேற்றிக்கொண்டிருப்பவனே ஸ்னேஹிதனாவான். நீதியினின்று நழுவித் தடுமாற்றமுற்றிருப்பவர்க்கு ஸஹாயஞ் செய்யத் தெரிந்தவனே பந்துவாவான்' என்றனன். இங்ஙனம் கம்பீரமாகவும் நிஷ்டுரமாகவும் மொழிகின்ற ராவணனைப் பார்த்து, உடனே கும்பகர்ணன், இவன் கோபித்தானென்று

புருவநெருப்பினால் ஊஹித்துத் தெரிந்துகொண்டு மெதுவான வசனங்களால் மெல்ல மெல்ல இங்ஙனஞ் சொல்லத்தொடங்கினன். கும்பகர்ணன், தன் தமையன் மிகவும் இந்த்ரியங்கள் கலங்கிக் கோபிப்பதைக்கண்டு, மெல்ல மெல்ல அவனை நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்திக்கொண்டு 'ராக்ஷஸேந்த்ரனே! இந்த மனவருத்தம் போதும். கோபத்தைத்துறந்து ஸ்வஸ்தனாயிருப்பாயாக.[1] ராஜனே! நான் பிழைத்திருக்கையில், நீ 'ப்ரமித்தோ, தெளிவில்லாமையாலோ செய்யாமற் போயினன்' என்ற சிந்தையை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டியதில்லை. நீ எவன் நிமித்தமாகப் பரிதபிக்கின்றாயோ, அந்த ராமனை நாசஞ்செய்கிறேன். 'ஆனால் இப்படி ஏன் மொழிந்தாய்' என்கிறாயோ? ராஜனே! ஸாதாரணமான ஸ்னேஹத்தைப்பற்றியும், விசேஷித்து அண்ணன் தம்பிகளென்கிற ஸ்னேஹத்

1. இங்கு 'நைதந்மநஸி கர்த்தவ்யம் மயி ஜீவதி பார்த்திவ। தமஹம் நாஶயிஷ்யாமி யத்க்ருதே பரிதப்யஸே' என்பது மூலம் இதற்கு மற்றொரு பொருள்—(மயி ஜீவதி ஸதி) நான் பிழைத்திருக்கையில், (ஏதந்மநஸி நகர்த்தவ்யம்) நீ இந்தச் சிந்தையை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டாம். நான் பிழைத்திருப்பேனாயின், அப்பொழுது நீ இங்ஙனம் மனத்தில் சிந்திக்க வேண்டாமென்கை. அதாவது-நான் பிழைக்கப்போகிறதே இல்லையென்று கருத்து. (யத்க்ருதே) எந்த எனக்காக (பரிதப்யஸே) இவன் ஸுகமாகப் பிழைத்திருந்து என்கார்யத்தை நிறைவேற்றுகிறதில்லை யென்று பரிதபிக்கின்றாயோ, (தம் அஹம் நாஶயிஷ்யாமி) அப்படிப்பட்ட என்னை நானே ராமனைக்கொண்டு கொல்விப்பேன். நீ, நான் பிழைத்திருந்தும் உன் கார்யத்தைச் செய்கிறதில்லை யென்றல்லவோ பரிதபிக்கின்றாய். நான் ராமனால் என்னைக் கொல்வித்துக் கொள்கிறேன். அப்பால் பிழைத்திருந்தும் உன் கார்யத்தை நிறைவேற்றவில்லை யென்று பரிதபிக்க மாட்டாயென்று கருத்து.

தைப்பற்றியும், நீ கோபமுற்றுவது ஸந்தோஷமுற்று வது எப்படியிருப்பினும் உனக்கு நான் அவஶ்யம் ஹிதஞ் சொல்லவேண்டுமாகையால் அதைச்சொல்லி னன். மிகுந்த ஸ்னேஹமுடைய பந்துவுக்கு இப்படிப் பட்ட ஆபத்காலத்தில் செய்ய வேண்டியது சத்ருக் களை அழிக்கையே. அதை யுத்தத்தில் நடத்துகிறேன், காண்பாய. மஹாபாஹு! இப்பொழுது நான் யுத்தத் தின் முனையில் ராமனையும் லக்ஷ்மணனையும் வதித்து விடுகையில் வானர ஸைன்யமெல்லாம் ஓடிப்போதலைக் காண்பாய். நீண்ட புஜதண்டங்களை யுடையவனே! இப்பொழுது நான் யுத்தத்தினின்று ராமனது சிரஸ் ஸைத் துண்டித்துக் கொண்டுவருகையில் நீ கண்டு ஸுகம் அடைவாயாக; ஸீதை துக்கமுறுவாளாக. லங்கையில் இதுவரையில் தந்தமது பந்துக்கள் மாண்டு போகையால் அவர்களை இழந்து வருந்துகின்ற ராக்ஷ ஸர்களும் தமக்கு மிகுந்த ஸந்தோஷங் கொடுப்ப தாகிய ராமவதத்தை இப்பொழுது காண்பார்களாக. இப்பொழுது யுத்தத்தில் தமது பந்துக்கள் மாண்டு போகையால் துக்கித்திருக்கின்ற ராக்ஷஸர்களுக்கு, யுத்தத்தில் சத்ருவைக் கொன்று கண்ணீரைத் துடைத்து ஸுகத்தை விளைவிக்கின்றனன். இப் பொழுது பர்வதம்போன்ற உருவமுடைய வான ரோத்தமனாகிய ஸுக்ரீவன் ரக்தத்தில் நனைந்து ஸூர்யகாந்தியோடு கூடின மேகம்போல் புலப்பட்டுக் கொண்டு யுத்த பூமியில் விழுந்திருக்கக் காண்பாய். நிர்தோஷனே! ராமனை வதிக்க விருப்பமுற்றிருக்கிற இந்த ராக்ஷஸர்களும் நானும் ரக்ஷித்துக்கொண்டிருக் கையில், உன்னை இப்பொழுது ராமன் எப்படி வதிப் பான்? ராக்ஷஸாதிபதி! ராமன் என்னை வதித்தாலல்

லவோ, பின்பு உன்னை வதிப்பான். எனக்கோ பிழைத் திருக்கையில் சத்ருபரிபவத்தினால் விளையக்கூடிய பரிதாபம் ஒருகாலும் உண்டாகாது. என்னை ஒருவனும் கொல்ல வல்லனல்லன். நான் சாகாதிருக்கையில் உனக்கு பயம் எங்கிருந்து நேரக்கூடும்? பரந்தபனே! நிகரற்ற பராக்ரமமுடையவனே! உன் முழுமனச் சம்மதியோடு இப்பொழுதே எனக்கு யதேஷ்டமாக யுத்தஞ் செய்யும்படி அனுமதி கொடுப்பாயாக. நீ யுத்தத்திற்கு மற்றொருவனையும் அனுப்பவேண்டிய அவஸ்யமில்லை; நானொருவனே கார்யத்தை முடித்து விடுகிறேன். மஹாபலனே! உன் சத்ருக்களெல்லோரையும் நான் வதித்து விடுகிறேன். இந்த்ரனாவது யமனாவது அக்னியாவது குபேரனாவது வரினும் அவர்களோடும் யுத்தஞ்செய்கின்றனன். பர்வதம்போன்ற பெருஞ்சரீரமும் தீக்ஷணமான கோரைப்பற்களும் அமைந்து, கூரான வேலாயுதத்தை ஏந்தி, நான் ஸிம்ஹநாதஞ் செய்யத் தலைப்படுகையில் தேவேந்த்ரனும் பயந்து ஓடிப்போவானே! அதுவுமன்றி, நான் ஆயுதத்தை விட்டு வெறும் புஜபலத்தினால் பகைவரைப் பிடித்துப் பிடிக்கையில், பிழைக்க விருப்பமுற்றவன் எவனும் என்னெதிரில் நிற்க வல்லனல்லனே! எனக்கு சக்தியாவது கதையாவது கட்கமாவது கூரான பாணங்களாவது எவையுமே அவஸ்யமில்லை; கோபத்துடன் விரைந்து வருவேனாயின் வஜ்ராயுதத்தை ஏந்தின இந்த்ரனையும் வெறுங்கையினாலேயே வதித்து விடுவேன். அந்த ராகவன் என் முஷ்டி வேகத்தையுந் தாங்கி, தைர்யத்துடன் நிற்பானாயின், அப்பால் எனது பாணங்கள் ராமனது ருதிரத்தை (ரக்தத்தை)ப் பானஞ்செய்யக் காத்திருக்கின்றன. என் முஷ்டி

வேகத்தையே பொறுக்கமாட்டேனே; இனி நான் பாணங்களை எதிர்பார்க்க வேண்டிய அவஸ்யமேதுக்காக? (அந்த ராமன் என் முஷ்டிவேகத்தைப் பொறுத்து நிற்பானாயின் அதன்பிறகு அவனது பாண ஸமூஹங்கள் என் [1] குருதியைப் பானஞ் செய்யப் போகின்றன. அவன் என் முஷ்டி வேகத்தைப் பொறுக்கமாட்டானே; ஆகையால் என் குருதியை அவனது பாணங்கள் எங்ஙனம் பானஞ்செய்யப் போகின்றன). ராஜனே! நான் இருக்கும்பொழுது நீ ஏன் இங்ஙனம் சிந்தையால் வருந்துகின்றனை? நான் உன் பகைவரை வதிக்கும்பொருட்டுப் போக முயன்றிருக்கின்றனன். ராஜனே! ராமனிடத்தினின்றுண்டான பயத்தை விடுவாயாக. நான் இப்பொழுது யுத்தத்தில் ராமனையும் லக்ஷ்மணனையும் மஹாபலனான ஸுக்ரீவனையும், நமது லங்கையை தஹித்து ராக்ஷஸர் பலரையுங்கொன்ற ஹனுமானையும் வதித்து விடுகிறேன்; யுத்தத்திற்கு வந்திருக்கிற மற்றை வானரர்களெல்லோரையும் வதித்து விடுகிறேன். மற்றெவர்க்கும் பெறமுடியாத பெரும்புகழை உனக்கு நான் விளைவிக்க விரும்புகின்றனன். ராஜனே! இந்த்ரனாலாவது ப்ரஹ்மாவினாலாவது பயம் உண்டாயினும் அதையும் போக்கடிக்கிறேன். நான் கோபித்துக் கண்ணெடுத்துப் பார்த்தேனாயின், தேவதைகளும் தரையில் விழுந்து போவார்கள். யமனையுங்கூட அடக்கிவிடுவேன்; அக்னிதேவனையும் பக்ஷித்துவிடுவேன்; ஸூர்யனை நக்ஷத்ரங்களோடுகூட ஆகாயத்தினின்று தரையில் விழத்தள்ளுவேன்; தேவேந்த்ரனைக் கொல்லுவேன்; ஸமுத்ரத்தையெல்லாம் பானஞ்செய்வேன்; பர்வதங்களைப் பொடி

1. குருதி-ரக்தம்.

யாக்கிவிடுவேன்; பூமியைப் பிளப்பேன். இப்பொழுது பூதங்களெல்லாம் நாற்புறத்திலும் பக்ஷிக்கப்படுபவையாகி வெகுகாலமாக நித்திரித்துக்கொண்டிருந்த கும்பகர்ணனது பராக்ரமத்தைக் காணுமாக. இம்மூன்று லோகங்களும் சேர்ந்து என் ஒருவேளை ஆஹாரத்திற்கே போதா; இனி என்னேடு எங்ஙனம் யுத்தஞ் செய்யவல்லவை?[1] நான் ராமனைக் கொன்று உனக்கு மேன்மேலும் ஸுகத்தையே தொடரும்படியான ஸுகத்தையே விளைவிக்க வேண்டுமென்று நான் யுத்தத்திற்குப் போகின்றனன். ராமனையும் லக்ஷ்மணனையுங் கொன்று வானரோத்தமர்களெல்லோரையும் பிடித்துப் பக்ஷித்துவிடுகிறேன். நீ உன்னிஷ்டப்படி க்ரீடித்துக் கொண்டிருப்பாயாக. [2] மேலான மத்யத்தைப் பானஞ்செய்வாயாக. வேண்டிய கார்யங்களை

1. 'வயோ தே தாஸரயேஸ் ஸுவார்ஹம் ஸுவம் ஸமாஹர்த்துமஹம் வ்ராஜாமி' என்று மூலம். (தேவயோ) உன் வதத்தினுல் (தாஸரயேஸ் ஸுவம் ஸமாஹர்த்தும் வ்ராஜாமி) ராமனுக்கு ஸுகத்வத விளைவிக்கும் பொருட்டுப் போகின்றேன் என்று மற்றொரு பொருள் அவசகுனமாகத் தோற்றுகிறது.

2. இங்கு 'ரமஸ்வ காமம் பிவசாக்ர்ய வாருணீம் குருஷ்வ க்ருத்யாநி விநீயதாம் ஜ்வர:। மயாத்ய ராமே கமிதேயமக்ஷயம் சிராய வீதாவஸமாகமிஷ்யதி' என்பது மூலம். இதே மூலம் பன்னிரண்டாவது ஸர்க்கத்தில் (2523) ஆவது பக்கத்தில் அடிக்குறிப்பில் விசதமாய் விவரிக்கப்பட்டிருக்கின்றது. இதன் பொருளை அங்குப் பார்த்துக்கொள்க. ஆனல் அங்கு 'குருஷ்வ கார்யாணி ஹிதாநி விஜ்வர:' என்று இரண்டாம்பாதம், இங்கு 'குருஷ்வ க்ருத்யாநி விநீயாதாம் ஜ்வர:' என்று சிறிது மாறியிருக்கிறது. அங்கு (மனக்கவலையற்று உனக்கு ஹிதமான கார்யங்களைச் செய்வாயே?) என்று பொருள். இங்கு (கார்யங்களைச் செய்வாயே? மனக்கவலையைப் போக்கிக் கொள்வாயே!) என்று பொருள். மற்றெல்லாம் ஒன்றே. இரண்டும் கும்பகர்ண வசனமே.

செய்வாயாக. மனக்கவலையைத் துறப்பாயாக. நான் இப்பொழுது ராமனை யமபட்டணத்திற்கு அனுப்பினவுடனே, இனி ஸீதை வெகுகாலம் உனக்கு ஸ்வாதீனமாயிருப்பாள்' என்றனன். அறுபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## மஹோதரன் கும்பகர்ணனை விரட்டுதல்.

பெரிய சரீரமும் மிகுந்த பலமும் நீண்ட புஜதண்டங்களும் அமைந்து மறுமொழிகூறி வெல்லமுடியாதவனுமாகிய கும்பகர்ணன் மொழிந்த வசனத்தைக் கேட்டு, மஹோதரன் அவனைப் பார்த்து, 'கும்பகர்ண! நீ பெருங்குலத்திற் பிறந்தவனாயினும், உனக்கு புத்தி அற்பமாயிருக்கின்றது. நீ வெறுந்துணிச்சலுடையவனேயன்றிச் சாஸ்த்ரங்களை உணர்ந்தவனல்லை; மற்றும் கர்வமுற்றவன். ஆகையால் எந்தக் கார்யத்திலும் செய்யவேண்டிய ஆலோசனை இன்னதென்று அறிய வல்லவனல்லை. அரசன்பராக்ரம கர்வத்தினால் மேல்வருந் தோஷத்தை விசாரிக்காது போனான்' என்றும் 'ந்யாய அந்யாயங்களை அறியான்' என்றும் மொழிந்தனை. கும்பகர்ண! ராஜனுக்கு ந்யாய அந்யாயங்கள் தெரியாமற்போகவில்லை. நீ பால்யத்தினால் வெறுந்துணிச்சலுடையவனாகி இங்ஙனஞ்சொல்ல விரும்புகிறாயன்றி, சாஸ்த்ரங்களை ஆராய்ந்தறிந்தமையாலன்று. ராக்ஷஸதிலகனாகிய ராவணன் விவிக்தம் முதலிய ஆலோசனைகளுக்குத் தகுந்த தேசகாலங்களையும் தகாத தேசகாலங்களையும் வேறுவேறாக அறிந்தவனாகையால் தனக்கும் சத்ருவுக்கும் உள்ள வ்ருத்தியையும் க்ஷயத்தையும் (நிறைகுறைகளையும்) ஸாம்யத்தையும் (நடு

லிலைமையையும்) நன்றாக அறிவான். ஆகையால் அவன் தேசகாலங்களின் பிரிவினைகளை அறியாதவ னென்பது யுக்தமன்று. கேவலம் பௌர்யத்தையே அவலம்பித்து அற்பபுத்தியுடையவனும் பெரியோர்க ளைப் பணியாதவனுமாகிய குத்ஸிதனுக்குஞ் செய்யத் தகாத கார்யத்தைப் பண்டிதனாயிருப்பவன் எவன் செய்வான்? எவனும் செய்யமாட்டானே! இனி ராவணன் செய்யமாட்டானென்பது சொல்லவேண் டுமோ? நீ தர்ம அர்த்த காமங்களொவ்வொன்றிற்கும் தனித்தனியே பலன்கள் உண்டென்றும், தர்மத்திற்கு நல்ல பலனும் அதர்மத்திற்குக் கெட்டபலனும் தவறா தாகையால் ஸீதையை அபஹரித்த அதர்மத்திற்கு இப்படிப்பட்ட பலன் உண்டாயிற்றென்றும் சொல்லு கின்றனையே; தர்ம அர்த்த காமங்களுக்குத் தனித் தனியே அந்தந்த பலன்கள் தவறாதென்று உள்ளபடி அறிவதற்கு உனக்கு ப்ரமாணம் யாதிருக்கின்றது? ஒன்றுமே இல்லையல்லவா? ஸ்வர்க்க நரகங்களாகிற ஸமஸ்த பலன்களுக்கும் கர்மங்களே காரணமென்றும், இந்தக் கர்மஸமூஹங்களில் புண்யகர்மங்களுக்கே புண்யபலன்களென்றும் பாபகர்மங்களுக்கே பாப பலன்களென்றும் சொல்லமுடியாது. மிகுந்த பாப கர்மங்களுக்கும் நல்ல பலனே உண்டாகின்றது. தர்ம மும் அர்த்தமும் அதர்மமும் அனர்த்தமும் ஆகிய இந்நான்கும் நன்மையையே விளைக்கின்றன. ஆயினும் அதில் அதர்மத்திற்கும் அனர்த்தத்திற்கும் ஒருகால் கெடுதியும் பலனாக நேரிடுவதும் உண்டு. ஆகையால் இவ்விரண்டிற்கும் நன்மை தீமைகளிரண்டும் பலனாகுமே யன்றித் தீமையே பலனென்று சொல்வது யுக்தமன்று. தர்ம அதர்மங்களுக்குப் பலத்தில் நியதியில்லாமை

அங்ஙனம் இருக்கட்டும்; புருஷர்கள் இந்த லோகத்தில் உபயோகப்படுவதான விஹிதகர்மத்தையும் பரலோகத்தில் உபயோகப்படுவதான விஹிதகர்மத்தையும் செய்கின்றனர்; அவற்றால் விளையும் பலன்களையும் அநுபவிக்கின்றனர்; அங்ஙனமே, விஹிதகர்மங்களைச் செய்யாமல் தன் மனம்போனபடி கர்மங்களை ஆசரிப்பவனும் மங்களகரமான கர்மபலன்களைப் பெறுகின்றனன். ஆகையால் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மமே நன்மையை விளக்குமென்றும், நிஷேதிக்கப்பட்ட கர்மம் அப்படிப்பட்டதன்றென்றும் நியதி இல்லாமையால் காமத்திற்கும் பலநியதி புலப்படவில்லை. இங்ஙனம் தர்மாதிகளுக்கும் பல நியதியில்லாமல் எல்லாவற்றிற்கும் எல்லாம் பலனாகுமென்ற மதத்தைப் பற்றி, நமது மன்னவன், காமத்தை ஆசரித்து ஸுகம் பெறலாமென்று ஸீதையை அபஹரிக்கையாகிற இந்தக் கார்யத்தை மனத்தில் நன்கு ஆலோசித்தே செய்தனன். ஆகையால் நாங்களும் 'அது செய்யத்தகுந்ததே' என்று ஸம்மதித்தனம். ஆதலால் சத்ருவிஷயமாக ஆலோசிக்காமல் செய்த ஸாஹஸம் யாதோ அதைக் காட்டுவாயாக. ராவணன் ஆலோசிக்காமல் செய்தானென்பது அப்படி இருக்கட்டும்; நீ ஒருவனே ஸஹாயமின்றி யுத்தத்திற்குப் புறப்படுகிறேனென்று அதற்குக் காரணமாக பலபராக்ரமாதிகளை எடுத்துரைத்தனையே; அந்தப் பக்ஷத்திலும் அயுக்தமும் அஹிதமும் உண்டென்பதைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. எவன் முன்பு ஜனஸ்தானத்தில் மஹாபலமுடைய பல ராக்ஷஸர்களை வதித்தானோ, அப்படிப்பட்ட ராமனை நீயொருவனே எப்படி ஜயிப்பாய்? ஆகையால் உன் வார்த்தை யுக்தமாயில்லை. முன்பு அந்த ராமனால்

ஜனஸ்தானத்தில் மஹாதேஜஸ்விகளான எந்த ராக்ஷஸர்கள் தோல்வி அடைந்தனரோ, அந்த ஜாதியைச் சேர்ந்தவர் அனைவரும் இப்பொழுதும் ராமனது பேரைச்சொல்லினும் பயப்படுவதைக் காண்கிறாயல்லவா? ஆகையால் உன் வார்த்தை ஹிதமாயிருப்பது மன்று. தசரதகுமாரனாகிய அந்த ராமனை மிகுதியும் கோபித்திருக்கிற ஸிம்ஹ மென்றறியாமல், உறங்குகின்ற ஸர்ப்பத்தை எழுப்புவதுபோல், உன்மேல் எதிர்க்கும்படி எழுப்ப விரும்புகின்றனை. எப்பொழுதும் திவ்ய தேஜஸ்ஸுடன் விளக்கமுற்றுக் கோபித்திருக்கும்பொழுது எப்படிப்பட்டவர்க்கும் எதிர்க்க முடியாதவனாகி, ம்ருத்யுவைப்போல் ஸஹிக்கமுடியாத பராக்ரமமுடைய அந்த ராமனை எவன்தான் அணுக வல்லவன்? நம் சத்ருவாகிய ராமனுக்கெதிரில் நிற்க இந்த நமது ராக்ஷஸபலம் முழுவதும் ப்ராணஸந்தேஹத்தை அடைகின்றது. இப்படியிருக்க, ஒருவன் அவனெதிரில் போவது எனக்குச் சிறிதும் ருசிக்கவில்லை. தன்பலம் குறைந்திருக்கும்பொழுது பலம் மேன்மேலும் பெருகப்பெற்ற பகைவனை எதிர்த்தால் தன் ப்ராணன்களே போமென்று நிச்சயம் உண்டாயிருப்பினும், அப்படிப்பட்ட பகைவனை அற்பனாகக் கொண்டு பொருள் செய்யாமல் எவன் தலைப்பட்டு ஜயிக்க விரும்புவான்? எவனும் விரும்பமாட்டான். ஆகையால் உன் ப்ராணன்களை விட நிச்சயித்திருப்பாயாயின், ராமனோடு யுத்தத்திற்குப் போவாயாக. ராக்ஷஸோத்தமா! மனிதர்களில் தனக்கு எவரும் நிகரின்றி மற்றும் தேவதைகளில் இந்த்ரனுக்கும் ஸூர்யனுக்கும் நிகரான மஹாவீரனாய் விளங்குகின்ற அந்த ராமனுடன் யுத்தஞ் செய்கிறேனென்று எங்ஙனம் சொல்லு

இன்றனை? சொல்லவுங்கூட முடியாத அந்தக் கார்யத்தைச்செய்வது எப்படி?' என்றனன். மஹோதரன் அங்ஙனம் பரபரப்புற்றுக் கும்பகர்ணனுக்குச் சொல்லி, அப்பால் ராக்ஷஸர்களின் இடையில் லோகராவணனை ராவணனைப் பார்த்து 'நீ என்னவோ ஸீதையைக் கைப்பற்றியாய் விட்டது. இன்னம் ஏதுக்காகப் பலவாறு பேசுகின்றனை? நீ எப்பொழுது விரும்புகின்றனையோ, அப்பொழுதே ஸீதை உனக்கு ஸ்வாதீனையாவாள். ராக்ஷஸேஸ்வரா! ஸீதை தானே உன்னிடம் வருவதற்கு ஓர் உபாயம் நான் கண்டுபிடித்திருக்கின்றனன். உனக்கு அது இஷ்டமாயின், உன் ஸொந்த புத்தியுடன் கேட்பாயாக. பிறனுடைய புத்தியை மாத்ரம் அநுஸரிக்க வேண்டாம். அந்த உபாயம் ஏது என்கிறாயோ? நானும் த்விஜிஹ்வனும் ஸம்ஹ்ராதியும் கும்பகர்ணனும் விதர்த்தனனும் ஆகிய நாங்கள் ஐவரும் ராமனை வதிக்கும் பொருட்டுப் போகவேண்டுமென்று விளம்பரஞ் செய்வாயாக. அப்பால் நாங்கள் போய் கஷ்டப்பட்டு ராமனோடு யுத்தஞ்செய்கிறோம். நாங்கள் உன் சத்ருக்களாகிய அந்த ராமலக்ஷ்மணர்களை ஜயிப்போமாயின், அப்பொழுது நமக்கு உபாயங்களால் ஸாதிக்கவேண்டியது ஒன்றும் இல்லை. நாங்கள் யுத்தஞ்செய்யினும் சத்ருவாகிய ராமன் ஜயிக்கமுடியாதவனாகி ஜீவித்திருப்பானாயின், அப்பொழுது நாம் மனத்தில் இப்பொழுது ஆலோசித்த உபாயத்தைச் செய்வோம். நாங்கள் ராமபாணங்களால் எங்கள் தேஹம் முழுவதும் பிளவுண்டதாகச் செய்துகொண்டு ரக்தம் பெருகப்பெற்று ராமனோடு யுத்தஞ்செய்தோமென்று ஸீதைக்கு நம்பிக்கை உண்டாகும் பொருட்டு ராமநாமங்களோடு கூடின கூரான பாணங்களோடு

யுத்தத்தினின்று இவ்விடம் வருகிறோம். நாங்கள் அங்ஙனம் வந்து 'ராமனையும் லக்ஷ்மணனையும் பக்ஷித்துவிட்டோம்' என்று சொல்லிக்கொண்டு உன்பாதங்களில் நமஸ்காரஞ் செய்கிறோம். அப்பொழுது நீ எங்கள் விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றவேண்டும். ராஜனே! அதன் பிறகு நீ ஒருவனை யானையின்மேல் ஏற்றி ராமனும் லக்ஷ்மணனும் வானரர்களும் மாண்டார்கள்' என்று பட்டணம் முழுவதும் விளம்பரஞ் செய்யவேண்டும். சத்ருக்களை அழிப்பவனே! அப்பால் நீ ஸந்தோஷித்தவன்போல்ப்ருத்யர்களுக்கு யதேஷ்டமாக போக்ய பதார்த்தங்களையும் தாஸதாஸீ பரிவாரங்களையும் மற்றும் வேண்டிய பதார்த்தங்களையும் பொன்களையும் கொடுப்பாயாக. அனந்தரம் நீ வீரபடர்களுக்குப் பூமாலைகளையும் வஸ்த்ரங்களையும் சந்தனம் முதலிய மெய்ப்பூச்சுக்களையும் மத்யம் முதலிய பானகங்களையும் மிதமின்றிக் கொடுப்பிக்க வேண்டும்; நீயும் ஸந்தோஷமுற்றுப் பானஞ்செய்வாயாக. அப்பால் 'ராக்ஷஸர்கள் ராமனையும் அவனது நண்பர்களையும் பக்ஷித்தார்கள்' என்கிற இந்த வதந்தி உண்டாகிப் பட்டணம் முழுவதும் வ்யாபித்து ப்ரஸித்தமான பின்பு நீ ஸீதையிடஞ்சென்று அவளுக்கு ராமவியோகத்தினலுண்டான துக்கத்தைப்போக்கி 'என்னிடத்தில் ப்ரீதி செய்வாய்' என்று ஏகாந்தத்தில் நல்வார்த்தைகளைச்சொல்லி, ஸ்வர்ணம் முதலிய தனங்களையும் தான்யங்களையும் ரத்னங்களையும் மற்றும் அவளுக்கு இஷ்டமான மேலான பதார்த்தங்களையும் வேண்டினவளவும் கொடுத்து அவளுக்கு ஆசையை மூட்டுவாயாக. ராஜனே! இந்தக் கபடோபாயத்தினல் ஸீதை பயமும் துக்கமும் உண்டாகப்பெற்று முன்பு உன்னை விரும்பா

திருப்பினும் நாதனில்லாமையால் இப்பொழுது உனக்கு ஸ்வாதீனையாவாள். அப்பெண்மணி, அழகான உருவமுடைய தன் பர்த்தாவான ராமன் மரணம் அடைந்தானென்று தெரிந்து இனி வேறுசையில்லாமையாலும் ஸ்த்ரீகளுக்கு ஸ்வபாவமாகிய சாபலத்தினாலும் உனக்கு வசப்படுவாள். அம்மாதரசி முன்பு ஸுகமாக வளர்ந்தவளாகையால் ஸுகத்திற்கே தகுந்தவள்; ஆகையால் துக்கத்தினால் இளைத்து வருந்தமுடியாமல் தான் இனி ஸுகப்படுவது உன்னாலேயே நேரவேண்டுமென்று தெரிந்துகொண்டு எல்லா விதத்திலும் உன்னையே அடைவாள். இந்த உபாயத்தை நான் என் புத்தியாலேயே நன்ருக ஆலோசித்து நிச்சயித்தனன். நீ ராமனது கண்களில் படுவாயாயின் அனர்த்தமே விளையும். இப்பொழுது இவ்வுபாயத்தினாலேயே உன் கருத்து நிறைவேறக்கூடும். ஆகையால் யுத்தத்தின்பொருட்டு விருப்பங்கொள்ள வேண்டாம். யுத்தஞ்செய்யாது வெறுமனே இருக்கின்றமையால் (ஆஸனபலத்தினால்) உண்டாகும் ஸுகம் மிகவும் அதிகமாயிருக்கின்றது. ராஜனே! ராஜாவாயிருப்பவன் நான் சொன்னபடி செய்து ஸைன்யம் பாழாகாமல் தானும் ப்ராணஸந்தேஹம் அடையாமல் யுத்தஞ் செய்யாமலே சத்ருக்களை ஜயிப்பானாயின் வெகுகாலம் கீர்த்தியையும் புண்ய பலனையும் மஹா ஸுகத்தையும் செல்வத்தையும் மனத்தெளிவையும் பெறுவான்' என்றனன். அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கும்பகர்ணன் யுத்தத்திற்குப் புறப்படுதல்.

மஹோதரன் இங்ஙனஞ் சொல்லுகையில், கும்பகர்ணன் 'இனி இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம்; பத்ரம்' என்று அவனை விரட்டி, அப்பால் ராக்ஷஸோத்தமனாகிய ராவணனைப் பார்த்து 'என் பராக்ரமம் தெரிந்ததல்லவா! அப்படிப்பட்ட நான், துர்ப்புத்தியாகிய அந்த ராமனை இதோ வதித்து உனக்கு இப்பொழுது உண்டாயிருக்கிற தாருணமான பயத்தைப் போக்குகிறேன்; நீ வைரமற்று ஸுகமாயிருப்பாயாக. சூரராயிருப்பவர் நீரில்லாத மேகங்கள் போல், கார்யமில்லாமல் வெறுமனே கர்ஜிக்கமாட்டார்கள். நான் யுத்தத்தில் தகுந்தபடி கார்யஞ்செய்து என் கர்ஜனத்தைப் பயன்பெறச் செய்கிறேன்; காண்பாயாக. நான் கர்ஜிப்பதுபோலவே என் கார்யமும் இருக்கும். சூரர்கள், பிறர் தம்மைக்குறித்து மொழிகிற அவமான வார்த்தைகளைச் சிறிதும் பொறுக்கமாட்டார்; தம்மைத் தாமே புகழ்ந்துகொள்ளார்; தமது பௌருஷத்தை வீண் வார்த்தைகளால் வெளிக்காட்டாமல் பிறர்க்குச் செய்யமுடியாத கார்யங்களையும் செய்வார்கள். மஹோதரனே! பயப்படுந்தன்மையரும் புத்திஹீனர்களும் தம்மைத்தாமே பண்டிதராக நினைப்பவருமாகிய உன்னைப்போன்றவருடைய வார்த்தைகளைக் கேட்பதனால் மன்னவன் இந்த ஆபத்தைப் பெற்றனன். யுத்தமென்றால் பின்வாங்குந் தன்மையுள்ள நீங்கள் ராஜனுக்கு எப்பொழுதும் ப்ரியவசனங்களைப் பேசிக்கொண்டு அவன் போனவழியெல்லாம் போய்க்கொண்டிருந்து அப்பால் கடைசியில் முதலே பாழ் செய்யும்படியான இக்கார்யத்தை விளைவித்தீர்கள். நீங்கள் இம்மன்னவனை மேலுக்கு நண்பனாகச் சொல்லிக்

கொண்டிருப்பினும் வாஸ்தவத்தில் நீங்கள் இவனைச் சத்ருவாகக் கொண்டிருக்கையால் இந்த ராஜனைச் சேர்ந்து இவன் போனவழியெல்லாம் போமவராகி லங்கையில் மன்னவனொருவனே யிருக்ும்படி செய்தீர்கள்; பொக்கசத்தை யெல்லாம் பாழாக்கினீர்கள்; ஸைன்யத்தை யெல்லாம் ஹதஞ்செய்தீர்கள். நீங்கள் செய்த அபநீதிகளை யெல்லாம் இந்த யுத்தத்தினால் சரிப்படுத்தும் பொருட்டு, சத்ருக்களை ஜயிக்கமுயன்று இதோ யுத்த பூமிக்கு இப்பொழுதே போய்க்கொண்டிருக்கிறேன்' என்றனன். புத்திமானாகிய கும்பகர்ணன் இங்ஙனம் மொழிந்த வசனத்தைக் கேட்டு ராவணன் பகபகவென்று சிரித்துக்கொண்டு 'அப்பனே! நீ யுத்தத்தில் தீர்க்த மஹாவீரன். இம்மஹோதரனே ராமனிடம் பயந்திருக்கின்றனன்; ஸந்தேஹமில்லை. ஆனது பற்றியே யுத்தத்தை விரும்பாதிருக்கின்றனன். கும்பகர்ணா! எனக்கு உன்னைப்போன்ற நண்பனும் பலிஷ்டனும் எவனும் இல்லை. சத்ருக்களை வதிக்கப் போவாயாக. போய் ஜயம் பெறுவாயாக. அங்ஙனம் நீ நிகரற்றவனென்பது பற்றியே என் பயத்தைப் போக்கடிப்பாயென்று உன்னை எழுப்பினேன். அரிந்தமனே! எனது மேன்மையை விரும்பும் நண்பர்களாகிய ராக்ஷஸர்கள் போய் யுத்தஞ்செய்வதற்கு இதுவே தகுந்த ஸமயம். ஆகையால் சூலத்தைக் கையில் ஏந்திப் பாசாயுதந் தரித்த அந்தகன் (யமன்)போல் புலப்பட்டுக்கொண்டு போவாயாக. வானரர்களையும் ஸூர்யன்போல் தேஜஸ்ஸினால் எதிர்க்கமுடியாத ராமலக்ஷ்மணர்களையும் பக்ஷிப்பாயாக. உன்னுருவத்தைப் பார்த்தவுடனே வானரர்கள் எல்லோரும் பயந்து ஓடிப்போவார்கள். ராமலக்ஷ்மணர்களுக்கும் ஹ்ருதயம் வெடித்துப்போம்'

என்றனன். மஹாராஜனும் ராக்ஷஸர் தலைவனுமாகிய அந்த ராவணன் இங்ஙனம் மஹாபலமுடைய கும்பகர்ணனுக்குச் சொல்லி, அவன் ஜயிப்பானென்னும் நம்பிக்கையால், 'இனிப் பிழைத்தோம்' என்று பயந் தெளிந்து தன்னை மீளவும் புதிதாகப் பிறந்தாற்போல் நினைத்துக் கொண்டனன். ராவணன் கும்பகர்ணனுடைய பலத்தையும் பராக்ரமத்தையும் நன்றாக அறிந்தவனாகையால் ஸந்தோஷமுற்றுக் களங்கமில்லாத சந்த்ரன்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தனன். ராவணன் இங்ஙனஞ் சொல்லுகையில் மஹாபலனான கும்பகர்ணன் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து யுத்தத்திற்குப் போக முயன்றனன். கும்பகர்ணன் ராஜனாகிய ராவணன் சொன்னதைக்கேட்டு யுத்தத்திற்குப் போகமுயன்று, பகைவரை உருமாய்க்கவல்ல கூரான சூலத்தை வேகமாக எடுத்துக்கொண்டனன். அந்தச் சூலம் கேவலம் எஃகினால் செய்யப்பட்டுத் தளதளவென்று விளக்கமுற்று மேலான பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும் தேவேந்த்ரனுடைய வஜ்ரம்போன்றதும் பயங்கரமான வஜ்ரம்போல் மிகுந்த பளுவுடையதுமாயிருந்தது. அது தேவதைகளையும் தானவர்களையும் கந்தர்வர்களையும் யக்ஷர்களையும் கின்னரர்களையும் பல பேர்களை உருமாய்த்திருப்பது. மற்றும், அது சிவந்த பூமாலைகளுடையதும் மிகுந்த தேஜஸ்ஸுடன் ப்ரகாசிப்பதும் தானே நெருப்புப் பொறிகளைக் கக்குவதுமாயிருந்தது. மஹாதேஜஸ்வியாகிய கும்பகர்ணன் சத்ருக்களின் ரக்தங்களால் சிவந்திருக்கின்ற அந்தக் கூரான சூலத்தைக்கொண்டு ராவணனைப் பார்த்து 'நானொருவனே போகின்றேன். என் ஸேனை இங்கேயே இருக்குமாக. இப்பொழுது நான் போய், என்னைப் பார்த்து

மனங்கலங்கப் பெற்றிருக்கின்ற வானரர்களெல்லோரை யும் பிடித்து பக்ஷிக்கிறேன்' என்றனன். கும்பகர்ணன் சொன்னதைக் கேட்டு ராவணன் அவனைப் பார்த்து, 'தனியே போகவேண்டாம். சூலங்களையும் முத்கரங்க ளையும் தரித்த ஸேனைகள் சூழ்ந்து வரப்பெற்று யுத்தத் திற்குப் போவாயாக. ஏனெனில், வானரர்கள் மிகுந்த புத்தியும் மஹத்தான வேகமும் மாருத விச்சயமும் உடையவர். ஆகையால் தனியேயிருப்பினும் ஏமாறி யிருப்பினும் பற்களால் கடித்துக் கொன்றுவிடுவார்கள். அதனால் மிகவும் எதிர்க்கமுடியாத பலமுடைய ஸைன் யத்துடன் போவாயாக. ராக்ஷஸர்களுக்குச் சத்ரு பக்ஷத்தில் உள்ளவரனைவரையும் முடித்து வருவாயாக' என்றனன். அப்பால் மஹாதேஜஸ்வியாகிய ராவணன் ஸிம்ஹாஸனத்தினின்று திடீலென்று எழுந்து இடையி டையில் ரத்னங்கள் இழைக்கப்பெற்ற பொன்மாலை யைக் கும்பகர்ணனுக்குக் கட்டினன். மற்றும், அவன் மஹானுபாவனாகிய கும்பகர்ணனுக்குத் தோள்வளைக ளையும் மோதிரங்களையும் சிறந்த ஆபரணங்களையும் சந்த்ரமண்டலம்போன்ற முத்துமாலைகளையும் பூட்டி னன்; நன்மணம் கமழப்பெற்ற திவ்யமான பூமாலைகளை யும் அவனுக்குச் சூட்டினன்; அன்றியும் அவன் காதுக ளுக்கு ஒளியுடன் ப்ரகாசிக்கின்ற குண்டலங்களையும் மற்றும் ஆபரணங்களையும் பூட்டினன். பெரிய காதுகளை யுடைய கும்பகர்ணன் பொன் தோள்வளைகளையும் கேயூரங்களையும் சிறந்த பொன் பதக்கங்களையுடைய ஆபரணங்களையும் தரித்திருக்கையால், நன்கு ஹோமஞ் செய்யப்பெற்ற அக்னிபோல் ப்ரகாசித்த னன். அவன் நீலமணிகள் புதைக்கப்பெற்ற பெரிய அரைநாண்மாலை அணிந்திருக்கையால் அம்ருதங்கடை

வதற்காக வாஸுகியைச் சுற்றின மந்த்ரபர்வதம்போல் ப்ரகாசித்தனன். அவன் ஆயுதாதிகளின் அடிகள் படினும் கெடாமல் திடமாகிப் பலபாரத்தளவு பளு வுடையதும் சந்தில்லாமல் காற்று புகுரக்கூடாததும் மின்னலோடொத்த ஒளியுடையதும் தன்னுடைய காந்தியால் எரிவதுபோல் ப்ரகாசிப்பதுமாகிய பொன் கவசத்தை அணிந்து ஸந்த்யாகால மேகத்தினுல் மறைக்கப்பட்ட ஹிமவத்பர்வதம்போல் ப்ரகாசித்த னன். ஸமஸ்த அவயவங்களிலும் அந்தந்த ஆபரணங் களையெல்லாம் அணிந்து சூலத்தைக் கையில் ஏந்திக் கொண்டிருக்கிற அந்தக் கும்பகர்ணன் மூன்றடிகளை அளக்க முயன்ற நாராயணன்போல் திகழ்ந்தனன். மஹாபலனுகிய அந்தக் கும்பகர்ணன் அண்ணனுகிய ராவணனை ஆலிங்கனஞ்செய்து அவனைச்சுற்றி வலஞ் செய்து சிரம்வணங்க நமஸ்கரித்து யுத்தத்திற்குப் புறப்பட்டனன். பெருந்தேஹமும் பெருங்கோஷமும் மஹாபலமும் பொருந்தின கும்பகர்ணன் புறப்படும் பொழுது, அவனை ராவணன் மேலான ஆசிர்வாதங்க ளால் ஸந்தோஷப்படுத்தி அனுப்பினன். ரதிகர்களான ராக்ஷஸர்கள் பலர் சங்கம் பேரி முதலிய வாத்யங்களின் ஒலி முழங்க, உத்தம ஆயுதங்களைத் தரித்திருக்கிற ஸைன்யங்களோடும் யானைகளோடும் குதிரைக ளோடும் மேகங்கள்போல் சப்திக்கின்ற ரதங்களோடும் மஹானுபாவனும் ரதிகர்களில் தலைவனுமாகிய கும்பகர் ணனைப் பின்றொடர்ந்தனர். ராக்ஷஸர்கள் ஸர்ப்பங்களை யும் ஒட்டைகளையும் கழுதைகளையும் குதிரைகளையும் ஸிம் ஹங்களையும் யானைகளையும் ம்ருகங்களையும் பக்ஷிகளை யும் வாஹனமாகக்கொண்டு, பயங்கரனும் மஹாபலனு மாகிய கும்பகர்ணனைப் பின் சென்றனர். தேவதைக

ளுக்கும் தானவர்களுக்கும் சத்ருவாகிய அக்கும்ப கர்ணன், பட்டணத்து ஜனங்கள் புஷ்பவர்ஷங்களைப் பொழிந்துகொண்டிருக்கையில், குடை பிடிக்கப் பெற்றுக் கூரான சூலத்தைக் கையில் ஏந்திக்கொண்டு, இயற்கையாகவே மத்யபானத்தினுல் மதங்கொண்டவ னுயினும் ரக்தபானஞ் செய்தமையாலும் ரக்தத்தின் வாஸனையாலும் மேலும் மதித்துப் புறப்பட்டனன். மஹாபலிஷ்டர்களும் பயங்கரர்களும் பயங்கரமான கண்ணுடையவர்களும் ஆயுதங்களைக் கையிலேந்தின வர்களுமாகிய பல ராக்ஷஸக்காலாட்கள் பெரிய ஸிம்ஹ கோஷத்துடன் கும்பகர்ணனைப் பின்சென்றனர். மற்றும், சிவந்த கண்களும் மிகவும் பெரிய சரீரங்களும் அமைந்து கறுத்த மைக்குவியல்போல் புலப்படுபவர்க ளாகிய பல ராக்ஷஸர்கள், சூலங்களையும் கட்கங்களை யும் கூரான கண்டக்கோடாலிகளையும் பல மார்பு நீள முடைய பரிகங்களையும் கதைகளையும் முஸலங்களையும் எதிர்க்க முடியாதவைகளும் வீசியெறியத் தகுந்த வைகளுமான பனைமரங்களின் அடி பாகங்களையும் ஏந்திக்கொண்டு கும்பகர்ணனைப் பின்சென்றனர். அப்பால் மஹாதேஜஸ்வியும் பலிஷ்டனுமாகிய கும்ப கர்ணன், பயங்கரமும் மயிர்க்கூச்சலை விளைப்பதுமாகிய மற்றொரு உருவத்தைத் தரித்து யுத்தத்திற்குப் போயினன். அக்கும்பகர்ணன், நூறுவில்லளவு அகன்ற தும் அறுநூறு வில்லளவு உயர்ந்ததும் வண்டியின் சக்ரம்போன்ற கண்களுடையதும் பயங்கரமுமாகிய உருவத்தைத் தரித்துப் பர்வதம்போன்று, எரிக்கப் பட்ட பர்வதம்போல் கறுத்த பெருஞ்சரீரமுடையவ னுகித் தன் பின்னே வருகின்ற ராக்ஷஸர்களைக் கிட்டி வாயைத் திறந்து பகபகவென்று சிரித்து 'அக்னி

விட்டில்களைக் கொளுத்துவதுபோல் நான் இதோ இப்பொழுதே அந்த வானர முக்யர்களின் கூட்டங்களையெல்லாம் தனித்தனியே உருமாய்த்து விடுவேன். அரண்யங்களில் திரிகின்ற வானரர்கள் எனக்கு எவ்வித அபராதத்தையும் செய்யவில்லை. மற்றும், அவ்வானரஜாதி க்ரீடையில் (விளையாட்டில்) விருப்பமுள்ள எம்மைப் போன்றவருடைய நகரோத்யானங்களுக்கு அலங்காரமாயிருப்பது. ஆகையால் வானரர்களைக் கொல்வதில் ப்ரயோஜனமில்லை. இப்பொழுது நம் பட்டணத்தைத் தகைவதற்கு மூலம் ராமனும் லக்ஷ்மணனும்; அவர்களைக் கொன்றால் ஸமஸ்தமும் மாண்டாற்போலவே. ஆகையால் அந்த ராமனையே யுத்தத்தில் கொன்று விடுகிறேன்' என்றனன். கும்பகர்ணன் இங்ஙனஞ் சொல்லுகையில், ராக்ஷஸர்களெல்லோரும் ஸமுத்ரத்தை நடுங்கச் செய்பவர்போல் ஸந்தோஷத்தினால் மிகவும் பயங்கரமான கோஷஞ் செய்தனர். புத்திமானாகிய அக்கும்பகர்ணன் வேகமாக யுத்தத்திற்குப் போய்க் கொண்டிருக்கையில், பயங்கரமான அசுப சகுனங்கள் அவனுக்கு நாற்புறத்திலும் புலப்பட்டன. மேகங்கள் கொள்ளிக் கட்டைகளோடும் இடிகளோடுங் கூடிக் கழுதைகள்போல் அவ்யக்தமான சிவப்பு நிறமுடையவைகளா யிருந்தன; பூமி ஸமுத்ரங்களோடும் அரண்யங்களோடும் கிடுகிடுவென்று நடுங்கிற்று. நரிகள் பயங்கரமான உருவத்துடன் வாயினால் தீயை உமிழ்ந்துகொண்டு ஊளையிட்டன. பக்ஷிகள் அப்ரதக்ஷிணமாக மண்டலகதிகளைச் செய்தன. அக்கும்பகர்ணன் போய்க்கொண்டிருக்கையில் வழியில் கழுகுகள் மாலைபோல் வரிசையாகக் கூட்டங்கூடி அவன் தலைக்கு நேரே ஆகாயத்தில் கிளம்பி வட்ட

மிட்டன. அவனுடைய இடக்கண் துடித்தது; இடக் கையும் நடுக்கமுற்றது. அப்பொழுது ஓர் கொள்ளிக் கட்டை எரிந்துகொண்டு பயங்கரமான ஒலியுடன் ஆகாயத்தினின்று விழுந்தது. ஸூர்யன் ஒளியற்றவ னாயினன். காற்றும் ஸுகமாக வீசவில்லை. கும்பகர்ணன் காலபலத்தினல் தூண்டப்பட்டவனாகையால், மிகவும் மயிர்க்கூச்சலை விளைக்கும்படியான மஹோத்பாதங்கள் புலப்படினும், அவற்றைப் பொருள்செய்யாமல் யுத்தத் திற்குப் போயினன். அவன் பர்வதம் போன்றவனாகை யால் பாதங்களாலேயே ப்ராகாரத்தைத் தாண்டி மஹாமேகஸமூஹம்போல் புலப்படுகின்ற அற்புதமான வானர ஸைன்யத்தைக் கண்டனன். அப்பொழுது அந்த வானரர்கள் பர்வதாகாரனாகிய அந்த ராக்ஷஸ ஶ்ரேஷ்டனைக் கண்டு பயந்து, காற்றினல் அடியுண்ட மேகங்கள்போல் எல்லாத் திசைகளுக்கும் பறந்தோடி னர். மேகம்போன்ற அக்கும்பகர்ணன் மிகுதியும் ப்ர சண்டமாகிய அவ்வானரஸேனை கலைந்த மேகஸமூஹம் போல் பத்துத் திசைகளுக்கும் பறந்தோடுவதைக் கண்டு, ஸந்தோஷம் உள்ளடங்காமல் அடிக்கடி ஸிம்ஹ நாதஞ் செய்தனன். ஆகாயத்தில் மேகம் கர்ஜிப்பது போல் பயங்கரமான அவனுடைய ஸிம்ஹநாதத்தைக் கேட்டு, பல வானரர்கள் வேரறுந்த ஸாலவ்ருக்ஷங்கள் போல் தரையில் வீழ்ந்தனர். மஹாபலிஷ்டனாகிய அக் கும்பகர்ணன் அகன்ற பரிகத்தைக் கையிலேந்தி, வானரஸமூஹத்திற்கு மிகவும் தீவ்ரமான பயத்தை விளைவித்துக்கொண்டு ப்ரளயகாலத்தில் 'என்ன பணி செய்யவேண்டு' மென்று சேதனமாகிப் பணிந்து நிற் கின்ற தண்டாயுதத்தோடு கூடின யமன்போல், பயங்கர மான உருவத்துடன் சத்ருக்களை நாசஞ்செய்யும்

பொருட்டுப் புறப்பட்டுப் போயினன். அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

(கும்பகர்ணன் வானரர்களோடு யுத்தஞ் செய்தலும், பயந்தோடுகின்ற வானரர்களை அங்கதன் தடுத்து நிறுத்தலும்.)

மஹாசரீரனும் மஹாபலனுமாகிய அக்கும்பகர்ணன், பர்வத சிகரம்போன்ற உருவமுடையவனுகையால் அங்ஙனம் ப்ராகாரத்தைத் தாண்டிப் பட்டணத்தினின்று விரைவாக வெளிவந்து யுத்தபூமிக்குப் போயினன். அவன் ஸமுத்ரத்தில் ப்ரதித்வனி எழும்பும்படி இடிகளை விளைவிப்பவன் போலவும் பர்வதங்களை எரிப்பவன் போலவும் பெருங்கோஷத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்தனன். இந்த்ரனுக்கும் யமனுக்கும் வருணனுக்கும் வதிக்க முடியாதவனுகி பயங்கரமான கண்களுடன் வருகின்ற அக்கும்பகர்ணனைப் பார்த்து வானரர்கள் பயந்து மூலைமூலையாக ஓடத்தொடங்கினர். வாலி குமாரனுகிய அங்கதன் வானரவீரர்கள் அங்ஙனம் ஓடுவதைக் கண்டு, நலனையும் நீலனையும் கவாக்ஷனையும் மஹாபலனுன குமுதனையும் பார்த்து 'நீங்கள் இப்பொழுது உங்கள் ஸ்வரூபத்தையும் பராக்ரமங்களையும் புகழத்தகுந்த குலங்களையும் மறந்து அற்ப வானரர்கள் போல் பயத்தினுல் ப்ரமித்து எங்குப் போகிறீர்கள்? நல்லியற்கையுடையீர்களே! நல்லது நல்லது; திரும்புங்கள். ப்ராணன்களை ரக்ஷித்துக்கொள்கிறீர்களென்ன? இந்த ராக்ஷஸன் யுத்தத்திற்கு ஏற்பட்டவனல்லன். இது நமக்கு பயம் விளைக்கும்பொருட்டு ஏற்படுத்தினதும் புருஷாகாரமுடையதுமான ஓர் பெரிய மிரள்

பொம்மையே. வானரர்களே! ராக்ஷஸர்கள் நமக்கு பயம் விளைவிக்கும் பொருட்டு எடுத்துக்கொண்டுவந்த இப்பெரும் பொம்மையை நமது பராக்ரமத்தினல் த்வம்ஸஞ் செய்வோம்; திரும்புவீர்கள்' என்றனன். அப்பால் வானரர்கள் மிகவருத்தத்துடன் ஸமாதானம் பெற்று எல்லோரும் ஆங்காங்கு நிரம்பச் சேர்ந்து வ்ருக்ஷங்களையும் மலைகளையும் கைகளில் ஏந்திக்கொண்டு யுத்தகளத்திற்குப் போயினர். அங்ஙனம் அவ்வானரர்கள் திரும்பி யுத்தபூமிக்கு வந்து மிகவும் கோபித்து, மிகுதியுஞ் சினந்த மத்தகஜங்கள்போல் பலம் மீறப் பெற்றுக் கும்பகர்ணனை அடித்தனர். மஹாபலனுன கும்பகர்ணன் உயர்ந்த பர்வத சிகரங்களாலும் கற்களாலும் நுனியில் புஷ்பித்திருக்கிற வ்ருக்ஷங்களாலும் எவ்வளவு அடிக்கினும் அவற்றைப் பொருள் செய்யாமல் அசையாதிருந்தனன். கற்களும் புஷ்பித்த நுனியுடைய வ்ருக்ஷங்களும் அக்கும்பகர்ணன்மேல் பட்டுப் பல சுக்கலாய் உடைந்தும் முறிந்தும் தரையில் வீழ்ந்தன. வளர்ந்தெரிகின்ற அக்னியானது அரண்யங்களைக் கொளுத்திப் பாழ்செய்வதுபோல், அக்கும்பகர்ணன் மிகுதியும் கோபித்து மஹாதேஜஸ்ஸுடைய அவ்வானர ஸைன்யங்களை மிக முயற்சியுடன் ஹிம்ஸித்துப் பாழ்செய்தனன். வானரஸ்ரேஷ்டர்கள் பலர் கும்பகர்ணனுல் வீசியெறியப்பட்டு தேஹம் முழுவதும் ரக்தத்தினல் நனைந்து நிலத்தில் விழுந்து சிவந்த புஷ்பங்களையுடைய வ்ருக்ஷங்கள்போல் ப்ரகாசித்தனர். சில வானரர்கள் பின் திரும்பிப் பாராமல் ஒருவர்மேல் ஒருவர் தாண்டுகாலிட்டு ஓடத்தொடங்கினர். பலிஷ்டனுகிய அந்த ராக்ஷஸன் கும்பகர்ணன் அடித்துக் கொண்டிருக்கையில், அவ்வானர வீரர்கள் பொறுக்க

முடியாமல் சிலர் ஸமுத்ரத்தில் வீழ்ந்தனர்; சிலர் ஆகாயத்திற் கிளம்பினர். சிலர் முன்பு தாம் ஸமுத்ரத்தைத் தாண்டிவந்த ஸேதுமார்க்கத்தில் ஓடிப்போயினர். சிலர் பயத்தினால் முகம் விலவிலக்கப் பெற்று மேட்டு பூமிகளுக்கும், சிலர் பள்ளங்களுக்கும் ஓடிப் போயினர். சில காடிகள் வ்ருக்ஷங்களில் ஏறிக்கொண்டன; சில பர்வதங்களைப் பற்றின; சில ஸமுத்ரங்களில் வீழ்ந்து மூழ்கின; சில குஹைகளை அடைந்தன. சில வானரர்கள் பூமியில் விழுந்தாற்போலிருந்தனர். சில வானரர்கள் கால் நிற்கப்பெறுமலே ஓடினர். (சிலர் பூமியில் வீழ்ந்தனர். சிலர் மூர்ச்சை அடைந்து செத்தாற்போல் வீழ்ந்திருந்தனர்). அங்கதன் அந்நனம் தோல்வி அடைந்து ஓடுகின்ற வானரர்களைக் கண்டு, 'வானரர்களே! நில்லுங்கள்; ஓடிப்போக வேண்டாம்; யுத்தஞ்செய்வோம்; திரும்புங்கள். நீங்கள் தோல்வியடைந்து இங்கிருந்து ஓடிப் பூமியெல்லாம் திரியினும் நீங்களிருக்க இடம் அகப்படாதென்று எனக்குத் தோற்றுகிறது. ஆகையால் திரும்புங்கள். ப்ராணன்களை த்ருணம்போல் அலக்ஷ்யஞ் செய்யாமல் பாதுகாத்துக் கொள்கிறீர்களே! இது என்ன? வானரர்களே! நீங்கள் எதிரில்லாத பராக்ரமமுடையவர். நீங்கள் ஆயுதத்தைத் துறந்து ஓடிப்போவீர்களாயின் உங்கள் பார்யைகளே உங்களைப் பரிஹாஸஞ் செய்வார்கள். மானத்துடன் பிழைக்கின்ற பௌருஷசாலிகளுக்கு அதுவே மரணமல்லவா? அதைக் காட்டிலும் வேறு மரணம் வேண்டுமோ? நாமெல்லோரும் ஜ்ஞாதி பரம்பரைகளால் விஸ்தாரமுற்றுப் பெருமை அமைந்த மஹாகுலங்களில் பிறந்தோம்; அப்படியிருக்க அற்பர்களைப்போல் நீங்கள் பயத்தினால் ப்ரமித்து எங்குப்

போகிறீர்கள்? பயத்தினுல் பராக்ரமத்தைக் கைவிட்டு ஓடிப்போகிறீர்களாகையால் நீங்கள் பூஜைக்கிடமாகாதவர்களே. நீங்கள் முன்பு அப்பொழுது ஜனக்கூட்டங்களின் இடையில் 'நாங்கள் அப்படிப்பட்டவர், இப்படிப்பட்டவர்' என்று பலவாருகத் தம்மைத் தாமே புகழ்ந்துகொண்டீர்களே! அளவிறந்து கம்பீரங்களான அந்தப் பிதற்றல்களெல்லாம் இப்பொழுது எங்குப் போயின? எவன் தோல்வியடைந்து ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பானே, அவனைப்பற்றி பயந்தவனென்னும் அபவாதங்கள் பலவாறு ஜனங்கள் சொல்லச் செவிப்படுகின்றன; ஆகையால், ஸத்புருஷர் தொடரும்படியான சூரமார்க்கத்தை அவலம்பிப்பீர்களாக; பயத்தை விடுவீர்களாக. வானரர்களே! நாம் தப்பித்துக்கொண்டு ஓடிப்போயினும், ஆயுஸ்ஸு அற்பமேயாகையால் வெகுகாலம் பிழைத்திருக்கப் போகிறதில்லை. ஆகையால் யுத்தத்தில் தைர்யத்துடன் நின்று அடியுண்டு தரையில் வீழ்வோம். யுத்தத்தில் அடியுண்டு மாண்டுபோகையால் எப்படிப்பட்டவர்க்கும் பெறமுடியாத ப்ரஹ்மலோகத்தையாவது பெறுவோம்; சத்ருக்களை யுத்தத்தில் கொன்று கீர்த்தியையாவது பெறுவோம். ஆகையால் ப்ரஹ்மலோகத்திற்கு விலையாக நம் ப்ராணனை விடுவோம். எரிகின்ற அக்னியைப் பார்த்து, விட்டில் ப்ராணனேடு திரும்பிப்போக முடியாதாப்போல், கும்பகர்ணன் ராமனைப் பார்த்து ப்ராணனேடு திரும்பிப்போக வல்லனல்லன். நாம் இதுவரையில் நல்லபேர் பெற்றிருப்பவர்; இப்படிப்பட்ட நாம் பலர், கும்பகர்ணனொருவனுல் தோல்வி அடைந்து ஓடிப்போய் ப்ராணன்களைப் பாதுகாத்துக்கொள்வோமாயின், நாம் இத்தனை நாள் ஸம்பாதித்த கீர்த்தி

யெல்லாம் நசித்துப்போம்' என்றனன். உத்ஸாஹப் பெருக்கினால் ஸ்வர்ணமயமான தோள்வளைகளை வெளிக்காட்டுகின்ற மஹாபராக்ரமனாகிய அவ்வங்கதன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில், ஓடிப் போகின்ற வானரர்கள் தமது பயங்கொள்ளித்தனம் வெளியாகும்படி, சூரர்களால் நிந்திக்கத்தக்க வசனத்தை இங்ஙனஞ் சொல்லத்தொடங்கி 'ராக்ஷஸனாகிய இந்தக் கும்பகர்ணன் பயங்கரமாக எங்களைப் பிடித்து ஹிம்ஸித்தனன். நாங்கள் நிற்பதற்கு இது ஸமயமன்று. ஆகையால் போகின்றோம். எங்களுக்கு ப்ராணன் ப்ரியமாயிருப்பதல்லவா?' என்றனர். அவ்வானரோத்தமர்கள் இவ்வளவே மொழிந்து பயங்கரமான உருவமும் கண்களும் அமைந்த கும்பகர்ணன் மேன்மேலும் வந்துகொண்டிருப்பதைக் கண்டு பத்துத் திசைகளுக்கும் பறந்தோடினர். அப்பால் அங்கதன் பயத்தினால் பறந்தோடுகின்ற அவ்வானரர்களை நல்வார்த்தைகளாலும் ராமன் ஸாலவ்ருக்ஷங்களையும் பர்வதத்தையும் பிளந்தது முதலிய த்ருஷ்டாந்தங்களை முன்னிட்டுக் கொண்டிருக்கிற வாக்யங்களாலும் எல்லோரையும் திருப்பினன். அங்ஙனம் புத்திசாலியாகிய அங்கதன் உத்ஸாஹப்படுத்துகையில், அந்த வானரயூதபதிகள் அனைவரும் ஸுக்ரீவாதிகளின் ஆஜ்ஞையை எதிர் பார்த்துக்கொண்டு யுத்தத்திற்கு ஸித்தமாயிருந்தனர். அப்பால் ருஷபன் சரபன் மைந்தன் தூம்ரன் நீலன் குமுதன் ஸுஷேணன் கவாக்ஷன் ரம்பன் தாரன் த்விவிதன் பனஸன் [1] ஹனுமான் முதலானவர்கள்

1. இங்கு ஹனுமான் ஓடிப்போய்த் திரும்பி வரவில்லை. ருஷபாதிகளுடன் கூடினது கும்பகர்ணனோடு யுத்தஞ்செய்ய மீளவும் வந்தானென்று தெரிகிறது.

மிகுந்த வேகத்துடன் யுத்தஞ்செய்ய விருப்பமுற்று எதிர்த்துப் போயினர். அறுபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கும்பகர்ணன் ஸுக்ரீவனுல் அவமதி அடைந்து ராமனேடு யுத்தஞ்செய்தலும், அவனுல் மாண்டுபோதலும்.

பெருப்பெரிய தேஹங்களையுடைய அவ்வானர வீரர்கள் அங்கதனுடைய வார்த்தையைக் கேட்டு, மரணத்திற்கும் துணிந்த புத்தியுடன் எல்லோரும் யுத்தத்தை விரும்பித் திரும்பி வந்தனர். அங்கதன் அங்ஙனம் தகுந்த வார்த்தைகளால் திருப்பி நிலைப் படுத்துகையில், அவ்வானரர்கள் தமது பழைய வீரச் செயல்களை எடுத்துரைப்பவராகிப் பராக்ரமத்தை ஏற்றுக்கொண்டு ஜீவிக்கவேண்டுமென்கிற ஆசையில் லாமையால் 'மரணம் நேரினும் நேரட்டும்' என்று நிச்சயித்து ஸந்தோஷத்துடன் திரும்பி வந்து மிகுதி யும் பெரிய யுத்தஞ் செய்தனர். அனந்தரம் மஹா காயர்களான வானரவீரர்கள் வ்ருக்ஷங்களையும் மிகவும் பெரிய தாழ்வரைகளையும் எடுத்துக்கொண்டு சீக்ர மாகக் கும்பகர்ணன்மேல் எதிர்த்து ஓடினர். மஹத் தான சரீரமுடைய அந்தக் கும்பகர்ணன் சிறந்த வீர்ய முடையவனுகையால் மிகுந்த கோபத்துடன் கதையை எடுத்துக்கொண்டு சத்ருக்களை நாற்புறத்திலும் ஹிம் ஸித்துக் கீழ்விழத் தள்ளினன். கும்பகர்ணனுடைய ஒவ்வொரு அடிக்கும் வானரர்கள் ஹிம்ஸை அடைந்து அவயவங்கள் தளர்ந்து எழுநூறும் எண்ணூறும் ஆயிரமுமாகத் தரையில் வீழ்ந்தனர். அந்தக் கும்ப

கர்ணன் மிகுதியும் கோபித்து, கருடன் ஸர்ப்பங்களைத் தின்பதுபோல், வானரர்களை எட்டும் பத்தும் பதினாலும் இருபதும் முப்பதுமாகக் கைகளால் பிடித்து வாயில் போகட்டு பக்ஷித்துக்கொண்டே யுத்தாங்கத்தில் விளையாடினன். அப்பால் வானரர்கள் மிகவருத்தத்துடன் திடம்பெற்று எல்லோரும் ஆங்காங்கு ஒன்றாகச் சேர்ந்து வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் கையில் ஏந்திக்கொண்டு ஸந்நாஹத்தோடு யுத்தத்தின் முனையில் நின்றனர். அதன் பிறகு வானர ஸிம்ஹமாகிய த்விவிதன் ஓர் பர்வதத்தைப் பிடுங்கிக்கொண்டு பர்வதசிகரம்போல் மிகவும் உயர்ந்திருக்கிற கும்பகர்ணன்மேல், தரையில் தொங்குவதுபோல் மிகவும் தாழ்ந்திருக்கிற மேகத்தோடொத்து, எதிர்க்கலாயினன். த்விவிதன் கும்பகர்ணனுடைய ஸமீபத்திற்குப்போய் அந்தப்பர்வதத்தை அவன்மேல் போகட்டனன். அப்பொழுது அது குறிதப்பி மஹாதேஹமுடைய அவன்மேல் விழாமல் அவன் ஸேனைமேல் விழுந்தது. அம்மஹா பர்வதம் அந்த ஸேனையிலுள்ள குதிரைகளையும் யானைகளையும் ரதங்களையும் ப்ரஸித்தர்களான மற்ற ராக்ஷஸர்களையும் சூர்ணஞ் செய்தது. அனந்தரம் அந்த த்விவிதன் மற்றொரு பர்வத சிகரத்தைப் போகட்டனன். ராக்ஷஸர்களுடைய மஹத்தான அப்போர்க்களம் முழுதும், அந்தப் பர்வத சிகரத்தின் வேகத்தினால் குதிரைகளும் ஸாரதிகளும் அடியுண்டு மாண்டுபோகப் பெற்று ரக்தப்ரவாஹங்களால் நனைந்தது. ரதத்தில் நின்று சண்டை செய்கிற வீரர்களான ராக்ஷஸர்கள் பயங்கரமாக ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு ப்ரளயகால யமன்கள்போல் பாணங்களை எய்து, கர்ஜிக்கின்ற வானரோத்தமர்களின்

சிரஸ்ஸுக்களை வேகமாக அறுத்துத் தள்ளினர். மஹாபலசாலிகளான வானரர்களும், அப்பொழுது பெரும் பெரிய வ்ருக்ஷங்களைப் பிடுங்கிக்கொண்டு அவற்றால் ரதங்களை முறித்துக் குதிரைகளையும் யானைகளையும் ஒட்டைகளையும் ராக்ஷஸர்களையும் உருமாய்த்தனர். ஹநுமான் ஆகாயத்தில் சென்று பர்வதசிகரங்களையும் பலவகைப்பட்ட பெரியவ்ருக்ஷங்களையும் கும்பகர்ணனது தலைமேல் வர்ஷித்தனன். மஹாபலனாகிய அந்தக் கும்பகர்ணன் சூலத்தினால் அந்தப் பர்வத சிகரங்களைப் பேதித்து மழையாகப் பெய்கின்ற வ்ருக்ஷஸமூஹங்களை முறித்துப் போகட்டனன். அப்பால் அந்தக் கும்பகர்ணன் கூரான சூலத்தை ஏந்திக்கொண்டு பயங்கரமான அந்த வானர ஸைன்யத்தைத் துரத்துகையில், அப்பொழுது ஹநுமான் ஒரு பர்வத சிகரத்தைப் பிடுங்கிக்கொண்டு அவன் முன்னே தடுத்து நின்றனன். பெரிய பர்வதம்போல் பயங்கரமான உருவமுடைய அந்தக் கும்பகர்ணனை ஹநுமான் கோபத்துடன் அந்தப் பர்வத சிகரத்தினால் அடித்தனன். அந்த அடிக்குக் கும்பகர்ணன் வருந்தி மேதஸ்ஸும் ரக்தமும் பெருகி உடம்பெல்லாம் நனையப்பெற்று அப்பொழுது சிறிது கலக்கமுற்றனன். அந்தக் கும்பகர்ணன் மின்னல்போல் ப்ரகாசிப்பதும் ஜ்வலிக்கின்றதுமாகிய சூலத்தைக் கிருகிருவென்றுசுழற்றி, ஸுப்ரஹ்மண்யன் தனது பயங்கரமான சக்தியால் க்ரௌஞ்சபர்வதத்தைப் பிளப்பதுபோல் ஹநுமானுடைய மார்பைப் பிளந்தனன். அங்ஙனம் ஹநுமான் சூலத்தினால் அகன்ற தன் வக்ஷஸ்தலம் பேதிக்கப்பெற்று மூர்ச்சித்து வாயினால் ரக்தத்தைக் கக்கிக்கொண்டு மஹத்தான யுத்தரங்கத்தில் ப்ரளயகால மேகம்போல் பயங்கரமாக கர்ஜித்தனன்.

அப்பால் ராக்ஷஸக்கூட்டங்கள் ஹநுமான் வருந்துவதைக்கண்டு உடனேமிகுந்த ஸந்தோஷத்துடன்ஸிம்ஹநாதஞ் செய்தனர். வானரர்கள் அதற்கு வ்யஸனமுற்றுக் கும்பகர்ணனாலுண்டான பயத்தினால் வருந்தி யுத்தத்தில் ஓடிப்போகலாயினர். அனந்தரம் பலிஷ்டனாகிய நீலன் பறந்தோடுகிற ஸேனையை நிறுத்தி, புத்திமானாகிய கும்பகர்ணன்மேல் ஒரு பர்வத சிகரத்தைப் போகட்டனன். அவன் அந்தப் பர்வதசிகரம் தன்மேல் வருவதைக் கண்டு, முஷ்டியால் அடித்தனன். அவனது முஷ்டியால் அடிக்கப்பட்ட அந்தப் பர்வதசிகரம் பலவாறு உடைந்து சுக்கல்சுக்கலாகி நெருப்புப் பொறிகளோடும் ஜ்வாலைகளோடும் பூமியில் சிதறி விழுந்தது. ருஷபன் சரபன் நீலன் கவாக்ஷன் கந்தமாதனன் ஆகிய இவ்வைந்து வானரோத்தமர்களும் கும்பகர்ணன்மேல் எதிர்த்தனர். மஹாபலர்களான அவ்வானரோத்தமர்கள் பெருந்தேஹமுடைய கும்பகர்ணனைக்கிட்டிப் பர்வதங்களையும் வ்ருக்ஷங்களையும் உள்ளங் கைகளையும் அடிக்கத்தூக்கின பாதங்களையும் முஷ்டிகளையுங்கொண்டு சுற்றிலும் ஓடித்தகைந்தனர். அந்தஅடிகளையெல்லாம் அவன் வெறுமனே தொடுவதுபோல் நினைத்தானன்றி அவன் சிறிதும் வருந்தவில்லை. கும்பகர்ணன் அப்பொழுது மஹாவேகனாகிய ருஷபனை இரண்டுகைகளாலும் அழுந்தக்கட்டி யிறுக்கினன். வானரஶ்ரேஷ்டனும் பயங்கரனுமாகியருஷபன் கும்பகர்ணனுடைய புஜங்களால் பீடிக்கப்பட்டு வாயினால் ரக்தத்தைக் கக்கிக்கொண்டு தரையில் வீழ்ந்தனன். அப்பொழுது இந்த்ரசத்ருவாகிய கும்பகர்ணன் யுத்தத்தில் முஷ்டியால்சரபனை அடித்து, முழங்காலால் நீலனைக் குத்தி, உள்ளங்கையால் கவாக்ஷனை அறைந்த

னன். மிகுதியும் கோபாவேசமுற்று பலமுள்ளவனாவும் கந்தமாதனனைப்பாதத்தினால் உதைத்தனன். அவ்வான ரோத்தமர்கள் கும்பகர்ணன் அடித்த அடிகளுக்கு மிக வும் வருத்தமுற்று ரக்தத்தில் நனைந்து மூர்ச்சை யடைந்து அறுப்புண்ட பலாச வ்ருக்ஷங்கள்போல் தரையில் வீழ்ந்தனர். மஹானுபாவர்களான அவ்வா னரமுக்யர்கள் விழுந்ததைக்கண்டு பலவாயிரம் வானரர் கள் கும்பகர்ணன்மேல் எதிர்த்தனர். பர்வதம்போன்ற உருவமுடையவரும் மஹாபலிஷ்டர்களுமாகிய அந்த வானரவீரர்கள் அனைவரும் மலைமேல் கிளம்பி ஆரோ ஹிப்பதுபோல் அந்தக் கும்பகர்ணன்மேல் கிளம்பி ஆரோஹித்துப் பற்களால் பிடித்துக் கடித்தனர். அவ் வானரோத்தமர்கள் பெருந் தேஹமுடைய அந்தக் கும்பகர்ணனை அப்பொழுது நகங்களால் பீறுவதும் பற் களால் கடிப்பதும் முட்டிகளால் குத்துவதும் முழங் கால்களால் குமுக்குவதுமாகிப் பற்பலவாறு ஹிம்ஸித்த னர். பர்வதம் போன்ற உருவமுடைய அந்த ராக்ஷஸ ஶ்ரேஷ்டனாகிய கும்பகர்ணன், அங்ஙனம் அனேகமா யிரம் வானரர்கள் தன்மேலேறி நிறைந்திருக்கப் பெற்று, வ்ருக்ஷங்கள் முளைத்திருக்கிற பர்வதம்போல ப்ரகாசித்தனன். அந்தக்கும்பகர்ணன் மிகவும் பலிஷ்ட னாகையால், கருடன் ஸர்ப்பங்களைப் பக்ஷிப்பதுபோல், வானரர்க ளெல்லோரையும் கைகளால் பிடித்துக் கொண்டு பக்ஷிக்கத்தொடங்கினன். அங்ஙனம் கும்பகர் ணன் வானரர்களைப் பாதாளபிலம்போன்ற தன் வாயில் போகட்டுக் கொண்டவுடனே, அவர்கள் மூக்கின் த்வா ரங்களினின்றும் காதுகளினின்றும் புறப்பட்டு வெளி வந்தனர். பர்வதாகாரனாகிய அந்த ராக்ஷஸோத்தமன் இங்ஙனம் வானரர்கள் திரும்பி வருவதைக்கண்டு

மிகுதியும் கோபித்தவனுகி வானரர்களெல்லோரையும் முறித்துப் பக்ஷிக்கத் தொடங்கினன். அந்த ராக்ஷஸன் ப்ரளயகாலாக்னிபோல் ரௌத்ராகாரனுகி மெய்ம்மறந்து பூமி முழுவதையும் ரக்தமாம்ஸங்களால் நனைத்துக்கொண்டு வானரஸைன்யங்களில் விளையாடினன். சூலத்தை ஏந்தின மஹாபலனுகிய கும்பகர்ணன் வஜ்ராயுதத்தை ஏந்தின தேவேந்த்ரன்போலும் பாசத்தைத்தரித்த யமன்போலும் யுத்தத்தில் மிகவும் ப்ரகாசித்தனன். க்ரீஷ்ம காலத்தில் (வெயிற்காலத்தில்) உலர்ந்திருக்கிற அரண்யங்களை அக்னி தஹிப்பது போல், கும்பகர்ணன் வானர ஸைன்யங்களை தஹித்தனன் அப்பால் அந்த வானரர்கள் அங்ஙனம் வதிக்கப்பட்டுக் கூட்டங்கலைந்து நாயகனில்லாமல் மிகுதியும் பயந்து விகாரமான சப்தத்துடன் மிகவும் இறையத்தொடங்கினர். அங்ஙனம் கும்பகர்ணன் பலவாறு வதித்துக்கொண்டிருக்கையில், அவ்வானரர்கள் ஹிம்ஸிக்கப்பட்டு மனவருத்தம் மிகப்பெற்று ராமனைச் சரணம் அடைந்தனர். அப்பால் இந்த்ரனுடைய பிள்ளையின் பிள்ளையாகிய (இந்த்ரனுடைய பேரனுகிய) அங்கதன் யுத்தத்தில்வானரர்களெல்லோரும் தோல்வியடைந்து ஓடுவதைக் கண்டு, ஓர் பெரிய பர்வத சிகரத்தைக்கொண்டு கும்பகர்ணனைத் தொடர்ந்து வருகின்ற ராக்ஷஸர்களெல்லோரும் பயப்படும்படி அடிக்கடி ஸிம்ஹநாதஞ் செய்பவனுகி மஹாயுத்தத்தில் வேகமாகக் கும்பகர்ணன்மேல் எதிர்த்து அந்தப் பர்வத சிகரத்தைக் கும்பகர்ணனது தலைமேல் போகட்டனன். அங்ஙனம் தன்மேல் பெரிய அடி படுகையில், அந்தக் கும்பகர்ணன் பெருங்கோபத்தினுல் ஜ்வலித்தனன். அக்கும்பகர்ணன் அங்ஙனம் கோபித்து ஸமஸ்த

வானரர்களும் பயந்து சிதறும்படி பெருங்கோஷமாக கர்ஜித்துக்கொண்டு வேகத்துடன் அங்கதன்மேல் எதிர்த்தனன். மஹாபலனுகிய அந்தக் கும்பகர்ணன் கோபத்தினுல் அங்கதன்மேல் சூலத்தைப் போகட்டனன். யுத்தமார்க்கங்களை நன்ருக அறிந்தவனும் பலிஷ்டனுமாகிய அங்கதன் அந்தச் சூலம் தன்மேல் வருவதைக் கண்டு லாகவத்தினுல் தப்பித்துக்கொண்டனன். அவ்வங்கதன் அவ்வளவோடு நிற்காமல் திடீலென்று மேற்கிளம்பி அருகே வந்து கும்பகர்ணனுடைய மார்பில் உள்ளங்கையால் அறைந்தனன். பர்வதாகாரனுகிய அந்தக் கும்பகர்ணன் அங்கதனுடைய அடிக்கு மிகுதியும் கோபித்து எதுந்தெரியாமல் மூர்ச்சித்தனன். அப்பால் அந்த மஹாபலன் சிறிது நேரங் கழித்து மூர்ச்சை தெளிந்து ப்ராஜ்ஞை அடைந்து முட்டியை மடக்கி இடக்கையினுல் அங்கதனை அடித்தனன். அனந்தரம் அங்கதன் அவ்வடியைப் பொறுக்கமுடியாமல் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தனன். வானரோத்தமனுகிய அவ்வங்கதன் அங்ஙனம் மூர்ச்சித்துப் பூமியில் விழக்கண்டு கும்பகர்ணன் அந்தச்சூலத்தை எடுத்துக்கொண்டு ஸுக்ரீவன்மேல் எதிர்த்துவந்தனன். அப்பொழுது வீரனுகிய அவ்வானராதிபன் ஸுக்ரீவன் மஹாபலனுகிய கும்பகர்ணன் தன்மேல் வருவதைக்கண்டு யுத்தோத்ஸாஹத்தினுல் கிளம்பிப் பாய்ந்தனன். மஹாகபியான ஸுக்ரீவன் பர்வத சிகரத்தைக் கையில் எடுத்துக் கிருகிருவென்று திருப்பி மஹா பலமுடைய கும்பகர்ணன்மேல் எதிர்த்தனன். கும்பகர்ணன், ஸுக்ரீவன் தன்மேல் வருவதைக் கண்டு, ஸமஸ்த அவயவங்களையும் விகாரமாக வைத்துக்கொண்டு ஸுக்ரீவனுக்கு எதிர்முகமாகி நின்றனன்.

வானரர்களைப் பக்ஷித்துக்கொண்டு அவரது ரக்தங்களால் அங்கங்கள் முழுவதும் நனையப்பெற்று நிற்கின்ற கும்பகர்ணனை ஸுக்ரீவன் பார்த்து 'நீ யுத்தத்தில் பெருப்பெரிய வீரர்களை விழத்தள்ளினை. பிறர்க்கு எவர்க்கும் செய்ய முடியாத கார்யத்தைச் [1]செய்தனை. வானர ஸைன்யங்களைப் பக்ஷித்தனை. பெரியபுகழையும் பெற்றனை. ராக்ஷஸா! அந்த வானரக்கூட்டங்களை விடுவாயாக. அற்பர்களோடு உனக்கு என்ன கார்யம்? இப்படி வருவாயாக. நான் இந்தப் பர்வதத்தை இதோ உன்மேல் போடுகின்றனன். இந்த ஓர் அடியை மாத்ரம் ஸஹிப்பாயாக' என்றனன், வானர ராஜனாகிய ஸுக்ரீவன் பலமும் தைர்யமும் விளங்கும்படி மொழிந்த அவ்வசனத்தைக் கேட்டு ராக்ஷஸ ஸிம்ஹனாகிய கும்பகர்ணன் அவனைப்பார்த்து '[1]நீ ப்ரஹ்மதேவனுடைய பேரன்; ப்ரஹ்மதேவனுடைய

---

1. இங்கு 'ப்ராஜாபதேஸ்து பௌத்ரஸ்த்வம்' என்பது மூலம். முன்பு ப்ரஹ்மதேவன் கொட்டாவி விடுகையில் அவனது முகத்தினின்று ருக்ஷரஜஸ்ஸென்னும் வானரன் பிறந்தனன். அவன் ஒரு காலத்தில் திரிந்துகொண்டிருந்த ப்ரஹ்மலோகத்தில் அப்ஸரஸ்த்ரீயின் உருவத்தை விளைவிக்கும்படியான ஒரு ஸரஸ்ஸில் மூழ்கி அப்ஸரஸ்ஸ்திரீயின் உருவத்தைப் பெற்றனன். அவளைப் பார்த்து இந்த்ரனும் ஸூர்யனும் காமத்தினால் மதிமயங்கி இருவரும் ஒரே காலத்தில் அவளைக் கையில் பிடித்துக்கொண்டனர். அதற்குள் அவ்விருவர்க்கும் த்ருப்தி உண்டாகி அவருடைய ரேதஸ்ஸு நழுவி விழுந்தது. அங்ஙனம் அது அந்த ஸ்த்ரீயின்வாலில் விழுகையில் வாலியென்றும் க்ரீவையில் (கழுத்தில்) விழுகையில் ஸுக்ரீவனென்றும் இரண்டு குமாரர்கள் உண்டாயினர். ப்ரஹ்மதேவன் இந்த ஸங்கதியைக் கண்டு சிரித்து அப்ஸர உருவமடைந்த ருக்ஷரஜஸ்ஸின் எப்பொழுதுமுள்ள ரூபம் உண்டாவதற்காக அவனையும் அந்தக் குமாரர்களையும் அழைத்துக்கொண்டுபோய் வானரரூபம்

புதல்வனாகிய ருக்ஷராஜஸ்ஸின் பிள்ளை; புகழ்பெற்றபராக்ரமத்தின் பெருக்குடையவன். இவையெல்லாம் எமக்குத் தெரிந்தவையே. நீ ஏன் கர்ஜிக்கின்றனை?' என்றனன். அப்பால் ஸுக்ரீவன் கும்பகர்ணன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு வஜ்ரமும் இடியும்போன்ற அந்தப் பர்வதத்தைக் கிருகிருவென்று சுழற்றி வேகமாக வீசியெறிந்து அவனது மார்பில் விழும்படி அடித்தனன். அப்பொழுது அந்தப் பர்வதசிகரம் விசாலமாகிய கும்பகர்ணனுடைய வக்ஷஸ்தலத்தில் பட்டுச் சூர்ணமாயிற்று. அதைப்பார்த்து வானரர்களெல்லோரும் உடனே வருத்தமுற்றனர். ராக்ஷஸக்கூட்டங்களும் உடனே ஸந்தோஷத்தினால் ஸிம்ஹநாதஞ் செய்தன. பர்வதசிகரத்தினால் அடியுண்டதற்கு அந்தக் கும்பகர்ணன் கோபாவேசமுற்றனன்; அந்தக் கோபத்தினால் வாயைத் திறந்து ஸிம்ஹநாதஞ் செய்தனன்; மற்றும், மின்னல்போல் விளங்குகின்ற சூலத்தைக் கிருகிருவென்று சுழற்றி ஸுக்ரீவனை வதிக்கும்பொருட்டு அவன்மேல் போகட்டனன். ஹனுமான் அந்த க்ஷணமே அவ்விடம் கிளம்பி வந்து கும்பகர்ணன் தனது புஜபலம் உள்ளவளவும் வீசியெறிந்ததும் பொற்பிடியுடையதுமாகிய அந்தக் கூரான சூலத்தைத் தன் புஜங்களால் தடுத்துப் பிடித்துக்கொண்டு வேக

---

பெறச்செய்வதான ஓர் ஸரஸ்ஸைக் காண்பித்து அதில் முழுகுவாயென்றனன். அவனும் அங்ஙனஞ்செய்து குழந்தைகளோடு வானர உருவம் பெற்றனன். அவனுடைய பிள்ளைகள் வாலி ஸுக்ரீவர்களாகையால் ஸுக்ரீவன் ப்ரஹ்மாவின் பேரனென்று இங்குச் சொல்லப்பட்டனன். கஶ்யப ப்ரஜாபதிக்கு ஸூர்யனும் ஸூர்யனுக்கு ஸுக்ரீவனும் பிறக்கையால் ப்ரஹ்மாவுக்குப் பேரனென்று சொல்லப்பட்டானென்று வேறு சிலர் கருத்து. கோவிந்தராஜர்.

மாக முறித்தனன். வானர ஸிம்ஹனாகிய ஹனுமான் மிகுதியும் ஸந்தோஷமுற்று ஆயிரம் பார அளவுடைய இரும்பினுற் செய்யப்பட்ட அம்மஹாசூலத்தை முழங்காலில் வைத்து முறித்தனன். ஹனுமானால் சூலம் முறிபட்டதைக் கண்டு வானரஸைன்யத்திலுள்ளவர் ஸந்தோஷத்தினால் பலவாறு இரைச்சலிட்டுக்கொண்டு நாற்புறத்தினின்றும் ஓடி வந்தனர். அவ்வானரர்களெல்லோரும் அந்தச் சூலம் அங்ஙனம் முறிந்தமை கண்டு மிகுதியும் ஸந்தோஷமுற்று ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு வாயுகுமாரனாகிய ஹனுமானைப் பூஜித்தனர். மஹாபலனும் ராக்ஷஸ வீரனுமாகிய அந்தக் கும்பகர்ணன் அப்பொழுது தன்சூலம் முறிந்தமை கண்டு கோபாவேசமுற்று [1] லங்காமலய பர்வதத்தினின்று ஒரு சிகரத்தைப் பிடுங்கிக்கொண்டு வந்து ஸுக்ரீவனைக் கிட்டி அவன்மேல் அதை வீசி யெறிந்தனன். அந்தப்பர்வத சிகரத்தினால் அடியுண்ட அந்த ஸுக்ரீவன் மூர்ச்சித்து யுத்தபூமியில் வீழ்ந்தனன். அவன் அங்ஙனம் ப்ரஜ்ஞையில்லாமல் தரையில் விழுவதைக் கண்டு, உடனே ராக்ஷஸர்களெல்லோரும் மிகவும் ஸந்தோஷமுற்று ஸிம்ஹநாதஞ் செய்தனர். வானரர்கள் மிகுதியும் துக்கித்தவராயினர். அந்தக் கும்பகர்ணன்யுத்தத்தில் ஆச்சர்யத்தையும்பயத்தையும் விளைக்கவல்ல பராக்ரமத்தையுடைய வானரநாதனாகிய

---

1. த்ரிகூட சிகரத்தின் மேலுள்ள லங்கையின் த்வாரத்திலிருக்கிற கும்பகர்ணன் மற்றோரிடத்திலிருக்கிற லங்காமலய பர்வதத்தின் சிகரத்தை எங்ஙனம் பெயர்த்தானென்னில்—அதற்குத் தகுந்த அளவுடைய பெருந் தேஹமுடையவனாகையால் இங்ஙனஞ் செய்தானென்றுவது, லங்காமலயமென்றால் இங்கு த்ரிகூட பர்வதமென்றுவது கண்டுகொள்க.

ஸுக்ரீவனிடஞ் சென்று மிகவும் ப்ரசண்டமான காற்று மஹாமேகத்தைக் கொண்டுபோவதுபோல் அவனை எடுத்துக்கொண்டு போயினன். மேருபர்வதம்போன்ற உருவமுடைய அந்தக் கும்பகர்ணன் யுத்தத்தில் மஹா மேகம்போன்ற அந்த ஸுக்ரீவனை எடுத்துக்கொண்டு போகும்பொழுது, உயர்ந்து பயங்கரமான சிகரத்தை யுடைய மேருபர்வதம்போல் ப்ரகாசித்தனன். அப்பால் வீரனாகிய கும்பகர்ணன் அங்ஙனம் ஸுக்ரீவனை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் ராக்ஷஸஶ்ரேஷ்டர்கள் பலவாறு புகழப்பெற்று, வானரராஜனாகிய ஸுக்ரீவ னும் பிடியுண்டதற்கு தேவதைகள் ஆச்சர்ய முற்றுச் செய்யும் த்வனிகளைக் கேட்டுக்கொண்டே சென்றனன். அனந்தரம் தேவேந்த்ரனைப் போன்ற பராக்ரம முடையவனும் இந்த்ரசத்ருவுமாகிய கும்பகர் ணன் தேவேந்த்ரனையொத்த வானரேந்த்ரனாகிய அந்த ஸுக்ரீவனை எடுத்துக்கொண்டு 'இவனைக் கொண்டு போனேனுமாயின் ராம லக்ஷ்மணர்களோடுகூடின இவ் வானர ஸைன்யத்தை யெல்லாம் பிடித்துக்கொண் டாற்போலவேயாகும்' என்று நினைத்தனன். அனந்தரம் வானர ஸைன்யமெல்லாம் ஆங்காங்கு ஓடிப்போவதை யும், ஸுக்ரீவன் கும்பகர்ணனால் பிடியுண்டதையுங் கண்டு வாயுபுத்ரனாகிய ஹனுமான் புத்திமானாகையால் தனக்குள் 'ஸுக்ரீவனே இங்ஙனம் பிடியுண்டானே! இனி நான் என்ன செய்யவேண்டும்? நான் எதைச் செய் வது ந்யாயமோ, அதை எவ்விதத்திலும் செய்துமுடிக்க வேண்டும். நான் பர்வதம் போன்ற உருவத்தை எற்றுக் கொண்டு ராக்ஷஸனை நாசஞ்செய்கிறேன். நான் யுத் தத்தில் மஹாபலனாகிய கும்பகர்ணனை முட்டியால் அடித்து தேஹம் விலவிலக்கும்படி செய்து வதித்து

வானரராஜனாகிய ஸுக்ரீவனை விடுவிக்கையில், ஸமஸ்த வானரர்களும் ஸந்தோஷம் அடைவார்களாக. அப்படியன்றி, இந்த ராஜனாகிய ஸுக்ரீவன், தன்னை தேவதைகளும் அஸுரர்களும் உரகர்களும் ஒன்று கூடி வந்து பிடித்துக்கொள்ளினும் தானே விடுவித்துக்கொள்ளவும் கூட ஸமர்த்தனே. வானர நாதனாகிய இவன் யுத்தத்தில் கும்பகர்ணன் போகட்ட பர்வதத்தின் அடிபட்டிருக்கையால், இன்னமும் தன்னைத்தான் தெரிந்து கொள்ளாதிருக்கிறானென்று தோற்றுகிறது. இல்லையாயின், தானே விடுவித்துக் கொண்டிருப்பானே. இந்த ஸுக்ரீவன் இன்னம் முஹூர்த்தகாலத்திலேயே மூர்ச்சை தெளிந்து இம்மஹாயுத்தத்தில் தனக்கும் வானரர்களுக்கும் எது யுக்தமோ அதைச் செய்வான். ப்ரபு ஆபத்தில் அகப்படுவானாயின் ப்ருத்யன் விடுவிக்கக்கூடுமேயாயினும், அங்ஙனம் நான் இந்த ஸுக்ரீவனை விடுவிப்பேனாயின், மஹாபராக்ரமசாலியாகிய இவனுக்கு அப்பால் விளையும் அஸந்துஷ்டியானது மிகவும் கஷ்டமாயிருக்கும்; இவனுடைய ஶாஶ்வதமான கீர்த்தியும் பாழாய்விடும். ஆதலால் நான் சிறிதுநேரம் நம் ப்ரபுவே பராக்ரமஞ் செய்வதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவனது பராக்ரமத்தின் மேலேயே பாரத்தைப் போகட்டிருக்கிறேன். அவன் வரும்வரையில், பயந்து கலைந்து ஓடுகின்ற வானர ஸைன்யத்தையும் ஆஶ்வாஸப்படுத்திக் கொண்டிருக்கிறேன்' என்று ஆலோசித்தனன். இங்ஙனம் வாயுபுத்ரனாகிய ஹனுமான் ஆலோசித்து அவ்வானர மஹா ஸைன்யத்தை ஓடிப் போகவொட்டாமல் திருப்பி நிறுத்தினன். அனந்தரம் அந்தக் கும்பகர்ணன் அங்ஙனம் அடியுண்டு துடிக்கின்ற ஸுக்ரீவனை எடுத்துக்



2943. கும்பகர்ணனை ஸுக்ரீவன் பிடித்துக்கொண்டு போதலும், ஸுக்ரீவன் கும்பகர்ணனுடைய காது மூக்குகளைக் கடித்துப் போகடலும்.

கொண்டு மேடைகள் மீதும் சர்யா க்ருஹங்களிலும் கோபுரங்களிலும் இருக்கின்ற ராக்ஷஸர்கள் சிறந்த புஷ்பவர்ஷங்களைப் பொழியப்பெற்று லங்காபுரத்தில் ப்ரவேசித்தனர். மஹாபலனான ஸுக்ரீவன் அங்ஙனம் தன்மேல் பொரிகளும் மணமுடைய நீர்த்துளிகளும் விழப்பெற்று நனைந்திருக்கையாலும் ராஜமார்க்கம் சைத்யோபசாரங்களால் குளிர்ந்திருக்கையாலும் மெல்ல மெல்ல மூர்ச்சை தெளியப்பெற்றனன். அப்பால் மஹாதீரனாகிய ஸுக்ரீவன் மிக வருத்தத்தின்மேல் தெளிவுபெற்று மிகுந்த பலமுடைய அந்தக் கும்பகர்ண னுடைய மார்பில் இருந்து பலவாறு லங்காபுரத்தின் ராஜமார்க்கத்தைப் பார்த்துக்கொண்டே, தனக்குள் 'இப்பொழுது இங்ஙனம் பிடியுண்டிருக்கிறேனே. நான் இப்பொழுது பதில் எவ்விதஞ் செய்யக்கூடும்? எப்படி செய்தால் வானரர்களுக்கு இஷ்டமும் ப்ரியமுமா யிருக்குமோ, அவ்வண்ணம் கார்யத்தை நடத்து கிறேன்' என்று ஆலோசித்தனன். அனந்தரம் வானர ராஜனாகிய ஸுக்ரீவன் கூரான தனது நகங்களால் திடீலென்று இந்த்ர சத்ருவாகிய கும்பகர்ணனுடைய காதுகளைப் பிரிப் பற்களால் மூக்கைக் கடித்துக் கொண்டு பார்ஶ்வங்களில் கபோலங்களையும் தோள்க ளையும் வயிற்றின் பக்கங்களையும் பாதங்களால் பிளந்த னன். அந்தக் கும்பகர்ணன் அங்ஙனம் ஸுக்ரீவனால் மூக்கையும் காதையும் இழந்து பக்கங்களும் பிளவுண்டு வருந்தினதற்கு மிகவும் கோபாவேசமுற்று தேஹமெல் லாம் ரக்தம் பெருகப்பெற்று ஸுக்ரீவனைக் கிருகிரு வென்று சுழற்றித் தரையில் போகட்டுத் துவைத்த னன். பயங்கரமான பலமுடைய கும்பகர்ணன் தரையில் போகட்டுத் துவைக்கினும் அந்த ராக்ஷஸர்கள் பல

வாறு புடைத்துக்கொண்டிருப்பினும், அந்த ஸுக்ரீவன் அவற்றைப் பொருள் செய்யாமல் வேகமாக ஆகாயத்திற்குக் கிளம்பி ராமனிடம் வந்து கலந்து கொண்டனன். மஹாபலனாகிய கும்பகர்ணன் மூக்கும் காதும் போய் ரக்தம் பெருகப்பெற்று மலையருவிகளோடு கூடின பர்வதம்போல் புலப்பட்டனன். அங்ஙனம் ரக்தம் பெருகப்பெற்ற மஹாகாயனும் பயங்கர பராக்ரமனும் மஹாபலனுமாகிய அந்தக் கும்பகர்ணன் மீளவும் யுத்த பூமிக்காகத் திரும்பி யுத்தஞ்செய்ய நிச்சயித்தனன். கறுத்த மைக்குவியல்போல் புலப்படுகின்ற அந்தக் கும்பகர்ணன் கோபம் மிகப்பெற்று தேஹம் முழுவதும் ரக்தம் பெருகிக்கொண்டிருக்கையால் ஸந்த்யா காலத்து மேகம்போல் அப்பொழுது ப்ரகாசித்தனன். அந்த ஸுக்ரீவன் தப்பித்துக்கொண்டு போனவுடனே, தேவேந்த்ர சத்ருவாகிய கும்பகர்ணன் கோபித்து பயங்கரமான உருவத்துடன் திரும்பி யுத்தத்திற்கு ஓடிவரத்தொடங்கி, ஆயுதமில்லையென்று நினைத்து, அப்பொழுது பயங்கரமான ஓர் [1] முத்கரத்தை எடுத்துக்கொண்டனன். அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய அந்தக் கும்பகர்ணன் சீக்ரமாகப் பட்டணத்தினின்று புறப்பட்டு, பயங்கரமான அந்த வானரஸைன்யத்தில் புகுந்து ஜ்வலிக்கின்ற ப்ரளயகாலாக்னி ப்ரஜைகளை அழிப்பதுபோல், யுத்தத்தில் அந்த ஸைன்யத்தை பக்ஷிக்கத்தொடங்கினன். கும்பகர்ணன் யுத்தத்தில் பயங்கரமான அந்த வானர ஸைன்யத்தில் புகுந்து பசியினால் ரக்தமாம்ஸங்களில் பேராசைகொண்டு மதிமயக்கத்தினால் தன்னினம் பிறவினமென்று தெரியாமல் ராக்ஷஸர்களையும் வானரர்களையும் பிசாசர்களையும்

1. இரும்புத்தடி.



2944. கும்பகர்ணன் வானரர்களை விழுங்கிக்கொண்டே யுத்தத்திற்குப் போதலும், ராமலக்ஷ்மணர்கள் அவனுடைய ஹஸ்தபாதங்களைக் கண்டித்தலும்.

பல்லூகர்களையும் பக்ஷித்தனன். ப்ரளய காலத்தில் ம்ருத்யு ப்ரஜைகளை ஸம்ஹரிப்பதுபோல, அந்தக் கும்பகர்ணன் மேலான வானரர்களைப் பிடித்து பக்ஷித்தனன். அவன் கோபாவேசமுற்று வானரர்களையும் ராக்ஷஸர்களையும் பிடித்து ஒரே காலத்தில் ஒருவர் இருவர் மூவர் பலராக ஒருகையால் எடுத்து வேகமாக வாயில் போகட்டுக்கொண்டிருந்தனன். அவன் மஹாபலனுகையால், அப்பொழுது வானரர்கள் மேலான பர்வத சிகரங்களால் எவ்வளவு அடித்துக் கொண்டிருப்பினும், அந்த அடிகளைப் பொருள்செய்யாமல், தான் பக்ஷிக்கிற வானரர்களின் ரக்தமும் மேதஸ்ஸும் தனது உதட்டோரங்களில் வெள்ளம் வெள்ளமாகப் பெருகப்பெற்று அவர்களைப் பிடித்து பக்ஷித்துக்கொண்டிருந்தனன். அங்ஙனம் கும்பகர்ணன் பிடித்து பக்ஷித்துக்கொண்டிருக்கையில், அந்த வானரர்கள் நிற்கமுடியாமல் ராமனைச் சரணம் அடைந்தனர். கும்பகர்ணனும்மிகுதியும் கோபித்தவனுகி வானரர்களைப் பக்ஷித்துக்கொண்டே அவர்களைப் பின்றொடர்ந்தோடினன். அவன் வானரர்களை எழுநூறும் எண்ணூறும் இருபது நூறும் முப்பது நூறுமாக இரண்டு கைகளாலும் இறுக்கிப் பிடித்து பக்ஷித்துக்கொண்டே தொடர்ந்தோடினன். அப்பொழுது சத்ரு ஸைன்யங்களை உருமாய்க்க வல்லவனும் சத்ருபட்டணங்களை ஜயிப்பவனும் ஸுமித்ரையின் புதல்வனுமாகிய லக்ஷ்மணன், கோபமுற்று யுத்தஞ் செய்தனன். மிகுந்த வீர்யமுடைய அந்த லக்ஷ்மணன் கும்பகர்ணனுடைய தேஹத்தில் எழு பாணங்களை நாட்டி மற்றும் பல பாணங்களை எடுத்துவிட்டனன். கும்பகர்ணன் மஹாபலனுகையால் அதைப்

பொருள்செய்யாமல் ஸௌமித்ரியைக் கடந்து காலடி வைப்பினுல் பூமியைப் பிளப்பவன்போல் நடந்து ராமனையே எதிர்த்து வந்தனன். அப்பால் தசரதகுமாரனுகிய ராமன் பயங்கரமான ரௌத்ராஸ்த்ரத்தைத் தொடுத்துக் கூரான பாணங்களைக் கும்பகர்ணனுடைய மார்பில் நாட்டினன். அங்ஙனம் ராமனது பாணங்கள் பொற்றுக்கொள்கையில் கோபாவேசமுற்று விரைந்து ராமன்மேல் எதிர்த்து ஓடிவருகின்ற அந்தக் கும்பகர்ணனுடைய வாயினின்று நெருப்புப்போன்ற ஜ்வாலைகள் வெளிப்பட்டன. அந்த ராக்ஷஸஶ்ரேஷ்டன் அங்ஙனம் ராமனது அஸ்த்ரத்தினுல் அடியுண்டு மிகவும் கோபாவேசமுற்று யுத்தத்தில் வானரர்கள் பயந்து ஓடும்படி பயங்கரமாக ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு ராமனை எதிர்த்து ஓடி வந்தனன். மயிலின் இறகுகள் கட்டப்பெற்ற ராமபாணங்கள் கும்பகர்ணனுடைய மார்பில் ஆழமாகப் பொற்றுக்கொண்டன; அதனுல் அவன் மெய்ம்மறந்து பரவசனுயினன்; அவன் கையினின்று மஹாகதையும் நழுவித் தரையில் விழுந்தது. அவனுடைய கத்தி முதலிய ஆயுதங்கள் அனைத்தும் தரையில் சிதறி விழுந்தன. அப்பால் மஹாபலனுகிய அந்தக் கும்பகர்ணன் தான் ஆயுதமில்லாதிருப்பதை அறிந்து முட்டிகளாலும் கால்களாலும் மஹத்தான யுத்தஞ் செய்தனன். அங்ஙனம் பாணங்கள் மிகவும் சரீரத்தில் பொற்றுக்கொள்ளப்பெற்று ரக்தப்ரவாஹத்தினுல் நனைந்திருக்கிற அந்தக் கும்பகர்ணன், பர்வதம் அருவிகளைப் பெருக்குவதுபோல் ரக்தத்தைப் பெருக்கினன். அவன் கோபத்தினுலும் ரக்தத்தின் நாற்றத்தினுலும் மூர்ச்சித்து ஒன்றும் தெரியாமல் வானரர்களையும் ராக்ஷஸர்களையும் பல்லூகர்களையும்

பக்ஷித்துக்கொண்டு யுத்தரங்கத்தில் உலாவிக்கொண்டிருந்தனன். அனந்தரம், பயங்கரமான பராக்ரமம் அமைந்து ம்ருத்யுவைப்போன்ற மஹாபலனுகிய அந்தக் கும்பகர்ணன் பயங்கரமான ஓர் பர்வத சிகரத்தை எடுத்துக் கிருகிருவென்று சுழற்றி ராமனைக் குறித்து வீசி யெறிந்தனன். புருஷஶ்ரேஷ்டனுகிய ராமன், அந்தப் பர்வத சிகரம் தன்மேல் வருவதற்கு முன்னமே நடுவழியிலேயே, ஸ்வர்ணத்தினுல் விசித்ரமாக அலங்காரஞ் செய்யப்பெற்றவைகளும் குறி தப்பாதவைகளுமான ஏழு பாணங்களைத் தொடுத்துக் கண்டித்தனன். [1] மேருசிகரம்போல் புலப்படுவதும் காந்தியால் ஜ்வலிப்பதுபோல் விளங்குவதுமாகிய அந்தப் பர்வதசிகரம் ராமபாணங்களால் தடுக்கப்பட்டுக் கீழே விழுந்தது; விழும்பொழுது இருநூறு வானரர்களைக் கீழேவிழத்தள்ளி மடித்தது. அந்த ஸமயத்தில் தர்மாத்மாவாகிய அந்த லக்ஷ்மணன் கும்பகர்ணனை வதிப்பதில் மனவிருப்பமுற்று அதற்கு வேண்டிய உபாயங்கள் பலவற்றையும் ஆலோசித்துக்கொண்டு, ராமனைப் பார்த்து 'ராஜனே! இந்தக் கும்பகர்ணன் ரக்தத்

1. இங்கு 'தந்மேருஶிகராகாரம் தீப்யமாநமிவ ஶ்ரியா। த்வேஸதே வாநரேந்த்ராணும் பதமாநமபாதயத்' என்பது மூலம். இதற்கு இங்குச்சொன்ன பொருளே பொருந்தியிருக்கின்றது. இப்படியிருக்க, கோவிந்தராஜர் 'தம்மேருஶிகராகாரம்' என்பதாகப் பாடங்கொண்டு இதைக் கும்பகர்ண விஷயமாக வ்யாக்யானஞ் செய்தனர். அதாவது — மேருசிகரம் போன்ற உருவமுடைய அந்தக் கும்பகர்ணன் காந்தியால் ஜ்வலிப்பவன்போல் விளக்கமுற்று, இருநூறு வானரர்கள்மேல் எதிர்ப்பதைக் கண்டு, ராமன் பாணங்களை எய்து அவனைக் கீழே விழும்படி செய்தனன்—என்பதுவே. இதைப்பண்டிதர்கள் கண்டுணர்க. இந்த ப்ரகரணத்திற்கு இவ்வுரை அவ்வளவு பொருந்தினதாகத் தோற்றவில்லை.

தின் கந்தத்தினுல் மதிந்திருக்கிறுனுகையால் வான ரர்களென்றும் ராக்ஷஸர்களென்றும் தெரியாதிருக் கின்றனன்; தன்னைச் சேர்ந்தவர்களையும் பிறரையும் பிடித்துப் பக்ஷிக்கின்றனன். வானரதிலகர்கள் அனைவ ரும் இந்தக் கும்பகர்ணன்மேல் நன்ருக ஏறிக்கொண்டு நிற்பார்களாக. முக்யர்களான யூதபதிகளும் அவ ரவர்க்குத் தகுந்தபடி இவனைச் சுற்றிக்கொண்டு அசையவொட்டாமல் செய்வார்களாக. இப்பொழுது அங்ஙனஞ் செய்தபக்ஷத்தில், துர்ப்புத்தியாகிய இவன் பெரும் பாரத்தினுல் பீடிக்கப்பட்டு ஒருகால் கீழ் விழுவது மாத்ரமேயன்றி அந்த பாரத்தினுல் மீளவும் எழுந்திருக்க முடியாதவனுகி இன்னம் மற்ற வானரர்க ளையும் கொல்லாதிருப்பான்' என்றனன். புத்திமானுகிய அந்த ராஜகுமாரன் லக்ஷ்மணன் மொழிந்த அந்த வார்த்தையைக் கேட்டு அந்த வானரர்களெல்லோரும் ஸந்தோஷமுற்றுக் கும்பகர்ணன்மேல் ஆரோஹித்த னர். கும்பகர்ணன், அங்ஙனம் வானரர்கள் தன்மேல் ஏறுகையில் மிகுதியும் கோபாவேசமுற்று வேகமாக துஷ்டகஜம் மாவெட்டிக்காரர்களை உதறுவதுபோல் அவ்வானரர்களெல்லோரையும் உதறிப் போகட்டனன். ராமன் அங்ஙனம் அவ்வானரர்களெல்லோரும் உதறப் படுவதைக் கண்டு, 'இந்த ராக்ஷஸன் துஷ்டன்; ஆகை யால் இவனை உபேக்ஷிக்கலாகாது' என்று நினைத்து அவனைக் கொல்ல முயன்று வேகமாக மேலானதொரு வில்லை யெடுத்துக்கொண்டு அவன்மேல் எதிர்த்துப் போயினன். வீரனுகிய அந்த ராமன் கோபத்தினுல் கண்கள் சிவக்கப்பெற்றுக் கண்ணுல் தஹிப்பவன்போல் சொரசொரவென்று பார்த்துக்கொண்டு மஹாவேக முடையவனுகிக் கும்பகர்ணனிடத்தில் பயத்தினுல்

வருத்துகின்ற வானர யூதபதிகளெல்லோரும் ஸந்தோஷிக்கும்படி பெருங்கோபத்துடன் அவன்மேல் எதிர்த்தனன். அந்த ராமன், மஹாஸர்ப்பம்போன்றதும் திடமான நாணுடையதும் பயத்தை விளைவிப்பதும் ஸ்வர்ணத்தினால் விசித்ரமாக அலங்காரஞ் செய்யப்பெற்று விளங்குவதுமாகிய வில்லை ஏந்தி, மேலான பாணங்கள் நிறைந்த அம்பறாத்தூணியையும் கட்டிக்கொண்டு வானரர்களை ஆஶ்வாஸப்படுத்திக் கும்பகர்ணன்மேல் வேகமாக எதிர்த்தனன். மிகவும் ஜயிக்க முடியாதவனும் மஹாபலனுமாகிய அந்த ராமன் வானரஸமூஹங்கள் சூழவும் லக்ஷ்மணன் பின்தொடர்ந்து வரவும் பெற்று யுத்தத்திற்குப் புறப்பட்டனன். அந்த ராமன், பெருஞ்சரீரமுடையவனாகிக் கிரீடந்தரித்து ஸமஸ்த அவயவங்களும் ரக்தத்தினால் நனைந்திருக்கப்பெற்று மஹாபலிஷ்டனும் பகைவரைப் பறந்தோடச் செய்பவனுமாகி விளங்குகின்ற கும்பகர்ணனைக் கண்டனன். அந்தக் கும்பகர்ணன், கோபமுற்ற திக்கஜம்போல் கிளம்பிப் புலப்பட்டவரையெல்லாம் துரத்திக்கொண்டு கோபாவேசமுற்று வானரர்களைத் தேடிக்கொண்டு ராக்ஷஸர்களால் சூழப்பட்டு விந்த்யபர்வதம்போலும் மந்த்ரபர்வதம்போலும் புலப்படுவோனாகிப் பொன்மயமான தோள்வளைகள் விளங்கப்பெற்று, வர்ஷாகாலத்து மேகம் மழைபெய்வதுபோல், வாயினின்று ரக்தத்தைக் கக்கிக்கொண்டிருந்தனன். மற்றும், அவன் நாக்கினால் ரக்தத்தை நக்கிக்கொண்டு சிவந்த கண்களுடன் கூடி வானரஸேனையை ஹிம்ஸிப்பவனாகி ப்ரளயகாலத்தில் ப்ரஜைகளை நாசஞ்செய்கின்ற யமன்போல் புலப்பட்டனன். புருஷஶ்ரேஷ்டனாகிய ராமன் அப்பொழுது எரிகின்ற அக்னிபோல் ப்ரகாசிக்கின்ற

ராக்ஷஸோத்தமனுகிய கும்பகர்ணனைக் கண்டு தனுஸ்ஸில் நாணை யேறிட்டு ஒலிக்கச்செய்தனன். ராக்ஷஸ ஶ்ரேஷ்டனுகிய கும்பகர்ணன் ராமனுடைய தனுஸ்ஸின் சப்தத்தைக் கேட்டு அதைப் பொறுக்கமுடியாமல் கோபாவேசம் உண்டாகப்பெற்று ராமன்மேல் வேகமாக எதிர்க்கத்தொடங்கினன். அனந்தரம் யுத்தத்தில் காற்று வேகத்தினுல் மேற்கிளம்பின பெரிய மேகம் போன்று, சிறந்த வாஸுகியின் சரீரம்போல் நீண்டு பருத்த புஜதண்டங்கள் விளங்கப்பெற்றுப் பர்வதம் போன்ற உருவத்துடன் ப்ரகாசிக்கின்ற கும்பகர்ணன் யுத்தத்தில் தன்மேல் எதிர்த்து வருவதைக்கண்டு, ராமன் அவனைப்பார்த்து 'ராக்ஷஸாதிபதி! வருவாயாக. வருத்தம் வேண்டாம். இனிச் சீக்ரத்திலேயே மரணம் அடையப்போகின்றனையாகையால் இந்தச் சரீரத்தைப் பரிக்கவேண்டிய வருத்தம் உனக்கு வேண்டியதில்லை. நான் தனுஸ்ஸைக் கையில் ஏந்தி நிற்கின்றனன்; காண்பாயாக. நீ இந்த்ரனை ஜயித்தோமென்று நினைத்துக்கொண்டிருப்பாய். இருக்கட்டும். என்னை ராமனென்றறிவாயாக. நான் இந்த்ரனல்லேன். இன்னம் சிறிது நேரத்திற்குள்ளாகவே என்னுல் நீ உயிரை இழந்தவனுவாய்' என்றனன். கும்பகர்ணன், 'இவனே ராமன்' என்று தெரிந்து விகாரசப்தத்துடன் பகபகவென்று சிரித்து மிகுதியும் கோபாவேசமுற்று யுத்தத்தில் வானரர்களெல்லோரும் பயந்தோடும்படியாகவும் ஸமஸ்த வானரர்களுடைய ஹ்ருதயங்களும் வெடித்து விழும்படியாகவும் ராமன்மேல் எதிர்த்தோடினன். மஹாதேஜஸ்வியாகிய கும்பகர்ணன், விகாரமாகவும் பயங்கரமாகவும் மேககர்ஜனம்போல் கம்பீரமாகவும் சிரித்து ராமனைப் பார்த்து 'நான் விராதனல்லேன்;

கபந்தனுமல்லேன்; கரனுமல்லேன்; வாலியுமல்லேன்; மாரீசனுமல்லேன்; என்னை இவர்களாக நினைக்கவேண்டாம். மற்றும், நீ அவர்களைக் கொன்றேனென்று கர்வப்படவேண்டாம். நான் கும்பகர்ணன், வந்திருக்கிறேன். இதோ முழுவதும் சிறந்த இரும்பினால் செய்யப்பட்ட இந்தப் பெருங்கதையைக் காண்பாய். இதனால் நான் முன்பு தேவதைகளையும் தானவர்களையும் ஜயித்தேன். நீ, மூக்கும் காதும் போனவனென்று என்னை அலக்ஷ்யஞ் செய்யவேண்டாம்; மூக்கும் காதும் போனதால் எனக்குச் சிறிதும் வருத்தம் உண்டாகவில்லை. இக்ஷ்வாகுஸிம்ஹனே! என் சரீரத்தில் உன் பராக்ரமத்தை விரைவில் காண்பிப்பாயாக. அதன் பிறகு உன் பௌருஷத்தையும் பராக்ரமத்தையும் அறிந்து உன்னைப் பக்ஷித்துவிடுகிறேன்' என்றனன். கும்பகர்ணன் சொன்னதைக் கேட்டு, அந்த ராமன் அழகான பிடியுடைய பாணங்களை ப்ரயோகித்தனன். தேவதைகளுக்குச் சத்ருவாகிய அந்தக் கும்பகர்ணன், வஜ்ரத்தோடொத்த வேகத்தையுடைய அந்த பாணங்களால் அடிக்கப்பட்டும் சிறிதும் கலக்கமுறவில்லை; வருத்தத்தையும் அடையவில்லை. எந்த பாணங்களால் முன்பு மேலான ஏழு ஸாலவ்ருக்ஷங்கள் பிளக்கப்பெற்றனவோ, வானரஶ்ரேஷ்டனாகிய வாலியும் மாண்டுபோயினனோ; வஜ்ரம்போன்ற அந்த பாணங்கள் இப்பொழுது கும்பகர்ணனது சரீரத்தில் சிறிதும் வருத்தம் விளைக்கவில்லை. தேவேந்த்ர சத்ருவாகிய அக்கும்பகர்ணன், அந்த பாணங்கள் தன் தேஹத்தில் பட்டு மறைந்து போகையில் சரீரத்தினால் அவற்றை ஜலதாரைகளைப் போல் பானஞ்செய்பவன்போன்று பயங்கரமான வேகமுடைய அந்த இரும்புத்தடியைக் கிருகிருவென்று

சுழற்றி ராமபாணங்களின் வேகத்தைத் தடுத்துக் கொண்டு வந்தனன். அப்பால் கும்பகர்ணன் ரக்தம் தோய்ந்திருப்பதும் தேவமஹா ஸைன்யங்களுக்கும் பயத்தை விளைவிப்பதும் பயங்கரமான வேகமுடையது மாகிய அந்த இரும்புத்தடியைச் சுழற்றி வானர ஸைன்யங்களை ஓடத்துரத்தினன். அதன்பிறகு ராமன் அஸ்த்ரங்களில் சிறந்த வாயவ்யாஸ்த்ரத்தை எடுத்து அந்த ராக்ஷஸன்மேல் பிரயோகித்தனன். அது இரும்புத் தடியோடு கூடின அவனது புஜத்தைக் கண்டித்தது. அப்பால் அவன் புஜம் முறியப்பெற்றுப் பெருங்கோஷ மாக இரைச்சலிட்டனன். பர்வத சிகரம்போன்ற உரு வத்தையுடைய அந்தக் கும்பகர்ணனது பாஹுவு இரும்புத்தடியுடன் ராமபாணத்தினால் அறுப்புண்டு அந்த ஸுக்ரீவனது ஸைன்யத்தில் விழுந்து அந்த வானர ஸேனையிலுள்ளவர்களைக் கொன்றது. அங்ங னம் அந்தக் கையின் கீழ் அகப்பட்டு முறிந்து மாண்ட வர் போக மிகுந்த மற்றவர் அப்பொழுது வருத்தி ஓரத்தில் சென்று பயத்தினால் அவயவங்கள் கிடுகிடு வென்று நடுங்கப்பெற்று ராமனுக்கும் ராக்ஷஸவீரனுக் கும் கோரமாக நடக்கின்ற த்வந்த்வ யுத்தத்தைப் பார்த்துக்கொண்டிருந்தனர். அங்ஙனம் வாயவ்யாஸ்த் ரத்தினால் ஒரு புஜம் அறுப்புண்ட அந்தக் கும்ப கர்ணன், சிகரம் முறிந்த மஹாபர்வதம்போல் விளங்கி, இரண்டாவது கையினால் ஓர் வ்ருக்ஷத்தைப் பிடுங்கி அதை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் ராமன்மேல் எதிர்த்து வந்தனன். அந்த ராமன் ஸ்வர்ண ரேகைக ளால் விசித்ரமான பாணத்தை ஐந்த்ராஸ்த்ர மந்த்ரத் தினால் அபிமந்த்ரித்து, உடனே ஸர்ப்ப சரீரம்போன்ற உருவமுடையதாகி வ்ருக்ஷத்துடன் மேல்விழுந்து

வருகின்ற அந்தக் கும்பகர்ணனுடைய இரண்டாவது புஜத்தையும் ஸாலவ்ருக்ஷத்தோடுகூடவே கண்டித்தனன். பர்வதத்தின் உருவம்போன்ற உருவமுடைய அந்தக் கும்பகர்ணனுடைய புஜம் துண்டிக்கப்பட்டு விலவிலவென்று துடித்துக்கொண்டே தரையில் விழுந்தது; விழும்பொழுது பல வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் கற்களையும் வானரர்களையும் ராக்ஷஸர்களையும் முறித்துப் பாழாக்கிவிட்டது. அங்ஙனம் கும்பகர்ணன் இரண்டு கைகளும் அறுப்புண்டு இரைச்சலிட்டுக்கொண்டு வேகமாகத் தன்மேல் எதிர்த்துவருவதைக் கண்டு, ராமன் தீக்ஷ்ணமான அர்த்தசந்த்ர பாணங்கள் இரண்டை எடுத்து யுத்தத்தில் அந்த ராக்ஷஸனுடைய பாதங்களிரண்டையும் சேதித்தனன். அந்தக் கும்பகர்ணனுடைய பாதங்கள், திசைகளையும் அவற்றின் மூலைகளையும் பர்வதங்களையும் குஹைகளையும் மஹாஸமுத்ரத்தையும் லங்கையையும் வானர ஸைன்யத்தையும் ராக்ஷஸஸைன்யத்தையும் ஒலிக்கச் செய்துகொண்டு கீழே விழுந்தன. புஜங்களும் பாதங்களும் துண்டிக்கப்பெற்றுப் படபாமுகம்போல் அகன்று ஜ்வலிக்கின்ற வாயைத்திறந்து கர்ஜித்துக்கொண்டு ஆகாயம்போன்ற யுத்தகளத்தில் ராஹுவைப் போன்ற அந்த ராக்ஷஸன் சந்த்ரனைப்போன்ற ராமன் மேல், அறுந்து மிகுந்த துடைகளால் வேகமாக எதிர்த்து வந்தனன். ராமன், கூரான முனையுடன்கூடிப் பொன்னால் கட்டப்பெற்ற பிடியுடையவையான பாணங்களால் அவனது வாயை நிரம்பச் செய்தனன். அவன் வாய் நிரம்பவும் பாணங்கள் பாய்ந்திருக்கையால் பேசமுடியாமல் மிகவருத்தத்துடன் கோவென்று கோஷமிட்டு மூர்ச்சித்தனன். அப்பால் ராமன், ஸூர்ய

ரணம்போல் திகழ்வதும் ப்ரஹ்மதண்டத்தையும் ப்ரளயகாலத்து யமனையும் நிகர்த்துப் பகைவர்க்கு அசுபத்தைக் கொடுப்பதும் அழகான பிடியும் வாயுவோடொத்த வேகமும் அமைந்து கூரியதுமான ஐந்த்ராஸ்த்ரத்தை எடுத்துக்கொண்டனன். வஜ்ரம்போல் கடினமாகி ஸ்வர்ணத்தினால் செய்யப்பெற்ற அழகிய பிடியுடையதும் ஜ்வலிக்கின்ற ஸூர்யன்போலும் அக்னிபோலும் ப்ரகாசிப்பதும் இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போலும் இடிபோலும் மிகுந்த வேகமுடையதுமாகிய அந்த பாணத்தை, ராமன் கும்பகர்ணன்மேல் ப்ரயோகித்தனன். ராமன் தன் புஜபலமுள்ளவளவும் இழுத்து அந்த பாணத்தை ப்ரயோகிக்கையில், அது புகையோடு கூடின அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு இந்த்ரனுடைய வஜ்ராயுதத்தோடொத்த பல பராக்ரமங்கள் அமையப்பெற்றுத் தன் காந்தியால் பத்துத்திசைகளையும் ப்ரகாசிக்கச்செய்துகொண்டு கும்பகர்ணன்மேல் பாய்ந்தது. அந்த பாணம், முன்பு தேவேந்த்ரன் வ்ருத்ராஸுரனுடைய சிரஸ்ஸைத் துண்டித்ததுபோல், மஹா பர்வதசிகரம்போன்ற உருவம் பொருந்திக் குறுக்கிட்டுக் கோணலான பெருங்கோரைகள் அமைந்து அழகிய குண்டலங்களோடு விளங்குகின்ற அந்தக் கும்பகர்ணனுடைய சிரஸ்ஸைக் கண்டித்தது. இரண்டுகுண்டலங்களால் அலங்கரிக்கப்பெற்றதும் பாண வேகத்தினால் ஆகாயத்தில் கிளம்பினதுமாகிய கும்பகர்ணனுடைய பெருஞ்சிரஸ்ஸு, ராத்ரியில் உதித்துப் புனர்வஸு நக்ஷத்ரங்களிரண்டின் இடையிலிருக்கின்ற சந்த்ரனைப்போல் ப்ரகாசித்தது. ராமபாணத்தினால் அடிக்கப்பெற்றுப் பர்வதம்போன்ற உருவமுடைய அந்தக் கும்பகர்ணனுடைய சிரஸ்ஸு நிலத்தில் விழு

கையில், அந்த அடியினால் சர்யாக்ருஹங்களும் பட்டணத்து வாசற்படிகளும் உயர்ந்த ப்ராகாரங்களும் முறிந்து தரையில் விழ்ந்தன. மற்றும், அந்தக் கும்ப கர்ணன் நான்கு மூலைகளிலும் பயந்தோடுகின்ற அனேகங்கோடி வானரர்களைத் தன் தேஹத்தினால் விழத்தள்ளிக்கொண்டு தரையில் வீழ்ந்தனன். அனந்த ரம் ஹிமவத்பர்வதம்போல் புலப்படுகின்ற அந்தக் கும்பகர்ணனது பெருந் தேஹமானது ஸமுத்ரத்தில் வீழ்ந்து மேலான முதலைகளையும் பெரிய மீன்களையும் ஸர்ப்பங்களையும் சூர்ணஞ்செய்துகொண்டு அப் பொழுது தரையில் படிந்தது. ப்ராஹ்மணர்களுக்கும் தேவதைகளுக்கும் சத்ருவும் மஹாபலனுமாகிய கும்ப கர்ணன் யுத்தத்தில் அடிபட்டு வீழ்ந்தவுடனே அந்த வேகத்தினால் பூமியும் பர்வதங்களும் பூமியைச்சேர்ந்த ஸமஸ்தமும் நடுக்கமுற்றன. தேவதைகளும் ஸந்தோ ஷத்தினால் பெரிய கோஷத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்தனர். அனந்தரம் தேவர்ஷிகளும் மஹர்ஷிகளும் உரகர்களும் தேவதைகளும் பூதங்களும் கருடர்களும் குஹ்யகர்களும் யக்ஷர்களும் கந்தர்வக் கூட்டங்களும் ஆகாயத்தில் நின்று ராமனுடைய பராக்ரமத்தைக் கண்டு மிகுதியும் ஸந்தோஷித்தனர். அப்பால் ராக்ஷஸ ராஜனாகிய ராவணனது பந்துக்களான ராக்ஷஸர்கள் தீரர்களாயினும், மஹாபலமுடைய அந்தக் கும்ப கர்ணன் மாண்டதற்கு மிகுதியும் வருந்தி, தேவதைக ளால் பீடிக்கப்பெற்ற அஸுரர்கள் விஷ்ணுவைப் பார்த்து பயப்படுவதுபோல், ராமனைப் பார்த்து பயந்து மனவருத்தத்துடன் உரக்கக் கூச்சலிட்டனர். ராஹுவின் வாயினின்று விடுபட்ட ஸூர்யன் தேவ லோகத்தில் இருட்டைப் போக்கி விளங்குவதுபோல்,

ராமன் பூமியில் வானரஸமூஹத்தின் இடையில் யுத்தத்தில் கும்பகர்ணனை வதித்து மிகுந்த ஒளியுடன் ப்ரகாசித்தனன். வானரர்களெல்லோரும் பயங்கரமான பராக்ரமமுடையவனும் அணுகமுடியாத சத்ருவுமாகிய கும்பகர்ணன் மாண்டவுடனே தாமரைமலர் போன்ற முகங்கள் திகழ மிகுதியும் ஸந்தோஷமுற்றுக் கும்பகர்ணனை ஜயிக்கையாகிற இஷ்டஸித்தியைப் பெற்ற ராமனைப் பூஜித்தனர். பரதனுக்குத் தமையனாகிய ராமன், அங்ஙனம் தேவஸமூஹங்களை வருத்தி மஹாயுத்தங்களில் கைதேர்ந்தவனாகையால் வருத்தமின்றி அவலீலையாகவே வெற்றிபெறும் தன்மையுள்ள கும்பகர்ணனை யுத்தத்தில் வதித்து, மஹாஸுரனான வ்ருத்ரனைக்கொன்ற தேவேந்த்ரன்போல் மிகவும் ஸந்தோஷமுற்றனன். அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## கும்பகர்ணன் மாண்டதைக் கேட்டு ராவணன் புலம்புதல்.

[1] ராக்ஷஸர்கள், மஹானுபாவனாகிய ராமனால் கும்பகர்ணன் மாண்டதைக் கண்டு, ராக்ஷஸேந்த்ரனான ராவணனிடஞ் சென்று, ராஜனே! ம்ருத்யுவைப்போன்ற அந்தக் கும்பகர்ணன் வானர ஸைன்யத்தையெல்லாம் துரத்தியும் பலவானரர்களைப் பக்ஷித்தும் கடைசியில் காலதர்மமாகிய மரணத்தை அடைந்தனன். பர்வதம்

---

1. இங்கு 'கும்பகர்ணம் ஹதம் த்ருஷ்ட்வா ராகவேண மஹாத்மநா। ராக்ஷஸா ராக்ஷஸேந்த்ராய ராவணாய ந்யவேதயந்' என்பது மூலம். இங்கு 'ராக்ஷஸேந்த்ராய' என்கிற இடத்தில் உள்ள (ய) காரம் காயத்ரியின் பதினெட்டாவது அக்ஷரம்.

போன்ற உருவமுடையவனும் உனது உடன்தோன்றலு மாகிய கும்பகர்ணன் சிறிதுநேரம் பராக்ரமத்தைக் காட்டி வானரஸேனையைப் பரிதபிக்கச்செய்து கழுத் தும் துடையும் புஜமும் அறுப்புண்டு ரக்தவெள்ளத்தை மிகுதியும் கக்கிக்கொண்டு ராமபாணங்களால் பீடிக்கப் பட்டுக் காட்டுத்தீயினுல் எரிந்த வ்ருக்ஷம்போல் ஒரே பிண்டமாகி இங்ஙனம் விகாரமான தன் சரீரத்தின் பாதி பயங்கரமான காட்சியுடைய ஸமுத்ரத்தில் ப்ரவே சித்து அதைத் தடுக்கவும், மற்றைப்பாதி லங்கையின் வாசலைத் தகையவும் பெற்று இங்ஙனம் ராமதேஜஸ்ஸி ஞல் ஓய்ந்து போயினன்' என்றனர். ராவணன், மஹா பலமுடைய கும்பகர்ணன் யுத்தத்தில் அடியுண்டு மாண்டதைக் கேட்டுச் சோகத்தினுல் பரிதபித்து மூர்ச்சித்து நிலத்தில் வீழ்ந்தனன். தேவாந்தகன் நராந்தகன் த்ரிசிரன் அதிகாயன் ஆகிய இவர்கள் சிற்றப்பன் மாண்டதை அறிந்து சோகத்தினுல் வருந்தி ரோதனஞ் செய்தனர். அநாயாஸமாகவே கார்யங் களை நிறைவேற்றுந் தன்மையுடைய ராமன் தனது ஸஹோதரனை கும்பகர்ணனைக் கொன்றுனென்று தெரிந்து, மஹோதரனும் மஹாபார்ஶ்வனும் துக்கத் தினுல் பீடிக்கப்பெற்றனர். அப்பால் ராக்ஷஸர் தலைவ ஞகிய ராவணன் எவ்வளவோ வருத்தப்பட்டு மூர்ச்சை தெளிந்து கும்பகர்ண வதத்திற்கு வருந்தி 'ஆ! வீரனே! சத்ருக்களின் கர்வத்தை அழிப்பவனே! கும்பகர்ணு! மஹாபலசாலி! நீ தெய்வகதியினுல் என் னைக்கைவிட்டு இப்பொழுது யமலோகத்திற்குப் போயினையே! மஹாபலனே! நீ எனக்கும் பந்துக்களுக் கும் சல்யம்போல் வருத்துகின்ற துக்கத்தைப்போக்கா மலே, ஒருவனுயிருந்தும் சத்ரு ஸைன்யங்களைப் பராக்ர

மத்தினால் தபிக்கச்செய்து என்னைத் துறந்துவிட்டுப் போகின்றனையே! நான் எதைப்பற்றி தேவாஸுரர்களுக்கும் பயப்படாதிருப்பேனோ, அப்படிப்பட்ட என் வலபுஜம் விழுந்துபோனமையால் இப்பொழுது நான் இருந்தும் இல்லாதவனாகவே ஆயினன். தேவதானவர்களின் கர்வத்தை அடக்குந் தன்மையனும் ப்ரளயகால ருத்ரனோடொத்தவனும் இப்படிப்பட்டவனுமாகிய நீ யுத்தத்தில் ராமனால் அடியுண்டு மாண்டனையே. உனக்கு வஜ்ராயுதத்தின் அடியும் இடியும் எப்பொழுதும் வருத்தம் விளைக்க வல்லவையாகமாட்டாவே; அப்படிப்பட்ட நீ எப்படி கேவலம் ராமனது பாணங்களால் பிடிக்கப்பெற்றுத் தரையில் வீழ்ந்து உறங்குகின்றனை? இதோ, தேவதைகளும் ரிஷிகளும் கூட்டங்கூடி ஆகாயத்தில் சேர்ந்து யுத்தத்தில் அடியுண்டு மாண்ட உன்னைப் பார்த்து மிகுந்த ஸந்தோஷத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்கின்றனர். நீ மாண்டமையால் மிகுதியும் ஸந்தோஷமுற்றிருக்கின்ற வானரர்களும், ஸமயம் நேரிடப்பெற்று இப்பொழுதே, நுழையமுடியாத லங்கையின் த்வாரங்களில் நாற்புறத்திலும் ஆரோஹிப்பார்கள்; இது நிச்சயம். இனி ராஜ்யத்தினால் எனக்கு ப்ரயோஜனமில்லை. இனி ஸீதையைக்கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன்? கும்பகர்ணனைப் பிரிந்த பின்பு எனக்குப் பிழைப்பதிலேயே இஷ்டமில்லை. நான் என் தம்பியைக்கொன்ற ராமனை யுத்தத்தில் கொல்லாது போவேனாயின், இப்பொழுது இந்த வீண் பிழைப்பு எனக்குச் சிறிதும் மேன்மை அன்று; அதைக்காட்டிலும் எனக்கு மரணமே நன்மை. இப்பொழுது என்தம்பி எவ்விடம் போயினனோ, அங்குப் போகின்றேன். உடன்பிறந்தவர்களை விட்டு நான் க்ஷணகாலமா

யினும் பிழைத்திருக்கப்போறேன். தேவதைகள் முன்பு தமக்கு அபகாரஞ்செய்த என்னைப் பார்த்து இப்பொழுது பரிஹஸிப்பார்கள். கும்பகர்ணு! நீ மாண்டு போயினையே! இனி நான் இந்த்ரனை எப்படி ஜயிப் பேன்? மஹானுபாவனாகிய விபீஷணன் என் க்ஷேமத்தை விரும்பிச் சொன்ன வார்த்தை இப் பொழுது எனக்கு யதார்த்தமாகவே ஸம்பவித்தது. அதை முன்பு நான் அஜ்ஞானத்தினுல் கைக்கொள் ளாது போயினன். கும்பகர்ணனுக்கும் ப்ரஹஸ்தனுக் கும் இங்ஙனம் பயங்கரமாக மரணம் நேர்ந்தது முதல் விபீஷணன் சொன்ன வார்த்தை என்னை வருத்துகின் றது. நான், தர்மிஷ்டனும் பாக்யசாலியுமாகிய அந்த விபீஷணனைத் துரத்தினனே; அந்தப் பாபகார்யத் தின் பலனே இங்ஙனம் துக்கத்தை விளைப்பதாக எனக்கு ஸம்பவித்தது' என்று புலம்பினன். ராவணன் இந்த்ரசத்ருவாகிய தன் தம்பி கும்பகர்ணன் மாண்ட தைப்பற்றி மிகவும் மனம் கலங்கப்பெற்று அவனைக் குறித்து இங்ஙனம் பலவாறு மிகவும் தீனமாகப் புலம்பி அப்பால் துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் அவ்வருத்தத்தின் மிகுதியால் மூர்ச்சித்து வீழ்ந் தனன். அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

